بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

- இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள்
- மனித உறுப்புகள்
- விஞ்ஞான புனைக்கதைகளும் , குர்ஆனின் அதன் சாரம்சமும்
- ஒன்றே ஒன்றுதான்
- சூஃபியின் வழித்தடம்
- மனித வாழ்வின் மாண்புகள்
- குர்ஆன் வசன ஆய்வு
- உரத்த சிந்தனை



**நிப் உடைந்த பேனா**

அந்த அகலமான டைரியில் பேனா தஞ்சாவூர் பொம்மை  மாதிரி தலையை ஆட்டி ஆட்டி எழுதிக் கொண்டேயிருக்கிறது.

நிச்சயமாக எங்கேயோ பார்த்த காட்சியைப் பற்றியோ என்றோ நடந்த நிகழ்வுகளைப் பற்றியோ பேனா எழுதிக் கொண்டிருக்கிறது.

இரவில் எழுதியதை விடிந்ததும் படித்துப் பார்க்கையில் நாம் தான் எழுதியதா ? என்று அந்த உருது எழுத்தாளர் தன் பைஜாமா பாக்கெட்டில் கையை விட்டு, யோசித்திருக்க வேண்டும் . மீண்டும் மீண்டும் அதையே படிக்கிறார்.

கற்பனையை காட்சியகப்படுத்தியதில் ஓர் இரவுக்குள் இத்தனை மாற்றங்களா!!

எழுதிய பேனாவைப் பார்த்தார் நாம் கண்டு எழுதியவற்றை பேனா வேறு ஒரு கண்ணோட்டத்தில் அதைப் பதிவு செய்கிறது.

இதுதான் உண்மையா ?     அதுவும் கற்பனை கலவாத உண்மையா ?

இறைவன் நினைப்பதையெல்லாம் கலம் தானாகவே லவ்ஹ் பலகையில் எழுதுமாம்     அந்த பலகையை நாளொன்றுக்கு 360 தடவை இறைவன் பார்ப்பானாம் .

அது சரி நாம நினைத்துப் பார்க்காததையல்லவா நம்ம பேனா எழுதி இருக்கிறது !

"முதலில் அல்லாஹ் தனது ஒளியிலிருந்து எனது ஒளியைப் படைத்தான். அல்லாஹ் படைப்பினங்களை படைக்க நாடிய போது, அந்த ஒளியை பாகங்களாக பிரித்து, முதல் பாகத்திலிருந்து எழுதுகோலையும், இரண்டாவதிலிருந்து லவ்ஹையும், மூன்றாவதிலிருந்து அர்ஷையும் படைத்தான். என்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறியதாக **"தலாயினுன் நுபுவ்வத்,** இமாம் பைஹகீ ரலியல்லாஹு அன்ஹு " என்ற நூல் சொல்லியது அந்த எழுத்தாளருக்கு ஞாபகத்திற்கு வந்தது.

அடுத்து எழுத்தாணியைப் பற்றி சிந்திக்கையில், இம்ரானின் மனைவி மரியம் (அலை) அவர்களின் பெண் குழந்தையை யார் சிறப்பாக வளர்ப்பார்கள் என்பதை சோதனை மூலம் அறிய நபிமார்களில் ஜகரிய்யா (அலை) அவர்கள் மிகச் சிறந்த எழுத்தாளர் . எல்லா எழுத்தாளர்களும் மரியமைத் தத்தெடுக்க தங்கள் எழுத்தாணிகளை நதியில் வீசியெறிந்த போது நபி ஜகரிய்யா (அலை) அவர்களின் எழுத்தாணி மட்டும் ஜோர்டான் நதி நீரை எதிர்த்து வந்தது . குர்ஆன் ( 3 : 44)

ஆக பேனாக்கள் தன்னிச்சையாக இயங்குவதாக அந்த உருது எழுத்தாளருக்குப்பட்டது.

மும்பை குண்டுவெடிப்பு சம்பவத்தில் தொடர்பு இருந்த காரணத்தால் கடந்த மே 3, 2010 அன்று அஜ்மல் கசாபிற்கு மரண தண்டனை தீர்ப்பு வழங்கப்பட்டது. அப்போது நீதிபதி எம்.எல். தஹில்யாணி தீர்ப்பு எழுதிய பிறகு பேனாவை உடைத்தார்.

அப்சல் குரு குருவின் கருணை மனுவை ஜனாதிபதி நிராகரித்தார். அதனால் சுப்ரீம்கோர்ட் வழங்கிய தீர்ப்பின்படி அப்சல் குருவிற்கான தீர்ப்பு உறுதியானபோதும் பேனா உடைக்கப்பட்டது. இது தான் சமீபத்தில் நாம கண்ட மரண தண்டனை மற்றும் பேனா உடைக்கப்பட நிகழ்வுகள்.

ஏன் பேனாவை உடைக்கிறார்கள்?

இந்தியா பிரிட்டிஷ்காரரர்கள் ஆண்ட நாடு. அவர்கள் கொண்டு வந்த சட்டதிட்டங்கள் பலவன 70 வருடங்களுக்கு மேலாக கடந்த பிறகும் கூட இன்றளவும் நாம் கடைபிடித்து வருகிறோம்.

ஆங்கிலேயர் ஆட்சி செய்த போது கடைபிடிக்கப்பட்டு வந்த முறை தான் இந்த பேனா நிப் உடைப்பது. ஒரு நபரின் உயிரை குடித்த குற்ற உணர்வு காரணமாக அந்த நிப்பை வேறு எதற்கும் பயன்படுத்த கூடாது என்பதற்காக இந்த முறை பின்பற்றப்பட்டு வந்துள்ளது.

சோகத்தை வெளிப்படுத்த இதைத் தவிர வேற வழி தெரியவில்லை. பாவம் பேனா !

ஆனால், நமது இந்திய சட்டப்புத்தகத்தில் எந்த இடத்திலும் மரண தண்டனை அளித்த பிறகு பேனா நிப்பை உடைக்க வேண்டும் என்ற குறிப்பு இல்லை. ஆனாலும் மரண தண்டனை வழங்கிய பேனாவின் நிப்பு உடைக்கப்பட வேண்டும் என்ற நியதி உலகமெல்லாம் கடைப்பிடிக்கப்படுகிறது !

இறைவனின் அரசாட்சியில் எத்தனையோ மரண தண்டனைகள் நிறைவேற்றப்படுகிறது . தீர்ப்பு எழுதிய அந்த கலம் என்னவானது என்று உருது எழுத்தாளர் சிந்தனையில் ஆழ்ந்தார்.

அந்த இறை எழுத்தாணி கலம் இன்னொரு விதி எழுதாமல் ஈரம் காய்ந்து உலர்ந்து போனது.கலத்தின் முனை உடைக்கப்படவில்லை

கீழடியில் 2,500 ஆண்டுகளுக்கு முன்பே தமிழர்கள் கல்வியிலும் சிறந்து விளங்கியுள்ளனர் என்பதற்கு ஆதாரமாக விலங்கு எலும்பில் செய்யப்பட்ட எழுத்தாணி கண்டுபிடிக்கப்பட்டது. எலும்பை நன்கு தீயில் வாட்டி, பக்குவப்படுத்தி எழுத்தாணியைத் தயாரித்துள்ளனர். இதை பயன்படுத்தி கல் போன்றவற்றில் எழுதியுள்ளனர்.

ரஹ்மத் ராஜகுமாரன்

+919486909903 /// +91936018103



இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள் 1 25-5-2021




"வாழ்வதற்கான செலவு மிக குறைவே .. ஆனால்
அடுத்தவனைப் போல் வாழ்வதற்கான செலவு மிக அதிகம் "
இஸ்லாத்தின் வாழ்க்கைத் தத்துவங்கள் போதிப்பதெல்லாம் இந்த உலக வாழ்க்கை நாம் மேற்கொள்ளும் நீண்ட பயணத்தின் சிறிது இளைப்பாறும் இடம்தான் இந்த பூமி. இங்கு சற்று ஓய்வெடுத்து கொள்ளலாம். நமது மறுமைப்பயணங்களை எளிதாக்க கூடியவற்றை தயார் செய்து கொள்ளலாம். சக பயணிக்கும் நம்மால் முடிந்த உதவியைச் செய்து அவரது பயணத்தையும் இலகுவாக்க உதவி செய்யலாம்.

"அத்துன்யா மஸ்ரஅதுல் ஆகிரா " மறுமைக்கான நன்மைகளைப் பயிராக்கும் ஒரு பண்ணையை இவ்வுலக வாழ்வு" என்று நபி (ஸல் ) அவர்கள் கூறியிருக்கிறார்கள்
ஆனால் 'ஈமான்' என்ற இறையச்சத்தை நெஞ்சில் ஏந்திய ஒரு உண்மையான முஸ்லிம் இந்த உலக வெற்றிகளை ஒரு பொருட்டாகவே கருதமாட்டான். 'உலக வெற்றி பொய்யானது. உண்மையான வெற்றி மறுமையில் தான் உள்ளது' என்பதை இறையச்சம் கொண்ட மனிதன் அறிந்து கொள்வான்.

இந்த பூமியின் இல்வாழ்க்கைக்கு அடிப்படை தேவை , உண்ண உணவும் , உடுக்க உடையும் , இருக்க வீடும். இந்த மூன்று தேவைகளையும் நிறைவு செய்வதற்குதான் மனிதன் ஓடி ஓடி
உழைக்கிறான். ஆனால் அந்த உடை ஆடம்பரமாக இருக்க வேண்டும் என்பது அவசியம் அல்ல. எளிமையாக அதாவது நான்கு முழம் இருந்தால் போதுமாம் என்று ஔவை சொல்கிறார் கேளுங்கள்.

**"உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்**
**எண்பது கோடி நினைந்து எண்ணுவன**
**கண்புதைந்த மாந்தர்குடி வாழ்க்கை**
**மண்ணின் கலம்போலச் சாந்துணையும் சஞ்சலமே"**

மனிதன் உண்பது ஒரு நாழி அளவு சோறு மட்டுமே உடுப்பது நான்கு முழ அளவு உள்ள துணி.ஆனால் அவன் எண்ணம் மட்டும் எண்பது கோடியாக இருக்கிறது.
அதனால் தன்னால் எதையும் தெளிவாக சிந்தித்துப் பார்க்கும் திறன் குறைந்து போகிறது. அப்படிப்பட்ட மாந்தர் வாழ்க்கை
**இனிமையாக**
இருப்பதில்லை. அவர்கள் வாழ்க்கை எளிதில் உடைந்து போகும் மண்கலம் போலச் சாகும்வரை துன்பம் நிறைந்ததாகவே இருக்கும் என்கிறார் ஔவை.
மண்கலம் போன்ற வாழ்க்கை நிலைக்கு நம்மை நாமே தள்ளிவிடுகிறோம். அதனால் இப்போ உடையுமோ இன்னும்
கொஞ்ச நாளில் உடைந்து போகுமோ என்று எண்ணி எண்ணி நிம்மதி இழந்து தவிக்கிறோம்.

இவ்வுலக வாழ்க்கையின் தராதரங்களை மனிதர்கள் அடிக்கடி ஒப்பிட்டுப் பார்க்கிறார்கள். அவர்கள் கண்ணுக்கு அவர்களை விட , பொருளாதாரத்தில் மிகைத்தவர்களை கண்டு மனம்
புளுங்கிறார்கள். தம்மை விட தாழ்வானவர்களின் வாழ்வாதாரத்தை தம்மோடு ஒப்பிட்டுப் பார்ப்பதே இல்லை .

"காலுக்கு செருப்பு இல்லையே என்று வருத்தப்பட்டேன் , காலே இல்லாதவரை காணும் வரை " _அலி (ரலி) அவர்கள்.
நபி மூஸா அலை அவர்களுடைய சமூகத்தவனான காரூன், "எனக்கு கொடுக்கப்பட்ட செல்வங்கள் அனைத்தும் என் அறிவின் மூலமாகத்தான் நான் பெற்றுக்கொண்டேன்"என்று கூறியதோடு , தன்னை பொன்னால் அலங்கரித்துக் கொண்டு,கோவேறு கழுதையின் மீது பொன்னால் இழைக்கப்பட்ட மம்தா, சேனம் முதலியவற்றுடன் தன்னுடைய 4,000 பணியாளர்கள் புடைசூழ வெகு ஆடம்பரமாக சனிக்கிழமையன்று ஏறி வந்தான்.
தன் பணியாளர்களுக்கு ஒருவகை சிவப்புச் சாயம் ஏற்றப் பட்டு ஜரிகை உடைகளை அணிய செய்திருந்தான். இவ் வர்ணம் ஆடவர்கள் அணியத் தகுந்ததல்ல. அவ்வர்ணத்துக்கு ஒரு வகை வாடை உண்டு. இந்த வாடை ஆடவர்களுக்கு ஏற்றுக்கொள்ள தகாது. இவ்வர்ணம் தற்பெருமையும் உண்டாக்கக்கூடியதும் அலங்காரமுமானதாகும்.

இவ்வுலக செல்வத்தைப் பெரிதென மதித்தவர்கள் காரூனின் ஆடம்பரங்களையும், செல்வங்களையும் கண்டு பூரித்து தங்களுக்கும் என் இதுமாதிரியான செல்வப் பெருக்கு இருக்க வேண்டுமே என ஆசைப்பட்டார்கள்.
فَخَرَجَ عَلٰى قَوْمِهٖ فِىْ زِيْنَتِهٖ‌ؕ قَالَ الَّذِيْنَ يُرِيْدُوْنَ الْحَيٰوةَ الدُّنْيَا يٰلَيْتَ لَـنَا مِثْلَ مَاۤ اُوْتِىَ قَارُوْنُۙ اِنَّهٗ لَذُوْ حَظٍّ عَظِيْمٍ
அப்பால், அவன் (கர்வத்துடனும், உலக) அலங்காரத்துடன் தன் சமூகத்தாரிடையே சென்றான்; (அப்போது) இவ்வுலக வாழ்க்கையை எவர் விரும்புகிறார்களோ அவர்கள்: “ஆ! காரூனுக்கு கொடுக்கப்பட்டதைப் போன்று நமக்கும் இருக்கக்கூடாதா? நிச்சயமாக, அவன் மகத்தான பாக்கியமுடையவன்” என்று கூறினார்கள். (அல்குர்ஆன் : 28:79)
இறுதியில் காரூனையும் , அவன் செல்வத்தையும் பூமி இன்னும் விழுங்கிக் கொண்டே இருக்கிறது !
" பொருளானது பாம்புக்கு ஒப்பாக இருக்கும் அதில் நஞ்சும் உண்டு; நன்மருந்து உண்டு "என்று இமாம் கஸ்ஸாலி கூறியுள்ளார்கள்
நல்ல பாம்பின் கொடிய விஷம் இருப்பதே நாமெல்லாம் அறிவோம். ஆனால் அதே விஷம் மருந்தாகவும் பயன்படும் என்பது பலருக்கும் தெரியாது. பாம்பின் நச்சு பையிலிருந்து விஷத்தை தனிமைப்படுத்தி எடுத்து ,அதை மருந்தாக மருத்துவர்கள் பயன்படுத்துகிறார்கள்.
பணமும் இத்தகைய தன்மையை கொண்டதுதான் 'பணம் பணம்' என்று அடுத்தவன் செல்வத்தையும், செல்வாக்கைப் போல் நாமும் பெற வேண்டும் என்று தீராத ஆசை கொண்டு திரிந்த பலரின் தன்மானத்தை சுரண்டி, மன அமைதியை குலைத்து, கொள்கை உணர்வை அழித்து, இறுதியில் அவர்களை தன் அடிமையாக்கி கொள்கிறது பணம் .

திரண்டு வரும் பணம் போய்விடுமோ என்ற திகில் ஒருபக்கம் ; பணம் வந்து கொண்டிருக்கும் வழி அடைத்து விடுமோ என்ற அச்சம் ஒரு பக்கம் ; பொருள் சேரும் விதத்தை பற்றி பிறர் தெரிந்து கொள்வார்களோ என்ற பீதி ஒருபுறம் ; இவ்வாறு பணத்துக்கு அடிமையாகும் மனிதனின் வாழ்வு அச்சத்தை அஸ்திவாரமாகவும் , அமைதியின்மையைச் சுவராகவும், இழிவைக் கூரையாகவும் கொண்ட ஒரு பாழ் வீட்டுக்குத்தான் சமமாகும் ! இதையே குர்ஆனில் ,

اَلْهٰكُمُ التَّكَاثُرُۙ
செல்வத்தைப பெருக்கும் ஆசை உங்களை (அல்லாஹ்வை விட்டும்) பராக்காக்கி விட்டது-
حَتّٰى زُرْتُمُ الْمَقَابِرَ
நீங்கள் மண்ணறைகளைச் சந்திக்கும் வரை.
(அல்குர்ஆன் : 102:1, 2)

எனவே இவ்வுலக வாழ்க்கையில் உங்களுக்கு கொடுக்கப்பட்டதையே பெரிதென நம்புங்கள் உங்கள் வாழ்க்கை இலேசாகும். இதையே ஓஷோ ..
ஒருவேளை இறந்த மனிதனிடம் கேட்க முடிந்தால் " உன் வேதனை என்ன " என்று .
கண்டிப்பாக " நான் இறந்தது " என்று சொல்லவே மாட்டான்.
"வாழ்க்கை அப்போது என் கையில் இருந்தது. அதை உபயோகிக்காமல் வீணடித்து விட்டேன் "என்றுதான் சொல்வான் .

ரஹ்மத் ராஜகுமாரன்

இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள் 2



" ஜெயிக்கும் வரையில் #தன்னம்பிக்கை அவசியம் .
ஜெயித்த பிறகு #தன்னடக்கம் அவசியம் "

இந்தியாவின் முதல் பார்வைக் குறைபாடுள்ள ஐ.ஏ.எஸ் அதிகாரி பிரஞ்சல் பாட்டீல் திருவனந்தபுரம் சப் கலெக்டராக பொறுப்பேற்றுள்ளார். இவர் 6 வயதில் பார்வையை இழந்தவர். இந்த வெற்றிக்கு பிரஞ்சலின் தன்னம்பிக்கையும் விடாமுயற்சியுமே காரணம்.

ராணுவத்தில் பணியாற்றி ஒரு காலை இழந்து அதன் பின் தன்னுடைய தன்னம்பிக்கையால் இப்போது பெருமை அடைய வைத்திருக்கிறார் கும்பகோணத்தை சேர்ந்த ஆனந்த். பிரான்சில் நடைபெற்ற உலக பாரா தடகள போட்டிக்கான 200 மீட்டர் தகுதி சுற்று போட்டியில் ஆனந்த் தங்கப்பதக்கம் வென்றார்.
ஜுராசிக் பார்க் என்றால் நமது நினைவுக்கு சட்டென வரும் விஷயங்கள் இரண்டு. ஒன்று டைனோசர். இரண்டாவது இயக்குனர் ஸ்டீபன் ஸ்பீல் பெர்க். அவர் தெற்கு கலிபோர்னிய திரைப்படக் கல்லூரியான யு.எஸ்.சி.யில் சேர இரண்டு முறை விண்ணப்பித்தார். இரண்டு முறையும் அவருடைய விண்ணப்பம் நிராகரிக்கப்பட்டது.

தோல்வியால் தளர்ந்து விடாமல் ஸ்பீல் பெர்க் தன்னம்பிக்கையால் வளர்ந்தார், உலகெங்கும் அவர் புகழ் பரவியது. எந்தக் கல்லூரி அவரை நிராகரித்ததோ, அதே கல்லூரி 1994-ம் ஆண்டு அவருக்கு டாக்டர் பட்டம் வழங்கிக் கவுரவித்தது! தோல்விகளால் ஒரு வெற்றியாளனைப் புதைக்க முடியாது என்பதை உலகம் மீண்டும் ஒரு முறை உறுதிப்படுத்திக் கொண்டது.

தாலி கட்டுபவர் யார் ? எப்படிப்பட்டவர் ? என்று தெரியாமல், தாலி கட்டிய ஒரே காரணத்திற்காக தன் மொத்த வாழ்க்கையும் கொடுக்க துணியும் பெண்களை விடவா தன்னம்பிக்கைக்கு வேறு உதாரணம் சொல்ல வேண்டும் ?
மிகப் பெரிய சக்கரவர்த்தி அவன். சீன தேசத்து சேர்ந்த அறிஞர் ஒருவர் தாயை இழந்த இரண்டு பஞ்சவர்ண கிளிக்குஞ்சுகளை பரிசளித்துவிட்டு சென்றார். அரசன் அக மகிழ்ந்து தனது நாட்டின்

பறவைகள் பயிற்சியாளரை அழைத்து "இவற்றை நல்ல முறையில் பராமரித்து, பழக்கப்படுத்தி பறப்பதற்கு பயிற்சியளியுங்கள்!" என்று கட்டளையிட்டான்.
மாதங்கள் உருண்டோடின. பறவைகள் எப்படி வளர்கின்றன?
"அரசே... இரண்டு பறவைகளில் ஒன்று நன்றாக பறக்க கற்றுக்கொண்டுவிட்டது. மற்றொன்று எவ்வளவோ முயற்சித்தும் அது அமர்ந்திருக்கும் கிளையை விட்டு நகர மறுக்கிறது" என்றான்.
பறவையியல் நிபுணர்களையும் அழைத்து பறவைக்கு என்ன ஆயிற்று? அது ஏன் பறக்க மறுக்கிறது? என்று ஆராயுமாறு கட்டளியிட்டான்.
அவர்களும் அதை முற்றிலும் பரிசோதித்துவிட்டு, "இந்த பறவையிடம் எந்த குறையுமில்லை. உடலில் ஊனமுமில்லை. ஆனால் அது ஏன் பறக்க மறுக்கிறது என்று புரியவில்லை அரசே" என்றனர்.
"இதற்கு என்ன ஆயிற்று ஏன் பறக்க மறுக்கிறது என்று தெரியவில்லையே? நாட்டுப்புறத்தில் உள்ள வயலில் வேலை செய்யும் விவசாயிகள் அல்லது மூத்த குடிமக்கள் எவரையேனும் அணுகி இது பற்றி கேட்கவேண்டும்.

"நாட்டுப்புறத்திற்கு போய் யாரேனும் ஒரு மூத்த விவசாயி ஒருவரை அழைத்து வா" என்று கட்டளையிட்டான்.
அடுத்தநாள் காலை கண்விழிக்கும்போது, அந்த பஞ்சவர்ணக் கிளி மரத்தை சுற்றி அங்கும் இங்கும் பறந்துகொண்டிருப்பதை பார்த்தான்.
அவனுக்கு ஒரே சந்தோஷம். "இந்த அற்புதத்தை செய்தவரை உடனே அழைத்து வாருங்கள்!" என்றான்.
அந்த விவசாயி மன்னன் முன்பு வந்து பணிந்து நின்றார்.
"எல்லாரும் முயற்சி செய்து தோற்றுவிட்ட நிலையில் நீ மட்டும் கிளியையை எப்படி பறக்கச் செய்தாய்?"
"அது ரொம்ப சுலபமான காரியம் அரசே. மரத்தில் ஏறி அந்த பறவை உட்கார்ந்திருந்த கிளையை நான் வெட்டிவிட்டேன். வேறொன்றுமில்லை!" என்றார்.

இறைவனும் சில சமயம் அந்த விவசாயி போல, நம்மை நமது தன்னம்பிக்கையின் சக்தியை உணரச் செய்யவேண்டி, நாம் அமர்ந்திருக்கும் கிளையை வெட்டிவிடுவான். அது நமது நன்மைக்கே. நம் சக்தியை ஆற்றலை நாம் உணரவேண்டியே என்று கருதி நம்மை உயர்த்திக்கொள்ள முயற்சிக்கவேண்டும்.
நாம் அனைவரும் உயர உயர பறப்பதற்கு படைக்கப்பட்டவர்கள். ஆனால் பல சமயங்களில் நாம் நமது சக்தியை உணராமல் ஒரே இடத்தில் அமர்ந்து கொண்டு பழக்கப்பட்ட வேலைகளை மட்டுமே அது தான் நம்மால் முடியும் என்று கருதி செய்து வருகிறோம்.

நாம் சாதிக்க கூடியவை எண்ணற்றவை. முடிவற்றவை. ஆனால் நம்மில் பலருக்கு அது கண்டுபிடிக்கப்படாமலே போய்விடுகிறது. செக்கு மாடு போல, ஒரே இடத்தில், மிக சுலபமான, ஒரே வேலையை செய்வதிலே தான் நாம் ஆர்வம் செலுத்துகிறோம்.
தோல்வி குறித்த பயத்திலிருந்து வெளியே வர தன்னம்பிக்கை மிக அவசியம். தன்னம்பிக்கை, கடைகளில் விற்பனையாவதில்லை. உங்களுக்கு வேறு யாரும் வந்து தன்னம்பிக்கை எனும் ஆடையைப் போர்த்தி விடவும் முடியாது. தன்னம்பிக்கை என்பதை நமக்கு நாமேதான் உருவாக்கிக் கொள்ளவேண்டும். தனக்கான கூட்டைத் தானே உருவாக்கும் ஒரு சிட்டுக் குருவியைப் போல!

**'முடியாது ' என்று சொன்னால் மூட நம்பிக்கை**
**"முடியுமா ? " என்று கேட்பது அவநம்பிக்கை**
**"முடியும் " என்று சொல்வதே தன்னம்பிக்கை**
அடுத்து , ' தன்னடக்கம் ' என்பது நபிமார்கள், நல்லோர்கள், பெரியோர்கள் ஆகியோரின் குணமாகும். 'தற்பெருமை' என்பது சைத்தானின் தனிப்பெரும் நடவடிக்கையும், சர்வாதிகாரிகளின் போக்கும் ஆகும்.
பணிவு என்பது இழிவோ, கோழைத்தனமோ அல்ல. அது உயர்வு தரும் அரும்பெரும் குணம். இறைவனுக்காக மற்றவர்களிடம் பணிந்து நடக்கும் போது வானமே குனிந்து நமக்கு குடை பிடிக்கும். பூமியோ தாழ்ந்து விரிப்பு விரிக்கும். வானளாவிய அளவிற்கு உயர்வு கிடைக்கும். இந்த உயர்வு நிச்சயம் சாத்தியம் என்பதை நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு குறிப்பிடுகிறார்கள்:

இறைவன் தன்னடக்கத்தைக் கற்றுத்தர விரும்பி அனைத்து நபிமார்களையும் ஆடு மேய்ப்பாளராக பணிபுரிய வைத்துள்ளது, தன்னடக்கம் எனும் குணத்திற்கு கிடைத்த மகுடம் ஆகும்.
'இறைவன் எந்த ஒரு நபியையும் ஆடு மேய்ப்பாளராகவே அன்றி அனுப்பவில்லை' என நபி (ஸல்) அவர்கள் கூறிய போது, 'தாங்களுமா?' என நபித்தோழர்கள் கேட்டார்கள். 'ஆம், மக்காவாசிகளுக்காக 'கராரீத்' எனும் இடத்தில் நானும் ஆடு மேய்த்திருக்கிறேன்' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்', (அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி), புகாரி)

நிமிர்ந்து வாழ வீடு இருந்தாலும், பணிந்து நடக்க வாசல்படி வேண்டும். விட்டுக்கொடுப்பதும் பணிவின் அடையாளமே. அவர்கள் வாழ்வில் என்றும் கெட்டுப் போனதில்லை.
ஜனாதிபதியாக உமர் (ரலி) இருந்த வேளையில் குடும்பத்தினருக்காக தமது இடது கையில் இறைச்சியையும், வலது கையில் மளிகை பொருட்களையும் சுயமாக சுமந்து கொண்டு வந்தார்கள்.
மர்வான் (ரஹ்) அவர்களின் ஆட்சிக்காலத்தில் அபூஹுரைரா (ரலி) அவர்கள் கவர்னராக நியமிக்கப்பட்டார்கள். கவர்னராக பதவி வகித்துக் கொண்டு, கடைவீதிக்குச் சென்று, விறகுகளை வாங்கி, தானாக சுமந்து கொண்டு வீடு திரும்பினார்கள்.
நபி (ஸல்) அவர்கள் ஏழை-பணக்காரரர், சிறியவர்- பெரியவர் என அனைவரிடமும் கை கொடுப்பார்கள். தன்னை எதிர்நோக்கும் தொழுகையாளிகளில் சிறியவர்- பெரியவர், கறுப்பர்-சிவப்பர், அடிமை-எஜமான் எவராக இருந்தாலும் முந்திக்கொண்டு ஸலாம் கூறுவார்கள். இது நபியவர்களின் பணிவான நடத்தையாகும்.

ரஹ்மத் ராஜகுமாரன்

## இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள் 3



" மாறாதையா மாறாது மனமும் குணமும் மாறாது "
" தன்னுடைய மனோஇச்சைகளையே பின்பற்றுபவன் நாயைப் போன்றவன் நீர் அதை விரட்டினாலும் நாக்கைத் தொங்க விடுகிறது, அல்லது அதை நீர் விட்டு விட்டாலும் நாக்கைத் தொங்க விடுகிறது"
( குர்ஆன் 7:176 )

- " நாயின் வாலை நிமிர்த்த முடியாது"

" நாயைக் குளிப்பாட்டி நடு வீட்டில் வைத்தாலும் , அது கண்டதையும் தேடி ஓடத்தான் செய்யும் " .
இது மாதிரி பழமொழிகள்தான் நாயைப் பற்றி நாம் கேள்வி பட்டிருக்குகிறோம். இந்த நாயின் பழமொழிகள் எல்லாம் நாய்க்கு என்ன மாதிரியான அழகான செயல்கள் செய்து வைத்தாலும் , அது தன் பழைய நிலைக்கே போய் விடும் .அது வாலாக இருந்தாலும் சரி , அதன் குணமாக இருந்தாலும் சரி . ஆனால் இறைவன் தன் வேதத்தில் நாயின் நாக்கை உதாரணமாக சொல்கிறான் .இது நமக்கு சற்று வியப்பாக இருக்கிறது. மனோ இச்சையைப் பின்பற்றி நடப்பவனுக்கு நாயை உதாரணமாக குர்ஆனில் சொல்லப்படுகிறது.

முதல்ல நாயின் நாக்கு ஏன் வெளியே தொங்க விடுகிறது ?
நாய்களுக்கு வியர்வை சுரப்பிகள் இல்லை. அது தன் உடல் வெப்பத்தை வெளியேற்ற நாக்கை முழுவதுமாக வெளியே தொங்கிவிட்டு வேகமாய்ச் சுவாசிக்கும்.
நாயின் மூக்கை வைத்து அதன் உடல்நிலையைக் கண்டுபிடித்துவிடலாம். அதில் ஈரத்தன்மை எப்போதும் இருந்துகொண்டேயிருந்தால் நல்ல உடல்நலத்தோடு இருக்கிறது என்று அர்த்தம்.
நாயின் மூக்கு உலர்ந்திருந்தால் , ஏதோ உடல்நலக் கோளாறு என்று பொருள்.நாய் தன் நாக்கைக் கொண்டே தன்னை சுத்தம் செய்து கொள்கிறது.
மனோ இச்சையைப் பின்பற்றிய ஒருவரின் வரலாற்றின் பின்புலத்தில் இவ்வசனம் அருளப்பட்டிருக்கிறது

**இப்னு அப்பாஸ் (ரலி ) அவர்கள் கூறியதாவது :**
பல்ஆம் என்பவர் மூஸா (அலை) அவர்களது இறுதி காலத்தில் வாழ்ந்த ஒரு துறவி. ஈராக் அல்லது கன்ஆன் பகுதியை சேர்ந்தவர். வணக்க வழிபாடுகளில் அதிகமாக ஈடுபட்டிருந்தார். அதனால் அவருக்கு இஸ்முல் ஆலம் பற்றி தெரியும். இதைப் பயன்படுத்தி அவர் துஆ செய்தால், உடனே இறைவன் நிறைவேற்றி கொடுப்பான் .
மேலும் ஜோதிடம் பார்ப்பதிலும், சூனியம் செய்வதிலும் அவர் வல்லவராக இருந்தார்.இவரை விவிலியம் பழைய ஏற்பாடு "பேயோரின் குமாரன் " என அழைக்கிறது .எண்ணாகமம் 22 ,23 , 24 ஆகிய அதிகாரங்களில் இவரைப் பற்றி விவிலியம் நிறைய பேசுகிறது. புதிய ஏற்பாட்டிலும் ஆங்காங்க இவரை குறித்து பேசப்பட்டுள்ளது .

மொத்தத்தில் அல்லாஹ் அவருக்கு உயர் பதவி வழங்கியும், அதை பயன்படுத்திக் கொள்ளாத ஒரு மோசமான மனிதர்தான் பல்ஆம் என்பது மட்டும் உறுதி. அவரின் வரலாறு .
மூஸா (அலை) அவர்களும் , அவர்களுடன் இருந்தவர்களும் "அமாலிகா " என்னும் அடக்குமுறையாளர்கள் இருக்குமிடம் சென்றபோது, அமாலிகா கூட்டத்தினர் பல்ஆம் பின் பாஊரா என்பவரிடம் வந்தனர் .
" மூஸா இரும்பு மனிதர் அவரிடம் அதிகமான படைகள் உண்டு. அவர் எங்களை வெற்றி கொண்டால், எங்களை அழித்து விடுவார் . ஆகையால் மூஸாவையும் அவருடன் உள்ளவர்களையும் எங்களை விட்டு தடுக்க வேண்டும் என்று அல்லாஹ்விடம் பிராத்தனை புரியுங்கள் "என்று வேண்டினர்.

மூஸாவையும் , அவருடன் இருந்தவர்களையும் திருப்பி அனுப்ப வேண்டும் என்று அல்லாஹ்விடம் நான் வேண்டினால், என்னுடைய இவ்வுலக வாழ்க்கையும்,மறு உலக வாழ்க்கையும் அழிந்து போய்விடும் என்று கூறினார். ஆனால் அவர்கள் அவரிடம் வற்புறுத்திக் கொண்டே இருந்தனர்.
அப்பொழுது அவர்கள் அவரிடம் நயமாக பேசி மகத்தான வெகுமதியை லஞ்சமாகக் கொடுத்தனர். அதனை அவர் மனோ இச்சைப்படி ஏற்றுக்கொண்டார் .
ஒரு குறிப்பிட்ட மலைக்குச் சென்று அதில் ஏறி நின்று பிரார்த்தனை செய்ய வேண்டும் என்பது ஏற்பாடு. அவருடைய கழுதையின் மீது ஏறிக்கொண்டு சில அடிகள் தூரம் சென்றிருப்பார். கழுதை படுத்துக்கொண்டது. கீழே இறங்கி அதனை அடித்தார். அது எழுந்தது .மீண்டும் அவர் அதன் மீது ஏறிக்கொண்டு சில காத தூரம் சென்றதும். மீண்டும் படுத்துக் கொண்டது .

வானவர்கள் அதன் முன்னர் நின்று கொண்டு அதனை முன்னே செல்ல விடாமல் தடுத்தனர்.
ஆரம்பத்தில் பல்ஆம் விலாயத் இல்லாமல் இருந்த நிலைக்கே போய்விட்டார் . மேலும் உலக ஆசை முற்றிவிட்ட பல்ஆம் அதைப் பொருட்படுத்தாமல் அந்த கழுதையை விட்டுவிட்டு கால்நடையாகவே மலைமீது ஏறினார் .

இஸ்ரவேலர்களை பார்த்து அவர்களுக்கு விரோதமாக பிரார்த்தனை செய்வதற்கு நாவை அசைத்த போது. நேர் மாற்றமான பிரார்த்தனை அவர் வாயில் வந்தது. இஸ்ரவேலருக்கு "தோல்வியைக் கொடு " என்று எண்ணிக்கொண்டு, நாவில் கூற நினைத்து , "என்னுடைய கூட்டத்தினருக்கு தோல்வியை கொடு. இஸ்ரவேலர்களுக்கு வெற்றியைக் கொடு" என்று வார்த்தை அவரை அறியாமலே வந்தது.

இதனைச் செவியுற்ற அவருடைய கூட்டத்தினர் அவரை நோக்கி " பல்ஆமே...! நீர் என்ன சொல்கிறீர் ? நேர்மாற்றமாக எங்களுக்கு தோல்வி ஏற்பட வேண்டும் என்று கேட்கிறீர்கள்" என்று ஆவேசமாக கத்தினார். அதற்கு அவர் , " நான் என்ன செய்வது ? நான் விரும்பாதபடியே என் நாவு அப்படி கூறுகிறது .என்னால் அது தடை செய்ய முடியவில்லையே" என்று கூறினார்.

மீண்டும் அவர் "என்னை விட்டு இம்மையும்-மறுமையும் இரண்டும் போய்விட்டது. என் துஆவும் இனி அங்கீகரிக்கப்படாது என்பது எனக்குத் தெரியும் .இதற்கு மேல் சூழ்ச்சிகரமான ஒரு யோசனை உங்களுக்கு தெரிவிப்பைத் தவிர வேறு ஒன்றும் எனக்கு தெரியவில்லை."
" என்ன அது ? "
"அழகான பெண்களை நன்றாக அலங்கரித்து இஸ்ரவேலர்கள் மத்தியில் அனுப்புங்கள்.நிச்சயமாக அவர்கள் அப்பெண்களின் மீது மையல் கொண்டு தகாத செயல்களை செய்வதன் பொருட்டு, அவர்களுக்கு தோல்வி ஏற்பட்டு விடும் "என்ற பயங்கரமான ஒரு கீழ்தர உபயக் கருத்தை தெரிவித்தார்.

வரலாற்றின் பின்தொடரில் அப்படி நடந்ததாகவே கூறப்படுகிறது .இந்த வரலாறு பழைய ஏற்பாடு எண்ணாகமம் 22, 23 , 24 அதிகாரங்களிலும் கூறப்பட்டுள்ளது.

முடிவில் நபி மூஸா அவர்களுக்கும் அவர்களுடைய தோழர்களுக்கும் எதிராகப் பிரார்த்தனை செய்தார் . உடனே அவர் பெற்றிருந்த ஞானங்கள் அனைத்தையும் அல்லாஹ் பறித்துக் கொண்டான்.
நாய் திருப்பவும் தன் நாக்கை வெளியே தொங்க விட்டது.
وَلَوْ شِئْنَا لَرَفَعْنٰهُ بِهَا وَلٰـكِنَّهٗۤ اَخْلَدَ اِلَى الْاَرْضِ وَاتَّبَعَ هَوٰٮهُ‌ فَمَثَلُهٗ كَمَثَلِ الْـكَلْبِ‌ اِنْ تَحْمِلْ عَلَيْهِ يَلْهَثْ اَوْ تَتْرُكْهُ يَلْهَث‌ ذٰ لِكَ مَثَلُ الْقَوْمِ الَّذِيْنَ كَذَّبُوْا بِاٰيٰتِنَا‌ فَاقْصُصِ الْقَصَصَ لَعَلَّهُمْ يَتَفَكَّرُوْنَ
நாம் நாடியிருந்தால், நம் அத்தாட்சிகளைக் கொண்டு அவனை உயர்த்தியிருப்போம்; எனினும் அவன் இவ்வுலக வாழ்வை(யே சதமென) மதித்து, தன்னுடைய இச்சைகளையே பின்பற்றினான்; அவனுக்கு உதாரணம் நாயைப் போன்று, அதை நீர் விரட்டினாலும் நாக்கைத் தொங்க விடுகிறது, அல்லது அதை நீர் விட்டு விட்டாலும் நாக்கைத் தொங்க விடுகிறது - இதுவே நம் வசனங்களைப் பொய்யெனக் கூறும் கூட்டத்தாருக்கும் உதாரணமாகும் - ஆகவே அவர்கள் சிந்தித்து நல்லுணர்வு பெறும் பொருட்டு (இத்தகைய) வரலாறுகளைக் கூறுவீராக. (அல்குர்ஆன் : 7:176)
ரஹ்மத் ராஜகுமாரன்

## இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள் 4

(பதவி வரும்போது பணிவும் வர வேண்டும்துணிவும் வரவேண்டும்.)

என்ன நிலை ஏற்படினும் , என்ன துயர் வந்தாலும், நீதி வழங்குதல் நியாயம் பெறப் பாடுபடுதல் ஆகியவை உயர் நோக்கிலிருந்து சிறிதும் பிறழாது உறுதியாக நிற்க வேண்டும் என்கிறது திருமறை.

اِنَّ اللّٰهَ يَاْمُرُ بِالْعَدْلِ وَالْاِحْسَانِ وَاِيْتَآىِٕ ذِى الْقُرْبٰى وَيَنْهٰى عَنِ الْفَحْشَآءِ وَالْمُنْكَرِ وَالْبَغْىِ‌ يَعِظُكُمْ لَعَلَّكُمْ تَذَكَّرُوْنَ
நிச்சயமாக அல்லாஹ் நீதி செலுத்துமாறும், நன்மை செய்யுமாறும், உறவினர்களுக்கு கொடுப்பதையும் கொண்டு (உங்களை) ஏவுகிறான்; அன்றியும், மானக்கேடான காரியங்கள், பாவங்கள், அக்கிரமங்கள் செய்தல் ஆகியவற்றை விட்டும் (உங்களை) விலக்குகின்றான் - நீங்கள் நினைவு கூர்ந்து சிந்திப்பதற்காக, அவன் உங்களுக்கு நல்லுபதேசம் செய்கிறான். (அல்குர்ஆன் : 16:90)

உமர் (ரலி) அவர்களுடைய ஆட்சி காலத்தில் ஓர் இரவில் அவர்கள் நகர் சோதனைக்காக புறப்பட்டார்கள் . ஒரு வீட்டிலிருந்து பேச்சவரம் கேட்டது .கலிபா உமர் (ரலி) அவர்கள் கூர்ந்து கேட்டார்கள்.
" எனக்கும் உமருக்கும் இடையே அல்லாஹ்தான் நீதி வழங்க வேண்டும் " என்று ஒரு பெண்மணி தன் மக்களிடம் கூறிக்கொண்டிருந்தார்.

" ஏழை பெண்ணின் மனபாரத்தை குறைக்க ஏதாவது உதவி செய்ய முடியுமா ? என்ற சிந்தனையில் கதவை தட்டினார் உமர் (ரலி ) அவர்கள்.
கதவு திறந்தது.
"உமர் என்ன தவறு செய்தார் நீ அல்லாஹ்விடம் நியாயம் கேட்கிறாய் ? "என்று பெண்மணியிடம் வினவினார்கள்.

கலீபாவை அடையாளம் தெரிந்து கொள்ளாத அப்பெண் பதிலளித்தாள் :
"என் கணவரை கலீபா போர் முனைக்கு அனுப்பிவிட்டார்கள். சின்னஞ்சிறு குழந்தைகளொடு நான் எவ்வளவு கஷ்டப்பட்டு கொண்டிருக்கிறேன் நம் கஷ்ட நிலை பற்றிய செய்தி எட்டவில்லையே என்று என் குழந்தைகள் கூட பேச ஆரம்பித்து விட்டனர்"
சோகக் கதையை செவியுற்ற உமர் (ரலி) ஓசை படாது வெளியேறினார்கள். கடைத் தெருவுக்குச் சென்று கோதுமையும், இறைச்சியையும் , உணவு சமைப்பதற்கான இதர பொருட்களையும் வாங்கி தன் தோளில் ஏற்றிக் கொண்டார்கள்.

" தாங்கள் இவற்றை சுமப்பானேன் நான் கொண்டு வருகிறேன் என்று கலீபாவுடன் வந்தவர் கூறினார்.
" உலகத்திலேயே இந்த சுமையை நீர் தூக்கி கொள்வீர். ஆனால் இறுதி நாளில் இறைவன் முன்னே என் பாவச்சுமையை யார் சுமப்பார்கள் ?" என்று பதில் கொடுத்தவர்களாக , மூட்டையைத் தாமே சுமந்து கொண்டார்கள் உமர் (ரலி ) அவர்கள் .
அப்பெண்மணியின் வீட்டிற்கு வந்து தம் கையாலேயே உணவு தயாரித்து குழந்தைகளுக்கு எல்லாம் ஊட்டிவிட்டு,
"அம்மா ! இறைவன் முன்னிலையில் என் மீது நீ குற்றம்சாட்டாது இருக்கவேண்டும் " என்று கேட்டுக் கொண்டார்கள்.
இப்போது கலிபாவை அடையாளம் கண்டு கொண்ட பெண்மணி கண்கள் நனைந்தன
இச்சம்பவம் நிகழ்ந்த சில ஆண்டுகளுக்குப் பின்னர் உமர் (ரலி) மரணம் அடைந்தார்கள். அவருடைய உற்ற நண்பர் ஒருவர் கனவில் உமர் (ரலி) அவர்களை கண்டார்கள்.
" நிச்சயமாக அல்லாஹ் நீதி செலுத்துமாறும் உங்களுக்கு அவன் உபதேசிக்கிறான் " -என்று திருமறை கூறுகிறதல்லவா அதை கொண்டு என் நடத்தையை கவனித்து, கணவனை பிரிந்து வாழ்ந்த பெண்மணிக்கு நியாயம் கிடைக்க வேண்டியதைக் கொடுத்து , நீதி வழங்கியதன் காரணமாக அல்லாஹ் எனக்கு நல்லருள் செய்து உள்ளான்" என்று கலீபா உமர் (ரலி) அவர்கள் சொல்லியது போல் அக்கனவு தோற்றத்திலே அந்நண்பர் கண்டாராம் .

அடுத்து....
கலிஃபா உமர் (ரலி) அவர்கள் ஆட்சிப் பொறுப்பில் இருந்த போது குடிமக்கள் நிலையை அறிவதற்காக நகர்வலம் செல்லும் வழக்கம் உடையவர்கள்.
அப்போதும மதினா நகரெங்கும் பஞ்சம் நிலவி வந்தது.
நிவாரண உதவிகள் பாதிக்கப்பட்ட அனனவருக்கும் கிடைத்திட வேண்டும் என்பதில் உமர் (ரலி) அவர்கள் மிகுந்த கவனம் செலுத்தினார்கள்.
ஒருநாள் இரவு நேரத்தில் கலிஃபா அவர்கள் தமது உதவியாளருடன் மதினாவின் புறநகர்ப் பகுதியில் சென்று கொண்டிருந்தபோது, ஒரு குடிசையிலிருந்து விளக்கு வெளிச்சமும் குழந்தைகளின் அழுகுரலும் வரக் கண்டார்கள்.
கலிஃபா அவர்கள் அந்தக் குடிசையை நெருங்கிய போது, அங்கே ஒரு பெண்மணி அடுப்பில் ஒரு சட்டியில் ஏதோ சமைத்துக் கொண்டிருப்பதையும் அவருக்கருகில் அழுது கொண்டிருந்த குழந்தைகளையும் கண்டார்கள்.

கலிஃபா உமர் (ரலி) அவர்கள், அப்பெண்மணிக்கு சலாம் சொல்லி, அவரது அனுமதி பெற்று அவருக்கருகில் சென்றார்கள். அந்தப் பெண்மணி உமர் (ரலி) அவர்களை பார்த்ததில்லை என்பதால் வந்திருப்பவர் கலிஃபா என்பதை அறியவில்லை.

“குழந்தைகள் ஏன் அழுது கொண்டிருக்கின்றன?”
"அவர்கள் பசியோடிருக்கின்றார்கள். அதனால்தான் அழுகிறார்கள்”
“அடுப்பில் என்ன இருக்கிறது?”
“அது வெறும் சுடுநீரும் சில கற்களும்தான். அவர்களின் பசியைப் போக்க நான் ஏதோ சமைத்துக் கொண்டிருக்கிறேன் என்ற எதிர்பார்ப்பிலேயே அவர்கள் தூங்கி விடுவார்கள். அதற்காகத்தான் இப்படிச் செய்து கொண்டிருக்கிறேன். இந்தத் துன்பமான நேரத்தில் எங்களுக்கு ஒரு உதவியையும் செய்யாத கலீஃபா உமர் அவர்களுக்கும் எனக்குமிடையில் இறுதித் தீர்ப்பு நாளன்று அல்லாஹ்தான் ஒரு நல்ல தீர்ப்பை வழங்குவான்”.

அப்பெண்மணியின் இந்த வார்த்தைகளைக் கேட்டு பதறிப்போன கலீஃபா உமர் (ரலி) அவர்களின் கண்களில் நீர் வழிந்தோட, “அல்லாஹ் உம் மீது கிருபை செய்வானாக! உமது துன்பமான நிலைமையை உமர் எப்படி அறிவார்?” என்று வினவினார்.
“முஸ்லிம்களின் தலைவராக இருக்கும் உமர் எங்கள் நிலைமையை அறிந்திருக்க வேண்டாமா? என்றார் அந்தப் பெண்மணி.
கலீஃபா உமர் (ரலி) அவர்கள் விரைந்து நகருக்குத் திரும்பி உடனே பைத்துல் மாலுக்குச் சென்றார்கள். ஒரு சாக்குப்பையில் மாவு, நெய், பேரீத்தம் பழங்கள் போன்ற உணவுப் பொருட்களும் துணிமணிகளும் எடுத்து வைத்தார்கள். கொஞ்சம் பணமும் எடுத்துக் கொண்டார்கள். சாக்குப்பை நிரம்பியதும் தமது உதவியாளரை அழைத்து, அதைத்தூக்கி தமது முதுகில் வைக்கும்படி சொன்னார்கள்.
அவர்களின் உதவியாளர் பதறியவாறு, இந்த மூட்டையை நானே தூக்கி வருகிறேனே அமீருல் முஃமினீன் அவர்களே!” என்றார்.

உமர் (ரலி) அவர்கள் அதை ஏற்றுக் கொள்ளவில்லை.
“என்ன? நியாயத் தீர்ப்பு நாளன்று எனது சுமையை உம்மால் சுமக்க முடியுமா? மறுமையில் அந்தப் பெண்மணி பற்றி கேள்வி கேட்கப்படப் போவது நான்தானே? அதனால் இந்தச் சுமையையும் நானே சுமக்க வேண்டும் என்றார்!
உதவியாளர் மிகவும் தயங்கியபடி அந்த மூட்டையைத் தூக்கி கலீஃபா அவர்களின் முதுகின் மேல் வைத்தார்.
அதனைத் தூக்கிக் கொண்டு ஓட்டமும் நடையுமாக அப்பெண்மணியின் குடிசையை நோக்கி விரைந்தார்கள் உமர் (ரலி) அவர்கள். அவர்களை பின்தொடர்ந்து சென்றார் உதவியாளர்.

குடிசையை அடைந்த உமர் (ரலி) அவர்கள் மூட்டையிலிருந்து மாவு, நெய், பேரீத்தம் பழங்களை எடுத்து அவற்றை பிசைந்து, அடுப்பிலிருந்த சட்டியிலிட்டு கிளறினார்கள். அருகிலிருந்த ஊதுகுழலை எடுத்து ஊதி அடுப்புத் தீயை தூண்டி எரியச் செய்தார்கள். அவர்களின் அடர்ந்த தாடிக்குள் புகை படிந்தது.
சிறிது நேரத்திற்குப் பிறகு உணவு தயாரானதும் கலீஃபா அவர்களே அந்த உணவை அப்பெண்மணிக்கும் அவரது குழந்தைகளுக்கும் பரிமாறினார்கள்.
மீதம் இருந்த உணவுப் பொருட்களை அவர்களின் அடுத்த வேளை உணவிற்காக வைத்துக் கொள்ளும்படி கொடுத்தார்கள். வயிறு நிரம்ப உண்ட குழந்தைகள் மகிழ்ச்சியாக சிரித்து விளையாடத் தொடங்கினார்கள். அதைப் பார்த்த உமர் (ரலி) அவர்களின் முகமும் மலர்ந்தது.

உமர் (ரலி) அவர்கள் அப்பெண்மணியிடம் ‘அக்குடும்பத்தை பராமரிப்பவர் யாரும் இல்லையா’ என வினவினார்கள். அந்தக் குழந்தைகளின் தந்தை இறந்து விட்டதாகவும் அவர்களுக்கு ஆதரவளிக்க வேறு யாரும் இல்லை எனவும் அப்பெண்மணி தெரிவித்தார்.

வீட்டிலிருந்த உணவுப் பொருட்களெல்லாம் தீர்ந்துப் போய் மூன்று நாட்களாக பட்டினியாக இருந்த நிலையில் அறிமுகமில்லாத அந்த மனிதர் செய்த உதவிக்கு நன்றி தெரிவித்த அந்தப் பெண்மணி சொன்னார், “உங்களின் இந்த கருணைச் செயலுக்கு அல்லாஹ் நற்கூலி வழங்குவானாக! உண்மையில்

கலிஃபா பதவிக்கு உமரை விட நீங்களே மிகப் பொருத்தமானவர்". அவருக்கு எதிரில் அமர்ந்திருப்பது கலிஃபா உமர் (ரலி) அவர்கள்தாம் என்பதை அப் பெண்மணி இன்னும் அறிந்து கொள்ளவில்லை!
உமர் (ரலி) அவர்களும் 'தாம் இன்னார்' என்பதை வெளிக்காட்டிக் கொள்ளாமல், "நீர் கலிஃபாவை சந்திக்கும்போது அங்கே என்னை கண்டு கொள்வீர்" என்றார்கள்.
கொஞ்ச நேரம் அங்கேயே அமர்ந்திருந்து குழந்தைகள் விளையாடுவதை பார்த்துக் கொண்டிருந்த உமர் (ரலி) அவர்கள் அதன் பின்னர் மதினா திரும்பினார்கள்.
செல்லும் வழியில் தன் உதவியாளரிடம் சொன்னார்கள், நான் ஏன் அங்கே அமர்ந்திருந்தேன் தெரியுமா? அக்குழந்தைகள் பசியால் அழுது கொண்டிருந்ததை பார்த்த நான், அவர்கள் மகிழ்ச்சியாக சிரித்து விளையாடுவதையும் சிறிது நேரம் பார்க்க வேண்டும் என்று விரும்பினேன். அதனால்தான்."
நீதி வழுவா நெறிமுறையை உலகெங்கும் பரப்புவதே இஸ்லாமிய அடிப்படையாகும். செல்வம் இருக்கும் காரணத்தால் எளியவனை துன்புறுத்துவதும், அதிகாரம் இருக்கும் காரணத்தால் ஒருவன் எளியவனைத் துன்புறுத்துவதும் , வலியவன் என்ற காரணத்தால் ஒருவன் நலிந்தவனைத் துன்புறுத்துவதும் மனிதத்தன்மைக்கு மாறான செயல்கள் என்று இஸ்லாம் அறிவுறுத்துகிறது.

ரஹ்மத் ராஜகுமாரன்

இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள் 5




**(காயமே இது பொய்யடா - வெறும் காற்றடைத்த பையடா)**
**காயமே இது பொய்யடா- வெறும்**
**காற்றடைத்த பையடா**
**மாயனார் குயவன் செய்த**
**மண் பாண்டம் ஓடடா!'**
**என்று சித்தர் ஒருவர் பாடினார்.**
காயம் என்ற இந்த உடல் நிரந்தரமானது என்று நினைத்து, இந்த நிலையற்ற உடலை வளர்க்க என்னவெல்லாம் செய்து கொண்டிருக்கிறோம்! ஆடம்பர ஆடை ,அணிகலன்கள், அலங்காரங்கள்,தைலப் பூச்சு, சத்தான- சுவையான உணவு, காயகல்ப லேகியங்கள்- இப்படியெல்லாம் கவனம் செலுத்தி நிலையற்ற இவ்வுடலை வளர்க்கிறோம்.
இதையே இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள், "வஃபீ அன்ஃபுஸிகும் அஃபலா துப்ஸிரூன் "உங்களிடமே (இறைவனின் வல்லமைகுரிய) சான்று இருக்கிறதே அதை நீங்கள் ஆராய்ந்து பார்த்ததில்லையா ? என்று இறைவசனத்தைச் சுட்டிக்காட்டி மனிதன் தன்னையே ஆழ்ந்து நோக்கினால், உண்மையை காண்பான் என்று தங்கள் மாபெரும் கலைக்களஞ்சியத்தில் இவ்வாறு எழுதுகிறார்கள்.
ஆதலால் மனிதனை நீ எங்கிருந்து வந்தாய் என்று உன் தொடக்கத்தை பற்றி விசாரணை செய்து பார் .அல்லாஹ் உன்னை ஒரு நீர் துளியிலிருந்து படைத்தான். அந்நீர் துளிக்குத் தந்தையின் முதுகையும், தாயின் நெஞ்சையும் ஆதியிடமாக அமைத்தான்.

பின்னர் உன் உற்பத்திக்கு அதை வித்தாகும் வகையில் ,தாய் தந்தையருக்கு ஆசையே உண்டாக்கினான். தாயின் கருப்பையை நிலமாகவும் , தந்தையின் முதுகில் தங்கிய நீரை விதையாகவும் செய்து ,அவ்விருவருக்கும் ஆசையே ஏவி , அவ்வித்தைத் தூவச் செய்தான் .
அந்த வித்தைக்கு சூதக உதிரத்தைத் தண்ணீராக்கினான். 'அலக்' _ உதிரக்கட்டி என்ற நிலையிலிருந்து அதையே 'முல்கத்' என்னும் சதைக் கட்டி ஆக்கினான். பின்னர் அதில் ரூஹை ஊதினான்.
இதற்குப் பின்னால் ஒத்த குணமுள்ள நீரிலும் , உதிரத்திலும் இருந்து தோல், சதை, நரம்பு, ஜவ்வு , எலும்பு போன்ற பற்பல தளவாடங்களை உன்னிலேயே உற்பத்தி செய்தான் இவற்றால் உன்னுடைய பற்பல உறுப்புகளையும் அமைத்தான்.
வெளியில் உருண்டையான ஒரு தலையும் , நீண்ட இரண்டு கைகளும் ,கால்களும் அவற்றின் முனையில் ஐந்தைந்து விரல்களும், கண், காது ,வாய் ,நாக்கு , மூக்கு போன்றவற்றையும் படைத்தான் . உள்ளில் இரைக்குடல்,ஈரல் மணிக்குடல், நீர்ப்பை போன்றவற்றையும் அமைத்தான். இவற்றில் ஒவ்வொன்றையும் வெவ்வேறு உருவிலும், வெவ்வேறு குணத்திலும், வெவ்வேறு அளவிலும் உண்டாக்கினான் .

ஒவ்வொரு விரலுக்கும் மூன்று கணுக்களை வைத்தான். ஒவ்வொரு உறுப்பையும் தோல், சதை, நரம்பு, சவ்வு, எலும்பு ஆகியவற்றை கொண்டு முழுமைப்படுத்தினான் .
உன் எலும்புகளை அவன் எத்தனை உறுதியும் கெட்டியும் உடையதாய் படைத்திருக்கிறான் என்பதை பார்! அவற்றில் ஒவ்வொரு துண்டும், ஒவ்வொரு உருவும் ,அளவுள்ளதாக - உருண்டையாக சில , நீளமாகச் சில, மிக கெட்டியாக சில, அகலமாக சில , இவ்வாறு பல்வேறு தன்மையில் இருந்தாலும் அவை ஒன்றோடொன்று பொருந்தும்படி இணைத்திருக்கிறான்.
இவை ஒவ்வொன்றின் வடிவிலும், உருவிலும் ஆழிய அநேக நோக்கங்கள் இருக்கின்றன. இந்த எலும்புகள் ஒரே துண்டாகயிருப்பின் உன் முதுகையே நீ வளைக்க முடியாது. ஆகவே குனியவும், அசையவும், நிற்கவும், அமரவும், வசதியாக இருக்கும்படி அந்த எலும்புகளை மணிமணியாகப் படைத்து, அவற்றை ஒன்றோடொன்று பொருத்தி இயங்கும்படிச் செய்துள்ளான். இவ்வெலும்புகள் மீது சவ்வையும் , நரம்புகளையும் சுற்றி உறுதிபடுத்தினான் .
இவ்வாறு தலை முழுவதையும் எலும்புகளால் அமைத்து, ஒரு பக்கம் ஏதேனும் ஆபத்து வந்தாலும் , இதர பகுதிகளில் இடர் படாமலும் நொறுங்கிப் போகாமலும் இருக்க வழி செய்தான்.

ثُمَّ خَلَقْنَا النُّطْفَةَ عَلَقَةً فَخَلَقْنَا الْعَلَقَةَ مُضْغَةً فَخَلَقْنَا الْمُضْغَةَ عِظٰمًا فَكَسَوْنَا الْعِظٰمَ لَحْمًا ثُمَّ اَنْشَاْنٰهُ خَلْقًا اٰخَرَ فَتَبٰرَكَ اللّٰهُ اَحْسَنُ الْخٰلِقِيْنَ
பின்னர், அந்த இந்திரியத்தை கருவாக ஆக்கினோம். பின்னர், அக்கருவை சிறிய சதைத் துண்டாக ஆக்கினோம். பின்னர், அந்த சிறிய சதைத் துண்டில் எலும்புகளை உருவாக்கினோம், அடுத்து அவ்வெலும்புகளுக்கு மேல் சதையை அமைத்தோம். பின்னர், அதனை (முழுமையான மனிதப்) படைப்பாக உருவாக்கினோம். படைப்பவர்களிலெல்லாம் மிக்க அழகானவனான அந்த அல்லாஹ் மிக பாக்கியம் பொருந்தியவன். (அல்குர்ஆன் : 23:14)

பற்களைக் எத்துணை அரிய அமைப்பாக வைத்திருக்கிறான் பார் ! செறிப்பதற்கு இசைவாக உணவு மதிய அரைபடும் பொருட்டு சில பற்களின் முனையை மெல்லியதாகவும் கூர்மையுடையதாகவும் அமைத்துள்ளான்.
கழுத்தை துண்டெலும்புகளால் ஆக்கி சவ்வாலும் சதையாலும், நரம்புகளாலும் அதை வலுப்படுத்தி அதன் மீது சிரசை இணைத்தான் .
முதுகை மணியெலும்புகளால் கோர்த்து அதன்மீது கழுத்தைப் பொருத்தினான் . இப்படி விதவிதமான எலும்புகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பணிக்காக அமைக்கப்பட்டுள்ளது. இது பற்றி எழுதினாலே நூல் விரிவாகி விடும்.
ஆனால் ஒன்று மட்டும் நினைவில் வைத்துக்கொள், இவ்வெலும்புகளில் ஒன்று குறைந்தாலும் நீ எந்த வேலை செய்ய முடியாதவனாகி விடுவாய் . ஓர் எலும்பு அதிகமாயிருந்தாலும் நீ பெரிதும் அவதிப்படுவாய் .
இப்படியே நரம்புகள் தசை நார்கள் , இரத்த நாளங்கள் ஆகிய ஒவ்வொன்றையும் பற்றி சிந்தித்துப் பார். கண்களை ஏழு வகுப்புகளாக அமைத்து - இதைவிட சிறந்த முறையில் அமைக்க எவராலும் இயலாது

என்ற வடிவியிலும் நேர்த்திலும் படைத்துள்ளான் .அவற்றில் படும் தும்பு தூசிகளைச் சுத்தப்படுத்த இமைகளை அமைத்துள்ளான்.
நீ அழகாயிருப்பதற்கும், கண் பார்வை பலமாகவும் ,புழுதி பறக்கும் போது அது கண்ணில் படாமல் இமைகளால் மூடி கொள்வதற்கும், மேலிருந்து குப்பை கூளங்கள் விழுந்தால் இமைகள் கண்களை காத்துக் கொள்வதற்கும், இமைகளை நேராகவும் கூராகவும் கருமையாகவும் படைத்தான்.

இவற்றை எல்லாம் விட அற்புதம் என்னவென்றால் கண்ணின் கருவிழியானது சில பயிறுகளின் அளவை விட அதிகம் இல்லை. எனினும் வானம், பூமியின் உருவம் அது தோன்றுகிறது. நீ கண்ணை மூடித் திறந்த மாத்திரத்தில் எவ்வளவோ தொலைவில் உள்ள வானத்தில் அற்புத காட்சிகளெல்லாம் கருவிழியில் புலனாகின்றன . மனிதனே ! இவற்றைவிட அற்புதமான அவற்றை நீ பார்க்கமுடியுமா ?
ஒரு பாதாம் பருப்பு அளவுள்ள உன் கண்ணை ஏழு வகுப்புள்ளதாகப் படைத்து ஒவ்வொரு வகுப்பையும் ஒவ்வொரு தன்மையுடையதாக அமைத்தான். இவற்றில் ஏதாவது ஒன்று சேதம் அடைந்தால் கூட, உலகமே உனக்கு இருண்டு போய்விடும். கண்ணின் அற்புத அமைப்பையும் புதுமைகளையும் பற்றி மட்டும் நாம் எழுதுவதானால் புத்தகம் புத்தகமாக எழுத.வேண்டிய வரும் !

اَلَمۡ نَجۡعَلۡ لَّهٗ عَيۡنَيۡنِۙ
(பார்க்கக்கூடிய) இரு கண்களையும், நாம் அவனுக்குக் கொடுக்கவில்லையா?
(அல்குர்ஆன் : 90:8)

ஒலியைக் கேட்பதற்கும் எப்போதுமே திறந்தேயிருக்கும் காதுகளில் புழு ,பூச்சிகள் போக முடியாதபடி செவிகள் எவ்வாறு அமைக்கப்பட்டிருக்கின்றன ?
உணவு வயிற்றினுள்ளே சென்றடைந்ததும் அதைச் சார்ந்த பல்வேறு உறுப்புகளான கருவிகள் எவ்வாறு சுறுசுறுப்பாக இயங்குகின்றன ? இரத்தமும், கழிவுப் பொருள்களும் எவ்வாறு பிரிக்கப்படுகின்றன ? பின்னர் உடலில் பல்வேறு பாகங்களுக்கு இரத்தத்தை எவ்வாறு ரத்தக்குழாய்கள் சுமந்து செல்கின்றன ? என்பனவற்றையெல்லாம் விளக்கி இறுதியில் மனித உடல் எனும் இந்த அற்புதத்தைப் படைத்தவனின் பேராற்றலை எண்ணி வியந்து பரவச நிலையில் எழுதுகிறார்கள்:
சுப்ஹானல்லாஹ் ! மனிதனே ! சுவரின் மீது உன்னை போன்ற ஒரு மனிதன் அழகான உருவத்தை வரைந்தால், அவனுடைய திறமையையும் சாமர்த்தியத்தையும் பார்த்து நீ அதிசயப்பட்டு நிற்கிறாய் . அந்த ஓவியனை போற்றிப் புகழ்கிறாய் !

"ஆனால் எழுதுகோலும், எழுதுபவனும் உன் கண்ணுக்குத் தோன்றாமல் மிகச் சிறு ஒரு நீர்த்துளியின் மீது இந்த எல்லா உருவங்களை, எல்லா அற்புதங்களையும் உள்ளும் புறமும் அமைத்திருக்கும் அந்த படைப்பாளனின் வல்லமையையும், மகத்துவத்தையும் கண்டு நீ ஆச்சரியப்படுவதில்லையே ஏன் ? அவனுடைய பேரறிவும், பேராற்றலும் உன்னைத் திடுக்கிடச் செய்ய வேண்டுமே ! உன்னுடைய கனிவும் ,கருணையும், பேரன்பும், பேரருளும் அதிசயத்தில் ஆழ்த்த வேண்டுமே !

" தாயின் கருவறையில் இருக்கும் போது உனக்கு உணவளிக்க இறைவன் ஏற்பாடு எவ்வாறு செய்துள்ளான் என்பதை பற்றி அறிந்தால் நீ மலைத்து நிற்பாயே ! இதுவரை நான் விவரித்ததவையெல்லாம் அவன் படைப்பின் புதுமைகளில் லட்சத்தில் ஒரு பங்கு கூட இல்லையே . இத்தகைய புதுமைகளை எல்லாப் படைப்பினங்களிலும் நீ காணலாம்.

சின்னஞ்சிறு கொசுவிலிருந்து மிகப்பெரும் யானை வரை ஆராய்ந்து பார் ! இப்புதுமைகளைக் கண்டு கொண்டே இருப்பாய் என்று மனித உடலின் விந்தைகளை ஓரளவு வர்ணித்து விட்டு இயற்கையின் எழிலை -காய்ந்த நிலம் கனி வழங்கும் பூமியாக மாற்றும்பெறும் அற்புதத்தைக் குறிப்பிடுகிறார்கள்.
"பின்னர் வசந்த காலமே செழுமையான பருவத்தைப் பற்றி சிந்தித்துப் பார். அதாவது பூமி முழுவதும், உயிர் இல்லாத உடல் போல ஒரே மணற்பரபரப்பாக காட்சியளித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் ,மழைக்காலம் வந்து வானம் பொழிகிறது அதன்பின்னர் உயிரற்ற அந்த நிலம் எவ்வாறு உயர்த்து ,

செழுமையாகி ஏழு வண்ண சித்திரப்பட்டுத் துகில் போல இலங்குகிறது பார் தங்களின் அது தோற்றம் பெறும் அலங்காரத்தை பார் ! ஆயிரமாயிரம் வண்ணங்களில் அது தோற்றம் பெறும் அலங்காரத்தைப் பார் !
நிலம் கிழித்து, வெளிக் கிளர்ந்து ஆயிரமாயிரம் செடிகள் மொக்க்குகளாக, மலர்களாக, கதிர்களாக ,காய்களாக, கனிகளாக மாற்றம் பெறுவதை பார் ! ஒவ்வொன்றும் உருவிலும் ,வடிவிலும்,மணத்திலும் ,நிறத்திலும்,நேர்த்தியிலும் தனித்தன்மை பெற்று விளங்குவதைப் பார் ! இப்படியே காவியச் சுவையோடு கருத்து கனிகளை வழங்கிக் கொண்டே செல்கிறார் இமாம் கஸ்ஸாலி (ரஹ்)

மனித உடலின் ரகசியங்களை அதன் அற்புதங்களை அவர்கள் இவ்வாறு ஆய்ந்து எழுதிய காலம் கிபி பத்தாம் நூற்றாண்டு என்பதை மனதில் வைத்துக்கொள்ள வேண்டும்.
ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் இன்றும் கூட மனித உடலின் மாபெரும் விந்தைகள் உடற்கூறு வல்லுனர்களை மட்டுமல்லாது சிந்திக்கும் திறன் படைத்தோரையும் , செழுங்கவிக் குலத்தோரையும் வியக்க வைக்கின்றன.

**கல் தீ நீர் காற்றெனப் புவியோர்**
**சொல்பொருள் அனைத்தும் தோன்றிய தெங்ஙனம் ?**
**வானும், மதியும் மண்ணிடைக் கடலும்**
**தானே இயங்கும் தத்துவம் யார்செயல் ?**
**உயிரோடு கண்வாய் செவியென விரிந்து**
**பத்தாம் மாதம் பளிங்குபோல் வெளிவரும்**
**இந்த விந்தையார் செயல் ? விளக்கம் எப்படி ?**
**கோடை வசந்தம் குளிர்பனி மழை**
**தோன்றுவதெங்கனம் ? சுழற்றுவ தெவ்விதி ?**
**விஞ்ஞா னத்தால் விபரமறிந்து**
**அஞ்ஞா னத்தை அகற்ற மாட்டீரோ !**
**சந்திரமண்டலம் தழுவிய ஞானம்**
**சாவைத் தடுக்க சக்தி இல்லாததேன் ?**
**"கேட்கிறேன் சொல்லுங்கள் ! "**

ரஹ்மத் ராஜகுமாரன்

## இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள் 6



நடப்பதெல்லாம் நன்மைக்கே
இங்கிலாந்தைச் சேர்ந்த ஓர் எழுத்தாளர். அது இரவு நேரம். மணி பத்தைத் தாண்டியிருந்தது. ஏப்ரல் மாதம் தொடங்கியிருந்தது. கடந்த வருடம் ஏப்ரல் தொடங்கி, மார்ச் மாதம் வரை அவருக்கு என்னவெல்லாம் நிகழ்ந்தது என்பதை நினைத்துப் பார்த்தார். நினைக்க நினைக்க சோகம் கவ்விக்கொண்டது. மேசைக்கு

முன்பாக அமர்ந்தார். ஒரு பேப்பரையும் பேனாவையும் எடுத்துக்கொண்டார். அவற்றையெல்லாம் பட்டியலிட ஆரம்பித்தார்...
* எனக்கு ஒரு ஆபரேஷன் நடந்தது. அதில் என் பித்தப்பையை அகற்றிவிட்டார்கள்.
* அறுவைசிகிச்சை காரணமாக நான் பல நாள்களுக்குப் படுக்கையிலேயே இருக்கவேண்டியதாகிவிட்டது.
* எனக்கு 60 வயது நிறைவடைந்தது. எனக்குப் பிரியமான வேலை, என் முதுமை காரணமாக என்னைவிட்டுப் போனது.
* சுமார் 30 ஆண்டுகளாக வேலை பார்த்த பப்ளிஷிங் நிறுவனத்திலிருந்து நான் வெளியேறினேன்.
* அதே ஆண்டில், அதே நேரத்தில்தான் பிரியத்துக்குரிய என் தந்தை இறந்து போன துயரமும் நிகழ்ந்தது.
* என் மகனுக்கு ஒரு விபத்து நடந்ததும் கடந்த ஆண்டில்தான். அதனாலேயே அவனுடைய மருத்துவப் படிப்புக்கான தேர்விலும் தோற்றுப் போனான்.
* கால்களில் அடிபட்டதால், என் மகன் கால்களை அசைக்க முடியாமல் பல வாரங்களுக்குப் படுத்த படுக்கையாகக் கிடந்தான்.
* விபத்தில் மகனுக்கு அடிபட்டதோடு, என்னுடைய காரும் மிக மோசமாகச் சேதமடைந்திருந்தது.
இதையெல்லாம் எழுதிவிட்டு, கடைசியாக அவர் இப்படி எழுதினார்... `கடவுளே... இது மிக மோசமான வருடம்.'
எழுத்தாளரின் மனைவி, அந்த அறையின் வாசலில் வந்து நின்று எட்டிப் பார்த்தார். கணவர் சோகம் கவிந்த முகத்தோடு ஏதோ யோசனையிலிருப்பதைக் கவனித்தார். அவர் மேசைக்கு முன் அமர்ந்து ஏதோ எழுதுவதும் தெரிந்தது. அவர் சத்தமில்லாமல் அங்கிருந்து நகர்ந்தார்.

அன்றைக்கு இரவு கணவர் உறங்கச் சென்ற பிறகு, அந்த அறைக்குள் நுழைந்தார். கணவர் எழுதிய குறிப்பு மேசை மேலேயே இருந்தது. அதை எடுத்துப் படித்துப் பார்த்தார். ஒரு கணம் யோசித்தார். இன்னொரு பேப்பரை எடுத்து சில குறிப்புகளை எழுதினார். தன் கணவர் எழுதியிருந்ததை அகற்றிவிட்டு, அந்த இடத்தில் தான் எழுதிய பேப்பரை வைத்தார். வெளியேறினார்.
அடுத்த நாள் காலை, அந்த எழுத்தாளர் அந்த அறைக்குள் நுழைந்தார். மேசையில் தன் குறிப்புக்குப் பதிலாக வேறொன்று இருப்பதைக் கண்டார். எடுத்துப் படித்தார். அதில் இப்படி எழுதியிருந்தது...
* பல வருடங்களாக எனக்கு பயங்கர வலியைத் தந்துகொண்டிருந்த பித்தப்பையை அகற்றி, அதற்கு விடை கொடுத்தேன்.
* என்னுடைய 60-வது வயதில் நல்ல ஆரோக்கியத்துடன் என் பணியிலிருந்து ஓய்வு பெற்றேன்.
* இனி என் நேரத்தை அமைதியான முறையில் கழிப்பேன். இனி, எந்தத் தொந்தரவும் இல்லாமல் நான் நினைத்ததை எழுத எனக்கு இப்போது அதிக நேரமிருக்கிறது.
* என் தந்தை தன்னுடைய 95-வது வயதில், இறுதிவரை யாரையும் சார்ந்து வாழாத அற்புதமான அந்த மனிதர், எந்தப் பிரச்னையுமில்லாமல் இயற்கை எய்தினார்.
* கடந்த வருடம்தான் கடவுள், என் மகனுக்குப் புதிதாக ஒரு வாழ்க்கையைக் கொடுத்தார்.
* என் கார் சேதமடைந்துபோனது. அது பரவாயில்லை, என் மகனுக்குப் பெரிதாக எதுவும் ஆகாமல், காலில் அடியோடு தப்பித்தானே... அது போதும்.

இந்தக் குறிப்புகளுக்குக் கீழே இப்படி எழுதியிருந்தது. `ஆக, கடவுளின் அளப்பரிய கருணை என் மேல் விழுந்த இந்த வருடம் நல்லவிதமாகக் கடந்துபோனது. நன்றி கடவுளே!'
உலகில் நடக்கும் அனைத்தும் இறைவன் விதித்த விதிப்படியும், அளவுப்படியுமே நடக்கிறது என்று நம்பிக்கை கொள்வதுதான், 'விதியை நம்புவது' ஆகும்.

நன்மை-தீமை, லாபம்-நஷ்டம், செல்வம்-வறுமை, இன்பம்-துன்பம், பிறப்பு-இறப்பு... இவை அனைத்தும் இறைவனால் உண்டாக்கப்பட்டவை. இவை அனைத்தும் இறைவனால் தீர்மானிக்கப்பட்டதன் அடிப்படையில் நடக்கிறது.
மனிதன் செய்யும் நன்மையான காரியங்களுக்கு நற் கூலியையும், தீமையான காரியங்களுக்கு தண்டனையையும் இறைவன் வழங்குவான்.

நன்மையும், தீமையும் இறைவன் நாட்டப்படி அரங்கேறினாலும், அவன் நன்மையை பொருந்திக்கொள்வான். தீமையைப் பொருந்தமாட்டான் என்றும் நம்பவேண்டும்.
'அவன் தனது அடியார்களிடம் மறுப்பைப் பொருந்திக் கொள்ள மாட்டான். நீங்கள் நன்றி செலுத்தினால் உங்களிடம் அதைப் பொருந்திக்கொள்வான்'. (திருக்குர்ஆன் 39:7)

'நன்மை-தீமை இரண்டும் இறைவன் நாட்டமில்லாமல் நடக்காது' என்று கூறும் பொழுது, நன்மை புரிந்தவருக்கு நல்ல பிரதி பலனும், தீமை செய்தவருக்கு தண்டனையும் கொடுப்பது நியாயமா? என்ற ஒரு நியாயமான கேள்வி எழுகிறது அல்லவா?.

ஆம், பின்னாளில் நடக்க இருக்கிற காரியங்களை அவன் இன்னதென நமக்கு தெரிவிக்கவில்லையே. அவன் நமக்கு வெளிப்படையாக அறிவித்ததெல்லாம் ஏவல்களும், விலக்கல்களும் தான். எனவே, அறிவித்தபடி ஏவலை ஏற்றும், விலக்கியதை விட்டும் தவிர்ந்து நடந்திட வேண்டும். இது ஒரு சாத்தியமான நடவடிக்கையே. இதுகுறித்து திருக்குர்ஆன் இவ்வாறு குறிப்பிடு கிறது:

'உள்ளத்தின் மீதும், அதை வடிவமைத்தவன் மீதும் சத்தியமாக, அதன் (உள்ளத்தின்) நன்மையையும், தீமையையும் அதற்கு அவன் அறிவித்தான். அதைத் தூய்மைப்படுத்துகிறவர் வெற்றி பெற்றார். அதைக் களங்கப்படுத்தியவர் நட்டமடைந்தார்'. (திருக்குர்ஆன் 91:7-10).

விதி ஒரு பக்கம் இருந்தாலும், இவ்வாறு கூறியதிலிருந்து நன்மை-தீமைகளை சீர்தூக்கிப் பார்த்து செயல்களில் ஈடுபடுவதற்குரிய தகுதியை இறைவன் மனிதனுக்கு வழங்கியிருக்கிறான் என்பது தெளிவாகத் தெரிகிறது.

விதி அடிப்படையில் எதுவும் நடக்கும் என்று எப்படியும் இருந்து விடக்கூடாது. நடந்ததை விதியின் மீது சுமத்தி, நடக்க இருப்பதை முழுமுயற்சியால் அடைய முற்பட வேண்டும்.
"ஒருவர், 'இறைத்தூதர் அவர்களே! சொர்க்கவாசிகள் யார்?, நரகவாசிகள் யார்? என்று (முன்பே இறைவனுக்குத்) தெரியுமா?' என நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார்.
'ஆம்! தெரியும்' என்றார்கள் நபிகளார்.
'அவ்வாறாயின் ஏன் நற்செயல் புரிகிறவர்கள் நற்செயல் புரிய வேண்டும்?' என்று அந்த நபர் கேட்டார்.
அதற்கு நபியவர்கள், 'ஒவ்வொருவரும் எதை அடைவதற்காகப் படைக்கப்பட்டார்களோ அல்லது எதை அடைவதற்கு வாய்ப்பளிக்கப்பட்டார்களோ அதற்காகச் செயல் படுகிறார்கள்' என்று பதில் கூறினார்கள். (அறிவிப்பாளர்: இம்ரான் பின் ஹுஸைன் (ரலி), புகாரி)

ஒவ்வொருவரின் விதியும் அவர் படைக்கப்படுவதற்கு முன்பே தீர்மானிக்கப்பட்டு விட்டது என்பதுதான் உண்மை.
'இந்தப் பூமியிலோ, உங்களிடமோ எந்தத் துன்பம் நிகழ்ந்தாலும் அதை நாம் உருவாக்குவதற்கு முன்பே பதிவேட்டில் இல்லாமல் இருக்காது. இது இறைவனுக்கு எளிதானது. உங்களுக்குத் தவறிவிட்டதற்காக நீங்கள் கவலைப்படாமல் இருப்பதற்காகவும், அவன் உங்களுக்கு வழங்கியதில் நீங்கள் பூரித்துப் போகாமல் இருப்பதற்காகவும் (விதியை ஏற்படுத்தியுள்ளான்)'. (திருக்குர்ஆன் 57: 22,23)

'ஒவ்வொரு பொருளையும் கணக்கிட்டு நாம் படைத்துள்ளோம்'. (திருக்குர்ஆன் 54:49)

'அல்லாஹ் ஒவ்வொரு பொருளையும் படைத்தான்; அதைத் திட்டமிட்டு அமைத்தான்'. (திருக்குர்ஆன் 25:2)

'அல்லாஹ்வின் கட்டளை தீர்மானிக்கப்பட்ட முடிவாக இருக்கிறது'. (திருக்குர்ஆன் 33:38)

‘இறைவன் வானங்களையும், பூமியையும் அமைப்பதற்கு ஐம்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அனைத்து படைப்பினங் களின் விதிகளையும் தீர்க்கமாக எழுதிவிட்டான்’ என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பாளர் : அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி), முஸ்லிம்)
எது நடந்தாலும், அது விதியின் அடிப்படையிலேயே நடக்கிறது. நடந்துவிட்ட ஒன்றுக்கு யாரும் யாரையும் குறைகூறக்கூடாது. நடந்துவிட்டதை நினைத்து வாழ்க்கையே முடங்கிவிட்டது என்று ஊனமாகி விடவும் கூடாது. வாழ்வின் அடுத்தகட்ட நகர்வுக்கு நம்மை தயார்படுத்திட வேண்டும்.

‘(இறைத்தூதர்களான) ஆதம் (அலை) அவர்களும், மூஸா (அலை) அவர்களும் தர்க்கம் செய்தார்கள். ஆதமிடம் மூஸா (அலை) அவர்கள், ‘ஆதம் அவர்களே! எங்கள் தந்தையான நீங்கள் (உங்களின் பாவத்தின் காரணமாக) எங்களை இழப்புக்குள்ளாக்கி விட்டீர்கள்; சொர்க்கத்திலிருந்து எங்களை வெளியேற்றி விட்டீர்கள்’ என்றார்கள்.

அதற்கு ஆதம் (அலை) அவர்கள், ‘மூஸாவே! இறைவன் தன்னுடன் உரையாடுவதற்கு உம்மையே தேர்ந்தெடுத்தான்; அவன் தன் கரத்தால் (வல்லமையால்) உமக்காக (தவ்ராத் வேதத்தை) வரைந்தான். இப்படிப்பட்ட நீங்கள், இறைவன் என்னைப் படைப்பதற்கு நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே என் மீது அவன் விதித்து விட்ட ஒரு விஷயத்திற்காக என்னைப் பழிக்கின்றீர்களா?’ என்று கேட்டார்கள்.
(இந்த பதில் மூலம்) மூஸா (அலை) அவர்களை ஆதம் (அலை) அவர்கள் தோற்கடித்து விட்டதாக மூன்று முறை நபி (ஸல்) கூறினார்கள். -அபூஹுரைரா (ரலி), நூல்: புகாரி)

ரஹ்மத் ராஜகுமாரன் .

இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள் 7





EDWARD FREDKIN




(படைப்புகளின் வழியேதான் படைப்பாளனை அறிய முடியும்)
**Three scientists and their Gods** - "மூன்று விஞ்ஞானிகளும் அவர்தம் கடவுள்களும் " என்ற புத்தகத்தை ராபர்ட் ரைட் **(Robert wright)** என்பவர் எழுதியுள்ளார் .
அந்தப் புத்தகத்தில் எட்வர்ட் ப்ரெட்கின் **( Edward Fredkin)** என்னும் விஞ்ஞானி கம்ப்யூட்டர் இயலில் சில புதிய கருத்துக்களை சொன்னார்.

உலகம் பிரபஞ்சம் அல்லது உண்மை என்பது சக்தியோ பொருளோ அல்ல அது இயங்குவது செய்தியால் என்கிற கருத்தைக் கொண்டு வந்தவர். இந்த பிரபஞ்சத்தை இயக்குவது ஒரு நிகழ்ச்சி நிரலின் படி

இருக்கிறது என்கிறார். இதற்கு பல ஆதாரங்களை விஞ்ஞானத்தனமாக எடுத்துக் காட்டி பிரமிக்க வைக்கிறார் .
இப்பிரபஞ்சம் இயங்குவது ஒரு நிகழ்ச்சி நிரலில் உள்ள செய்தியால் மிக துள்ளியமாக நடைபெறுவதைத்தான் அல்லாஹ் தன் குர்ஆனில்...

اَلَمْ تَعْلَمْ اَنَّ اللّٰهَ يَعْلَمُ مَا فِى السَّمَآءِ وَالْاَرْضِ اِنَّ ذٰ لِكَ فِىْ كِتٰبٍ اِنَّ ذٰ لِكَ عَلَى اللّٰهِ يَسِيْرٌ
(நபியே!) வானத்திலும் பூமியிலும் இருப்பவற்றை நிச்சயமாக அல்லாஹ் நன்கறிவான் என்பதை நீங்கள் அறியவில்லையா? நிச்சயமாக இவை யாவும் அவனுடைய (நிகழ்ச்சிக் குறிப்பாகிய) "லவ்ஹுல் மஹ்ஃபூளில்" இருக்கின்றன. நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு மிக்க சுலபமானதே!
(அல்குர்ஆன் : 22:70)

எல்லோரும் இந்த பிரபஞ்சத்தில் இன்று இருப்பதன் காரணம் ஏதோ ஒரு சக்தி அல்லது நபர் அல்லது கடவுளோ, ஏதோ,...
அதுதான் நட்சத்திரங்களைப் பார்ப்பதற்கு நிச்சயமாக இருளையும் படைத்திருக்கிறது.

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَجَعَلَ الظُّلُمٰتِ وَالنُّوْرَ ثُمَّ الَّذِيْنَ كَفَرُوْا بِرَبِّهِمْ يَعْدِلُوْنَ
எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்குரியதே! அவனே வானங்களையும், பூமியையும் படைத்தான். மேலும் இருள்களையும், ஒளியையும் உண்டாக்கினான். இவ்வாறிருந்தும் நிராகரிப்பவர்கள் (அல்லாஹ்வாகிய) தங்கள் இறைவனுக்கு (பொய்யான தெய்வங்களை) சமமாக்குகின்றனர். (அல்குர்ஆன் : 6:1)

உண்மை என்பது என்ன என்பது பற்றி சித்தாந்தங்கள் அமைக்க முற்பட்டு, அதை நிரூபிக்க ஒரே வழி உண்மையைச் சிருஷ்டிப்பதன் அவசியம் நமக்குப் புரிந்தால்தான் அதை ஓரளவாவது விளக்கிக் கொள்ள முடியும். இந்த விளக்கங்களின் விகிதாசாரங்கள் அந்த உண்மையின் மீதுள்ள நம்பிக்கைப் பொறுத்து மாறுபாடுகிறது .

اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ لِّلْمُتَوَسِّمِيْنَ
உண்மையைக் கண்டறிபவர்களுக்கு நிச்சயமாக இதில் பல அத்தாட்சிகள் இருக்கின்றன.
(அல்குர்ஆன் : 15:75)

நம்பிக்கை என்பது ஒரு விதையைப் போன்றது . அந்த நம்பிக்கை விதையாக பிறவி எடுப்பது என்பது முற்றிலும் சரியே ; ஆனால் விதையாகவே மாண்டு போவது துரதிருஷ்டமானது.
பிரபஞ்சத்தில் ஒரே ஒரு கேள்விதான் இருக்கிறது. அதற்கு ஒரு விடை இருக்கிறது . யாரிடம் இந்த கேள்வி இருக்கிறது ,யார் விடை அறிய விரும்புகிறார் என்பதெல்லாம் பற்றிய யோசனை பிரபஞ்சத்திடம் இல்லை என்கிறார்.

ஃப்ரெட்கின், கம்ப்யூட்டர்களுக்கு அறிவு புகட்டலாம் என்பதை நம்புபவர் .பிரபஞ்சமே ஒரு கம்ப்யூட்டர் போல, அதற்கு ஒரு ப்ரோக்கிராம் இருக்கிறது . இயற்கையின் விதிகள் அதை யாரோ ஏதோ ஒரு பிரச்சினைக்கு தீர்வு காண்பதில் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.அதனால்தான் நாம் எல்லோரும் நிஜமாக இருக்கிறோம் என்பது இவர் தியரி .

இந்த பிரபஞ்சம் பார்வை இழந்தவருக்கு கண்களை தர விரும்புகிறது. ஆனால், அவர்களோ அதனிடம் ஊன்றுகோலை எதிர்ப்பார்க்கிறார்கள் . அதே நேரத்தில் பிரபஞ்சத்தின் அன்பு என்பது உரிமை கொண்டாடுவதற்கல்ல என்பதையும் நீங்கள் புரிந்திருக்க வேண்டும் .
ஆக மொத்தத்தில் படைப்பாளன் சொல்ல வருவதை படைப்பின் செயல்பாட்டின் வழியே சொல்லி வருகிறான்.

இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள் 8



**(மனித நேயம் பேணுங்கள்)**

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவருடைய பணியாளர் வெப்பத்தையும் புகையையும் தாங்கிக்கொண்டு உணவு சமைத்துக் கொண்டுவந்தால், அவரையும் தம்முடன் அமரச் செய்து அவர் உண்ணட்டும். உணவு குறைவானதாக இருந்தால் அதில் ஓரிரு கவளங்களையாவது அவரது கையில் வைக்கட்டும்.

"மனிதன் பலவீனமாகவே படைக்கப் பட்டவன்'' என்று குர்ஆன் 4- 28 ஆவது வசனம். இப்பலவீனத்தால் இச்சைக்கு ஆளாகி எச்சப்பட்டு கொச்சைப் படக்கூடாது மனிதன் என்பதை "ஆதமின் மக்களை நாம் சங்கைப் படுத்தினோம், மேன்மை படுத்தினோம்'' என்று குர்ஆன் 17-70 ஆவது வசனம் கூறுகிறது.

நபி (ஸல்) அவர்களின் போதனைகளைப் புறக்கணித்து புறம்பாக நடந்து புண்படுத்தியவர்களைத் தண்டிக்காது மன்னித்து மற்றவர்களுக்கு நற்போதனை புரியும்படி குர்ஆன் (7-199) ஆவது வசனம் "இவ்வறிவீனர்களை நீங்கள் மன்னித்து புறக்கணித்து விட்டு நன்மையை ஏவுங்கள்'' என்று கூறுகிறது.

இந்த வசனப்படி பத்ரு போரில் கைதானவர்களைக் கொல்லாது கோமான் நபி (ஸல்) அவர்களின் அணியில் போர்புரிந்த ஒவ்வொரு வீரரிடமும் கைதிகளை ஒப்படைத்தார்கள்.

அன்சாரி தோழர் ஒருவர் அவரின் பாதுகாப்பில் இருந்த முஸ்அப் இப்னு உமைர் (ரலி) அவர்களின் சகோதரர் அபூஅஜீஸ் என்ற கைதிக்கு ரொட்டியை கொடுத்துவிட்டு, அவரும் அவரின் குடும்பத்தினரும் மீதமாகும் பேரீச்சம்பழத்தை மட்டும் தின்றனர்.

வெளியில் செல்லும்பொழுது கைதியை ஒட்டகத்தில் உட்காரவைத்து அன்சாரி தோழர் ஒட்டகத்தின் கயிற்றைப் பிடித்து கொண்டு நடப்பார். இம்மனித நேய மாண்பினால் பல கைதிகள் இஸ்லாத்தை ஏற்றனர்.

நபி ஜக்கரியா (அலை) அவர்கள் ஒரு சுவரைக் கட்டி கொண்டு இருந்தார்கள். பகல் உணவு வந்தது. சாப்பிட்டு முடிக்கும் தறுவாயில் நபி அவர்களைப் பார்க்க சிலர் வந்தனர்.

வந்தவர்கள் கேட்குமுன்னரே நபி ஜக்கரியா (அலை) அவர்கள் தான் கூலி வேலை செய்வதாகவும், கூலிக்கு வந்த உணவை உண்டு முடித்ததால், அதை உங்களுக்கு பகிர்ந்து கொள்ள இயலாததையும் இயம்பினார்கள். உழைத்து உண்டு உழைத்து பிழைக்க வழி காட்டினார்கள் நபி ஜக்கரியா (அலை) அவர்கள்.

கூலிக்கு ஒருவரை அமர்ந்து அவரிடம் வேலை வாங்கிக் கொண்டு கூலி கொடுக்காமல் இருப்பவனுக்கு எதிராக கியாமத் நாளில் நான் வழக்குரைப்பேன் என்று அல்லாஹ் அறிவிப்பதாக அண்ணல் நபி (ஸல்) அவர்கள்

திருக்கையில் மாவரைப்பது, வீட்டைக் கூட்டி பெருக்கி சுத்தப்படுத்துவது, துணிகளைத் துவைப்பது ,தோல் பையில் நீர் கொணர்வது முதலிய வேலைகளை பாச நபி (ஸல்)
அவர்களின் நேச மகள் பாத்திமா (ரலி) பணிப்பெண்ணுடன் பகிர்ந்து கொள்வார்கள்.

இப்படி பணி பெண்ணை மட்டும் வேலை வாங்காது அவர்களும் அதே வேலையை முறை வைத்து செய்வார்கள். தோல் பையின் கனத்தால் பாத்திமா (ரலி) அவர்களின் உடம்பில் தழும்பு ஏற்படும்.
பாத்திமா (ரலி) அவர்கள் கடைக்குச் சென்று சாமான்கள் வாங்கி வரும்பொழுது பணி பெண்ணுக்குத் தனியாக ஏதாவது வாங்கி வந்து கொடுப்பார்கள். பணிபெண்ணின்
வேலையில் தவறு கண்டால் பணியாளைச் சுடுசொற்களால் கடுஞ்சொற்களால் கண்டிக்கவோ தண்டிக்கவோ மாட்டர்கள். வேலையை விளக்கிச் சொல்லி துலக்கமாய் செய்யத் தூண்டுவார்கள்.
கிழிந்த ஆடைகளைத் தைப்பது, முதுமையான மாமியாருக்கு உதவி செய்வது, தணியாத அன்புடன் கணவருக்குப் பணிவிடை புரிவது முதலிட வேலைகளைப் பாத்திமா (ரலி)
அவர்கள் மட்டுமே செய்வார்கள். பாத்திமா (ரலி) அவர்கள் பணிப்பெண்ணிடம் ஒப்படைக்க மாட்டார்கள்.
அவர்களை நாடிவரும் பெண்களுக்குக் கல்வி கற்பிப்பார்கள், நீதி போதனை செய்வார்கள்.

"மனிதர்கள் மீது இரக்கம் இல்லாதவர்களிடம் அல்லாஹ் இரக்கம் காட்டமாட்டான்'' என்ற நபி (ஸல்) அவர்களின் நன்மொழியை அறிவிக்கிறார் ஜரீர்பின் அப்துல்லாஹ் (ரலி) நூல் -புகாரி,
முஸ்லிம். பசி பட்டினியில் வாடுவோர், ஆடை இல்லாது அவதிப்படுவோர், உடல் நலமின்றி நலிவடைந்தோர், அநீதிக்கு ஆளானோர், ஆபத்து விபத்துகளால் பாதிக்கப்பட்டோருக்குச் சாதி, சமய, இன, நாடு, மொழி வேறுபாடின்றி பிணி துடைத்தலே மனிதநேயம். மனிதநேயம் பேணி மாண்புற புனித வாழ்வு வாழ்வோம்.
ர.ரா

## இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள் 9



"எவருடைய கன்னத்திலும் அடிக்காதீர்கள். ஏனென்றால், முகத்தை அல்லாஹ் தன் கரத்தால் உருவாக்கினான்" - ஹதீஸ்
இறைவன்தான் உடல் முழுவதையும் படைத்தான் இருந்தாலும், முகத்தை தன் கரத்தால் உருவாக்குவதற்கு என்ன காரணமாக இருக்கலாம் . முகத்தில் அப்படி என்னென்ன இருக்கிறது ?

ஐம்புலன்களில் நான்கு புலன்களான வாய் , கண் , மூக்கு ,செவி முகத்திலேயே இருக்கிறது . ஐந்தாவது புலனான மெய் என்ற மொத்த உடலைக் கட்டுப்படுத்தும் தலைமை செயலகமான மூளையும் முகத்திற்கு மேலே உள்ள தலையில்தான் உள்ளது,
உடம்பில் ஒவ்வொரு அசைவையும், இயக்கத்தையும் கட்டுப்படுத்துவது மூளை. மூளைதான் உயிர். இதற்கும் மேலே என்ன சொல்ல வேண்டியிருக்கிறது ? மூளையில் இருபது டிரில்லியன் அதாவது 2000 கோடி கோடி நரம்புகள் உள்ளன.
அந்நரம்புகளை ஒன்றன்பின் ஒன்றாக சேர்த்து வைத்தால், அந்த நீளத்துக்கு பூமியிலிருந்து சந்திர மண்டலம் வரை போய்விட்டு திரும்பலாம். கன்னத்தில் அடிக்கும் போது மூளையின் நரம்புகள் பாதிக்கப்படலாம்.
தலையில் இருக்கும் உறுப்புகளில் மூளைக்கு அடுத்து அதிக முக்கியத்துவம் வாய்ந்த உறுப்பு கண். வெளியிலிருந்து பார்க்கும் போது தெரியும் கண்ணின் உறுப்பு 15% தான். மீதி 85% உள்பக்கமாக இருக்கிறது.
கண்ணை நாம் நேராக பார்க்கும் போது தெரிவது ஐந்து பகுதிகள்தான். புருவம் , இமை,இமை தாண்டியதும் காணப்படும் வெண்மையான பகுதி இதற்கு 'ஸ்க்லீரா' என்று பெயர் . இதன் மேலே படர்ந்து இருக்கும் திசுவின் பெயர் 'கஞ்சங்டைவா' அடுத்து பெரிய வட்டம் 'ஐரிஸ்' . கண்ணின் கலர்ஃபுல் பகுதி இதுதான்.

ஐரீஸ்க்கு நடுவில் உள்ளது 'ப்யூபில் ' எனப்படும் ஓட்டை .இதை **தமிழில் பாப்பா** என்று செல்லமாக கூறப்படுகிறது .இந்த துளையின் வழியாகத்தான் காட்சிகள் மூளையிலே பிரதிபலிக்கின்றன.
கைக்கடிகாரத்தை மூடி இருக்கும் கண்ணாடி மாதிரி ஐரிஸை மூடி பாதுகாக்கும் படலத்தின் பெயர்தான் **'கார்னியா'**. இரத்தக் குழாய்கள் இல்லாததால் நிறம் இல்லாமலிருக்கும். கன்னத்தில் அடிக்கும் போது, கண்ணின் மெல்லிய இப்பகுதிகள் பாதிக்கப்படலாம்.
அடுத்து, நான் சொல்ல போகிற விஷயத்தைக் கேட்டால் நீங்கள் மூக்கின் மேல் விரலை வைத்து ஆச்சரியப்படுவீர்கள்.

நம் தலைக்குள்ளே … சரியாக இடத்தைச் சொன்னால் இரண்டு காதுகளுக்கும் நடுவில் முக்குப் பின்னால் **பிட்யூட்டரி** என்ற சுரப்பி இருக்கிறது. மூளைக்கு அடியில் இருக்கின்ற இந்த சுரப்பிதான் உடலில் உள்ள **தைராய்டு, அட்ரினல் , பீனியல்** போன்ற முக்கிய சுரப்பிகளுக்கெல்லாம் ஹெட் ஆப் தி டிபார்ட்மெண்ட் .
இந்த பிட்யூட்டரி வீக்கம் , கட்டி என்று எந்த சின்னப் பாதிப்பு ஏற்பட்டாலும் மற்ற சுரப்பிகளின் சகஜ நிலையை இது கெடுத்துவிடும் .எனவே முகத்தில் அடிக்கும் போது இந்த சுரப்பிக்கு பாதிப்பு ஏற்படலாம் .
மூக்கில் அடிபட்டால் அந்த உடனேயே சின்னி மூக்கு உடைபட்டு இரத்தம் கொட்டும்

வாய் என்றாலே அது உதடுகள்தான் என்று நமக்குத் தெரிய வருகிறது .இந்த உதடுகளில் உணர்ச்சி நரம்புகள் இன உறுப்புகளில் குவிந்திருப்பது போல் உதட்டிலும் குவிந்திருக்கிறது . எனவே உதட்டில் அடிபட்டதும் உடனேயே வீங்கி முகத்தையே விகாரமாக்கி விடுகிறது.

அடுத்து, காது .காது, மூக்கு , தொண்டை இம் மூன்றும் ஒன்றோடொன்று தொடர்புள்ளவை. காது சரியாகப் கேட்பதற்குத் தொண்டையும் ஒரு வகையில் உதவி செய்கிறது. காதுக்குள் அழுத்தத்தைச் சமச்சீராக வைத்திருப்பதற்கு தொண்டையின் ஒத்துழைப்பு அவசியம் .

தவிர, இந்த மூன்றுமே காற்றை அடிப்படையாகக் கொண்டு இயங்கும் ஒரு முக்கூடல் எக்ஸ்பிரஸ். கன்னத்தில் அடிக்கும் அடி காதில் விழுமானாலும் 'ஙொங்' என்ற ஒரு சப்தம் .அவ்வளவுதான் காது செவிடாக கூட ஆகலாம்.

எனவேதான் நபி (ஸல்) அவர்கள் : "எவருடைய கன்னத்திலும் அடிக்காதீர்கள். ஏனென்றால், முகத்தை அல்லாஹ் தன் கரத்தால் உருவாக்கினான்" என்றார்கள் .

**Rahmath Rajakumaran**

"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
தடுத்தது காட்டும் முகம்" - திருக்குறள்
தன்னை நெருங்கியுள்ள பொருளைக் காட்டவல்ல பளிங்குபோல ஒருவனுடைய நெஞ்சில் மிகுந்துள்ள குணத்தை முகமானது வெளிப்படுத்திவிடும்.
எல்லா உணர்ச்சிகட்கும் நிலைக்களனான உள்ளத்தில் அன்பு, காதல், பயம், பிரிவு, துயரம், அருள், சினம், பொறாமை, வெறி போன்ற உணர்ச்சிகள் மிகுந்து பொங்கி எழும்போது அவற்றை அறவே வெளியில் தெரியாமல் மறைத்துவிட முடியாது. ஒருவர் உள்ளத்தில் எந்த ஒரு உணர்ச்சியும் மிகையாக வெளிப்படும்போது முகத்தில் தெரியும் மாற்றங்கள் அதைக் காட்டும்.
கை, கால் போன்ற மற்ற உடலுறுப்புகளும்கூட உணர்ச்சிகளை வெளிப்படுத்தக் கூடியன என்றாலும் முகம்தான் முதல் கண்ணாடியாகும்.
இன்னொருவகையில் சொல்வதானால், ஒருவரது முகத்தின் மூலம் அவரது மனதை வாசிக்கலாம். எனவே ஒருவர் முகக்குறிப்பு கொண்டு அவர் உள்ளத்திலுள்ளதை அளக்கலாம். குறிப்பறிதலை உணர்த்த வந்த வள்ளுவர் குறிப்பறிதலுக்கு உரிய ஒரு இடம் முகம் என்று உணர்த்துகிறார்.

இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள் 10



"வயிறு புடைக்க உண்ணாதீர்கள். தொடர்ந்து இறைச்சி உண்ணாதீர்கள். ஏனென்றால், உங்கள் உள்ளம் இருளாகி விடும்"
குறைவாகச் சாப்பிடுவதன் மூலம் உடற்பருமனை (உயரத்துக்கேற்ற நிறையை)ப் பேணிக் கொள்ளுங்கள். கூடுதலாகச் சாப்பிடுவது, கொழுப்பான உணவுகளை அதிகம் சாப்பிடுவது, குறைவாக வேலை செய்வது போன்றன நமது உடற்பருமனை (உயரத்துக்கேற்ற நிறையை) அதிகரிக்கச் செய்து, நமது ஆரோக்கியத்துக்குக் கேடானதாக மாறுகிறது.
அது என்ன உயரத்திற்கேற்ற எடை ?
.நீங்கள் குண்டா... ஒல்லியா... என்பதை அறிய உதவும் அளவுதான் **BMI (Body Mass Index**). அதைக் கணக்கிடுவதும் எளிதுதான்.

பி.எம்.ஐ = உடல் எடை (கிலோ கிராமில்) /உயரம் **(மீட்டர்) X (2)** இதுதான் அதற்கான ஃபார்முலா.
உதாரணத்துக்கு... 78 கிலோ எடை 164 செ.மீட்டர் உயரம் எனில், உங்கள் **பி.எம்.ஐ 78/(1.64) x 2= 23.78**
விடை 23-க்கு மேல் இருந்தால் நீங்கள் அதிக உடல் எடையுடன் (Over weight) இருக்கிறீர்கள் என்றும், 30-க்கு அதிகம் இருந்தால் 'குண்டுப் பேர்வழி' (Obesity) என்றும் பொருள்.

இறைச்சி உணவானது உயர்தர புரதத்தினை கொண்டுள்ளது. சராசரியாக புரதத்தின் அளவானது 16 லிருந்து 25% வரை வேறுபடுகிறது. இறைச்சியிலுள்ள புரத அமினோ அமிலங்களின் அமைப்பு புரதச்சத்தின் மதிப்பை உயர்த்துகிறது. இறைச்சியில் 5 லிருந்து 40% வரை கொழுப்பின் அளவு மாறுபடுகிறது.

விலங்குகளின் வகை, இனம் மற்றும் வயதை பொருத்து கொழுப்பானது விலங்குகளின் இறைச்சியில் சிறு துகள்களாக இறைச்சியின் எல்லா பாகங்களிலும் படிந்து காணப்படுகிறது.
மேலும் இவை உடல் தசைகளில் உள்ள இணைப்பு திசுக்களில் ஒரே சீரான அளவில் ஒரு மெல்லிய படலமாக படிந்துள்ளது. இதற்கு **'மார்பிலிங்' (marbling)** என்று பெயர். இது மாமிசத்திற்கு மிருதுவான தன்மையையும், சிறப்பு மணத்தினையும் கொடுக்கிறது.

தூரத்தில் இருக்கும் இறைச்சியின் வாசம் சைவ உணவுகளை புறந்தள்ளிவிடுகிறது. திருமண மண்டபத்தில் சைவ உணவின் பக்கம்தான் போக வேண்டும் என்கிற வீட்டில் எடுத்த உறுதிமொழி,மட்டன் பிரியாணியின் வாசத்தில் தடம் மாறி போகிறது . இந்த வாசமும், ருசியும்தான் இறைச்சியை மீண்டும் மீண்டும் தொடர்ந்து உண்ண வைக்கிறது.
தொடர்ந்து இறைச்சியை உண்ணும் போது கொலஸ்ட்ராலின் **(cholestrol)** அளவு இரத்தத்தில் கூடி விடுகிறது.மேலும் உடல் பருமனாகி குண்டாகி விடுகிறது. இதுபோன்ற காரணங்களினால்தான் நபிகளார் இறைச்சியை தொடர்ந்து உண்ணப்படுவதை தடுத்தார்கள்.

'குண்டாக இருந்தால் நீரழிவு நோய் வருவதற்கு வாய்ப்புகள் மிக அதிகம்' என்பது எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மை புற்றுநோய் வருவதற்கும் வாய்ப்புகள் அதிகம் .
புற்று நோயாளிகளில் 20 பேரில் ஒருவர் குண்டாக இருக்கிறார் என்ற புள்ளிவிவரம் சொல்கிறது.
'இரண்டு வயதுக்குள் குண்டாக இருக்கும் குழந்தைகள் எதிர்காலத்தில் எப்போதுமே குண்டாக இருப்பதற்கும். அதனால் உடலில் எந்தப் பாகத்திலாவது புற்று வருவதற்கும் ஆபத்துக்கள் மிக அதிகம் ' என்கின்றன மருத்துவ ஆய்வுகள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள்: "வயிறுதான் உடலின் தடாகம் போன்று இருக்கிறது. உடலின் அனைத்து குருதிக் குழாய்களும் நரம்புகளும் அதிலிருந்து பருகுகின்றன.
வயிறு சீராக இருக்குமானால், அனைத்து நாளங்களும் அதிலிருந்து ஆரோக்கியமான உணவைப் பருகிச் செல்லும்.
வயிறு சீர்குலைந்து இருக்குமானால், அனைத்து நாளங்களும் நோய்களைக் கவ்விக் கொண்டு உடல் முழுதுக்கும் பரவிச் செல்லும்." அபூஹுரைரா (ரலி); பைஹகீயின் ஷுஃபுல் ஈமான்
எவ்வளவு அழகான உவமானத்துடன் நபிகளார் எடுத்துச் சொல்லி இருக்கிறார்கள்.

உண்ணுங்கள், பருகுங்கள்; எனினும் வீண் விரயம் செய்யாதீர்கள். ஏனெனில் அல்லாஹ் அளவு கடந்து (வீண்) விரயம் செய்பவர்களை நேசிப்பதில்லை. (அல்குர்ஆன் : 7:31)
இங்கே 'இஸ்ராஃப்' என்பதன் நேரடிப் பொருள் 'எல்லையை மீறுதல்' என்பதாகும். எல்லையை மீறுதல் பல வகைப்படும். அதில் அளவை மீறிச் சாப்பிடுதலும் ஒரு வகையாகும்.

ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: "நாயகம் (ஸல்) அவர்களின் காலத்திற்குப் பிறகு உண்டான முதல் பித்அத் வயிறு நிறையச் சாப்பிடுவதுதான்.
மனிதர்களின் வயிறு நிரம்பி விடும்போது அவர்களின் உள்ளங்கள் உலகின் பக்கம் சாயத் துவங்கி விடுகின்றன."
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்கள்: "ஆதமின் மகன் (மனிதன்) இட்டு நிரப்பக் கூடிய பைகளில் வயிறை விட மோசமானது வேறெதுவுமில்லை.

ஆதமின் மகனுக்கு அவனது முதுகை நிமிர்த்தக் கூடிய சில கவளங்களே போதும். அதற்கு மேலும் அவன் உண்டே ஆக வேண்டுமானால் (வயிற்றின்) மூன்றில் ஒரு பாகத்தை தனது உணவுக்காகவும்,
இன்னொரு மூன்றில் ஒரு பாகத்தை தனது பானத்திற்காகவும், மற்றொரு மூன்றில் ஒரு பாகத்தை தனது சுவாசத்திற்காகவும் அவன் ஒதுக்கிக் கொள்ளவும்."
மிக்தாம் இப்னு மஅதீகரிப்(ரலி) திர்மிதீ 2380,இப்னு கசீர் ( 7:31)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் சபையிலே ஒரு மனிதர் ஏப்பம் விட்டார். அதற்கு (நபி) அவர்கள் "உமது ஏப்பத்தை எங்களை விட்டும் தடுத்து வைப்பீராக. ஏனெனில், இவ்வுலகில் அதிகம் தனது வயிற்றை நிரப்புபவர்களே மறுமையில் நீண்ட நேரம் பசிக்கக்கூடியவர்களாக இருப்பார்கள்" இப்னு உமர் (ரலி); திர்மிதீ (2015)

"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆயுள் முழுவதும் தமது மரணம் வரை எப்பொழுதும் இரண்டு தினங்கள் தொடர்ந்து கேழ்வரகு ரொட்டியையும் வயிறு நிரம்பச் சாப்பிட்டதில்லை."
ஆயிஷா (ரலி); திர்மிதீ
அபூஹுரைரா (ரலி) அவர்கள் (ஒரு நாள்) தம் முன்னே பொறிக்கப்பட்ட ஓர் ஆட்டை(ச் சாப்பிடுவதற்காக) வைத்திருந்த ஒரு கூட்டத்தாரைக் கடந்து சென்றார்கள்.
அவர்கள் அபூஹுரைரா (ரலி) அவர்களை(த் தம்முடன் சாப்பிட வருமாறு) அழைத்தார்கள். ஆனால் அன்னார் அவர்களுடன் சாப்பிட மறுத்து, "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொலி நீக்கப்படாத கோதுமை ரொட்டியால் வயிறு நிரம்பாத நிலையிலேயே இந்த உலகிலிருந்து சென்று விட்டார்கள்" என்று கூறினார்கள்." புகாரி-5414

" வயிறு புடைக்க உண்ணாதீர்கள். தொடர்ந்து இறைச்சி உண்ணாதீர்கள். ஏனென்றால், உங்கள் உள்ளம் இருளாகி விடும்"
இதனால்தான் நபிகளார் மற்றும் அவர் தம் தோழர்களின் உள்ளம் பிரகாசமாக இருந்தது .
இக்கட்டுரையின் மையக் கருத்தை சொல்றேன். லங்கணம் பரம ஔஷதம் -பட்டினி கிடப்பது மகத்தான மருந்து. அதற்குத்தான் நோன்பை கடமையாக்கினான் இறைவன் .
ஒருவேளை உண்பான் யோகி; இருவேளை உண்பான் போகி; மூவேளை உண்பான் ரோகி; நாலுவேளை உண்பான் போகியே போகி!

இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள் 11




**நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :**
**உன் நண்பனையும் ஓர் அளவோடு நேசி**
**ஒரு நாள் அவனும் உன் பகைவனாகலாம் !**
**உன் பகைவனையும் ஓர் அளவோடு பகை**
**அவனும் ஒரு நாள் உன் நண்பனாகலாம் !**
**-அபூஹுரைரா (ரலி) - திர்மீதி 1920**

உலக வரலாற்றில் மிகப்பெரிய நயவஞ்சகங்கள் அத்தனையுமே நண்பர்களின் உதவியுடனே நிகழ்த்த பட்டிருக்கின்றன. எதிரிகள் பின்னும் சதிவலைக்குள் விழுந்த நண்பர்களால் முதுகில் குத்துப்பட்டவர்களின் வரலாறுகள் பல உண்டு.

இயேசுவுக்கு ஒரு யூதாஸ், வீரபாண்டிய கட்டபொம்மனுக்கு ஒரு எட்டப்பன், சீசருக்கு ஒரு புரூட்டஸ் என இப்பட்டியல் மிக நீளமானது. இதில் சீசர் துரோகத்தால் வீழ்ந்த வரலாறு மிக சுவாரஸ்யமானது.
“திடீரென்று வரும் மரணமே சிறந்தது...” என்று பேச்சுவழக்கில் நண்பனிடம் கூறிவிட்டு, சீசர் இரவில் அரண்மனைக்கு திரும்புகிறார். தூங்குகிறார்.
அருகில் படுத்திருந்த அவருடைய மனைவி கல்பூர்ணியா கெட்ட கனவு கண்டு துடித்து விழிக்கிறாள். கிட்டத்தட்ட அந்த நேரத்தில்தான் சீசரை எப்படி கொல்வது என்று அவருடைய எதிரிகள் காஷியஸ் என்பவன் தலைமையில் கொலைத் திட்டம் தீட்டி முடிக்கிறார்கள்.

மறுநாள் காலையில் சீசர் செனட் கூட்டத்தில் கலந்துகொள்ள கிளம்புகிறார். மனைவி ஓடோடி வந்து, ‘நான் கெட்ட கனவு கண்டேன். நீங்கள் இன்று செனட் கூட்டத்திற்கு போகவேண்டாம்’ என்கிறாள். அதை ஏற்றுக்கொள்ளாத சீசர் ‘நடப்பது நடக்கட்டும்’ என்றபடி கூட்டத்திற்கு செல்கிறார்.
மரணம் அவரை பின்தொடர்கிறது! சீசரை நெருங்கும் மரணத்தை தடுக்கும் முயற்சியாக செயல்படுகிறார், அவரது நண்பர் ஆர்ட்டிமிடோரஸ், தத்துவஞானியான இவருக்கு கொலை சதி பற்றி தெரிந்துவிட்டது அவர் சீசரை எச்சரிக்கை செய்ய விரும்பி ஓடோடி வருகிறார்.
ஆனால் அதற்குள் சீசர், செனட்டிற்கு வந்துவிட்டார். அவரைச் சுற்றி பெருங்கூட்டம். ஆர்ட்டிமிடோரஸ் நெருங்கிப் போக நினைக்கிறார். ஆனால் சுற்றி நின்ற சதிகாரர்களோ சீசரை அவர் நெருங்கிவிடாமல் பார்த்துக்கொண்டனர். சீசரை நெருங்கும் மரணத்திற்கும் அவரைக் காப்பாற்ற நினைக்கும் ஆர்ட்டிமிடோரஸ்க்கும் இடையே திக்... திக்... போராட்டம் நடக்கிறது.

அடுத்து என்ன செய்வது என்று யோசித்த தத்துவ சிந்தனையாளர், தனது எச்சரிக்கையை உடனடியாக எழுதி, கூட்டத்திற்குள் முண்டியடித்து முன்னேறிச் சென்று சீசரின் கையில் கொண்டுபோய் திணித்தார். அதை என்ன ஏதென்று படிக்க சீசருக்கு மரணம் வாய்ப்புத் தரவில்லை.
அடுத்த முயற்சியாக சீசரின் நெருங்கிய நண்பரான மார்க் எண்டனி, சீசரை நோக்கிச் செல்கிறார். அவரை அருகில் விட்டால் ,தம் கொலைத் திட்டம் நிறைவேறாது என்பதை அறிந்து அவரை புரூட்டஸ் வசமாக மடக்கி பேச்சுக் கொடுத்து நெருங்கிப் போகாத அளவிற்கு பார்த்துக் கொள்கிறான். மரணம் சீசரின் கைக்கெட்டும் தூரத்தில்!
சீசர் வந்து தன் அரியணையில் அமர்கிறார். பின்னால் இருந்து அவருடைய அங்கியை டிலியஸ் என்பவன் இழுக்கிறான். அதுதான் சதி திட்டத்தை தொடங்கும் சிக்னல். அடுத்து காஸ்கா என்பவன் கத்தியோடு பாய்கிறான். குத்து விழுகிறது சீசர் எதிர்கொண்டு தடுக்க முயற்சிக்கிறார். அதற்குள் சதிகாரர்கள் அனைவரும் ஆளுக்கொன்று என்ற அடிப்படையில் சுற்றி வளைத்து காட்டுமிராண்டித்தனமாக குத்துகிறார்கள்.

அதை எல்லாம் தாங்கிக்கொள்ளும் சீசர், தன் உயிருக்கு உயிராக நேசித்த நண்பனாக இருந்த புரூட்டசும் குத்தும்போது மனதளவிலும் தளர்ந்துபோய், அதை பார்க்க சகிக்காமல், தடுக்கவும் விரும்பாமல் கைகளால் முகத்தை மூடிக்கொள்கிறார்.
ஷேக்ஸ்பியரால் புகழ் அடைந்த, **‘நீயுமா புரூட்டஸ்**...!’ என்ற வார்த்தை இந்த நேரத்தில்தான் சீசரிடம் இருந்து வெளிப்படுகிறது! ரத்தம் பீறிட்டு வெளியேற மரணம் நிச்சயம் என்று உணரும் சீசர், அருகில் இருந்த பம்ப்பேயின் சிலையின் காலடியில் போய் விழுந்து இறக்கிறார்.
"உன் நண்பனையும் ஓர் அளவோடு நேசி
ஒரு நாள் அவனும் உன் பகைவனாகலாம் !"

அடுத்து...

அரேபியாவின் இரண்டாம் கலீபா உமர் (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்பதற்குமுன் முன்கோபியான முரட்டு காளை. உருட்டு விழிகளும் உருவிய வாளும் எதிரிகளைப் பதறி ஓட வைக்கும். அரபு நாட்டு மாமல்லர்கள் மோதும் "உக்காழ்' மேடைகளில் உமரிடம் உதைபட்டு வதைபட்டு வீழ்ந்தனர் மல்லர்கள்.
இஸ்லாத்தின் பகைவனாய் விளங்கி உமர், திருநபி முஹம்மது (ஸல்) என்றாலே எரிமலையாய்க் குமுறினார் உமர்.

முஸ்லிமான அவரின் அடிமைப்பெண் பஸீனாவைப் பலமான உமரின் கைகளே களைத்து சோர்ந்திடும் வரை சவுக்காலடித்தவர் இந்த உமர்.
இஸ்லாமான அவரின் இன்னொரு அடிமைப்பெண் ஜஸின்னீராவின் கண்கள் கலங்கி பார்வை பறிபோகுமளவு பரிதாபமாக இரக்கமின்றி அடித்தவர் இந்த உமர்.
முஹம்மது (ஸல்) அவர்களைக் கொன்று, அவர்களின் தலையை கொண்டு வருபவருக்கு ஒரு நூறு செந்நிற ஒட்டகங்களைத் தருவதாக வாக்களித்த போக்கிரி பொல்லாத அபூஜஹிலின் உறுதிமொழியை ஏற்று, உருவிய வாள் முஹம்மது (ஸல்) அவர்களின் தலையை கொய்யாது உறையுள் புகாது என்று சூளுரைத்து, கொலை வெறியுடன் கோபம் கொப்பளிக்க புறப்பட்டார் 33 வயது முரடன் உமர்.
வழியில் சந்தித்த ஹழ்ரத் நுஜம் இப்னு அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் உமரின் குமுறும் கொலை வெறியைக் கண்டு, "உமரே! உன்னுடன் பிறந்த உன் சகோதரி பாத்திமாவும் அவரின் கணவர் ஸஈதும் முஹம்மது (ஸல்) அவர்களைப் பின்பற்றுகின்றனர். நீர் உமது வீட்டைத் திருத்தாமல், நாட்டைத் திருத்த வந்த நபியைக் கொல்லப் போகிறீரே?'' என்று கேட்டார்.
உமர் உடல் குலுங்க வெடிக்கும் எரிமலையானார்.

அடுத்து எதிர்ப்பட்ட ஹழ்ரத் ஸஅத் இப்னு அபீவக்காஸ் (ரலி) அவர்களும் உமரின் தங்கையும் மைத்துனரும் முஹம்மது (ஸல்) அவர்களின் வழியில் வாழ்வதை உறுதிபடுத்தினார்.
தாழிட்ட கதவுகளுக்கு வெளியே கேட்ட
**இனிமையாக**
ஓதிய குர்ஆனின் வசனங்கள் வசியப்படுத்தவில்லை உமரை. கசியா நெஞ்சம் மசியவில்லை. பசியோடு பாயும் புலியைப் போல பாய்ந்து தாக்கினார் மைத்துனரை. தடுக்க வந்த தங்கையின் நெற்றி பிளந்து கொட்டியது குருதி.
அடிமைப் பெண்களை அடித்தபொழுது உருகாத உமரின் உள்ளம் தூக்கி வளர்த்த தங்கையின் தலையிலிருந்து வழிந்த இரத்தம் கண்டும் கலங்காது, ஓதிய வசனங்களைக் காட்டுமாறு கர்ஜித்தார் .

அடியின் கொடும் வலியைத் தாங்கிக் கொண்டு, தங்கை கூறினாள், "சுத்தமின்றி தொடக் கூடாது சத்திய குர்ஆன் வசனங்களை. குளித்து தூய்மையாக வந்தால் தொடலாம்'' நீராடி தூய்மையாய் வந்து வாய்மையான குர்ஆன் வசனங்களை ஓதினார் உமர்.
"தாஹா (நபியே) அஞ்சக் கூடியவர்களுக்கு நல்லுபதேசமாக அல்லாது நீர் துன்பப்படுவதற்காக இந்த குர்ஆனை நாம் உம்மிடம் உரைக்கவில்லை'' (அத்தியாயம் 20; 1 முதல் 3 வரை வசனங்கள்)

உயர்ந்த வானங்களையும் பூமியையும் படைத்தவன் அருளியது. அர்ஷின் மீது ஆட்சியை நிலை நாட்டிய ரஹ்மானுக்குச் சொந்தமானவையே, வானங்களிலும் பூமியிலிருப்பவையும் இவற்றுக்கு இடையிலிருப்பவையும் பூமியில் புதைந்து கிடப்பனவும் (நபியே) நீர் மெதுவாக அல்லது உரக்க கூறினும் இரண்டும் அவனுக்குச் சமம். ஏனெனில் இரகசியத்தையும் இன்னும் மறைவாக மனதில் உள்ளதையும் அறிகிறவன் அல்லாஹ். அவனுக்கு அழகிய பெயர்கள் உண்டு
(அத்தியாயம் 20 வசனங்கள் 4 முதல் 8 வரை)
எட்டாம் வசனம் எழுப்பிய உணர்வுகள் ஏற்படுத்திய நடுக்கத்தால் உமர் (ரலி) அவர்களின் கைகளிலிருந்த ஏடுகள் நழுவின. அழுத்தி பிடித்த உமர் அடுத்த சுவடியில் தொடுத்த வசனங்களை தொடர்ந்து ஓதினார்.
"வானங்களிலும் பூமியிலும் உள்ள அனைத்தும் அல்லாஹ்வைப் புகழ்ந்து துதிக்கின்றன. அவனே அனைத்தையும் மிகைத்தோன்; ஞானம் உடையவன். வானங்கள் பூமியின் ஆட்சியும் அவனுக்குரியதே.
அவனே உயிர்ப்பிக்கிறான்; மரிக்கச் செய்கிறான். அவன் அனைத்திலும் ஆற்றல் மிக்குடையவன்.

ஆதியும் அவனே. அந்தமும் அவனே. வெளிப்படையானவன். மறைவானவன்.சகலமும் நன்கறிந்தவன்.
அவன் தான் வானங்களையும் பூமியையும் ஆறு நாட்களில் படைத்தான். பின்னர் தன் ஆட்சியை நிலை நாட்டினான். பூமியில் ஊடுருவிச் செல்வதையும் வித்துக்கள் விதைக்கப்படுவதையும் முளைத்து வெளிப்படுவதையும் வானிலிருந்து இறங்குவதையும் வானை நோக்கி நிலத்திலிருந்து ஏறுவதையும் அவன் நன்கறிவான். நீங்கள் எங்கிருப்பினும் அவன் உங்களுடனிருப்பான். நீங்கள் செய்வதை உற்று நோக்குகிறான். வானங்கள் பூமிக்குரிய ஆட்சியாளன். அல்லாஹ்விடமே அனைத்து செயல்களும் கொண்டு வரப்படும். அவனே இரவைப் பகலில் நுழையச் செய்கிறான். இதயங்களிலுள்ள இரகசியங்களையும் அவன் அறிவான். ஆகவே மனிதர்களே அல்லாஹ்வையும் அவன் தூதரையும் விசுவாசியுங்கள். உங்கள் இறைவன் மீது நம்பிக்கை கொள்ள (நம்) தூதர் உங்களை அழைக்கையில் - இன்னும் திட்டமாய் ஏற்கனவே (அவன்) உங்களிடம் உறுதிமானமும் வாங்கியிருக்கும் போது, அல்லாஹ்வின் மீது நீங்கள் ஈமான் கொள்ளாதிருக்க உங்களுக்கு என்ன நேர்ந்தது? நீங்கள் முஃமின்களாக இருப்பீர்களாயின் (இறை போதனைப்படி நடவுங்கள்).
(அத்தியாயம் 57 வசனங்கள் 1 முதல் 8 வரை)
உணர்ச்சி பிழம்பான உமர் (ரலி) அவர்கள், "அல்லாஹ் ஒருவன். அவனின் திருத்தூதர் முஹம்மது (ஸல்)'' என்று உரக்க கூவினார்.

கொலை வாளினை ஏந்தி குறைஷியர் முன்னே முஹம்மது (ஸல்) அவர்களின் தலையை கொய்து கொண்டு வருவேன் என்று கொக்கரித்த கொடுஞ்சிங்கம் உமர் (ரலி) கொலை வெறி தாகம் தீர்ந்து மறை நெறி தாபத்தால் பாறை நெஞ்சம் பனியாய் உருக பார்வை தாழ, ஓரிறை கொள்கையை போதித்த தூதர் முஹம்மது (ஸல்) அவர்களின் முன் நின்றார்.
"அல்லாஹ் ஒருவன்; அவனின் திருத்தூதர் முஹம்மது (ஸல்)'' என்று.உமர் (ரலி) அவர்களின் உள்ளத்தில் ஊடுருவி உண்மையை உணர்த்திய நன்மை பகரும் நற்குர்ஆன் .
பல காலம் பகைவராக இருந்த உமர் அன்று முதல் நிரந்தர நண்பரானார் .
உன் பகைவனையும் ஓர் அளவோடு பகை
அவனும் ஒரு நாள் உன் நண்பனாகலாம் !

இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள் 12




"மனிதனின் குற்றங்களில் பெரும்பாலானவை அவனின் நாவிலிருந்துதான் பிறக்கின்றன"
"உலக வாழ்வில் இரட்டை வேஷம் போட்டவனுக்கு மறுமை நாளில் நெருப்பிலான இரட்டை நாக்குகள் இருக்கும் -அபூதாவூத்

விஷத்தைக் கக்கும் பாம்பிற்கும் இரட்டை நாக்குகள் இருக்கும் .
அண்ணல் நபி (ஸல்) அவர்கள் நவின்றதாக அபு ஸயீதுல்குத்ரி ( ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
"நாவிற்கு மற்ற உறுப்புகள் வழிபடுகின்றன. ஆதமின் மகன் காலையில் எழுந்ததும், மற்ற உறுப்புகள் நாவை நோக்கி கூறும், " நாவே..! இறைவனை பயந்து நடந்து கொள்! நாங்கள் உன்னைக் கொண்டே

(உன்னை தழுவியே )உள்ளோம். நீ செவ்வையாக (நன்றாக)இருந்தால், நாங்களும் செவ்வையாக இருப்போம். நீ கோணலாகி விட்டால், நாங்களும் கோணலாக ஆகிவிடுவோம் ".(திர்மிதி )

நாக்கிற்கும் மற்ற வெளிப்புற உடல் உறுப்புகளுக்கும் உளவியல் ரீதியாக உள்ள தொடர்பை கண்டோம் .நாக்கிற்கும் மற்ற உடல் உள் உறுப்புகளுக்கும் உள்ள மருத்துவ ரீதியான தொடர்பு என்பது ...
நாக்கு, சகல உறுப்புகளோடும் தொடர்புடைய ஓர் உறுப்பு. அது வைட்டமின் பாதிப்புகள், தொற்றுப் பாதிப்பு, புற்றுநோய் பாதிப்பு, நரம்பு மண்டலப் பாதிப்பு - இந்த நான்கையும் காட்டிக்கொடுத்துவிடும்.
நாக்கின் நிறம் மட்டுமன்றி அதன் வடிவமும் மேல், கீழ் பகுதிகளும் நோய் பாதிப்பை காட்டும். நாக்கை மடித்துக்காட்டச் சொல்லி மருத்துவர்கள் கேட்பது அதற்காகத்தான்.

நாக்கு, நம் உடம்பின் தன்மையை அப்படியே வெளிக்காட்டும் கண்ணாடி . நாக்கின் தன்மையை வைத்தே உடம்பில் என்ன பிரச்னை இருக்கிறது என்பதைக் கண்டுபிடித்து விட முடியும். அதனால்தான், எந்தப் பிரச்னை என்றாலும் மருத்துவர்கள் முதலில் நாக்கைக் காண்பியுங்கள் என்று டார்ச் அடித்துப் பார்க்கிறார்கள். அப்படிப் பார்த்த உடனே, நம் உடலுக்கு என்ன பாதிப்பு என்பதை ஓரளவுக்கு அனுமானித்து விடுவார்கள்.

**பொதுவாக நம் நாக்கு இளஞ்சிவப்பு நிறத்தில்தான் இருக்கும். அப்படித்தான் இருக்கவும் வேண்டும். அப்படி இல்லாத பட்சத்தில் நம் உடலில் ஏதோ பாதிப்பு ஏற்பட்டுள்ளது என்று அர்த்தம்.**

**நாக்கு, வெள்ளை நிறத்தில் இருந்தால் வாயில் தொற்றுப்பாதிப்புகள் ஏற்பட்டுள்ளது**

**சிவப்பு நிறமென்றால் வைட்டமின் பாதிப்பு,**

**மஞ்சள் நிறமென்றால் நீர்ச்சத்துக் குறைபாடு,**

**நாக்கின் நுணி மட்டும் சிவந்திருந்தால் மனஅழுத்தம், நாக்கின் பின்புறம் சிவப்பு நிறமாகும் பட்சத்தில் சுவாசக் கோளாறுகள் .**

**நாக்கு வீங்கியிருந்தால் ஊட்டச்சத்து குறைபாடு.**

**நாக்கில் வலி எடுத்தால் சர்க்கரை நோய்.**

**நாக்கின் இடது மற்றும் வலது பக்கங்களில் பாதிப்பு இருந்தால் கல்லீரல் பாதிப்பு.**

**நாக்கின் மேற்பரப்பு வறண்டு இருந்தால், ரத்தச்சோகை, அடர்சிவப்பு என்றால் உடல் உஷ்ணம், கறுப்பு நிற புள்ளிகள் இருந்தால் ரத்த ஓட்டத்தில் கோளாறு.**

நாவு எதனை பேசினாலும் அதனை வானவர்கள் பதிவு செய்கின்றனர் என்பதை குர்ஆனில்
مَا يَلْفِظُ مِنْ قَوْلٍ اِلَّا لَدَيْهِ رَقِيْبٌ عَتِيْدٌ
கண்காணித்து எழுதக்கூடியவர் அவனிடம் (மனிதனிடம்) இல்லாமல் எந்த சொல்லையும் அவன் மொழிவதில்லை. (அல்குர்ஆன் : 50:18)

நாம்பேசும் ஒவ்வொரு பேச்சும் பதிவு செய்யப்படுகின்றது என்பதைப்பற்றி திரு நபி( ஸல்) அவர்கள் ,சஹாபாக்கள் இடம் கூறியபோது ,
“ நாங்கள் பேசப்படுவதைக் கொண்டு பிடிக்கப்படுவோமா?” என அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம், முஆத் (ரலி) அவர்கள் கேட்டார்கள்.
அதற்கவர்கள்,” நாவின் விளைச்சல்களே மக்களை நரக நெருப்பில் முகம் குப்புற வீழ்த்துகின்றன.” என பதிலளித்தார்கள்.(திர்மிதி )

பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள் “அடியான் பொய் பேசும்போது அவன் இடமிருந்து துர்வாடை ஏற்படும் இதனால் மலக்குகள் ஒரு மைல் தூரத்திற்கு அப்பால் போய்விடுவார்கள்.
மலக்குகள் நம் அருகில் இல்லை என்றால் நம் நிலைமை என்னவாகும்? சற்று யோசித்துப் பாருங்கள்.
நாம் நாவினால் விளையும் விபரீதத்தை நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்;

“புறம் பேசுவதால் உண்டாகும் வேதனை விபச்சாரத்தால் ஏற்படும் வேதனையை விட கடினமானது”
இதைக்கேட்ட சஹாபாக்கள் ,யா ரசூலுல்லாஹ் ! அது எப்படி? என்று கேட்டனர்.
அதற்கு பெருமானார் அவர்கள்,” ஒருவன் விபச்சாரம் செய்து விட்டு பிறகு தவ்பா (பாவமன்னிப்பு ) செய்து விடுகிறான் . அதனால் அல்லாஹுத்தஆலா அந்த தவ்பாவை ஒப்புக் கொள்கிறான்.
ஆனால் புறம் பேசியவன் யாரைப்பற்றி அவன் பேசினானோ அவன் மன்னிக்காதவரை, அவனுடைய குற்றம் மன்னிக்கப்பட மாட்டாது என்று பதிலளித்தார்கள்.

” யார் யாரைப் பற்றி நீ புறம் பேசி உள்ளாயோ, அவர்களிடம் மன்னிப்பு கேட்டுக் கொள். இல்லாவிடில் உன் நன்மைகளை எல்லாம் கியாமத்து நாளில் அவர்களுக்குக் கொடுக்க வேண்டியது ஏற்படும். அவர்களது பாவங்களை நீ சுமக்க வேண்டி வரும்.

நீ யாரைப் பற்றி புறம் பேசினாயோ , அவர்கள் எங்கு இருக்கின்றார்கள் என்று உனக்கு தெரியவில்லை அல்லது அவர்கள் இறந்து விட்டார்கள் என்றால், உன் மனம் உனக்கு சாட்சி சொல்லும் வரை (அதாவது மனநிறைவு ஏற்படும் வரை) அவர்களின் பாவமன்னிப்புக்காக நீ துவா செய்ய வேண்டும்.”
பெரும்பாலோர் புறம் பேசுகிறார்கள் அதை யாராவது தடுத்தால், அவர்கள் சொல்கிறார்கள் "நாங்கள் பொய் கூறவில்லை இன்ன ஆண், பெண்மீது உள்ளதையே கூறுகிறோம்" என்று.

இதே கேள்வியை ஒரு சஹாபி நபி (ஸல்) அவர்களிடத்தில் கேட்டார். அதற்கு நபியவர்கள் “எந்த குறை உன் சகோதரனிடம் உள்ளதோ அதை பேசுவதுதான் புறம். அவரிடம் இல்லாத குறைகளை நீ பேசினால் அது அவதூறு கூறுவதாகும். (பழி சுமத்துவது ஆகும் )என்று பதிலளித்தார்கள் .
மிஃராஜின் போது நான் ஒரு கூட்டத்தை, கடந்து சென்றேன். அக்கூட்டத்தினருக்கு இரும்பினால் ஆன நகங்கள் இருந்தன. அவற்றின் மூலம் அவர்கள் தங்கள் முகங்களையும், நெஞ்சங்களையும் (தாமே) காயப்படுத்திக் கொண்டிருந்தனர்.

அப்போது, " ஜிப்ரீலே..! இவர்கள் யார் ? " என்று கேட்டேன். இவர்கள் மனிதர்களின் மாமிசத்தைச் சாப்பிட்டவர்கள் (அதாவது புறம் பேசியவர்கள்) மனிதர்களின் கண்ணியத்தில் பங்கம் விளைவித்தவர்கள் என்று விளக்கமளித்தார்கள். (அஹ்மத், அபூதாவூத்)
மேலும் உங்களில் சிலர் சிலரைப்பற்றி புறம் பேச வேண்டாம். உங்களில் எவராவது இறந்த தம்முடைய சகோதரனின் மாமிசத்தைப் புசிக்க விரும்புவாரா? (இல்லை) அதனை நீங்கள் வெறுப்பீர்கள். (49:12)
புறம் பேசுதலைப்பற்றி நபி (ஸல்) அவர்கள் குறிப்பிடும் போது, புறம் பேசுபவரின் வார்த்தையைக் கடலில் போட்டால் இதனுடைய கடுமையான சொல்லின் காரணத்தால் கடல் நீரின் தன்மையே மாறிவிடும் என்றார்கள்.

நான் நபி (ஸல்) அவர்களிடம், சஃபிய்யா (ரலி) அவர்களுடைய இன்னன்ன விஷயங்கள் உங்களுக்குப் போதுமானதாகும் என்று கூறினேன். அப்போது நபி (ஸல்) அவர்கள் நீ கூறிய அந்த வார்த்தையை கடல் நீரில் கலந்தால் (அதனுடைய தன்மையையே) மாற்றி விடும் என்றார்கள். (அஹ்மத், திர்மிதி, அபூதாவூத்)
புறம் பேசுபவர்கள் மறுமை நாளில் கடுமையான வேதனை செய்யப்படுவார்கள். தமது கரங்களாலேயே அவர்கள் வேதனை செய்யப்படுவார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி (ஸல்) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதரே..! நான் உறுதியாக பற்றிப்பிடித்துக் கொள்ளத்தக்க ஒரு விஷயத்தை அறிவியுங்கள்! என்று கேட்டேன்.
''எனது இறைவன் அல்லாஹ் ! என்று கூறி பிறகு அதிலேயே உறுதியாக இருப்பீராக'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
"என்னுடைய விஷயத்தில் தாங்கள் அதிகம் அஞ்சுவது என்ன?" என்று கேட்டேன்.
அப்போது தனது நாவை பிடித்துக் காட்டி, " இதுதான் " என்று கூறினார்கள்.அறிவிப்பவர்: சுஃப்யான் இப்னு அப்துல்லாஹ் (ரலி). ஆதாரம் : திர்மிதி

நபி (ஸல்) அவர்கள் இரு கப்ருகளைக் கடந்து செல்லும் போது, இந்தக் கப்ருகளில் உள்ள இருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள்.அவ்விருவரில் ஒருவர் கோள் சொல்லித்திரிபவராக இருந்தார். மற்றொருவர் சிறுநீர் கழித்தால் சுத்தம் செய்யமாட்டார் எனக் கூறினார்கள். (புகாரி, முஸ்லிம்)
நாவு மனிதனை சுவர்க்கத்திற்கோ அல்லது நரகத்திற்கோ கொண்டு செல்லக்கூடிய உறுப்பு என்பதைத் தெரிந்தோம்.
ஆகவே நரகம் செல்லக்கூடிய (சொல்) செயல்களிலிருந்து நம் நாவைப் பாதுகாத்து, சுவர்க்கம் செல்லக்கூடிய (சொல்) செயல்களைச் செய்து நாவினால் சுவர்க்கம் செல்ல நம் அனைவருக்கும் வல்ல அல்லாஹ் அருள் புரிவானாக.
ரஹ்மத் ராஜகுமாரன்

இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள் 13




நபி(ஸல்) அறிவிக்கிறார்கள் : "எந்த மனிதர் பொறுமையாயிருக்க முயல்கின்றாரோ, அவருக்கு அல்லாஹ் பொறுமையை அளிப்பான். பொறுமையை விடச் சிறந்தது பல நன்மைகளைக் குவிக்கக் கூடியதுமான கொடை வேறெதுவுமில்லை" -அபூஸயீத் அல் குத்ரி(ரலி)புகாரி,முஸ்லிம்

செல்வந்தர் ஒருவர் ரயிலில் பயணித்தார். அவர் வெற்றிலையை வாயில் மென்று அந்த இரயில் பெட்டியிலேயே எச்சிலை உமிழ்ந்தார். அருகில் அமர்ந்திருந்த பயணி அந்த எச்சிலைத் தாள் கொண்டு துடைத்தார்.
மீண்டும் அந்த செல்வந்தர் அதேபோல் துப்பினார். இவரும் மீண்டும் துடைத்தார். அந்த செல்வந்தருக்கு கர்வம் கூடிவிட்டது. தான் தவறு செய்கிறோம் என்று தெரிந்தும் ஒருவர் அதைத் துடைத்துக் கொண்டு இருக்கிறார் எனஅறிந்தும், வேண்டுமென்றே மீண்டும் மீண்டும் எச்சிலைத் துப்பினார். அருகிலிருந்தவரும் முகம் சுளிக்காமல் துடைத்து வந்தார்.
இருவரும் ஒரு ரயில் நிலையத்தில் இறங்கினர். வெளியே நின்ற மக்கள் கூட்டம் அந்த உன்னத மனிதருக்கு மாலை மரியாதைகள் செய்து "மகாத்மா காந்திக்கு ஜே' என்று மகிழ்ச்சியாய் ஆரவாரம் செய்தனர். எல்லாரும் அவரை அன்பாய் சூழ்ந்து கொண்டார்கள்.
ரயிலில் துப்பிக்கொண்டே வந்தவருக்கு அப்போதுதான் தனது இழிவான செயலைப் பொறுத்துக் கொண்டவர் மகாத்மா காந்தி என்பதைத் தெரிந்து கொண்டார்.
அருகில் வந்து "ஐயா! என்னை மன்னித்து விடுங்கள். இனி பிறருக்குத் தீங்கிழைக்கக்கூடாது என்று பாடம் கற்றுக் கொண்டேன்'' என்றார்.
அதற்கு காந்தி, " நான் தான் உங்களிடமிருந்து ஒரு பாடம் கற்றுக்கொண்டேன்'' என்றார். "என்னிடமிருந்து நீங்கள் என்ன பாடம் கற்க முடியும்?'' என்றார்.

"ஒருவர் எவ்வளவு கெடுதல் செய்தாலும், ஒருபோதும் பொறுமையை மட்டும் இழக்கக்கூடாது என்பதே அந்த பாடம்'' என்றார் காந்திஜி.

பொறுமை என்னும் குணத்தைக் கற்றுக் கொள்ளும் பொழுது மனிதன் வலிமை பெறுகிறான். பொறுமை "கோழைத்தனம் அல்ல, அது மிகச்சிறந்த வலிமை'.
நம் செயல்பாட்டின் விளைவுகள் உடனே பலன் தராமல் இருக்கலாம். அதற்காக மனம் தளர்ந்து விடக்கூடாது. செயலின் விளைவுகளை ஒவ்வொரு நாளும் எதிர்பார்க்கவும் கூடாது என்பதற்கு சீன மூங்கில் ஓர் உதாரணம்.

மூங்கில் செடியை நட்டு, நீர் பாய்ச்சி, உரமிடுவார்கள். முதல் வருடத்தில் ஒரு வளர்ச்சியும் இருக்காது. இரண்டு, மூன்று, வருடங்கள் கடந்தும் செடி வளராது. அதே மூங்கில் நான்கு வருடங்கள் கடந்த பின்பு ஐந்தாம் வருடத்தில் ஒரே ஆண்டில் 80 அடி உயரம் வரை வளரும். அந்த அசுர வளர்ச்சியில் சூறாவளிக் காற்றாலோ, மழையாலோ அதனை நிலைகுலையச் செய்ய முடியாது.
ஏனெனில், நான்காண்டுகள் அது மண்ணிலே தனது வேரினைப் பாய்ச்சி மிகச்சிறந்த பிடிமானத்தை உருவாக்கிக் கொள்கிறது. மண்ணிலே அதன் பலம் கூடும்பொழுது விண்ணை நோக்கி அதன் பயணம் எளிதாகிறது. கனவுகளோடும், இலட்சியத்தோடும் பயணிப்பவர்கள் மூங்கில்களைப் போலவே தடைகளைப் பொறுமையாகவே கையாளுகிறார்கள். அதில் வலிமை அடைகின்றனர்.

பொறுமை இழப்பவர் தனது ஆற்றலையும் அதிகமாகவே வீணடிக்கின்றார். பொறுமையானவர் தனது ஆற்றலை ஒரு தவயோகியைப் போல் தேக்கி வைக்கிறார். "பிரார்த்தனைகளை விட மிக உயர்ந்தது பொறுமை' என்று புத்தரின் பொன்மொழியில் பொறுமை புகழ்மொழி பெறுகிறது.
ஜென் தத்துவத்தில் தவம் என்பதன் விளக்கம் பொறுமையுடன் காத்திருத்தல் என்பதாகும். தவத்தின் முடிவில் கிடைக்கும் வரத்தை விட, அந்த வரத்திற்காக காத்திருந்த பொறுமைதான் பெரிதாக போற்றப்படும். ஏனென்றால் பொறுமை, இலக்கினை அடைய தகுதியுள்ளவனாக்குகிறது. பொறுமையான சிப்பியே முத்தைத் தருகிறது. பொறுமை என்பது வெறுமனே காத்திருப்பது அல்ல, விடாமுயற்சியுடன் உழைத்து, தொடர்ந்து முன்னேறிக் கொண்டிருப்பது.

புத்தரின் சீடர்களில் முக்கியமானவர் பூர்ணா. அவர் தர்மப் பிரசாரம் செய்ய புத்தரிடம் அனுமதியைக் கேட்டார். அதற்கு புத்தர்,"பூர்ணா, எங்கே போய் தர்மப் பிரசாரம் செய்யப் போகிறாய்?'' என்றார்.
"குருவே! சூனப்ராந்தம்'' என்ற இடத்தில் என்றார் சீடர்.
"அதுவா? அங்குள்ளவர்கள் கல்வியறிவு இல்லாதவர்களாயிற்றே; உன் அறிவுரைகளை ஏற்காமல் உன்னை இகழ்ந்து பேசினால் என்ன செய்வாய்?'' என புத்தர் கேட்க,
"அதனால் என்ன? கையால் அடிக்காமல் விட்டார்களே என்று மகிழ்ச்சியுடன் பிரசாரம் செய்வேன்'' என்றார் பூர்ணா.
"சரி, அப்படி கைகளால் அடித்தால் என்ன செய்வாய்?'' என்ற புத்தரின் கேள்விக்கு, "அதனால் என்ன, ஆயுதங்களைக் கொண்டு தாக்கவில்லையே என்று எண்ணி மகிழ்ந்து எனது தர்மப் பிரசாரத்தைத் தொடருவேன்'' என்றார்.
"ஒரு வேளை அவர்கள் ஆயுதங்களைக் கொண்டு தாக்கினால் என்ன செய்வாய்? '' என்றார் புத்தர்.
"அதனால் என்ன, என்னைக் கொல்லவில்லையே, அந்த அளவுக்கு நல்லவர்கள்தான் என்றெண்ணி என் பணியைத் தொடருவேன்; என் கடன் பணி செய்துகிடப்பதுவே'' என்றார் பூர்ணா.
"சரி, கடைசியாக ஒரு கேள்வி. உன்னைக் கொன்று போட்டுவிட்டால்... என்ன செய்வாய்?'' என்றார் புத்தர்.
"மிகவும் மகிழ்ச்சியுடன் இறப்பேன்; அட இவ்வளவு சீக்கிரம் முக்தி அடைய உதவினார்களே! என்று அகம் மகிழ்வேன்; உள்ளம் குளிர்வேன்'' என்று பூர்ணா பதிலுரைத்தார்.
அந்த பதிலால் பூர்ணாவின் பொறுமையும், பக்குவமும் தெரிந்தது. உடனே புத்தர், ""பூர்ணா, நீ தர்ம பிரசாரம் செய்; நீ பரிபூரண பக்குவம் பெற்றுவிட்டாய்'' என்று சொல்லி பொறுமையின் சின்னமான பூர்ணாவுக்கு ஆசி வழங்கினார்.

பொறுமை அறிவின் துணைவன். பொறுமையை கைக்கொண்டால் வாழ்வின் உன்னதங்கள் நம்மைத் தேடி வரும்.

மனித வாழ்க்கை ஒரு பயணம். அப்பயணத்தில், வேகமாக பயணிப்பவர்கள் பலரை முந்திச் செல்வார்கள். வேகத்தால் திருப்பங்களிலும், வளைவுகளிலும், திடீரென்று வேகத்தை குறைக்க வேண்டியிருக்கும். அதனால் பயணிகள் சில நேரங்களில் பதட்டமாகவும், பயமாகவும் பயணிப்பதுண்டு. மிதமான வேகத்தில் பயணிக்கும்போது நிறைய நிகழ்வுகள் கண்ணில் படும். அவை வாழ்வை ரசிக்க வைக்கும். மனதை மகிழ வைக்கும். மொத்தத்தில் பயணம் இனிமையாகவே அமையும்.

ஓர் ஓட்டுநர் பொறுமை இழந்தால் ஒட்டுமொத்த பயணிகளும் நிம்மதி இழப்பது போல், ஒரு குடும்பத்தலைவர் பொறுமை இழந்தால் அக்குடும்பமே துன்புறும். ஒரு நிர்வாகத்தின் தலைமை பொறுமை இழந்தால் அந்த நிர்வாகமே துன்புறும். உண்மையில் மகிழ்ச்சியின் சாவியான பொறுமை, நிறைய போதிக்கும். வாழ்வை எளிமையாக்கும், முடிவில் சாதிக்கவும் வைக்கும்.
சுவாமி விவேகானந்தர், "நம்பிக்கையும், பொறுமையும் இருந்தால் அவமானங்கள் கூட வெற்றிக்கான பாதை அமைக்கும்'' என்றார்.
ஓர் இளம் வயதுப் பெண் கல்கத்தா நகரத்து வீதிகளிலே உள்ள கடைகளில் கையேந்தினாள். அப்பெண்மணிக்கு அது வழக்கமாகவே இருந்தது.
ஒரு நாள் அவர் ஒரு கடைக்காரரிடம் கையேந்தினார். அவர் கண்டும் காணாமல் இருந்தார். மீண்டும் அப்பெண் கையேந்தினார்.
பொறுமையிழந்த கடைக்காரர், வாயில் மென்று கொண்டிருந்த வெற்றிலை எச்சிலை அப்பெண்ணின் கையில் துப்பினார்.
சற்றும் பொறுமை இழக்காத அப்பெண்மணி, "இது நீங்கள் எனக்குக் கொடுத்தது. இதோ! பசியால் வாடும் குழந்தைகளுக்கு ஏதாவது உதவி செய்யுங்கள்'' என்றார்.
தான் செய்த தவறை எண்ணி மனம் வருந்தினார். பின்னர் அப்பெண்மணியை அழைத்து ஒரு பணமுடிப்பைத் தந்தார்.

டாக்டர். தாமஸ் கூப்பர் எட்டு ஆண்டு காலம் உழைத்து 30,000 ஆயிரம் புதிய சொற்களை ஆங்கில அகராதிகளில் சேர்க்க காகிதங்களில் எழுதி வந்திருந்தார். அவரது மனைவி அத்தனை காகிதங்களையும் குவித்து சொக்கப்பனை கொளுத்தி மகிழ்ந்தார். மனைவியிடம் கோபப்படவில்லை.
மீண்டும் எட்டு ஆண்டுகள் பொறுமையாய் உழைத்து ஆங்கில அகராதிக்கு ஆயுள் கூட்டினார்.

ஐசக் நியூட்டன் மாலை நேரத்தில் உலவச் சென்றபோது அவரது நாய் மேஜையில் ஏறியது. மேஜையில் எரிந்து கொண்டிருந்த மெழுகுவர்த்தி விழுந்து அவர் எழுதி வைத்திருந்த சூத்திரங்களெல்லாம் கருகின. நியூட்டன் மனம் வெதும்பவில்லை. ஒவ்வொரு வினைக்கும் அதற்குச் சமமான எதிர் வினையை நாயின் மீது செய்ய மறுத்தார். பொறுமையாய் மீண்டும் எழுதத் தொடங்கினார். பொறுமை நம்பிக்கையை வளர்க்கும் என்பதற்கு சான்றுகள் இவை.

பைபிளில் கூறப்பட்ட ஒரு நிகழ்வு. யோபு, (நபி அய்யூப் (அலை) அவர்கள் ) ஒரு பெரிய செல்வந்தர். அவருக்கு எல்லா செல்வங்களும், பத்துக் குழந்தைகளும் இருந்தனர். அவர் கடவுள் மீது மிகவும் அன்பு கொண்டிருந்தார். சாத்தான், கடவுளிடம் ஒரு சவால் விட்டார்.
"யோபுவிடமிருக்கின்ற செல்வத்தையெல்லாம் எடுத்து விட்டால், யோபு உன்னை சபிப்பான்'' என்றார்.
"இல்லை, யோபு குற்றமற்றவர், நேர்மையானவர், நல்லவர், அப்படிச் செய்ய மாட்டார்'' என்றார் கடவுள்.
"சோதிக்கலாமா?'' என்றது சாத்தான்.
"சரி'' என்றார் கடவுள்.
யோபுவிற்கு ஒரே நாளில் நான்கு செய்திகள் வந்தடைந்தது. யோபுவின் பத்து குழந்தைகளும், ஊழியர்களும், கால்நடைகளும் இயற்கைப் பேரழிவினாலும் அன்னியப் படையெடுப்பாலும் அழிந்தனர். அதனைக் கண்ணீரோடும் துக்கத்தோடும் ஏற்றுக் கொண்டார் யோபு. ஆனால், இறைவனை அதே அன்போடு பிரார்த்தித்தார்.
சாத்தான் மேலும் சோதிக்க வேண்டும் என்றது.
"சரி' என்றார் கடவுள்.

وَاذْكُرْ عَبْدَنَاۤ اَيُّوْبَ اِذْ نَادٰى رَبَّهٗۤ اَنِّىْ مَسَّنِىَ الشَّيْطٰنُ بِنُصْبٍ وَّعَذَابٍ
(நபியே!) நமது அடியார் அய்யூபை நினைத்துப் பாருங்கள். அவர் தன் இறைவனிடம் பிரார்த்தனை செய்தபொழுது "நிச்சயமாக எனக்கு ஷைத்தான் துன்பத்தையும் வேதனையையும் கொடுத்து விட்டான்" (என்று கூறினார்.)
(அல்குர்ஆன் : 38:41)

யோபுவின் உடலெங்கும் தோல் நோய் பரவியது. தொழு நோயாளியாக்கப்பட்டார் யோபு. மனைவி நண்பர்களெல்லாம் இறைவன் மீதிருந்த நம்பிக்கையைக் கைவிட்டார்கள். அதே நம்பிக்கையோடும், பொறுமையோடும் இறைவனைத் துதித்தார் யோபு. கடவுளின் அளவற்ற வல்லமை மீது அசையாத நம்பிக்கை கொள்கிறார். கடவுள் அவருக்கு முன்பு தந்ததைவிட இரண்டு மடங்கு அதிக சொத்தையும், புதிய பிள்ளைகளையும், மிக நீண்ட வாழ்நாட்களையும்அளித்தார்.

பொறுமை இறைமையின் அடையாளம். பொறுமையுடையவரிடம் இறைவன் குடிகொண்டுள்ளார்.
பொறுமையே வலிமை!
பொறுமையே வாழ்வின் பெருமை!!
**கட்டுரையாளர் : ஆர். திருநாவுக்கரசு ஐ.பி.எஸ்**
பதிவிலிருந்து ர.ரா

## இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள் 14

நபி (ஸல்) அவர்கள் தம் இறுதி ஹஜ்ஜில் கூறக் கேட்டேன்:
அண்ணலார் (ஸல்) அவர்கள் முதலில் இறைவனை புகழ்ந்து துதித்தப் பின்பு சில அறிவுரைகளை வழங்கினார்கள்.
பிறகு கூறினார்கள்: " மக்களே..! கேளுங்கள்: பெண்களுடன் நல்ல முறையில் நடந்து கொள்ளுங்கள் ! ஏனெனில் அவர்கள் உங்களிடம் சிறைக் கைதிகளின் அந்தஸ்தில் உள்ளனர்.
அவர்கள் வெளிப்படையாக உங்களுக்கு மாறுசெய்யும்போது தான் அவர்களிடம் கடுமையாக நடந்து கொள்ளலாம். அவர்கள் உங்களுக்கு மாறு செய்தால் படுக்கை அறையில் அவர்களுடன் தொடர்பை துண்டித்துக் கொள்ளுங்கள் !
அவர்களை காயப்படுத்தக்கூடிய அளவில் அல்லாமல் இலேசாக அடியுங்கள் ! பிறகு , அவர்கள் உங்கள் சொல்லை ஏற்று நடந்தால், அவர்களைத் துன்புறுத்தாதீர்கள்.
கேளுங்கள் : " உங்கள் மனைவியருக்கு மீது சில உரிமைகள் உண்டு. அவர்கள் மீது உங்களுக்கிருக்கும் உரிமை என்னவெனில் , அவர்கள் உங்களுக்கு விருப்பமில்லாத ஒருவரை உங்கள் விரிப்பை மிதிக்க விடக்கூடாது. மேலும், உங்களுக்கு விருப்பமில்லாத ஒருவரை உங்கள் வீட்டினுள் வர அனுமதிக்கக்கூடாது.
கேளுங்கள் : "உங்கள் மீது அவர்களுக்கிருக்கும் உரிமை அவர்களுக்கு நீங்கள் சரிவர உணவும், உடையும் அளிப்பதாகும் .
அறிப்பாளர் : அம்ர் பின் அஹ்வஸ் அல்ஜுஷமி (ரலி)
நூல் : திர்மிதீ

இஸ்லாம் கூறும் வாழ்க்கைத் தத்துவங்கள் 15




வாக்குறுதியை காப்பாற்றுவது

கொடுத்த வாக்கை காப்பாற்றுவது இறை நம்பிக்கையின் ஒரு பகுதி. இறை நம்பிக்கையாளர்கள் கொடுத்த வாக்கை நிறைவேற்றுவார்கள்.

'இறை நம்பிக்கையாளர்கள் தமது அமானிதங்களையும், உடன்படிக்கையையும் பேணுவார்கள்'. (திருக்குர்ஆன் 23:8)

வாக்குறுதியை நிறைவேற்றுவது இறை நம்பிக்கையுடனும், இஸ்லாமிய மார்க்கத்துடனும் தொடர்புடையது. அதை ஒரு முஸ்லிம் நிறைவேற்றாமல் போகும் போது அவரிடமிருந்து உண்மையான இறை நம்பிக்கையும், உணர்வுப்பூர்வமான மார்க்கப்பற்றும் பாதிக்கப்படுகிறது. இத்தகைய சிந்தனையைத்தான் நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறியுள்ளார்கள்:

'எவரிடம் நம்பி ஒப்படைக்கப்பட்டதை நிறைவேற்றும் தன்மை இல்லையோ அவரிடம் இறை நம்பிக்கை இல்லை. எவரிடம் கொடுத்த வாக்கை நிறைவேற்றும் தன்மை இல்லையோ அவரிடம் இஸ்லாம் மார்க்கம் இல்லை என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்'. _அனஸ் (ரலி), நூல்: அஹ்மது

வாக்குறுதியை காப்பாற்றுவது புகழுக்குரிய பண்பு. அது இறைவனின் ஒப்பற்ற பண்பாகவும், நபிமார்களின் மாசற்ற பண்பாகவும், உண்மையான இறை நம்பிக்கையாளர்களின் உயர்ந்த பண்பாகவும் அமைந்துள்ளது.

'யார் தம் இறைவனுக்கு அஞ்சி வாழ்ந்தார்களோ அவர்களுக்கு அடுக்கடுக்காக கட்டப்பட்ட உயர்ந்த மாளிகைகள் இருக்கின்றன. அவற்றின் கீழே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். இது அல்லாஹ்வின் வாக்குறுதியாகும். அல்லாஹ் ஒருபோதும் தன் வாக்குறுதிக்கு மாறுசெய்வதில்லை. (திருக்குர்ஆன் 39:20)

இஸ்மாயீல் (அலை) அவர்களின் நற்பண்புகள் குறித்து இறைவன் பேசுகையில் 'அவர் வாக்கை காப்பாற்றுபவர்' என்றும் குறிப்பிடுகின்றான்.

'(நபியே) இஸ்மாயீலைப் பற்றியும் இவ்வேதத்தில் (உள்ளதைக்) குறிப்பிடுவீராக. திண்ணமாக, அவர் வாக்குறுதியை முழுமையாக நிறைவேற்றுபவராகவும், தூதராகவும், நபியாகவும் இருந்தார்'. (திருக்குர்ஆன் 19:54)

‘ஒரு வாக்கிற்காக மூன்று நாட்கள் காத்திருந்த காருண்ய நபி’
அப்துல்லாஹ் பின் அபூஹம்ஸா கூறுகிறார்:
‘நபி (ஸல்) அவர்கள் நபியாக அனுப்பப்படுவதற்கு முன்பு நான் அவர்களிடம் ஒரு வியாபாரம் செய்தேன். அவர்களுக்கு கொடுக்க வேண்டிய பாக்கி தொகை சிறிது இருந்தது. ‘இங்கே நில்லுங்கள், நான் அதை கொண்டு வந்து தருகிறேன்’ என்றேன்.
நானும் மறந்து போய்விட்டேன். மூன்று நாட்கள் கழித்து ஞாபகம் வந்ததும் அங்கே சென்றேன். அதே இடத்தில் நபி (ஸல்) அவர்கள் இருந்தார்கள். என்னைப் பார்த்த நபியவர்கள், ‘இளைஞனே, நீ எனக்கு சிரமம் தந்து விட்டாய். நான் உன்னை எதிர்பார்த்து இங்கேயே மூன்று நாட்கள் காத்திருக்கிறேன்’ என்றார்கள். (நூல்: அபூதாவூத்)

வாக்கு கொடுத்தவர் மறந்து போய்விட்டார். ஆனால் தான் கொடுத்த வாக்கை நபி (ஸல்) அவர்கள் காப்பாற்றிவிட்டார்கள்.
அறியாமைக் காலத்தில் கஅபா ஆலயத்தை பராமரிக்கும் பொறுப்பு உஸ்மான் பின் தல்ஹா (ரலி) அவர்களுடைய குடும்பத்தினரிடம் இருந்தது. அதன் சாவியும் அவர் வசமே இருந்தது. ஆரம்பத்தில் அவர் இஸ்லாத்தை ஏற்கவில்லை. அந்த சமயம் நபி (ஸல்) அவர்கள் தம்மை கஅபாவின் உள்ளே அனுமதிக்குமாறு எவ்வளவோ வேண்டியும் அவர் அனுமதிக்கவில்லை.
உடனே நபி (ஸல்) அவர்கள் ‘உஸ்மானே, ஒரு நாள் அதன் சாவி எனது கையில் வரும். அதை நான் உமக்குத் தருவேன்’ என்று வாக்களித்தார்கள்.

ஹிஜ்ரி 8-ம் ஆண்டு புனித கஅபா வெற்றி கொள்ளப்பட்டது. உஸ்மான்பின் தல்ஹா (ரலி) வசம் இருந்த சாவியைக் கொண்டுவரச் சொன்ன நபிகளார் கஅபாவைத் திறந்து, உள்ளே சென்று தொழுதுவிட்டு வந்தார்கள்.
அப்போது அலி (ரலி), அப்பாஸ் (ரலி) ஆகியோர் கஅபாவின் திறவுகோலுடன் நபியைச் சந்தித்து ‘இறைத்தூதரே, ஹாஜிகளுக்கு நீர் புகட்டும் பணியுரிமை, கதவு திறக்கும் உரிமை ஆகியவற்றை எங்களுக்குத் தாருங்கள்’ என வேண்டினர்.
‘உஸ்மான் பின் தல்ஹா எங்கே?’ என்று வினவிய நபியவர்கள் அவர் வந்த பின் அவரிடமே கஅபாவின் திறவுகோலை ஒப்படைத்து, ‘இது என்றைக்கும் உங்கள் குடும்பத்தார் வசமே இருக்கும். அக்கிரமக்காரனைத் தவிர வேறு எவனும் அதை பறிக்க மாட்டான். இந்த ஆலயத்திற்கு இறைவன் உங்களைக் காப்பாளராக ஆக்கியுள்ளான்’ என்றார்கள்.

உஸ்மான் பின் தல்ஹா (ரலி) அவர்களுக்கு கொடுத்த வாக்கை நபியவர்கள் காப்பாற்றினார்கள். நபியின் வாக்குறுதி அடிப்படையில் இதுநாள் வரை, உலகம் அழியும் வரை அவரின் குடும்பத்தார் வசமே கஅபாவின் திறவுகோல் இருக்கும்.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வழி நடக்கும், முஸ்லிம்களும் வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டும். வாக்குறுதி என்பது வெறும் வார்த்தைகள் அல்ல. அது மன உறுதியின் வெளிப்பாடு. அது உள்ளத்திலிருந்து வெளிப்பட வேண்டும். உதட்டின் அளவில் மட்டும் இருந்தால் போதாது.
‘வாக்குறுதி என்பது ஒருவகையில் கடனைப் போன்றது. கொடுத்த வாக்குக்கு மாறு செய்பவன் மீது நாசம் உண்டாகட்டும், நாசம் உண்டாகட்டும், நாசம் உண்டாகட்டும்’ என அலி (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.
வாங்கிய கடனை திருப்பிச் செலுத்துவது போன்று, கொடுத்த வாக்குறுதியையும் திரும்ப நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும்.
வாக்களித்த பிறகு, சக்தியிருந்தும் கொடுத்த வாக்கை ஒருவன் நிறைவேற்றாவிட்டால், அல்லது இதை பொருட்படுத்தாவிட்டால், அல்லது பொய்யாக வாக்களித்தால் அவன் நயவஞ்சகன் மற்றும் பாவி ஆகியோர் பட்டியலில் சேர்ந்து விடுகின்றான். இந்த நிலை குறித்து நபி (ஸல்) அவர்கள் தெரிவிக்கும் போது…

‘நயவஞ்சகனின் அடையாளம் மூன்று. 1) அவன் பேசினால் பொய் பேசுவான், 2) அவன் வாக்களித்தால் மாறு செய்வான், 3) அவனை நம்பினால் அவன் மோசடி செய்வான் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்'. அபூஹுரைரா (ரலி), புகாரி)

நல்லது செய்ய நினைப்பவர்கள் புதிதாக எதையும் செய்ய வேண்டியதில்லை. குறைந்தபட்சம் கொடுத்த வாக்கை காப்பாற்றினாலே போதும். இதுபற்றி திருக்குர்ஆன் கூறுவதை பார்ப்போம்…

‘உங்கள் முகங்களை கிழக்கு நோக்கியோ, மேற்கு நோக்கியோ திருப்புவது நன்மையன்று. மாறாக வாக்களித்தால் தமது வாக்கை நிறைவேற்றுபவர்களே நன்மை செய்பவர்கள். அவர்களே உண்மை கூறியவர்கள். அவர்களே (இறைவனை) அஞ்சுபவர்கள்’ (திருக்குர்ஆன் 2:177).
‘அவர்கள் இறைவனின் உடன்படிக்கையை நிறைவேற்றுவார்கள். உடன்படிக்கையை முறிக்கமாட்டார்கள்.’ (திருக்குர்ஆன் 13:20)
‘யார் இறைவனிடம் எடுத்த உறுதிமொழியை நிறைவேற்றுகிறாரோ, அவருக்கு மகத்தான கூலியை அவன் வழங்குவான்.’ (திருக்குர்ஆன் 48:10)

மக்களிடம் கொடுக்கப்படும் வாக்குறுதி இறைவனிடம் கொடுக்கப்பட்டது போன்றதாகும். ‘உடன்படிக்கையை அழகிய முறையில் நிறைவேற்றுவதும் இறைநம்பிக்கையில் அடங்கும்’. (நபிமொழி)
ஒருவர் கொடுத்த வாக்கை நிறைவேற்றாது இறந்துபோனால், அவரின் வாரிசுதாரர் அதை நிறைவேற்றுவது, அவர் அவருக்குச் செய்யும் பேருதவியாகும். இது குறித்தும் ஒரு நபிமொழி வருகிறது.
‘ஒரு மனிதர் நபியவர்களிடம் வந்து ‘இறைத்தூதரே, எனது தாயும், தந்தையும் இறந்துவிட்டனர். இருவரின் இறப்புக்குப்பிறகும் அவர்களுக்காக நான் நன்மை ஏதும் செய்வது மிச்சம் உள்ளதா?’ என கேட்டார்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள் ‘ஆம், அவ்விருவருக்காகவும் பிரார்த்திப்பது, பாவமன்னிப்பு வேண்டுவது, அவர்கள் கொடுத்த வாக்கை அவர்களுக்குப் பிறகு நிறைவேற்றுவது, அவர்களின் உறவினர்களுடன் உறவாடுவது, அவர்களின் நண்பர்களை சங்கையாக நடத்துவது உள்ளது’ என்று கூறினார்கள்’. (அறிவிப்பாளர் : அபூஉஸைத்மாலிக்பின் ரபிஆ அஸ்ஸாதி, நூல்: அபூதாவூத்)

**Rahmath Rajakumaran**

மனிதர்கள் மரணித்த பின்பு கேட்கப்படும் கேள்விகளில் வாக்குறுதி நிறைவேற்றாததும் அடங்கியிருக்கும்.
வாக்குறுதியும் ஒரு கடனே
கடன் வாங்கியவர் திருப்பித்தரவேண்டியது எந்த அளவு கடமையோ அதே போன்றுதான் பிறருக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றுவதுமாகும்.
நபி (ஸல்) அவர்கள் இறந்தபோது, ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களுக்கு அலா இப்னுஹள்ரமீ (ரலி) அவர்களிடமிருந்து (சிறிது) செல்வம் வந்தது. அப்போது ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்கள் அங்கிருந்தவர்களைப் பார்த்து, ‘யாருக்காவது நபி (ஸல்) அவர்கள் கடன் பாக்கி தரவேண்டியிருந்தால், அல்லது யாருக்காவது வாக்கு ஏதும் தரப்பட்டு இருந்தால், அவர் நம்மிடம் வரட்டும். (அவரது உரிமையை நாம் நிறைவேற்றுவோம்) என்று கூறினார்கள்’. அறிவிப்பவர் ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி), (நூல்: புகாரி)
‘வாக்குறுதியை நிறைவேற்றாதது நம்பிக்கை மோசடியாகும். இவர்களை நயவஞ்சகர்கள்’ என இஸ்லாம் கூறுகிறது.
நயவஞ்சகர்களைப்பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறும்போது ‘பேசினால் பொய் பேசுவான், வாக்களித்தால் மாறு செய்வான், நம்பினால் மோசம் செய்வான்’ என்றார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), நூல்: புகாரி)
போரில் கலந்துகொள்வதைவிட வாக்குறுதி முக்கியம் என நபிகள் நாயகம் (ஸல்) கூறியிருக்கிறார்கள். இதுகுறித்து நபிகள் கூறியதாக ஹுதைபா பின் அல்யமான் (ரலி) அவர்கள் கூறியதாவது:

“நான் பத்ருப் போரில் கலந்துகொள்ளாததற்குக் காரணம் யாதெனில், நானும் என் தந்தை ஹுசைல் (எனும் அல்யமான்) அவர்களும் (பத்ர் நோக்கிப்) புறப்பட்டோம். அப்போது குறைஷி இறைமறுப்பாளர்கள் எங்களைப் பிடித்துக்கொண்டனர். ‘நீங்கள் முஹம்ம(துடன் சேர்ந்து எங்களுக்கு எதிராகப் போர் செய்வ)தை நாடித்தானே செல்கிறீர்கள்?’ என்று கேட்டார்கள்.
நாங்கள் “(இல்லை) மதீனாவை நோக்கியே செல்கிறோம்” என்று (பேச்சை மாற்றிச்)சொன்னோம். அப்போது குறைஷியர் “நாங்கள் மதீனாவுக்கே திரும்பிவிட வேண்டும்; அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் சேர்ந்து (குறைஷியருக்கெதிராக) போரிடக்கூடாது” என அல்லாஹ்வின் மீது ஆணையிட்டு எங்களிடம் வாக் குறுதி பெற்றுக்கொண்டனர்.
நாங்கள் இருவரும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று நடந்ததைத் தெரிவித்தோம். அப்போது அவர்கள், “நீங்கள் இருவரும் (மதீனாவுக்கே) திரும்பிச்செல்லுங்கள். நாம் அவர்களுக்கு ஆதரவாக அவர்களது வாக்குறுதியை நிறைவேற்றுவோம். அவர்களுக்கெதிராக அல்லாஹ்விடம் உதவி கோருவோம்” என்று சொன்னார்கள். (நூல்: முஸ்லிம்).
போரில் கலந்து கொள்ளாதவர்களை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கடுமையாக சாடியிருக்கிறார்கள். ஆனால் இந்த சம்பவத்தில் ஒரு தோழர் கொடுத்த வாக்குறுதியின் காரணமாக அவரை போருக்கு வரவேண்டாம் என்று கூறியிருக்கிறார்கள் என்றால், வாக்குறுதியின் முக்கியத்தை நாம் உணர வேண்டும்.

அடுத்த தொடர் ... 08-06-2021
கடந்த 2017 பிப்-மார்ச்சில் ரோமங்கள், மனித மூளை, வயிறு, தோல், கண்கள், காதுகள் , எலும்பு, மூக்கு .குடல் , இதயம் , ஆண் இன உறுப்பு, பெண் இன உறுப்பு என்று ஒவ்வொரு உறுப்புகளிலும் 5 பதிவுகளிலிருந்து 12 பதிவுகள் வரை அறிவியல் ஆன்மிகத் தொடர் பதிவுகளாக பதிந்திருந்தேன் .
அந்த தொடரில் சில மனித உறுப்புகள் குறிப்பிடப்படவில்லை ., இன்னும் குறிப்பிடப்படாத மற்ற உறுப்புகளைப் பற்றி "மனித உறுப்புகள் " என்ற புதிய தொடரில் இன்ஷா அல்லாஹ் சொல்ல வருகிறேன் .
ர.ரா

## கன்னங்கள்

(மனித உறுப்புகள் 1)



கன்னம் என்றாலே அழகுதான். பெண்களுக்கு முகத்தில் கண்கள் எவ்வளவு அழகை சேர்க்குமோ அவ்வளவு அழகை கன்னமும் சேர்க்கும். குழந்தைகளுக்குக்கான அடையாளமே கன்னம்தான். அதனாலோ என்னவோ, யாருக்கு மெத்து மெத்து கன்னம் இருந்தாலும், அவர்களை குழந்தைகளுடன் ஒப்பிடுகிறோம். கன்னம் இருந்தால் இளமையாகவும், அதிக கவர்ச்சியாகவும் தோன்றுவார்கள்.

குண்டான கன்னம் பார்த்து ஆசைபடாதவர்கள் யாரும் இருக்கமாட்டார்கள். தனக்கும் அது போன்று கன்னங்கள் வேண்டும் என்று ஆசை வராதவர்களை கைவிட்டு எண்ணிவிடலாம்.
கன்னங்கள் வெளிப்புறமாக மூடி, நிறைந்த சருமத்தாலும் உட்புறமாக பட்டையான ஸ்குவாமஸ் எபிதீலியம் செல்களால் சூழப்பட்டுள்ளன,இவை பெரும்பாலும் மென்மையானவை,
கன்னங்கள் என்றாலே பட்டு மென்மைதானே.' பட்டுக் கன்னம் தொட்டுக்கொள்ள ஒட்டிக் கொள்ளும்.'
கண்களுக்குக் கீழே உள்ள முகத்தின் பகுதி, மூக்கு மற்றும் இடது அல்லது வலது காதுகளின் இடையே உள்ள பகுதியே கன்னங்கள் எனப்படும்.

கன்னங்களின் நிறைவு இன்பப்பிரதேசம்தான் உதடுகள். உதடுகள் கன்னங்களுக்காகவும் , கன்னங்கள் உதடுகளுக்காகவும் படைக்கப்படுகின்றன. படைப்பாளனின் வித்தியாசமான கற்பனைத் திறனுக்கு இவை இரண்டும் உன்னத உதாரணங்கள். (கவிஞர்கள் கன்னக் கற்பனையில் மிதக்கலாம் . 'கன்னத்தில் தேன் குடித்தால் கற்பனை கோடி வரும். உள்ளத்தில் பூங்கவிதை வெள்ளம் போல் ஓடி வரும்')
" வாய்ப்புறப்பகுதி " என்பது கன்னத்தோடு தொடர்புடையது. மனிதர்களில், இப்பகுதி வாய்ப்புற அல்லது கன்ன நரம்புகளால் சூழப்பட்டுள்ளது. கன்னத்தின் உட்புறப் பகுதிக்கும் பற்கள் மற்றும் ஈறுகளுக்கும் இடையே உள்ள பகுதி வாய்ப்புறக் குழி எனப்படும். இது வாயின் ஒரு பகுதியாகும்.
மெல்லுதலின் போது, கன்னங்கள் மற்றும் நாக்கு ஆகியவை பற்களுக்கு இடையில் உணவுகளை வைக்க உதவுகின்றன.
அணில்கள் மற்றும் வெள்ளெலிகள் போன்ற சில விலங்குகள் உணவு அல்லது வேறு பொருள்களை எடுத்துச் செல்ல வாய்ப்புறக் குழியினைப் பயன்படுத்துகின்றன.

மனிதன் வாய்ப்புறக் குழியினை பான்பராக்கோ , அல்லது சுண்ணாம்பு சேர்த்து கணேஷ் புகையிலையோ அடக்கி வைக்க பயன்படுத்துகின்றனர் . முடிவில் கன்னங்களின் தோல்கள் கேன்ஸரால் அரித்து உள்தாடை வெளியே தெரியும்படி ஆகிறது.
வரலாற்று ரீதியாக கன்னங்களைப் பற்றி ..
"நபி (ஸல்) மக்காவை விட்டு தப்பித்துவிட்டார்கள்' என்ற செய்தியைக் காலையில் குறைஷிகள் உறுதியாக தெரிந்து கொண்டபோது அவர்களுக்குப் பைத்தியமே பிடித்துவிட்டது.
நபி (ஸல்) அவர்கள் இரவோடு இரவாக தப்பித்து போவதற்கு நபிகளாரின் படுக்கையில் போர்வை மூடி படுத்த அலீ (ரழி) அவர்களிடம் விசாரித்தபோது, அவர்கள் சரியாக பதில் கூறாததால், அவர்களை கடுமையாக அடித்து கஅபாவுக்கு இழுத்து வந்து சில மணி நேரம் அங்கேயே பிடித்து வைத்திருந்தனர். (தாரீக் தபரீ)
அலீ (ரழி) அவர்களிடமிருந்து எந்த செய்தியும் கிடைக்காததால் அபூபக்கரின் வீட்டுக்கு வந்து கதவைத் தட்டினார்கள். கதவைத் திறந்து வெளியே வந்த அபூபக்கரின் மகளார் அஸ்மாவிடம் "உனது தந்தை எங்கே?" என்றனர்.
"அல்லாஹ்வின் மீது ஆணையாக! எனக்குத் தெரியாது" என்றார் அவர். இந்தப் பதிலைக் கேட்ட தீயவன் 'அபூஜஹ்ல்", அவரது கன்னத்தில் அறைந்தான். இதனால் அவரின் காது தோடு அறுந்து கீழே விழுந்தது. (இப்னு ஹிஷாம்)

ஒருமுறை கலீபா மாமூன் இஸ்லாமிய சட்ட மேதை இமாம் ஷாபீயி (ரஹ்) அவர்களிடம் ""இறைவன் ஈயை ஏன் படைத்தான்? என்று கேட்டார்.
"அரசரைத் தாழ்வுபடுத்தவே அரசருக்கெல்லாம் அரசனான பேருலகைப் படைத்து காக்கும் பேரரசன் அல்லாஹ் அற்ப ஈயைப் படைத்தான்'' என்று பதிலுரைத்தார் ஷாபீயி இமாம் அவர்கள்.
"என் கன்னத்தில் விரட்ட விரட்ட ஒரு ஈ திரும்ப திரும்ப வந்தமர்ந்தது. அதனால்தான் கேட்டேன்'' என்று கேள்வி கேட்டதன் காரணத்தைக் கூறினார் கலீபா.
"உங்களைப் பாதுகாக்கும் பதினாயிரக்கணக்கான வாள் வீரர்களும், பல்லாயிரம் ஈட்டி பிடித்த தளபதிகளும் தொட முடியாத கன்னத்தில் தொட்டு விளையாடும் ஈயை இறைவன் படைத்தது நம் தாழ்வை நாம் உணர்ந்து அல்லாஹ்வை அடிபணிந்து வணங்க வேண்டும் என்பதை நினைவூட்டத்தான்'' என்றார் இமாம் ஷாபியி (ரஹ்) அவர்கள் .

இமாம் அவர்களின் பதிலைக் கேட்ட அரசர் அல்லாஹ்வின் படைப்புகளில் ஈயும் இழிந்தன்று என்பதையும் எல்லாம் வல்ல அல்லாஹ்விற்கு ஆளும் அரசனும் அஞ்சி தாழ்ந்து வணங்க வேண்டும் என்பதையும் உணர்ந்தார்.

"அல்லாஹ்விற்கு இணை வைக்கப்படுபவைகளால் ஒரு ஈயைக் கூட படைக்க முடியாது. ஈ அவற்றிலிருந்து எதையேனும் எடுத்துக் கொண்டாலும் அந்த ஈயிடமிருந்து அது எடுத்ததை விடுவிக்க முடியாது'' என்ற திருமறை குர்ஆனின் 22-73 வது வசனத்தை விளங்கினார்கள்.

ஒருவன் உன்னை வலது கன்னத்தில் அறைந்தால், அவனுக்கு மறு கன்னத்தையும் திருப்பிக்கொடு' (மத்தேயு 5:39)

அதாவது ஒருவன் உனது வலது கன்னத்தில் அறைந்தால், அவனை எதிர்க்காமல் - எந்த மறுபேச்சும் பேசாமல் உடனேயே உனது இடது கன்னத்தைக் காட்டு என்று இயேசு போதித்தார் என்று கிறிஸ்துவர்கள் வாதிடுகின்றனர்.

இந்த போதனையை போதித்ததாகச் சொல்லப்படும் இயேசுவாவது இதை செயல்படுத்தி காட்டி இருக்க வேண்டுமல்லவா? அவரது வாழ்விலும் அவர் துன்புறுத்தப்படுகின்றார். இது போன்ற பிரச்சனைகளையும் சந்தித்து இருக்கின்றார். அதை அவரும் செயல்படுத்தவில்லை என்பதுதான் இதில் வேடிக்கையிலும் வேடிக்கை. அது பற்றி பைபிளில் வரக்கூடிய வசனத்தைப் பாருங்கள்:

'இப்படி அவர் சொன்னபொழுது, சமீபத்தில் நின்ற சேவகரில் ஒருவன்: " பிரதான ஆசாரியனுக்கு இப்படியா உத்தரவு சொல்லுகிறது" என்று, இயேசுவை ஒரு அறை அறைந்தான்.

இயேசு அவனை நோக்கி: " நான் தகாத விதமாய்ப் பேசினதுண்டானால், தகாததை ஒப்புவி நான் தகுதியாய்ப் பேசினேனேயாகில், என்னை ஏன் அடிக்கிறாய் " என்றார்.- யோவான் : 18:22-23

ஒரு கன்னம் அறைப்பட்டால் மறு கன்னம் காட்டு என்ற இந்த வசனம் சொல்ல வருகின்ற கருத்து கேட்பதற்கு நன்றாக இருந்தாலும் , அதை செயல்படுத்துவதற்கு சாத்தியப்படுமா என்பதை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்கிறார்கள் வேத ஆய்வாளர்கள் .

கப்பலே கவிழ்ந்தாலும், கன்னத்தில் கை வைத்து உட்காரக்கூடாது என்கிறார்களே அது ஏன்?

கன்னத்தில் கை வைத்து உட்கார்வதை உடல்ரீதியான செயலாகப் புரிந்து கொள்ளத்தேவையில்லை. உங்கள் வாழ்க்கையையே முதலீடு செய்திருப்பது மூழ்கிப் போனாலும், வாழாமல் இருந்துவிடக்கூடாது. உங்கள் நம்பிக்கையை விட்டுக்கொடுக்கக் கூடாது.

இழந்ததை எப்படி சரி செய்வது அல்லது ஈடு கட்டுவது என்பதில் கவனம் வைக்க வேண்டும் என்பதற்காக இப்படிச் சொல்லப்பட்டிருக்க வேண்டும்.

நீங்கள் முதலீடு செய்த கப்பல்தான் என்றில்லை. நீங்கள் பயணம் செய்யும் கப்பல் மூழ்குவதாக இருந்தாலும் என்ன செய்வீர்கள்? அது மூழ்கும் போது கன்னத்தில் கை வைத்து செயலற்று உட்கார்ந்தால், எப்படி உயிர் பிழைப்பீர்கள்?

நீச்சல் தெரியும் என்றால், அதற்குத் தயாராக வேண்டும். நீச்சல் தெரியாதென்றால், வேறு எப்படிக் கரை சேர்வது என்று பார்க்க வேண்டும். அதைவிட்டு விட்டு கன்னத்தில் கை வைத்து உட்கார்ந்தால்?

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

துன்பத்தினால் தன்னுடைய கன்னத்தில் அறைந்து கொள்பவனும், ஆடையைக் கிழித்துக கொள்பவனும், அறியாமைக் காலத்துச் சொற்களைப் பயன்படுத்துபவனும் நம்மைச் சார்ந்தவன் அல்லன்.' அப்துல்லாஹ்(ரலி) புகாரி : 1294.

வாழ்க்கையின் எத்தனை துன்பம் வந்தாலும் கன்னத்தில் அறைந்து கொள்ளக் கூடாது என்று நபிகளார் கூறயிருக்கிறார்கள் .ஆனால் சீனாவில் ...

சீனாவில் மக்கள் " புக்கட் திருவிழா " என்று ஒரு திருவிழாவை கொண்டாடுகிறார்கள். "புக்கட் வெஜிடேரியன் ஃபெஸ்டிவல்" என்று ஒவ்வொரு ஆண்டும் அக்டோபர் மாதம் கொண்டாடப்படுகிறது. சுமார் பத்து நாட்கள் வரை நடக்கும் இந்த திருவிழாவின் போது யாருமே அசைவ உணவுகளைச்

சாப்பிடமாட்டார்களாம். விலங்குகளைப் பெருமைப்படுத்தும் விதமாக கன்னம் மற்றும் வாய்ப்பகுதிகளில் கூர்மையான ஆயுதங்களால் குத்திக் கொள்கிறார்கள். ( இத்தனை நாள் கண்ட கண்ட விலங்குகளை சாப்பிட்டதற்காகவா ? )

குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை இந்த சடங்கு முறைகள் நடைமுறையில் இருக்கின்றன. இப்படிச் செய்வதினால் தங்களுக்கு வாழ்க்கையில் செல்வம் பெருகும் என்று நம்பப்படுகிறது.
நம்மூரில் அலகு குத்தி கடவுளுக்கு நேர்த்தி கடன் செலுத்துகிறார்கள் .
கன்னங்கள் முத்தம் இடுவதற்கு மட்டுமல்ல , அது படும்பாடு சொல்லி மாளாது.
ர.ரா

கால்கள்
(மனித உறுப்புகள் 2)



கால் என்பது உடலைத் தாங்குவதற்கும், நடப்பதற்கும் பயன்படும் உடல் உறுப்பாகும். விலங்குகளுக்குக் கால்கள் ஜோடிகளாக அமைந்துள்ளன. மனிதரும் பறவைகளும் இரு கால்களும், விலங்குகள் நான்கு கால்களும் கொண்டிருக்கின்றனர். சில ஊர்வன வகைகள் சில நூறு கால்கள் கொண்டுள்ளன.ஈ போன்ற சில பூச்சி வகைகள், கால்களால் முகர்வதற்கும் மற்றும் சுவைப்பதற்கும் திறன் பெற்றுள்ளன.
(மனிதர்களே!) ஊர்ந்து செல்லக்கூடிய (உயிர்ப் பிராணிகள்) அனைத்தையும் அல்லாஹ் ஒரேவித தண்ணீரைக் கொண்டு படைத்திருந்த போதிலும் (அவை யாவும் ஒரு வகையாக இருக்க வில்லை.) அவைகளில் சில தன் வயிற்றால் (பாம்புகளைப் போல்) ஊர்ந்து செல்கின்றன. அவைகளில் சில இரு கால்களால் நடக்கின்றன. அவைகளில் சில நான்கு கால்களால் நடக்கின்றன. (இவ்வாறு) அல்லாஹ் தான் விரும்பியவைகளை (விரும்பியவாறு) படைப்பான். நிச்சயமாக அல்லாஹ் அனைத்தின் மீதும் மிக்க ஆற்றலுடையவன்.
(அல்குர்ஆன் : 24:45)
' தாமரைப் பாதம் ' என்று கவிஞர்கள் வர்ணித்து மகிழ்வது உண்டு. ஆனால் தட்டை பாதம் (Flat Foot) என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமல்ல . கவிஞர்களுக்கு எப்படியோ… எலும்பு சிகிச்சை மருத்துவர்களுக்கு தட்டை பாதம் தப்பான பாதம்.

அது என்ன தட்டைப் பாதம் ?
நம் கீழ்ப்பாதத்தின் முன்பகுதியும், குதிகாலும் தரையைத் தொட்டுக் கொண்டிருக்க, இந்த இரண்டுக்கும் நடுவே உள்ள பகுதி உள்பக்கம் வளைந்திருக்கும். ஆனால் சிலருக்கு இந்த நடுப்பாகத்தில் பெரும்பகுதியோ அல்லது முழுவதுமோ தரையில் பட்டுக்கொண்டிருக்கும். ஆக மொத்த பாதமும் தரையைத் தொட்டுக் கொண்டிருக்கும் , இந்த வகைப் பாதம்தான் தட்டைப் பாதம் .
பிறந்த குழந்தையின் பாதத்தை தொட்டுப் பாருங்கள் அது தட்டையாகத்தான் இருக்கும். குறைந்தது இரண்டு வயது வரையாவது குழந்தையின் பாதம் தட்டையாகவே இருக்கும். அதற்குப் பிறகுதான் வளைவுகள் உருவாகின்றன. ஏழு வயது ஆவதற்குள் 95 சதவீதம் பேருக்கு கீழ் பாதத்தின் நடுப்பகுதி உள்பக்கமாக வளையத் தொடங்கும்.
நம் பாதத்தின் வெளி எல்லைப் பகுதியிலேயே பெரும்பாலான நம் உடலின் எடை கீழே இறங்குவது இயல்பு . இதற்கு மாறாக, தட்டை பாதத்தின் காரணமாக நம் உடல் எடை உட்புறத்திலும் இறங்குமானால், அதனால் வலியும் காய்த்தலும் ஏற்படுக் கூடும்.
பாதத்தை உள்புறமாக இயங்கும் தசைகளுக்குப் பயிற்சி கொடுப்பதன் மூலம் இதுபோன்ற பிரச்சினைக்கு பலன் கிடைக்கக் கூடும். இதனால் பலனில்லையெனில் ஸ்பெஷல் காலணி அணிவது நல்லது .

இதுபோன்ற தட்டையான பாதம் கொண்டவர்களுக்கு தினசரி வேலைகளில் பிரச்சனை இருக்காது. அவசரமாக ஓடிப்போய் பேருந்தில் ஏறிக் கொள்வதில் கூட சிரமம் ஏற்படாது. ஆனால் நீண்ட நேரம் நின்று கொண்டு வேலை செய்தால், பாதக்குடைச்சல் ஏற்படலாம். தவிர ஓட்டப்பந்தய வீரராக விளங்குவது தட்டை பாதக்காரர்களுக்குச் சற்று கஷ்டமான விஷயம். இந்தக் காரணங்களால்தான் தட்டை பாதக்காரர்களை ராணுவத்தில் அனுமதிப்பதில்லை.
பாதத்தின் புறப்பகுதிக்கு மேலே புடைத்திருக்கும் பகுதி கணுக்கால். உங்க காதல் மனைவி கொலுசு அணியும் இடம்தான் "கணுக்கால் மூட்டு "
(உங்கள் மரங்களுக்கு) நீர் பாய்ச்சிக் கொள்ளுங்கள். பிறகு வரப்புகளைச் சென்றடையும் வரை தண்ணீரைத் தடுத்து நிறுத்திக் கொள்ளுங்கள்' என்னும் (இந்த) நபிமொழியை அடிப்படையாகக் கொண்டே, 'தண்ணீர் கணுக்கால்கள் வரை உயர்ந்து நிரம்பிவிட்டால் போதுமான அளவுக்கு நீர் பாய்ச்சிவிட்டதாகப் பொருள்' என்று அன்சாரிகளும் பிற மக்களும் மதிப்பிட்டார்கள்' என்றார்கள்.
புகாரி : 2362.

கணுக்காலுக்குக் கீழே, பாதம் உள்ளது. கணுக்காலுக்கு மேலே, கெண்டைக்கால் உள்ளது. பாதத்தையும், மேற்புற கால் பகுதிகளான தொடை , முட்டி , கெண்டைக்கால் பகுதிகளைப் பாதத்துடன் இணைப்பது, கணுக்கால் மூட்டு ஆகும்.
கெண்டை கால்கள் , குதிக்கால்கள் பற்றி குர்ஆன் கூறும் வசனங்கள் :
قِيْلَ لَهَا ادْخُلِى الصَّرْحَ فَلَمَّا رَاَتْهُ حَسِبَـتْهُ لُجَّةً وَّكَشَفَتْ عَنْ سَاقَيْهَا قَالَ اِنَّهٗ صَرْحٌ مُّمَرَّدٌ مِّنْ قَوَارِيْرَ ۙقَالَتْ رَبِّ اِنِّىْ ظَلَمْتُ نَـفْسِىْ وَ اَسْلَمْتُ مَعَ سُلَيْمٰنَ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَ
பின்னர் "இம்மாளிகையில் நுழை" என்று அவளுக்குக் கூறப்பட்டது. அவள் அதனைக் கண்டு (அதன் தரையில் பதிக்கப்பட்டிருந்த பளிங்கு கற்களை) தண்ணீர் என்று எண்ணி ஆடையை (நனைந்து போகாதிருக்க) இரு கெண்டைக்கால்களில் இருந்து உயர்த்தினாள். அதற்கு (ஸுலைமான் "அது தண்ணீரல்ல) பளிங்கு கற்கள் பதிக்கப்பட்ட மாளிகை தான்" என்று கூறினார். (குர்ஆன் : 27:44)
يُعْرَفُ الْمُجْرِمُوْنَ بِسِيْمٰهُمْ فَيُؤْخَذُ بِالنَّوَاصِىْ وَ الْاَقْدَامِ
குற்றவாளிகள், அவர்கள் முகக் குறியைக் கொண்டே அறிந்து கொள்ளப்படுவார்கள். அவர்களுடைய உச்சி மயிரையும், (உள்ளங் குதிக்) கால்களையும் பிடித்திழுத்து (நரகத்தில்) எறியப்படும். (அல்குர்ஆன் : 55:41)
وَالْتَفَّتِ السَّاقُ بِالسَّاقِۙ
(அவனுடைய) கெண்டைக்கால், கெண்டைக்காலோடு பின்னிக்கொள்ளும். (அல்குர்ஆன் : 75:29)
முகீரா(ரலி) அறிவித்தார்.
சில சமயம் நபி(ஸல்) அவர்கள் கால்கள் வீங்கும் அளவுக்கு நின்று தொழுவார்கள். இதுபற்றி அவர்களிடம் கேட்கப்படும்போது 'நான் நன்றியுள்ள அடியானாக இருக்க வேண்டாமா?' என்று கேட்பார்கள்.

புகாரி : 1130.

மேற்குத் திசை நோக்கி காலை நீட்டக்கூடாது என்று முஸ்லிம்களில் அதிகமானோர் நம்புகின்றனர். ஏனெனில் கஃபா ஆலயம் மேற்குத் திசை நோக்கி அமைந்திருப்பதால், அதை நோக்கி கால் நீட்டுவது கஃபாவை அவமதிக்கும் செயல் என்று கருதுகின்றனர். இக்கருத்தோடு ஒத்துப் போகும் மற்றொரு கருத்தையும் கவனியுங்கள்
ஆயிஷா(ரலி) அறிவித்தார் :
"நான் கட்டிலில் படுத்திருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் கட்டிலுக்கு நேராக நின்று தொழுவார்கள். அவர்களுக்கு நேராகக் கால்களை நீட்டுவது எனக்குப் பிடிக்காததால் கட்டிலின் கால்கள் வழியாக நழுவிக் சென்று விடுவேன்" புகாரி : 508.
அடுத்து , தாயின் காலடியில் சொர்க்கம் உண்டு என்பது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொன்ன பொன்மொழி.
ஒருமுறை நபித் தோழர் ஒருவர் அவரது நன்றிக்கடனுக்கு அருகதையானவர்களை வரிசைப்படுத்திடக் கேட்டு நபிகளின் முன் நின்றபோது முதலாவது, இரண்டாவது, மூன்றாவது என மூன்று நிலைகளில் தாய், தாய், தாய் என்று கூறி நான்காவதுதான் தந்தை என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தெரிவித்தார்கள் .
“அவனது அன்னை அவனைச் சிரமத்துடனேயே கருவுற்று சுமந்திருந்தாள். சிரமத்துடன் தான் அவனைப் பெற்றெடுத்தாள். மேலும் அவனைச் சுமப்பதற்கும் பால்குடியை மறக்கடிப்பதற்கும் முப்பது மாதங்களாகின்றன” என்கிறது திருக்குர்ஆன் (46:15)

தாயின் காலடியில் சுவர்க்கம் போனதற்கு காரணம்... வேறெவரும் நம்மைச் சுமக்கவில்லை. தாய் அவளேதான் கரு சுமந்தாள். வேறொருவர் உணவு தரவில்லை. அவளது உதிரம்தான் நமக்கு அமுதமானது. சூல்கொண்ட கருவறையில் வேறெவரும் நம்மைப் பாதுகாக்கவில்லை. அவளது வெப்பமும், அவளது செவிப்புலனும், அவளது விழிகளும், அவளது நடையும் , அவளது அசைவும், அவளது தசையும், அவளது எலும்பும், அவளது சுவாசமும் தான் நம்மை சிசுவாகக் காத்து வளர்த்தெடுக்கிறது. நாம் பிழைப்பதற்காக அவள் எத்தனை கஷ்டப்பட்டிருப்பாள்.

விஞ்ஞானத்தில் காலடி
1969-ம் ஆண்டு, ஜூலை மாதம் 16 - ம் தேதி, அப்பல்லோ 11 என்ற விண்வெளி ஓடத்தை அமெரிக்கா ஏவியது. நான்கு நாள்கள் பயணம் செய்த அந்த விண்வெளி ஓடம், அதே ஆண்டு ஜூலை 20ம் தேதி சந்திரனில் இறங்கியது. நிலவில் இறங்கும் இந்தத் திட்டத்தில் கட்டளை அதிகாரியாக நீல் ஆம்ஸ்ட்ராங்கும், கட்டளை விமானியாக மைக்கேல் காலின்சும், மற்றுமோர் அதிகாரியாக எட்வின் ஆல்ட்ரினும் சென்றனர்.

மைக்கேல் காலின்ஸ் விண்வெளி ஓடத்திலேயே தாங்கிக்கொள்ள, ஆம்ஸ்ட்ராங்கும், ஆல்ட்ரினும் 'ஈகிள்' எனும் சிறிய ரக ஓடத்தில் சந்திரனில் ஜூலை 20 அன்று இறங்கினர். பின்னர் 6 மணி நேர தாமதத்துக்குப் பிறகு ஜூலை 21-ம் நாள் நிலவில் இறங்கி உலகையே வியக்க வைத்தனர். ஆல்ட்ரின் சற்றே தயங்க, முந்திக்கொண்ட ஆம்ஸ்ட்ராங் நிலவில் கால் வைத்த முதல் நபர் என்ற பெருமையைப் பெற்றார்.
சந்திரனில் முதன் முதலில் கால் தடம் பதித்த நீல் ஆம்ஸ்ட்ராங் கூறினார் : "ஒரு மனிதனைப் பொறுத்த அளவில் இது ஒரு சிறிய காலடி .மனித இனத்துக்கு இது ஒரு பாரிய பாய்ச்சல் "
மெஞ்ஞானத்தில் தலைகளில் கால் பாதம் :
قد قلت بالإذن من مولاك مؤتمرا
قدمي على رقبات الأولياء طرا
فكلهم قد رضوا وضعا لها بشرى
يا من سما اسما عليهم محيي الدين
"எனது பாதங்கள் எல்லா அவுலியாக்களின் பிடரி மீதும் உள்ளன’ என்று தங்களின் எஜமானனாகிய அல்லாஹ்விடம் அனுமதி பெற்று, தாங்கள் கூறினீர்கள். அவ்வாறு தங்கள் பாதத்தை அனைவரும்

மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டனர். எல்லா அவ்லியாக்களையும் விட உயர்ந்து விட்ட முஹ்யித்தீனே! என்பது இதன் பொருளாகும்.

ரஹ்மத் ராஜகுமாரன்

விரல்கள்
(மனித உறுப்புகள் 3)



விரல்கள்தான் நமக்கு எண்களைப் போதித்தன என்றால் நம்புவீர்களா ? நம்முடைய கணித முறைமை கை விரல்கள் பத்தை அடிப்படையாகக் கொண்டு டெசிம்மல் சிஸ்டம் (Decimal System) ( 1-9 ) என்று உருவானது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன் .

கி மு 2600 ல் மத்திய அமெரிக்காவில் மாயன் என்ற இனத்தவர்கள் இருபதை அடிப்படையாகக் கொண்டு, அதாவது கை விரல்10 + கால் விரல்கள் 10 = 20 (1 - 19) விஜிசிமல் (Vigesimal System) முறையைப் பயன்படுத்தி,லட்சங்கள், கோடிகள்,மில்லியன்கள் ,பில்லியன்களை எல்லாம் மிச்ச சொச்சங்கள் இல்லாமல் மிகத் தெளிவாக சொல்லி இருக்கிறார்கள்.
தனது கையால் உழைத்துச் சாப்பிடுகின்றவனைவிட சிறந்த உணவை வேறு யாரும் சாப்பிட முடியாது. உழைத்து உண்ணும் உணவே நீங்கள் சாப்பிடுகின்ற உணவில் மிகச் சிறந்ததாகும் என்றும் நபியவர்கள் கூறினார்கள். (திர்மிதீ)

உழைப்பதற்கு உடலும் ,பத்து விரல்களும் தேவை, எங்கள் தாயார் அடிக்கடி கூறுவது "பத்து விரலால் சம்பாதித்து, ஐந்து விரலால் உண்ண வேண்டும் " என்பார்கள் .
" வெறுங்கை என்பது மூடத்தனம், விரல்கள் பத்தும் மூலதனம்" என்று ஒரு கவிஞர் பாடி இருக்கிறார்.
இந்த 10 விரல்களில் மிக முக்கியமான விரல் பெருவிரல். இதன் துணையில்லாமல் எந்த காரியமும் செய்ய முடியாது.

குரு துரோணாச்சாரியார் வில் வித்தையில் சிறந்து விளங்கிய ஆசிரியர் ஆவார். இவர் பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்கும் அரச குருவாக இருந்து வில் வித்தையை பயிற்றுவித்து வந்தார்.
துரோணரிடம் சென்ற வேடனின் மகன் ஏகலைவன், தன்னை அவரின் சீடனாக ஏற்றுக் கொண்டு வில்வித்தையைக் கற்றுத் தருமாறு வேண்டினான். அரச குரு துரோணரோ, தான் அரச குடும்பத்தின் குரு என்பதால் ஏகலைவன் போன்ற பாமரனுக்கு குருவாக இருக்க முடியாது என்று கூறி ஏகலைவனின் விருப்பத்தை நிராகரித்து விட்டார்.

'அரச குடும்ப குரு மற்றவர்களுக்கு எந்த ஒரு கலையையும் கற்பிக்கக் கூடாது' - என்பது அந்நாளைய விதியாகும். ராஜ வம்சத்தைச் சேர்ந்த இளவரசனைத் தவிர வேறு யாரும் தற்காப்புக் கலையில் சிறந்த விளங்கக் கூடாது என்பது இத்தகைய விதியின் நோக்கமாகும்.
தனது குருவாகிய துரோணரின் வடிவத்தை ஒரு சிலையாக செய்து காட்டில் வைத்து, அந்த சிலைக்கு முன்னால் தானாகவே தினமும் வில்வித்தை பயிற்சி பெற்று வந்தான். "முயற்சி வெற்றியைத் தரும்" என்ற வாக்கிற்கு ஏற்ப, தினமும் அவன் பயிற்சி செய்து வருவதால் நாளுக்குள் நாள் அவனுடைய திறமை வளர்ந்து கொண்டிருந்தது. வில்வித்தையில் மிகச் சிறந்த வீரனான அர்ஜுனனை விட ஏகலைவனின் திறமைப் பெற்றான்.

ஒரு நாள் ஏகலைவனைக் கண்ட அர்ஜுனன் தன்னை விட சிறப்பாக வில்வித்தை புரியும் ஏகலைவனைக் கண்டு ஆச்சர்யப்பட்டான். ஏகலைவனிடம் அவன் குரு யார் என்று வினவினான், அர்ஜுனன். அதற்கு ஏகலைவன், "குரு துரோணாச்சாரியார்" என்று பதிலுரைத்தான்.
பதிலைக் கேட்டு கோபம் கொண்ட அர்ஜுனன், குருவிடம் சென்று அவர் தன்னை ஏமாற்றிவிட்டதாகக் கூறி குற்றம் சாட்டினான். ஏகலைவன் பற்றி முழுவதுமாகக் கூறினான். இதனைக் கேட்ட துரோணர், குழப்பமுற்ற நிலையில் ஏகலைவனைக் காணப் புறப்பட்டார்.
ஏகலைவன் இல்லத்திற்கு துரோணரும் அர்ஜுனனும் வந்தனர். அவர்களை வரவேற்ற ஏகலைவன் தான் பயிற்சி பெறும் இடத்திற்கு அவர்களை அழைத்துச் சென்றான். அங்கு துரோணரின் சிலையைக் காட்டினான். இதனைப் பார்த்த துரோணர், தன் சிலை முன் பயிற்சி பெற்ற காரணத்தால், ஏகலைவனிடம் குரு தட்சணை கேட்டார். அதுவும் குரு தட்சணையாக பணம், பொருள் எதுவும் கேட்காமல், ஏகலைவனின் வலது கை கட்டை விரலைக் கேட்டார்.

வலது கை கட்டை விரல் இல்லாமல் வில்வித்தை புரிவது சாத்தியமல்ல என்பதை ஏகலைவன் நன்கு அறிவான். ஆனாலும், அதனை வெளிக்காட்டாமல், குருவிற்காக அவர் கேட்ட தட்சணையாக தனது வலது கை கட்டை விரலை வெட்டி அவரிடம் கொடுத்தான்.
விரல் நுனியில் சாகசத்தை நம்பி மட்டுமே நான் தினமும் பல காரியங்களை செய்து வருகிறோம் . நெல்லா, பதரா. அரிசியா, உமியா என்று தொட்டுப் பார்த்தும் கண்டுபிடிப்பது விரலில் உள்ள எலும்பினாலோ, தசையினாலோ அல்ல. விரல் நுனியில் உள்ள அடர்த்தியான கொழுப்பு அறைகள் நிரம்பிய ஸ்பெஷல் திசுக்களும், அவற்றை போர்த்தியுள்ள பிரத்தியேகமான தோலும் (Pulp) சேர்ந்துதான் இவற்றைச் செய்கின்றன.ஒவ்வொரு விரல் நுனியிலும் நகத்திற்கு கீழே அமைந்துள்ள இந்த மெத்தை போன்ற விரல் மேடை இதற்குக் காரணம்.

கை விரல் நுனியில் மிக அதிக ரத்த ஓட்டமுண்டு. அதனால்தான் சில வகை ரத்த பரிசோதனைகளுக்கு விரல்நுனியில் இருந்து ரத்தம் சேகரிக்கிறார்கள். தவிர உணர்வு நரம்புகளும் விரல் நுனிகளில் குவிந்துள்ளன முக்கியமாக கட்டைவிரல் மற்றும் ஆள்காட்டி விரல் நுனிகள் மிகவும் அதிக அளவில் உணர்ச்சிகளை மூளைக்கு அனுப்பும் சக்தி வாய்ந்தவை. கண்களை மூடிக்கொண்டு நாணயத்தின் ஒரு பக்கத்தில் விரல்களால் தடவிப் பார்த்து அது பூவா தலையா என்று சரியாக சொல்ல முடிவது இதனால்தான்.
அடுத்து, அதிய்யு பின் ரபீஆ என்பவன் விரோதி அவன் ஒரு நாள் நபி(ஸல்) அவர்களைப் பார்த்து, " நீர் மறுமை நாளைப் பற்றி பயமுறுத்துகிறீர். அந்நாள் எப்போது வரும் என்பதையும் அந்நாளின் நிகழ்ச்சிகளையும் எனக்கு நீர் விளக்குவீராக அது எனது அறிவுக்கு பொருந்துகிறதா ? இல்லையா ?
என்பதை நான் கவனிக்கிறேன் " என்று கூறினான்

உடனே அல்லாஹ் கீழ்க்கண்ட வசனத்தை இறக்கியருளினான்.

" மனிதன் (மரித்து மண்ணோடு மண்ணாக மக்கிப் போன பின் )அவனுடைய எலும்புகளை மீண்டும் நாம் ஒன்றிணைத்திட மாட்டோம் என்று எண்ணிக் கொண்டுள்ளானா ? "ஆம் " ( முன்பு இருந்தது போல் )

அவனுடைய விரல் நுனிகளையும் நாம் செவ்வையாக்குவதன் மீது , ஆற்றலுடையோராக இருக்கின்றோம்.குர்ஆன் (75: 3 , 4)
பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் மரித்து மக்கிப் போய் மண்ணோடு மண்ணாகி பூமியில் பல இடங்களில் சிதறிப் போன துணுக்களையெல்லாம் ஒன்று சேர்த்து அதற்கு உயிர் கொடுத்து எழுப்பி ..... இதை ஒருக்காலும் என் அறிவு ஏற்றுக் கொள்ளாது என்று கூறி விட்டான் அதிய்யு
இதில் விரல் நுனிகளை செவ்வையாக்குவோம் என்பது எலும்புகளை மட்டுமல்ல., விரலிலுள்ள ரேகைகளையும் அப்படியே மறுபடியும் உண்டாக்குவோம் என்று பொருள்படும்.
சரி, விரல் ரேகை எப்படி உருவாகிறது ?
கருவில் இருக்கும் குழந்தையின் ரத்த ஓட்டம் விரல் நுனிகளுக்குச் சென்று, அதற்கு மேலே செல்ல முடியாமல் சுழன்று திரும்புவதால் விரல் ரேகைகள் உருவாகின்றன என்கிறது விஞ்ஞானம்.
விரல்கள் ஒரு சதுர இன்ஞ்க்கும் குறைவாகத்தான் இருக்கிறது இத்தனை சிறிய பரப்பில் வரையப்படும் ரேகைகள் ஒன்றுக்கொன்று வேறுபட்டு இருக்கிறது.

நவீன கம்ப்யூட்டரில் இத்தனை சிறிய பரப்பில் கோடி கோடி டிசைன் போட்டாலும் ஒரு தருணத்தில் பழைய டிசைன் வந்து விடுகிறது . நிச்சயமாக தனித்தனியாக டிசைன் கம்ப்யூட்டராலும் வரைய முடியாது.
இரண்டு வயது குழந்தையின் விரல் ரேகைதான், அந்தக் குழந்தை என்பது வயதான முதியவராக மாறிய போதும், அதே ரேகைதான் இருக்கும்.விரல் நுனி ரேகை அமைப்பு கொஞ்சம் கூட மாறுவதில்லை.எனவேதான் தடய அறிவியல் துறை விரல் ரேகை நிபுணர்கள், இதை " கடவுள் கொடுத்த முத்திரை " என்று **( A Seal given by God )** வர்ணிக்கிறார்கள். இது அல்லாஹ் அடியானுக்கு வைத்த முத்திரை.
இதுவரையில் உலகில் பிறந்தவர்களும் இப்போது இருக்கும் 700 கோடி மக்களின் ரேகையும்,இனி பிறந்து வரப்போகும் மக்களின் ரேகையும் தனித்தனியாகத்தான் **(Unique Identification Data)** இருக்கும்.

அடுத்து, நோயெதிர்ப்பு சக்தியை அதிகரிக்க ஆரோக்கியமான உணவுப் பொருட்களை உட்கொள்வதைத் தவிர, சில பழக்கங்களை மேற்கொள்வதன் மூலமும் நோயெதிர்ப்பு சக்தியை மேம்படுத்தலாம். அதில் ஒரு பழக்கம்தான் சாப்பிட்ட பின் கைவிரல்களை சூப்புவது.
மனித கைகளில் ஆன்.என்.ஏ என்னும் நன்மை பயக்கும் நொதி வெளிப்படுகிறது.ஆர்.என்.ஏ நொதியின் செயல்பாட்டை மேம்படுத்தலாம். பாக்டீரியாவுக்கு உணர்திறனை மேம்படுத்தும் உடலிலேயே பாக்டீரியா அதிகம் தங்கியிருக்கும் இடமாக நாம் கைகள் மற்றும் விரல்களைத்தான் கூறுவோம். இருப்பினும், விரல்களை சூப்புவது என்பது முற்றிலும் ஆபத்தானது என்று அர்த்தமல்ல. நம் உடலுக்கு சில பாக்டீரியாக்கள் நல்லது அல்லது நன்மை பயக்கும் என்பதை ஒவ்வொருவரும் அறிந்து கொள்ள வேண்டும். இந்த நொதி பாக்டீரியா பைண்டராக செயல்படுவதன் மூலம் நோயெதிர்ப்பு சக்தியை மேம்படுத்த முடியும்.

ஆனால் கைவிரல்களைப் பயன்படுத்தி சாப்பிடுவதை விட ஸ்பூன்களைக் கொண்டு சாப்பிடுவது ஆபத்தானது என்பது உங்களுக்குத் தெரியுமா? ஆம், சாப்பிடும் பாத்திரங்கள் பாக்டீரியாக்களால் எளிதில் மாசடைந்து, நம் செரிமானத்திற்கு தீங்கு விளைவிக்கும். மறுபுறம், கைகளால் சாப்பிட்டு கைவிரல்களை சூப்பும் போது, செரிமான அமைப்பினுள் பாக்டீரியாக்கள் மீதான நமது நோயெதிர்ப்பு சக்தி மேம்படும். பசியை அதிகரிக்கும்.
நமது கைகளின் நரம்பு மண்டலம் நேரடியாக நம் மூளையுடன் இணைக்கப்பட்டுள்ளது. ஆகவே நாம் உண்ணும் உணவின் அமைப்பு மற்றும் வெப்பநிலையை எளிதில் கண்டறிய நம் கைகளுக்கு உதவுகின்றன. இந்த வழியால் நரம்பு மண்டலம் வேகமாக மூளையை தயார் செய்து உண்ணும் உணவுகளை ஏற்றுக்கொள்ள வைக்கிறது.

இந்த செயல்முறை ஒருவரது பசியை மேம்படுத்தவும் செய்யலாம். சாப்பிடுவதில் இன்பத்தை மேம்படுத்துகிறது சாப்பிட்ட பின் கைவிரல்களை சூப்புவதைக் கொண்டே உண்ட உணவின் யதார்த்த சுவையை விவரிக்க முடியும் என்பது தெரியுமா ?

அதோடு ஒருவர் உணவை எவ்வாறு அனுபவித்து சாப்பிட்டுள்ளார் என்பதையும் இச்செயல் மூலம் அறிய முடியும். நன்றியுணர்வை மேம்படுத்தும் சில சமயங்களில், எளிய செயல் நமது மனநிலையில் நன்றியுணர்வை அதிகரிக்கச் செய்கிறது. உணவுகள் உட்பட நம்மிடம் உள்ள அனைத்திற்கும் நாம் நன்றியுள்ளவர்களாக இருக்க வேண்டும். உண்ட பின் கைவிரல்களை சூப்புவது நம் தட்டில் இருக்கும் ஒரு உணவைக் கூட விட்டுவிடாமல் உண்ணுவது என்பது நன்றியுடன் இருக்க கற்றுக் கொடுக்கிறது.
நபி (ஸல்) .அவர்கள் கைவிரல்களைக் காட்டி அநேக உதாரணங்களை காட்டியுள்ளார்கள்
ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்
தம் நடுவிரலையும், பெருவிரலை அடுத்துள்ள (ஆட்காட்டி) விரலையும் இணைத்தவாறு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'நானும் மறுமை நாளும் இதோ இந்த இரண்டு விரல்கள் போல் (நெருக்கமாகவே) அனுப்பப்பட்டுள்ளோம்' என்று கூறக்கேட்டேன். (புகாரி : 4936)

இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.
(நபி(ஸல்) அவர்கள் இரண்டு கைவிரல்களையும் மூன்று முறை விரித்து) மாதம் என்பது இவ்வளவுதான் என்று கூறினார்கள். மூன்றாம் முறை கட்டை விரலை மடக்கினார்கள் (புகாரி : 1908)
அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.
'ஒரு கட்டிடித்தின் ஒரு பகுதி இன்னொரு பகுதியை எப்படி வலுப்படுத்திக் கொண்டிருக்கிறதோ அது போன்றே ஒரு இறைநம்பிக்கையாளர் இன்னொரு இறைநம்பிக்கையாளர் விஷயத்தில் நடக்க வேண்டும்' என்று நபி(ஸல்) கூறிவிட்டுத் தம் விரல்களைக் கோர்த்துக் காட்டினார்கள். புகாரி : 481.
அஸர் தொழுகையின் நேரம் நெருங்கியபோது நபி(ஸல்) அவர்களை பார்த்தேன். மக்கள் உளூச் செய்வதற்குத் தண்ணீரைத் தேடினார்கள். தண்ணீர்ம்டைக்கவில்லை.
நபி(ஸல்) அவர்களிடம் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வரப்பட்டது. தண்ணீர் உள்ள பாத்திரத்தில் நபி(ஸல்) அவர்கள் தங்களின் கையை வைத்து அப்பாத்திரத்திலிருந்து உளூச் செய்யுமாறு மக்களுக்குக் கட்டளையிட்டார்கள்.
நபி(ஸல்) அவர்களின் விரல்களின் கீழேயிருந்தது அங்கிருந்த கடைசி நபர் உளூச் செய்து முடிக்கும் வரை தண்ணீர் சுரந்து கொண்டிருந்ததை பார்த்தேன்' என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி : 169.

ரஹ்மத் ராஜகுமாரன்.

## மூட்டுகள்
(மனித உறுப்புகள் 4)




ஒருமுறை நபி(ஸல்) அவர்கள் குதிரையில் சென்று கொண்டிருந்தபோது கீழே விழுந்துவிட்டார்கள். இதனால் அவர்களுக்கு மூட்டுக்காலில் அல்லது புஜத்தில் முறிவு ஏறபட்டுவிட்டது.

ஒரு மாத காலம் தங்களின் மனைவியரிடம் செல்வதில்லை எனச் சத்தியம் செய்தார்கள். பேரீச்ச மரத்தினால் செய்யப்பட்ட ஒரு பரணில் அமர்ந்தார்கள். அவர்களின் தோழர்கள் அவர்களை நோய் விசாரிப்பதற்காக வந்தபோது (அந்தப்பரணியில்) அமர்ந்தவர்களாகவே அவர்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். வந்தவர்கள் நின்று தொழுதார்கள்.

ஸலாம் கொடுத்த பின்னர் நபி(ஸல்) அவர்கள் 'பின்பற்றப்படுவதற்காகவே இமாம் ஏற்படுத்தப்பட்டுள்ளார். எனவே, அவர் தக்பீர் சொன்னால் நீங்களும் சொல்லுங்கள்; அவர் ருகூவு செய்தால் நீங்களும் செய்யுங்கள்; அவர் ஸஜ்தாச் செய்தால் நீங்களும் செய்யுங்கள்; அவர் நின்று தொழுதால் நீங்களும் நின்று தொழுங்கள்' எனக் கூறினார்கள்.
நாள்கள் சென்றதும் நபி(ஸல்) அவர்கள் அந்தப் பரணிலிருந்து இறங்கினார்கள். 'இறைத்தூதர் அவர்களே! ஒரு மாத காலம் என்று நீங்கள் சத்தியம் செய்தீர்களே!' எனத் தோழர்கள் கேட்டபோது 'இந்த மாதம் இருபத்தி ஒன்பது நாள்கள் தாம்' என்று கூறினார்கள்' என அனஸ்(ரலி) அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி : 378.

மூட்டு வலி உங்களுக்கு மட்டும் அல்ல , பெருமானார் (ஸல்) அவர்களுக்கும் ஏற்பட்டிருந்தது .
"' உட்கார்ந்த எழுந்திருக்க முடியலை எழுந்தா உட்கார முடியலை மூட்டுவலி ஆளைக் கொல்லுது ! என்று வேதனையுடன் முணுமுணுக்கும் நபர்களின் எண்ணிக்கை கொஞ்ச நஞ்சமல்ல .
மூட்டுவலி என்பது உடலின் எந்தவித மூட்டிலும் ஏற்படக்கூடியதான் என்றாலும் முழங்கால் மூட்டில் ஏற்படும் வலியைத்தான் பொதுவாக மூட்டுவலி என்கிறோம்.
தொடை எலும்பின் கீழ்ப் பகுதியும், முழங்கால் எலும்பின் மேல் பகுதியும் இணையும் இடமே முழங்கால் மூட்டு. இது ஒரு கீல் மூட்டு. இது நம் காலில் மிக முக்கியமான ஜங்ஷன்.
முழங்கால் மூட்டைத் தடவை பார்க்கும்போது நம் கைக்கு தட்டுப்படுவது மூட்டு சில்லுதான். பலரும் நினைப்பது போல் இது மட்டுமே முழங்கால் மூட்டல்ல. முழங்கால் மூட்டின் ஒரு பகுதிதான் இது. மற்ற முக்கிய பகுதிகள் மூட்டுச் சில்லுக்குப் பின்னால்தான் இருக்கிறது .
மூட்டு (Joint) என்பது உடலில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட எலும்புகளும் தொடர்பு கொள்ளவும், எலும்புக்கூடமைப்பு ஒருங்கிணைந்து செயற்பட உதவும் இடமாகவும் உள்ளது வெவ்வேறு கோணங்களிலும், பல்வேறு வகையான அசைவுகளுக்கு ஏற்ற வண்ணம் இம்மூட்டுகள் அமைந்துள்ளன.
கால், கை, தோள்பட்டைகளில் உள்ள மூட்டுகள் தானாக உயவூட்டுபவையாக உள்ளன. எனவே, இவை உராய்வற்று, அழுத்தத்தினைத் தாங்கக்கூடியவையாக, அதிகமான பளுவை ஏற்றும் மென்மையான, துல்லியமான அசைவுகளை ஏற்படுத்தக்கூடியவையாகவும் உள்ளன .
பிற மூட்டுகளான, தலையிலுள்ள எலும்புகளுக்கிடையே அமைந்துள்ள முடிச்சுகள் மூளை மற்று உணர்வு உறுப்புகளை பாதுகாப்பதற்காக (பிறக்கும்போது நிகழும் அசைவினைத் தவிர்த்து) பிற அசைவுகளை அனுமதிப்பதில்லை.

பல்லுக்கும், தாடைக்கும் இடையேயுள்ள இணைப்பும் மூட்டு என்றே அழைக்கப்படுகிறது. இது ஆணிமூட்டு ***(gomphosis)*** எனப்படும் ஒருவகையான நார்மூட்டு ஆகும். அசைதலுக்கு இடமளிக்கும் வண்ணமும் (மண்டையோட்டெலும்புகளைத் தவிர்த்து), இயங்குவதற்கு ஆதரவளிக்கும் முறையிலும் அமைக்கப்பட்டுள்ள இம்மூட்டுகள் அமைப்பு மற்றும் செயற்பாடுகளின் அடிப்படையில் வகைபடுத்தப்படுகின்றன.

மஜ்ஸஆ இப்னு ஸாஹிர் இப்னி அல் அஸ்லமீ(ரஹ்) அறிவித்தார். "என்னுடைய (பனூ அஸ்லம்) குலத்தைச் சேர்ந்த வரும், அந்த மரத்தின(டியில் 'பை அத்துர் ரிள்வான்' செய்தவ)ர்களில் ஒருவருமான உஹ்பான் இப்னு அவ்ஸ்(ரலி) அவர்களுக்கு முழங்காலில் வலி ஏற்பட்டிருந்தது. அவர்கள் (தொழுகையில் தரையில் முழங்கால் மூட்டு அழுந்தாமலிருப்பதற்காக) சஜ்தா செய்யும்போது தம் முழங்காலுக்குக் கீழே தலையணை ஒன்றை வைத்துக் கொள்வார்கள். ஸஹீஹ் புகாரி : 4174.
உடலின் மற்ற மூட்டுகளின் எண்ணிக்கையைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் அக்காலகட்டத்தில் தெளிவாக கூறி இருப்பது நம்மை வியப்படையச் செய்கிறது !

"மனிதனுடைய உடலில் 360 மூட்டுக்கள் (எலும்பு இணைப்புக்கள்) உள்ளன.(அவை சரியாக இயங்குவதால், அதற்கு நன்றி செலுத்தும் பொருட்டு..) ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மூட்டுக்காகவும் தர்மம் செய்ய வேண்டும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
உடனே நபித்தோழர்கள், 'அல்லாஹ்வின் தூதரே! இது யாருக்குச் சாத்தியமாகும்?' என்று கேட்டனர்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "பள்ளிவாசலில் எச்சிலைக் கண்டால் அதை மூடி விடுவதும், பாதையில் கிடக்கும் (கல், முள் போன்ற) பொருளை அகற்றுவதும் (தர்மம்) ஆகும்.
இது உனக்கு முடியவில்லை என்றால், லுஹா தொழுகையின் இரண்டு ரக்அத்துக்கள் உனக்குப் போதுமானது" என்று கூறினார்கள். அறிவிப்பவர்: புரைதா (ரலி)
நூல்: அஹ்மத் 21959

மனிதர்கள் சூரியன் உதிக்கின்ற ஒவ்வொரு நாளிலும் தம்முடைய ஒவ்வொரு மூட்டு எலும்புக்காகவும் தர்மம் செய்வது கடமையாகும்.
இருவருக்கிடையே நீதி செலுத்துவதும் தர்மமாகும்.
ஒருவர் தமது வாகனத்தின் மீது ஏறி அமர உதவுவதும், அல்லது அவரது பயணச்சுமைகளை அதில் ஏற்றிவிடுவதும் தர்மமாகும்.
இன்சொல்லும் தர்மமாகும். ஒருவர் தொழுகைக்குச் செல்ல எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் தர்மமாகும்' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
(அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி), நூல்: புகாரி)
இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

"ஒரு விஷயம் (சொல்கிறேன் கேள்:) ஆதமின் மக்களில் ஒவ்வொரு மனிதரும் முன்னூற்று அறுபது மூட்டு எலும்புகளுடன் படைக்கப் பட்டுள்ளனர்.
எனவே, யார் அந்த முன்னூற்று அறுபது மூட்டு எலும்புகளின் எண்ணிக்கை அளவுக்கு அல்லாஹ்வை (தக்பீர் கூறி) பெருமைபடுத்தி, அல்லாஹ்வை (தஹ்மீத் கூறி) புகழ்ந்து, 'அல்லாஹ்வை தவிர வேறு இறைவன் இல்லை' என்று (தவ்ஹீத்) கூறி, அல்லாஹ்வை (தஸ்பீஹ் கூறித்) துதித்து, அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு (இஸ்திக்ஃபார்) கோரி, மக்களின் நடைபாதையில் கிடந்த ஒரு கல்லையோ, முள்ளையோ, எலும்பையோ அகற்றி, (மக்களிடம்) நல்லதை ஏவி-தீயதை தடுத்தாரோ... அவர் அன்றைய தினத்தில் தம்மை நரக நெருப்பிலிருந்து அப்புறப்படுத்திய நிலையிலேயே நடமாடுகிறார்". -ஆயிஷா (ரலி) முஸ்லிம்,1833

நமது உடலில் பல செயற்பாட்டுகளை ஆற்றாக்கூடிய முக்கியத்திறன் வாய்ந்தவை எலும்புகள்தான்.
மனித உடலில் இந்த எலும்பு மூட்டுக்கள் எண்ணிக்கை எத்தனை என்ற விஞ்ஞான கண்டுபிடிப்புகள் நாளுக்கு நாள் நடைபெற்ற வண்ணமே உள்ளது...
சில ஆண்டுகளுக்கு முன்னராகவே சில அறிவியல் ஆய்வாளர்கள் இவை 310 எனவும்,
சிலர் 306 எனவும், கருத்துக்களை கூறினர்..
சில ஆண்டுகளுக்கு முன்னரே மனித எலும்பின் மூட்டுக்கள் 360 என கடைசியாக உறுதிபடுத்தினர்...
*இதன் தொகுப்பு பட்டியல்...*
*மனித உடலில் உள்ள மூட்டுகள்*
*முதல்: 147 முள்ளந்தண்டு மூட்டுகள்*
*முதுகெலும்புகள் இடையே 25 மூட்டுகளில்.*
*முதுகெலும்புகள், விலா எலும்புகளுக்கும் இடையிலிருந்து 72 மூட்டுகளில்.*
*இரண்டாவது: 24 மார்பு மூட்டுகள்*
*மார்பெலும்புகள் மற்றும் நெஞ்சுக்கூடு இடையே 2 மூட்டுகள்.*
*மார்பெலும்பு, விலா எலும்புகளுக்கும் இடையிலிருந்து 18 மூட்டுகளில்.*
*கழுத்து பட்டை எலும்பு மற்றும் scapulae (தோள்பட்டை) இடையே 2 மூட்டுகள்.*
*scapulae மற்றும் மார்பு இடையே 2 மூட்டுகள்.*

*மூன்றாவது: 86 மேல் உச்சநிலையை மூட்டுகள்*
*முழங்கால் எலும்புகள் இடையே 2 மூட்டுகள்.*
*முழங்கைகள் இடையே 6 மூட்டுகள்.*
*மணிகட்டை இடையே 8 மூட்டுகள்.*
*கை எலும்புகள் இடையே 70 மூட்டுகளில்.*
*நான்காம்: 92, குறைந்த எல்லை மூட்டுகள்*
*2 இடுப்பு மூட்டு.*
*முழங்கால் எலும்புகள் இடையே 6 மூட்டுகள்.*
*கணுக்கால் இடையே 6 மூட்டுகள்.*
*அடி எலும்புகள் இடையே 74 மூட்டுகளில்.*
*ஐந்தாவது: 11 இடுப்பு மூட்டுகளில்*
*தண்டுவட எலும்புவால் பகுதி முதுகெலும்புகள் இடையே 4 மூட்டுகள்.*
*எலும்புகள் acetabulm இடையே 6 மூட்டுகள்.*
*அந்தரங்க sumphysis 1 கூட்டு.*
*மூட்டுகள் எண்ணிக்கை: 360*

இந்த அறிவியல் ஆய்வாள்ர்களின் கருத்துக்களையும் அறிவியலையும் மென்று விழுங்கி விட்டது நபிகளாரின் சிறிய போதனை...

“மனிதனுடைய உடலில் 360 எலும்பு மூட்டுக்கள் (எலும்பு இணைப்புக்கள்) உள்ளன. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மூட்டுக்காகவும் தர்மம் செய்ய வேண்டும். அதற்குப் பகரமாக ளுஹாத் தொழுகையின் இரண்டு ரக்அத்துக்கள் உங்களுக்குப் போதுமானதாகும்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அஹ்மத்:21959 ; அபுதாவூத்:5222

இதெப்படி சாத்தியம்..?

ஏழாம் நூற்றாண்டின் ஓர் எழுதப்படிக்கத் தெரியாத மனிதர், அதுவும், அக்காலத்தில் மருத்துவ - அறிவியல் வளர்ச்சி அடைந்திராத ஒரு சூழலில் வாழ்ந்த ஒரு மனிதர், போகிற போக்கில் இப்படி ஒரு மருத்துவ அறிவியல் உண்மையை, இக்காலத்தின் மருத்துவ பட்டப்படிப்பு படித்தவர் கூறுவது போல எப்படி இவ்வளவு துல்லியமாக கூற முடிகிறது..?

இப்பதிவில் படிப்போரை சிந்திக்க வேண்டக்கூடிய விஷயம் இதுதான். நிச்சயமாக, இது அந்த அத்தனை எலும்புகளையும் எண்ணி தேவைக்கேற்ப படைத்த அந்த ஏக இறைவனின்... இறைச்செய்தியின் வெளிப்பாடாக மட்டுமே இருக்க முடியும்..! வேறு சாத்தியக்கூறு இல்லை..!

ரஹ்மத் ராஜகுமாரன் .

தொண்டை - ஒரு லெவல் கிராஸிங்



(மனித உறுப்புகள் 5)

வாயிலிருந்து உணவுக்குழாயானது, தொண்டை வழியாக வயிற்றுக்குப் போகிறது. அதே போல் மூக்கிலிருந்து சுவாசக் குழாயும் தொண்டை வழியாக உணவுக்குழாயை "கிராஸ்" செய்து நுரையீரலுக்குப் போகிறது

பார்க்கும் போது இது ஒரு " லெவல் கிராஸிங்' மாதிரியே தோன்றும் அதாவது சுவாசப் பாதைத்தான் "ரோடு" உணவுப் பாதைதான்" "ரயில் ரூட் " சுவாசப் பாதை எப்போதும் திறந்தே இருக்கும் சுவாசக்காற்று போய் வந்து கொண்டே இருக்கும் உணவுப் பாதை எப்போதும் மூடியே இருக்கும்.
ரயில் வரும் போது அதாவது உணவு சாப்பிடும் போது சுவாசப் பாதைகளில் "கேட் " போடப்பட்டு விடும் உணவு போனதும் திரும்ப "கேட் " திறந்து சுவாசம் தொடரும்

இந்த "லெவல் கிராஸிங் " " கேட்" எல்லாம் எதற்காக? உணவுக்குழாய்க்குள் சுவாசக் காற்றோ, சுவாசக் குழாய்க்குள் உணவுப் பொருளோ போய்விடக் கூடாது இல்லையா ? அதற்காகத்தான் இத்தனை ஏற்பாட்டையும் இறைவன் செய்துள்ளான்.

இதையும் மீறி , சிலர் சாப்பிடும் போது பேசிக் கொண்டும், சப்தமிட்டுக் கொண்டும் சாப்பிடுவார்கள் பேசுவதற்கு சுவாசக் குழாய் திறக்க வேண்டும் உணவுப் போய்க் கொண்டிருக்கும். இந்த சமயத்தில் உணவுப் பொருள் தவறுதலாக சுவாசப் பாதையில் நுழைந்துவிடும் இதை வெளியேற்றும் முயற்சியில் சுவாசக்குழாய் இறங்கும் உள்ளே நுழைந்த உணவுப் பொருளை 'கழுத்தைப் பிடித்து' வெளியே தள்ளும் இந்த செல்பாட்டைத் தான் நாம் "புரையேறுகிறது" என்கிறோம் இதை "Watch Dog mechanism" என்று மருத்துவத் துறையில் சொல்வார்கள்
நரகவாசிகள் சதா வேதனை செய்யப்பட்டுக் கொண்டேயிருப்பார்கள் ஒரே அழுகை கூப்பாடு எந்நேரமும நரகத்தில் கேட்டுக் கொண்டே இருக்கும் அதே நேரத்தில் அவர்களுக்கு உணவும் அவர்களின் தேகத்திலிருந்து வேதனையால் வடியும் சீழ்தான் அவர்களுக்கு நீராகப் புகட்டப்படும் அதனை அவர்கள் மிகக் கஷ்டத்தோடு சிறுகச் சிறுக விழுங்குவார்கள் எனினும் அது அவர்களுடைய தொண்டைகளில் இறங்காது விக்கிக் கொள்ளும் ஒவ்வொரு திசைகளிலிருந்தும் மரணமே அவர்களை நோக்கி வந்து கொண்டேயிருக்கும். எனினும் அவர்கள் சாகமாட்டார்கள் இதற்குப் பின்னும் கடினமான வேதனையும் அவர்கள் சந்திக்க வேண்டும் (குர்ஆன் 14: 16, 17)

காரணம் நரகவாசிகள் சாப்பிடும்போதும் வேதனை செய்யப்படுவார்கள் அந்நேரத்தில் சுவாசக் குழாயில் கெட்டியான சீழ் வேதனையால் சப்தமிடும்போது நுழைந்துவிடுகிறது
அதாவது "கேட் ' பூட்டப்படாமல் இருக்கும் போது குட்ஸ் ரயிலில் ட்ரக்கர் லாரி வந்து மோதிய மாதிரியான விபத்து நடந்து விடுகிறது
இப்போ நீங்க சொல்லுங்க தொண்டை ஒரு"லெவல் கிராஸிங் " தானே ....?
ர.ரா

முதுகுத் தண்டுவடம் என்னும் சிக்னல் கேபிள்
(மனித உறுப்புகள் 6)



"டேரக் ஃ பிடிக்கா " வயது 40. போலந்தில் வசித்து வருகிறார் . எதிராளிகளுடன் நடந்த சண்டையில் நடு முதுகில் கத்தியால் குத்து வாங்கியவர் .

அவருக்கு தீவிர சிகிச்சை அளிக்கப்பட்டது . முடிவில் அவரால் எழுந்து நடக்க முடியவில்லை .ஏன் , இடுப்புக்குக் கீழே எந்த அசைவும் இல்லை. சோதித்ததில் முதுகுத் தண்டுவடத்தில் கத்தியால் குத்தியதில் காலுக்கு வருகின்ற நரம்புகள் அறுந்து விட்டன. நரம்புகளை இணைக்க வைக்கும் சிகிச்சை அப்போது இல்லை .
முதுகுத் தண்டுவடம் என்பது முதுகெலும்பு ஆகும்.
33 எலும்புகளின் தொகுப்பால் ஆன ஓர் எலும்புச் சங்கிலி !
சுமார் 18 அங்குலம் நீளம். இதன் உள்ளே தண்டுவடம் என்ற நரம்புக் கேபிள் 31 ஜோடி நரம்புகளைக் கொண்டது.
மூளையையும் உடலையும் இணைக்கும் முக்கிய நரம்புகள் இவை. உடல் உறுப்புகளின் தேவையை கேட்டு மேலே சொல்வதும் , மேலே உள்ள மூளை இடும் கட்டளை கீழே உறுப்புகளுக்கு தெரிவிப்பது இதன் வேலை.
தேவை / கட்டளை எல்லாம் உடலின் மின்காந்த அலை அலையாகச் செய்திகள். அதுவும் வெள்ளம் போல் வரும் செய்திகள் .
இந்த 31 ஜோடி நரம்புகளிலிருந்து பல நரம்புகளாக பிரிந்து உடல் எங்கும் வியாபித்து விரல்களின் நுனி கணுக்கள் வரை போய் அங்கிருந்து திரும்புகின்றன.
நம்ம டேரக் ஃ பிடிக்கா விற்கு தண்டுவடத்தின் நடுப் பாகத்தில் உள்ள கத்திக்குத்து விழுந்ததால் , இடுப்புக் கீழே எதுவும் வேலை செய்யவில்லை.
இதே பாதிப்பு தண்டுவடத்தின் ஆரம்பத்தில் அதாவது பிடரியில் ஏற்பட்டால் கழுத்துக்கு கீழே எதுவும் வேலை செய்யாது .
குர்ஆன் முதுகு தண்டுவத்தின் வேலை குறிப்பிட்டு சொல்லும் போது ....
" நீங்கள் அவர்களுடைய பிடரிகளின் மேல் வெட்டுங்கள். அவர்களை கணுக்கணுவாகத் துண்டித்து விடுங்கள்" என்று அறிவித்ததை நினைத்துப் பாருங்கள் " (அல்குர்ஆன் : 8:12)
**கவனிக்க : " பிடரி , கணுக்கள்"**
(தங்கம், வெள்ளியாகிய) அவற்றை நரக நெருப்பில் பழுக்கக் காய்ச்சி அவற்றைக் கொண்டு அவர்களுடைய நெற்றிகளிலும், அவர்களுடைய விலாக்களிலும், அவர்களுடைய முதுகுகளிலும் சூடிட்டு "உங்களுக்காக நீங்கள் சேகரித்து வைத்திருந்தவை இவைகள்தான். ஆகவே, நீங்கள் சேகரித்து வைத்திருந்த இவற்றை சுவைத்துப் பாருங்கள்" என்று கூறப்படும் நாளை (நபியே! நீங்கள் அவர்களுக்கு ஞாபகமூட்டுங்கள்.) (அல்குர்ஆன் : 9:35)

**கவனிக்க: "முதுகுகளில் சூடு "**
மலக்குகள் நிராகரிப்பவ(ரின் உயி)ர்களைக் கைப்பற்றும் சமயத்தில், அவர்களின் முகங்களிலும் முதுகுகளிலும் அடித்து (நரகத்திற்கு ஓட்டிச் சென்று) "எரிக்கும் (நரக) வேதனையை சுவைத்துப் பாருங்கள்" என்று கூறுவதை நீங்கள் பார்க்க வேண்டாமா? (அல்குர்ஆன் : 8:50)
**கவனிக்க : " முதுகுகளில் அடி "**
இப்படி முதுகு தண்டுவடத்தில் பாதிப்பை ஏற்படுத்தும் வகையில் இறை தண்டனைகள் இருப்பதை மறை அறிவிக்கிறது. தண்டுவடம் பாதிக்கப்பட்டால் என்ன மாதிரியான உடல் பாதிப்பு ஏற்படும் என்பதை கவனியுங்கள் .

நம்ம டேரக் ஃ பிடிக்கா தண்டுவடத்தின் கத்திக்குத்தி சிகிச்சை என்னவானது ? சொல்றேன்.
" செல் மாற்று சிகிச்சை " என்ற புது யுக்தியை லண்டன் பல்கலைக்கழக பேராசியர் ஜியோஃபெரி ரெய்ஸ்மென் மூக்கு வரும் வாசனை நரம்பிலிருந்து செல்களை எடுத்து, உடலில் இன்னொரு இடத்தில் புதிய நரம்பை உருவாக்கும் மருத்துவ மாய வித்தையை கண்டுபிடித்தார் .

மூக்கிற்கு வாசனை தரும் "ஆல்ஃபாக்டரி" நரம்புகளில் உள்ள ஆல்ஃபாக்டரி செல்கள் அழிக்கப்படும் போது , இவை மீண்டும் உயிர்த்தெழுந்து புதிய செல்களாக வளர்ந்து , இறந்த செல்களின் இடத்தை நிரப்பிவிடுகிற விசேஷ ஆற்றல் உள்ளது .
டாக்டர் ரெய்ஸ்மென் , " உங்க பேஷண்ட் டேரக் கிசிச்சைப் பற்றி சொல்லுங்க ."...
" டேரக்கிடமிருந்து , ஆல்ஃபாக்டரி செல்களை பிரித்து எடுத்து தனியாக ஒரு வளர்ப்பு ஊடகத்தில் பெருவாரியாக வளர்த்தோம் .
அவருடைய முதுகுத் தண்டில் நரம்பு அறுந்த இடத்தில், வீட்டுக்கு கான்கிரீட் போடுவதற்கு பலகை அடிப்பது மாதிரி கணுக்கால் நரம்புகளை அகற்றி ஒரு ஸ்கஃபோல்டு செய்து , (கவனிக்க : கணுக்கால் நரம்பு ) முதுகு தண்டில் அறுந்த நரம்பு முனைகளுக்கு இடையில் வைத்து தைத்து விட்டோம்.
ஏற்கனவே வளர்த்து வைத்திருந்த ஆல்ஃபாக்டரி செல்களை அந்த ஸ்கஃபோல்டில் பதியம் செய்தோம். அவ்வளவுதான் . நரம்புகள் இணைந்தன . 3 மாதத்தில் சூம்பிப் போன கால்கள் வளர்ச்சி கண்டன, முதலில் வாக்கரில் நடந்தார் .இப்போ தனியாகவே " வாக் " போறார் டேரக் ஃ பிடிக்கா .
" டேரக் ஃ பிடிக்கா ! இதற்குத்தான் சொல்றது புறமுதுகு காட்டி சண்டை போடாதீர்கள் என்று " .
ர.ரா

நாக்கு - அறுசுவை உணவு வைக்கப்பட்ட வாழை இலை மாதிரி
( மனித உறுப்புகள் 7)



மனித உடல் என்பது அற்புதங்கள் நிறைந்ததாகும். மனிதர்களுக்கு வாழ்வில் உணவும்,பேச்சும் மிக முக்கியமானவை. இந்த இரண்டிற்குமே முக்கிய தேவை நாக்குதான். நாக்கு மட்டும் இல்லையெனில் நம்மால் பேசவும் இயலாது, உணவின் சுவையை உணரவும் இயலாது. ஏன் நாக்கு இல்லையெனில் மூச்சு விடுவது கூட சிரமம்தான்.

நாவானது, வாயின் அடியில் எலும்போடு இணைக்கப்பட்ட எலும்புத்தசை என்னும் வகையைச் சேர்ந்த இளஞ்சிவப்பு நிறத் தசை ஆகும்.

மனித உடலிலேயே சுயமாக செயல்பட கூடிய தசை நாக்குதான். நாக்கிற்கு இருக்கும் ஆற்றலானது உடலில் உள்ள வேறு எந்த தசைக்கும் இல்லை, உங்களால் இடைவேளையின்றி பேசவோ, சாப்பிடவோ இயலும். நாக்கிற்கு சோர்வென்ற சொல்லே கிடையாது.

இது வாயில் இடும் உணவைப் பற்கள் மெல்லுவதற்கு வசதியாக நகர்த்தியும், புரட்டியும் ,திருப்பியும் தரும் உறுப்பு. மென்ற உணவை விழுங்கி உணவுக் குழாய்க்குத் தள்ளுவதும் நாக்கே.
உணவின் சுவையை உணரும் முதன்மையான உறுப்பு நாக்காகும். நாக்கின் மேற்புறத்தில் சுவையுணர் நுண்புடைப்புகள் பல உள்ளன. வாயில் ஊறும் உமிழ் நீரினால் நாக்கு எப்பொழுதும் ஈரமாக உடலில் உள்ள தசைகளில் நாக்கு வலிமையான தசைகளில் ஒன்று.
நாக்கு பலவாறு வளையவல்லது, எனவே வெவ்வேறு வகையான ஒலிகள் எழுப்பி மொழி பேசுவதற்கும் நாக்கு மிகவும் துணை செய்கின்றது. இவ்வுலகில் தோன்றிய, பேசப் படுகின்ற அத்தனை மொழிகளும் நாவினால்தான் பேசப்படுகின்றன.

وَلِسَانًا وَّشَفَتَيْنِۙ
(அவ்வாறிருந்தும் உண்மையை அவன் கண்டுகொள்ள வில்லை.) (பேசக்கூடிய) ஒரு நாவையும், இரு உதடுகளையும் (நாம் அவனுக்குக் கொடுக்கவில்லையா? அதனைத் தானாகவே அவன் அடைந்துவிட்டானா? (குர்ஆன் : 90:9)
" முஸ்லிம்களில் எவர் சிறந்தவர் ? "என்று நபி(ஸல்) அவர்களிடம் கேட்ட பொழுது...
"எவர்களுடைய நாவினாலும், கரத்தினாலும் ஏனைய முஸ்லிம்கள் பாதுகாப்பைப் பெறுகின்றார்களோ அவர்களே என்று நபி(ஸல்) அவர்கள் பதிலளித்துள்ளார்கள். அப்துல்லாஹ் பின் அம்ர்(ரலி) அவர்கள் - புகாரி, முஸ்லிம்.

நாக்குதான் ஐம்புலன்களிலேயே ரொம்ப வீக்கு! அதற்கு நான்கு ஆதார ருசிகள்தான் தெரியும். சக்கரையும் தித்திப்பு எலுமிச்சையின் புளிப்பும், காப்பியின் கசப்பு உப்பின் உவர்ப்பு இதைத்தவிர ஸேவரி என்று சொல்கிற டெஸ்ட் எல்லாம் இந்த நான்கு ஆதார ருசிகளின் கலப்புதான்.

இந்த ருசிகளை தொட்டு அறிய நாக்கில் வெவ்வேறு இடங்கள் உண்டு தித்திப்பு நுனி நாக்கு , உப்பு பரவலாக குறிப்பாக நுனியில் .கசப்பு _ உள் நாக்கு, புளிப்பு ஸேவரி நாக்கின் இடது வலது புறங்கள்!
உடம்பிலேயே தொடு உணர்ச்சி மிக்க உறுப்பு நாக்கின் நுனி ஆகும். நாக்கின் மேற்புறத்தில் உள்ள நுண்புடைப்புகளில் நான்கு வகையான நுண்புடைப்புகள் உள்ளன. சுவையுணர் நுண்புடைப்புகளுக்கு நாமுடிப்பு என்று பெயர்.

நாமுடிப்புகளின் அமைப்பைப் பொருத்து அவை இனிப்பு, புளிப்பு, கசப்பு, கரிப்பு, உவர்ப்பு ஆகிய ஐந்து வகையான சுவைகளைத் தனித்தனியாகவும் கூட்டாகவும் உணரக்கூடிய விதத்தில் அல்லாஹ் படைத்துள்ளானே இது அல்லாஹ்வின் அற்புதப் படைப்பல்லவா?
அண்மைக்காலம் வரையிலும் நாவின் வெவ்வேறு பகுதிகள் வெவ்வேறு சுவைகளை உணர்வதாகப் பாடநூல்களில் இருந்து பொதுஅறிவுக் கட்டுரைகள் வரை தவறாகவே எழுதப்பட்டு வந்தது. தனித்தனிச் சுவைகளை உணர நாவினில் தனியான இடங்கள் ஏதும் இல்லை என்கிறது இன்னொரு ஆய்வு
சுவை உணவு என்று சொன்னால், உணவின் சுவைதான் நினைவுக்கு வரும். சுவையில்லாத உணவு உணவாகாது. ஆறு சுவையுடன் கூடிய உணவே முறையான உணவாகும். நாக்கு அறியக் கூடிய சுவைகள் ஆறுவகை எனப் பழந்தமிழ் மருத்துவம் கூறுகிறது.இந்த சுவைகளில் பெரும்பாலோர் அதிகம் விரும்புவது இனிப்புதான்.

அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
(என் தாய்வழிச் சகோதரர்) அப்துல்லாஹ் பின் அபீதல்ஹா அல்அன்சாரீ பிறந்தபோது அவரை(த் தூக்கிக்கொண்டு) நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன்.
அப்போது அவர்கள் நீளங்கி அணிந்து, தமது ஒட்டகத்திற்கு (சிகிச்சைக்காகத்) தார் பூசிக் கொண்டிருந்தார்கள்.
அவர்கள் "உன்னிடம் பேரீச்சம் பழம் இருக்கிறதா?" என்று கேட்டார்கள்.
நான் "ஆம்" என்று கூறி, அவர்களிடம் பேரீச்சம் பழங்கள் சிலவற்றை எடுத்துக்கொடுத்தேன். அவற்றை வாங்கி அவர்கள் தமது வாயிலிட்டு மென்று, பிறகு குழந்தையின் வாயைத் திறந்து, அதில் சிறிதளவை உமிழ்ந்தார்கள்.
குழந்தை அதை நாவைச் சுழற்றி சுவைக்கலாயிற்று.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அன்சாரிகளுக்கு மிகவும் விருப்பமானது பேரீச்சம் பழங்கள் ஆகும்" என்று கூறிவிட்டு, குழந்தைக்கு "அப்துல்லாஹ்" எனப் பெயர் சூட்டினார்கள். ஸஹீஹ் முஸ்லிம் : 4340.

உடலில் இயங்குகின்ற முக்கியமான தாதுக்களுடன் ஆறு சுவைகளும் ஒன்றுகூடி உடலை வளர்க்கப் பயன்படுகின்றன. உடலானது ரத்தம், தசை, கொழுப்பு, எலும்பு, நரம்பு, உமிழ்நீர், மூளை ஆகிய ஏழு தாதுக்களால் ஆனது. இவற்றுள் ஏழாவது தாதுவாகிய மூளை சரியாக இயங்க வேண்டுமானால், பிற தாதுக்கள் ஆறும் தகுந்த அளவில் உடலில் இருக்க வேண்டும். இந்த ஆறு தாதுக்களை வளர்ப்பவை ஆறு சுவைகளாகும்.
துவர்ப்பு ரத்தம் பெருகச் செய்கிறது. இனிப்பு தசை வளர்க்கிறது. புளிப்பு கொழுப்பை உற்பத்தி செய்கிறது. கார்ப்பு எலும்பை வளர்த்து உறுதியாக்குகிறது. கசப்பு நரம்பை பலப்படுத்துகிறது. உவர்ப்பு உமிழ் நீரைச் சுரக்கச் செய்கிறது. உடல் தாதுக்கள் பெருக்கவும் அவற்றை உடலுக்கு ஏற்றவாறு சமன் செய்வதும் ஆறு சுவைகள் கொண்ட உணவுகளாகும்.
நாக்கின் மொத்த பரப்பில் ஒவ்வொரு சுவையையும் வெவ்வேறு இடங்களில் உணரப்படுவதால் , வாழையிலும் இதன் பிரகாரமே சுவை பதார்த்தங்கள் இலையின் வெவ்வேறு இடங்களில் வைக்கப்படுகின்றன.
சிலர், இலையில் உணவு பரிமாறப்படும் போதே ஒவ்வொன்றாக உண்டு கொண்டேயிருப்பார்கள். அது தவறு. உணவு முழுமையாகப் பரிமாறப்பட்ட பின்பும், முதலில் உண்ண வேண்டியது, இனிப்பு. அடுத்ததாகப் புளிப்பு, உப்பு, காரம், கசப்பு ஆகிய சுவைகளை உண்ட பின்பு இறுதியாகத் துவர்ப்புச் சுவை உண்ண வேண்டும். இதனால்தான் வாழை இலையில் உப்பையும், சுண்டவத்தலையும் தள்ளி வைக்கிறார்கள் .

இவ்வாறாக உணவை உண்பதனால், உடம்பில் ஆட்கொண்டிருக்கும் பஞ்ச பூதங்கள் சமநிலை பெறும். இவ்வாறு உண்ட பின்பு முடிவாக தயிரும் உப்பும் கலந்து உண்டால், உணவில் கலந்துள்ள வாத பித்த ரசயங்கள் என்னும் முக்குற்றங்கள் நீங்கிவிடும். உடம்பில் நோய் தோன்றுவதற்கான கூறுகள் அனைத்தும் அகற்றப்பட்டுவிடும்.

பல நோய்களின் அறிகுறிகள் முதலில் நாக்கில்தான் தெரிய ஆரம்பிக்கும். நாக்கில் சிறிய மாற்றம் தெரிந்தாலும் மருத்துவரை உடனடியாக அணுகுவது நல்லது.
நமது ஆரோக்கியத்தின் அடையாளமாக விளங்குவது நாக்குதான். ஆரோக்கியமான நாக்கு என்பது பிங்க் நிறத்தில் இருக்கும். அடர் சிவப்பு நிற நாக்கு போலிக் அமிலம் அல்லது பி12 குறைபாடு, ஸ்கார்லெட் காய்ச்சல் போன்றவற்றின் அறிகுறிகளாக இருக்கலாம். நாக்கின் மேற்புறத்தில் வெள்ளையாய் இருப்பது லுகோபிலக்கியாவின் அறிகுறியாக இருக்கலாம். கருப்பு நிறம் பாக்டீரிய தொற்றை குறிக்கும். வலிமிகுந்த கொப்புளங்கள் புற்றுநோயின் அறிகுறியாக இருக்கலாம்.
ரஹ்மத் ராஜகுமாரன்

தத்துவத்தில் பிழைகள் .

மாரட்டிமர் ஆட்லர் எழுதிய தத்துவத்தில் பத்துப் பிழைகள்




*"Ten Philosophical Mistakes "*என்கிற புத்தகத்தில் அமெரிக்காவில் பிரபலமான சிந்தனையாளர் ஆட்லர் லாக் ஹ்யூம் போன்ற பழம்பெரும் தத்துவ ஞானிகளின் சில தப்பான ஆரம்ப சிந்தனைகளால் நவீனத்துவ சாஸ்திரத்தில் ஏற்பட்ட பிழைகளை பட்டியலிட்டிருக்கிறார்.
கி.மு நான்காம் நூற்றாண்டில் அரிஸ்டாட்டில் ஆரம்பத்தில் உண்மையிலிருந்து லேசாக விலகும்போது , பின்னர் ஆயிரம் மடங்கு விளைவு பெருகிவிடுகிறது என்று சொன்னார்.
நவீன சித்தாந்தச் சிந்தனையில் இந்த சிறிய பிழைகளின் பங்கு கணிசமானது என்று நிரூபிக்கிறார் ஆட்லர்.

பிழைகள் என்ன என்ன ?
கொஞ்சம் மெல்ல படிக்கவும். தத்துவங்கள் புரிவதற்கு சற்று சிரமம் என்றாலும் தத்துவங்களின் பிழைகள் புரிவதற்கு மிக கடினமாக இருக்கும் என்பதற்காக படிக்கத் தவறி விடாதீர்கள். இந்த தத்துவ பிழைகளை மயிலாப்பூருக்கு பஸ் மார்க்கம் போல் எளிமைப்படுத்தி எழுத முடியாது. கொஞ்சம் கவனம் தேவை. அச்சுப் பிழை இல்லாமல் வெளிவர இறைவனை வேண்டுகிறேன்.

1) முதல் தப்பு நாம் நம் மனதின் பொருளடக்கத்தை உள் இருப்பவைகளை அனைத்தையும் உணருகிறோம் என்பதே. வலி, ஆனந்தம், சோகம் போன்றவைகள் நம் மனதில் தோற்றுவிக்கும் உணர்வுகளும் , மார்க்ஸியம், விசிஷ்டாத்வைதம் அல்லது ஒரு கவிதை தோற்றுவிக்கும் உணர்வுகளும் வித்தியாசப்பட்டவை என்றியாமல், இவ்விரண்டையும் குழப்புவதால் முதல் தப்பு ஏற்படுகிறது. கருத்து அல்லது உணர்வுக்கும், உணர்ச்சிக்கும் வேறுபாடு உண்டு என்பதை மறந்து போகிறோம்.
உதாரணமாக, ஒரு ராமசாமி நீங்கள் எதிரே பார்க்கும்போது உங்கள் மனதில் ஏற்படும் விளைவும், ராமசாமி என்கிற பிரகிருதியை ஒரு நாவலின் பாத்திரமாக படிக்கும்போது ஏற்படும் விளைவும், பிம்பமும் வேறுபட்டவை. அதேபோல் குண்டூசியால் குத்தின வலியும் , வலி என்கிற ஐடியா கருத்தும் நம் மனதில் பதியும் வடிவங்களினால் வேறானவை என்பதைப் பல அறிவாளிகள் உணர்வதில்லை இது முதல்

மிஸ்டேக். கருத்துக்கள் ஐடியாக்கள் என்பவை நம் மனதில் அவைகளை அறிந்து கொள்ளப்பயன்படுத்தும் முறைகள்தான் என்பதை உணராமல் சித்தாந்தங்களை அமைக்கக்கூடாது என்கிற ஆட்லர் .

2) இரண்டாவது பிழை இதிலிருந்து கிளைக்கிறது புலன் உணர்வுகளால் ஏற்படும் சிந்தனைகளையும், கருத்துக்களால் ஏற்படும் சிந்தனைகளையும் வேறுபடுத்தாமல், கணிதம், இயற்பியல் போன்றவைகளை நாம் புரிந்துகொள்ளும் முயற்சி களில் தவறுகள் நிகழ்கின்றன .அதேபோல் மனித மனங்களையும் சில உயிரினங்களின் மனங்களையும் வித்தியாசப்படுத்துவதிலும் சிரமங்கள் ஏற்படுகின்றன

3) மூன்றாவதாக மொழி , பாஷையின் பாற்பட்டது. ஒரு வார்த்தைக்கு அர்த்தம் என்பது தனியாக எதுவும் இல்லை. கருத்துக்களால்தான் அர்த்தம் என்பதை நாம் உணரத் தவறுவதால் வரும் பிழைகளும் உள்ளன.

4) நான்காவது அறிவு என்பதையும் , அபிப்பிராயம் என்பதையும் அறிதியிடும்போது வரும் பிழை . அறிவு என்பது விஞ்ஞான முறைப்படி ஆராய்ந்து பார்த்தோ அல்லது சரித்திர உண்மைகளோ, கணித இயலோ, இயற்பியலோ இவைதான் அறிவு .அபிப்ராயக் கருத்து அறிவல்ல என்று கொள்வதால், தத்துவ சாஸ்திரமே விஞ்ஞான முறைப்படிதான் இருக்க வேண்டும் என்கிற தவறான சித்தாந்தம் தோன்றுகிறது. இதனால் பல்வேறு தத்துவ கருத்துக்களுக்கும் அங்கீகாரம் கிடைப்பதில்லை .

5) அடுத்து தப்பு . எது நல்லது எது கெட்டது என்பதைப் பற்றிய தப்பான விசாரங்களினால் வருவது. நல்லது எது என்பதை பற்றிய ஒருமித்த சர்வதேசக் கருத்து இல்லாததால், எல்லோருக்கும் எக்காலத்துக்கும் பொருந்தும்
தர நிர்ணயங்கள் இல்லாததால், பல பாவங்களையும் ஏன், எந்த செயலையும் தத்துவ சாஸ்திரப்படி நியாயப்படுத்த முடிகிறது. யூத வெறுப்புகள், முஸ்லிம் அடிப்படையாளர்களின் செயல்கள் அனைத்தும் பாவ புண்ணியத்தைப் பற்றிய கருத்து வேறுபாட்டால்தான் வருவது.

6) ஆறாவது தப்பு, சந்தோஷம் ,இன்பம் என்பதைப்பற்றி தவறாக அறுதியிடுவதால் வருவது. சந்தோஷம் என்பது உடலின்பம், திருப்தி ,செல்வச் சிறப்பு, மற்றவர் நம்மைப் புகழ்வது.. இப்படி நினைத்துக் கொள்ளும் போது எழும் பிழை . சந்தோஷத்துக்கு மற்றொரு அர்த்தமும் உண்டு. நன்றாக தர்ம நியாயமாக வாழப்பட்ட வாழ்க்கை என்கிற அர்த்தத்தை மறந்தே போய்விடுகிறோம். காரணம் நியாயம் என்பதைப்பற்றிய அறுதியின்மைதான் என்கிறார்.

7) ஏழாவது தப்பிலிருந்து எக்ஸிஸ்டென்ஸியலிஸம் போன்றவை புறப்படுகின்றன.Free Will - ப்ரீ வில் தன்னிச்சையான மனம் இருக்கிறதா அல்லது நாம் செய்வது எல்லாம் முன்பே தீர்மானிக்கப்பட்டதா என்ற டிட்டர்மினிஸ்ட்களின் தப்புகளிலிருந்து நாம் செய்யும் காரியங்களுக்கு நாம் பொறுப்பல்ல என்கிற தப்பான கருத்து எழுகிறது.

😎எட்டாவது ஆச்சரியகரமான தவறு மனித இயற்கை என்று எதுவும் கிடையாது. நமக்கெல்லாம் பொதுவாக எதுவுமே இல்லை .நாமெல்லோரும் தனித்தனித் தீவுகள். ஒரே காட்சியை நீ பார்ப்பதும், நான் பார்ப்பதும் வேறு வேறு. அதனால் நம் சிந்தனையில் ஒற்றுமை என்பதே இருக்க முடியாது. நமக்குள் பொதுவாக எதுவுமே இல்லை என்று அழுந்தச் சொல்வது.

9) ஒன்பதாவது தப்பு குடும்பம், கிராமம், சமூகம், தேசம் போன்ற இயல்பான பிரிவுகளின் ஆரம்பங்களைப்பற்றிய குழப்பத்தால் வரும் பிழை. அதனால் கிடைக்கும் தப்பான கருத்து நாம் எல்லோரும் இன்னும் ஆதிவாசிகள் என்பதும், ஏதோ ஒரு சமூக ஒப்பந்தத்துக்காகத்தான் சேர்ந்து வாழ்கிறோம் என்பதும் .

10) பத்தாவது தப்பு கொஞ்சம் வித்தியாசமானது ரிடக்னிஸஸம் என்கிறார்கள். உண்மை என்பதை முழுமையாக பார்க்காமல் பிரித்துப் பிரித்துப் பார்ப்பது. அதாவது நாம் எல்லோரும் மனிதர்கள் டி.என்.ஏ .,

டி.என்.ஏ.கூட இல்லை. கார்பன், நைட்ரஜன், ஹைட்ரஜன் கூட இல்லை. எலக்ட்ரான், எலக்ட்ரான் கூட இல்லை, அதன் உப துகளான குவார்க்குகள் என்று குறைத்துக் கொண்டே போய் உண்மையைக் கோட்டை விடுவது.

இதனால் மனிதன் என்பதெல்லாம் ஒரு மாயத்தோற்றம். அதனால் நமக்கு தார்மீகப் பொறுப்பு எதுவும் கிடையாது என்று முடிவு கட்டுவது. நவீன மனிதரான கணையாழி வாசகர் அடுத்து சிந்திக்கும்போது இந்தப் பத்து தப்புக்களையும் தவிர்த்து சிந்தித்தால், உண்மை புரியும். நிசமான இன்பம் கிடைக்கும் என்கிறார் ஆட்லர். முயன்று பாருங்களேன்
- சுஜாதா கணையாழி , டிசம்பர் 1994.

குறிப்பு :- இந்த மாதிரியான பிழைகள் இறைவனின் தத்துவங்கள் அடங்கிய திருக்குர்ஆனிலோ , நபி (ஸல்) அவர்களின் நபிமொழி எனும் ஹதீஸ்களிலோ இல்லை என்பதை நண்பர்கள் தக்க ஆதாரங்களுடன் நிரூபித்தால் இறைவனிடத்தில் மாபெரும் பரிசு காத்திருக்கிறது என்பதை உங்களை மாதிரி நானும் சொல்லிக் கொள்கிறேன்.
முயற்சித்துப் பாருங்களேன் .

ரஹ்மத் ராஜகுமாரன் .

நகம்
( மனித உறுப்புகள் 😎



நம் உடலில் உள்ள கழிவகற்றும் உறுப்புகளினால் வெளியேற்ற முடியாத கழிவுகள்தான் நகங்களாக வளர்கின்றன.
கெரட்டின் என்னும் உடல் கழிவுதான் நகமாக வளர்கிறது.
மனித உடலில் மிகவும் பலமானது விரல் நகங்களே. அதில் கெராடின் சத்து உள்ளது, இது காண்டாமிருகத்தின் கொம்புகளில் காணப்படுவது, விரல் நுனி மெல்லியதாக இருப்பதால் அவைகளின் பாதுபாப்புக்காகத்தான் இயற்கை காண்டா மிருகத்திற்கு கொம்பையும் , மனிதர்களுக்கு நகங்களை படைத்திருக்கிறது .

நகம் எல்லோருக்கும் ஒரே சீராக வளர்வதில்லை. கால் விரல் நகங்களை விட, கை விரல் நகங்கள் நான்கு மடங்கு மிக வேகமாக வளரும்.
காரணம் கை விரல்களை கொண்டு அநேக காரியங்களை செய்கிறோம். அதனால் கைவிரல்களில் இரத்த ஓட்டம் அதிகமாக இருக்கும் .கால்களை நடப்பதற்கு மட்டும் பயன்படுத்துகிறோம் .அதுவும் இன்றைய காலகட்டத்தில் வாகனங்களை பெருமளவு பயன்படுத்துவதால் கால் விரல் நகங்கள் மிக மெதுவாகவே வளரும் .

கையில் உள்ள ஆள்காட்டி விரல் நகம், சுண்டுவிரல் நகத்தை விட மிக வேகமாக வளரும்.
ஒரு மாதத்துக்கு சராசரியாக 3 மில்லி மீட்டர் நீளத்திற்கு நகங்கள் வளரும். கைவிரல் நகங்கள் விழுந்து புதிதாக முழுவதும் வளர வேண்டுமென்றால், சுமார் மூன்றிலிருந்து ஆறு மாதங்கள் வரை ஆகும். ஒருவருடைய வயது, அவர் ஆணா, பெண்ணா அவரது அன்றாட உழைப்பு, சாப்பாடு விஷயங்கள், பரம்பரை மற்றும் பருவ காலங்களைப் பொறுத்தே, நகங்கள் வளரும். நீளமும் வேகமும் அமையும்.
மனிதன் இறந்த பிறகு, நகத்திற்கு கீழுள்ள தோலிலும், தசையிலும் உள்ள தண்ணீர் குறைந்து விடும். அதனால் தோல் சுருங்கி, இறுக ஆரம்பித்து விடும் தோல் சுருங்கி இறுகி விடுவதால், நகம் மேலே நீளமாக பெரிதாக தெரிய ஆரம்பிக்கும்.

நாள்பட்ட புதைத்த பிணங்களை தோண்டி எடுக்கும் போது விரல் நகங்கள் நீளமாக இருப்பதாக தெரியும். இதனால் பேயையும், பிசாசுகளையும் உருவகப்படுத்த அதுகளின் அங்க அடையாளமாக விரல் நகங்களை பெரியதாக காட்டி பயமுறுத்துகிறார்கள். இதுதான் உண்மை.
மனித மாமிசத்தை சாப்பிடுவார்கள்: -
“மிஃராஜின் போது நான் ஒரு கூட்டத்தைக்
கடந்து சென்றேன் . அக்கூட்டத்தினருக்கு
இரும்பினாலான நகங்கள் இருந்தன. அவர்கள் அதன்
மூலம் அவர்கள் தங்கள் முகங்களையும்
நெஞ்சங்களையும் காயப்படுத்திக்
கொண்டிருந்தனர் .
அப்போது “ஜிப்ரீலே , அவர்கள்
யார்” என்று கேட்டேன். “இவர்கள் மனிதர்களின்
மாமிசத்தைச் சாப்பிட்டவர்கள் ( புறம் பேசியவர்கள் )
மனிதர்களின் கண்ணியத்தில் கை வைத்தவர்கள்”
என்று விளக்கமளித்தார்கள்.” - அனஸ் ( ரலி) நூல் :அஹ்மது .

நகத்திற்கு உள்ளே தெரியும் நிறத்தை வைத்தே, என்ன நோய் இருக்கும் என்று ஓரளவு கண்டுபிடித்து விடலாம். உடம்பு ஆரோக்கியமாக இருக்கிறதா, இல்லையா என்பதை நகத்தைப் பார்த்தே சொல்லி விடலாம்.
எப்போதும் அதிக கோபத்துடனும் கொந்தளிப்புடனும் கவலையுடனும் இருப்பவர்களின் விரல்களில் நகம் இருப்பதில்லை. நகத்திற்குப் பதிலாக சிவப்பேறிய சதையே உள்ளது. அதே மாதிரி மன அழுத்தம், கவலை உள்ளவர்களின் விரல்களிலும் நகம் இருப்பதில்லை. அமைதியானவர்களின் விரல் நகங்கள் அளவோடு சீராக்கியதாக இருக்கும்.
அழகியல் உணர்வு உள்ளவர்களின் நகங்கள் நேர்த்தியாக திருத்தப்பெற்றும் இருக்கும். இவ்வாறு நகங்கள் மனதையும் வெளிப்படுத்துகின்றன.

லேசான சிவப்பு நிறத்தில் சற்று பளபளப்பாக இருக்கும் கைவிரல் நகங்களில் ஒரு சிறு வளர்பிறை வடிவம் இருந்தால் உடலில் நல்ல ரத்த ஓட்டத்தைக் குறிக்கும். நகங்கள் மிகவும் சிவந்து காணப்பட்டால் உடலின் ரத்த அளவு அதிகம் என்பதைக் காட்டுகிறது.

விரல் நகங்கள் சற்றே நீல நிறமாக இருந்தால் இதயம் பலவீனமாக இருப்பதாக அர்த்தம்.
நகம் மஞ்சள் நிறமாகவோ, வெளிர் மஞ்சள் நிறமாகவோ காணப்பட்டால் மஞ்சள் காமாலையின் அறிகுறி.,

நகத்தில் மஞ்சள் கோடுகள் இருப்பதற்கு காரணம், புகைபிடிப்பதனால் நிக்கோடின் கறை படிந்து ஏற்பட்டதாக இருக்கலாம்.

கைவிரல் நகங்கள் உப்பினாற்போல் இருந்தால் ஆஸ்துமா போன்ற மூச்சு சம்பந்தமான நோய்கள் வர வாய்ப்புண்டு.

கைவிரல் நகங்களில் வெள்ளை புள்ளிகள் இருந்தால் உடல் நலம் குன்றி இருப்பதற்கு அடையாளம்.கால்சியம், வைட்டமின், இரும்புச்சத்து குறைபாடுகள் இருந்தாலும், நகம் உடைந்தோ, குறுக்கே கோடுகளுடனோ காணப்படும்.

நகத்தில் புள்ளி புள்ளியாக குழிகள் காணப்பட்டால் ‘சோரியாசிஸ்’ எனப்படும் சரும நோய் ஏற்படும்.
நகம் தடித்து கரடு முரடாக காணப்பட்டாலோ பூஞ்சை தொற்று ஏற்பட்டு இருக்கும்.நகங்களின் அடியில் எண்ணெய் விட்டதுபோல காணப்படும். இதற்கு ‘ஆயில்ட்ராப்சிண்ட்ரோம்’ என்று பெயர். இதுவும் சரும நோயான சோரியாசிஸின் ஆரம்ப அறிகுறியே..

விரல் நுனிகள் தடித்தும், வெளிப்புறமாக வளைந்தும் இருத்தல் நுரையீரல் அல்லது இதய நோய்க்கான அறிகுறிகளுள் ஒன்றாகும்.

கைகளின் மேலே ப்ரௌன் அல்லது சிவப்பு நிறத்தில் இருத்தல் நீரிழிவு முற்றிய நிலையில் இருப்பதற்கான அறிகுறிகளுள் ஒன்று.நீரிழிவு நோயாளிகளுக்கு நரம்புகள் மற்றும் இரத்த நாளங்கள் பலவீனமடைந்து இருக்கும். இதனால் உடலுக்குள் இரத்த கசிவு ஏற்பட்டு அதனால் கைகளின் மேல் ப்ரௌன் அல்லது சிவப்பு நிறத்தில் இருக்கும்.
விரல்கள் வீங்கி கொழுகொழுவென்று நீளமாக இருத்தல் ஹைப்போ தைராய்டிசம் (hypothyroidism) இருப்பதற்கான வாய்ப்பு உள்ளது என்று அர்த்தம். மேலும் தைராய்டு சுரப்பில் ஹார்மோன்களானது குறைவாக சுரக்கப்பட்டால், அது மெட்டபாலிசத்தை ***(Metabolism)*** குறைத்து, உடல் பருமனை அதிகரித்து, உடலில் நீரை தேக்கி குண்டாக காண்பிக்கும்.
பெண்களுக்கு, ஆள்காட்டி விரலை விட மோதிர விரல் நீளமாக இருத்தல் ஆஸ்டியோபோரோசிஸ் ***(Osteoporosis)*** வருவதற்கான வாய்ப்பு அதிகம் உள்ளதாக அர்த்தம்.

இருதய நோய், நுரையீரல் நோய் உள்ளவர்களுக்கு கைவிரல் நகங்கள் குவிந்து, பருத்து, பளபளவென்று முருங்கைக்காய் போன்று இருக்கும், இதை `க்ளப்பிங்’ என்று கூறுவதுண்டு
இரத்த சோகை ஏற்படுவதாலும் கூட வெளிரிய மற்றும் மெல்லிய நகங்களை காணலாம். இந்த அறிகுறியோடு சோர்வும் சேர்ந்து வந்தால், மருத்துவரை அணுகுவது நல்லது.

மங்கலான நீண்ட கோடுகள் தென்பட்டால் மூட்டுவலி உள்ளதாக காட்டும்.
கை மற்றும் கால் விரல்களில் உள்ள நகங்கள் பிங்க் நிறமான இளஞ்சிவப்பு நிறத்தில் இருந்தால், அவர்களின் உடல்நிலை ஆரோக்கியமாக உள்ளது என்று அர்த்தம்.
ஆனால் அதுவே நகம் வேறுநிறத்தில் அல்லது வளைந்து இருந்தால், அவர்களுக்கு உடல் நிலையில் ஏதோவொரு பாதிப்பு உள்ளது என்று அர்த்தம்.

நகங்களின் நடுவில் வெண்மையாகவும், விளம்புகள் கருப்பாகவும் தென்பட்டால் அது ஹெபடைடிஸ் போன்ற கல்லீரல் பிரச்சனையை குறிக்கிறது.

நகங்களின் குறுக்கே பள்ளமான கோடுகள் தென்பட்டால் நமக்கு வயதாகி விட்டது என்று அர்த்தமாம்.
நகங்கள் நீல நிறத்தில் காணப்பட்டால் அது செத்து போச்சு என்று அர்த்தம். அதற்கு போதுமான ஆக்ஸிஜன் இல்லாமல் நீல நிறத்தில் மாறி விடும். இது நமக்கு இருக்கும் நுரையீரல் பிரச்சனை, எம்பிஸிமா போன்ற பாதிப்புகளின் அறிகுறியாக இருக்கலாம்.

நகங்கள் குழிக்குள் புதைந்தது போல தென்பட்டால் சோரியாஸிஸ் அல்லது ஆர்த்ரிட்ஸ் (கீழ்வாதம்) போன்ற பிரச்சினைகளை காட்டுகிறது. அதே மாதிரி நகத்தின் நிறமும் சிவப்பு கலந்த பிரவுன் கலரில் மாறும்.
நகங்களை சுற்றியுள்ள தோல் சிவந்து வீங்கி போய் காணப்படும். இந்த அழற்சி லூபஸ் அல்லது இணைப்புத் திசு கோளாறாக இருக்கலாம்.

கருப்பு கோடுகள் போன்ற நகங்களினுள் தென்பட்டால் உடனே மருத்துவரை அணுகி விடுவது நல்லது. ஏனெனில் இது மெலனோமா என்ற சரும புற்றுநோயின் அறிகுறியாக இருக்கலாம். இது ஒரு அபாயகரமான புற்றுநோய்களுள் ஒன்று.
சில பேர் எப்போ பார்த்தாலும் நகத்தை கடிப்பார்கள். இப்படி கடிப்பது கூட அனிஸிட்டி (பய உணர்வு, பதட்டம் ) இவற்றின் பாதிப்புகளாக இருக்கலாம் என்று மருத்துவர்கள் கூறுகின்றனர்.
மேலும் நகங்களை அடிக்கடி கடிப்பது எண்ண சுழற்சி நோயின் அறிகுறியாக கூட இருக்கலாம். நகங்களை கடிப்பதால், கீழ்க்கண்ட பிரச்சினைகள் வர வாய்ப்புள்ளது
நகங்களை சுற்றியுள்ள தோலில் இருந்து இரத்த போக்கு மற்றும் சாத்தியமான தொற்று ஏற்பட வாய்ப்புள்ளது வாயைக் கொண்டு கடிப்பதால் உடல் முழுவதும் பாக்டீரியா, வைரல் தொற்று வர வாய்ப்புள்ளது.
பற்கள் எனாமல் சேதமடைதல் ஏற்படும் பற்களின் அமைப்பில் விரிசல் ஏற்படுதல் போன்றவை உண்டாகலாம். எனவே அடிக்கடி நகம் கடிக்கும் பழக்கத்தை விட முடியவில்லை என்றால் மருத்துவரை அணுகி ஆலோசனை பெறுங்கள்

சுண்டி விரல் சிறுநீரகம், இதயம் மற்றும் சிறுகுடலுடன் தொடர்புடையது. எனவே உங்க சுண்டு விரல் நகங்களில் பிறை போன்ற வடிவம் தென்பட்டால் அது உயர் இரத்த அழுத்தத்தை குறிப்பதாகும்.

நகங்களில் வரை வரையாக செங்குத்தான கோடுகள் தென்பட்டால் உடல் எடை இழப்பு, வயதாகுதல், கால்களில் வீக்கம், அதிகப்படியாக சிறுநீர் கழித்தல், அனிமியா போன்ற இரும்புச் சத்து குறைபாடு இவற்றின் அறிகுறியாகக் கூட இருக்கலாம்.

நகங்களில் கிடைமட்ட கோடுகள் அதிகமாக தென்பட்டால் அது தீவிர நோய்த் தொற்றின் அறிகுறியை குறிக்கிறது. உடம்பு சூடு அதிகமாக இருக்கும் நிமோனியா போன்ற தொற்றின் அறிகுறியாக இருக்கலாம். சில நேரங்களில் நகங்களில் ஏற்படும் நிறங்கள் பாதிப்பில்லாத ஒன்றாகக் கூட இருக்கலாம். எனவே எல்லாவற்றையும் நினைத்து கவலைப்பட வேண்டாம். நகங்களில் ஏற்படும் நிறமாற்றம் உடலில் ஏற்படும் நோயின் முதல் அறிகுறியாகக் கூட இருக்கலாம். எனவே உங்களுக்கு சந்தேகம், விளக்கம் தேவைப்பட்டால் மருத்துவரை அணுகி ஆலோசனை பெறுங்கள்.

இரசாயன சோப்பு பயன்படுத்துவதை தவிர்க்கவும். இயற்கை மூலிகை பொடிகளை பயன்படுத்தலாம்.
கை விரல் நகப்பூச்சின் இரசாயனம் உணவோடு வயிற்றில் சேர்ந்து பல உபாதைகளை ஏற்படுத்தும்.மருதாணி பயன்படுத்தவும்.

அனஸ் (ரழி) அவர்கள் கூறியதாவது: மீசையைக் கத்தரிப்பது, நகங்களை வெட்டுவது, அக்குள் முடிகளை அகற்றுவது, மர்ம உறுப்பின் முடிகளை வழிப்பது ஆகியவற்றில் நாற்பது நாட்களுக்கு மேல் விட்டு வைக்கக் கூடாதென எங்களுக்குக் கால வரம்பு விதிக்கப்பட்டிருந்தது.

நகம் வெட்டும் போது வலது கையில் உள்ள நகங்களை முதலில் வெட்டுவது விரும்பத்தக்க ஒரு காரியமாகும்.

அதற்குரிய ஆதாரம்: இமாம் அல்-புகாரி (ரஹ்)
ரஹ்மத் ராஜகுமாரன்

விஞ்ஞான புனைக்கதைகளும் , குர்ஆனின் அதன் சாரம்சமும்



வேற்றுக் கிரகம், அமானுஷ்யம் , ஆக்ஸான்கள் ஒன்றோடொன்று பேசுகின்றன, காத்திருக்கும் உயிர் போன்ற விஞ்ஞான புனைக்கதைகள் என் தளத்தில் முன்னமே எழுதியுள்ளேன்.

**https://m.facebook.com/story.php?story_fbid=2213078175618192&id=100007480923921**

**https://m.facebook.com/story.php?story_fbid=2263853810540628&id=100007480923921**

**https://m.facebook.com/story.php?story_fbid=2621961141396558&id=100007480923921**

**https://m.facebook.com/story.php?story_fbid=2264353460490663&id=100007480923921**

விஞ்.புனைகதைகள் என்பது எதிர்காலம் சார்ந்து ஒரு சிந்தனையை வளர்ப்பதாக இருக்க வேண்டும். எதிர்கால விஞ்ஞான சிந்தனையை திருக்குர்ஆன் ஏகபோகமாக திறந்துவிட்டிருக்கிறது .

(உ-ம்) கொலை செய்யப்பட்ட மனிதனுக்கு மீண்டும் உயிர்பிக்க மாட்டை அறுத்து , அதன் நாக்கால் பிணத்தின் மீது அடிக்க தன்னை கொலை செய்தவன் எவன் என்பதை சுட்டிக் காட்டுகிறது .திருக்குர்ஆன் (2 : 72) இது கதை அல்ல ; நிஜம். இந்த விஞ்ஞான உண்மைதான் விஞ்ஞானிகள் இன்னும் தேடிக் கொண்டிருக்கிறார்கள்.

மேலை நாட்டு எழுத்தாளர்களான ஹெச்.ஜி. வெல்ஸ், ஜுலி வெர்னி ஆகியோரின் விஞ்ஞானக் கதைகள் எத்தனையோ மனிதர்களுக்கு இன்னும் ஆதர்ஷமாக இருக்கிறது. இந்த புனைக்கதை எழுத்துகளின் உந்துதலால்தான் **"ராபர்ட் கொட்டார்டினால்"** உலகின் முதலாவது திரவ எரிபொருள் ராக்கெட் கண்டுபிடிக்கப்பட்டது. இந்த மாதிரி அறிவியல் புனை கதைகளால் இப்படி உபயம் விஞ்ஞானத்திற்குக் கிடைத்திருக்கிறது என்பதை யாராலும் மறுக்க முடியாது. இந்த மாதிரி விஞ்ஞான புனைகதைகளின் கரு திருக்குர்ஆனில் நிறைய நிறையவே உள்ளன.

சுஜாதா போன்ற அநேக எழுத்தாளர்களின் விஞ்ஞான புனைக் கதைகளைப் படிக்கும் போது, விஞ்.கதையின் கருவோ, விஞ்.கதையின் களமோ திருக்குர்ஆனில் ஆங்காங்கே வசனங்களாக வெளிப்படுவதை என்னால் அவதானிக்க முடிகிறது .

அட , இது கதைதானே என்று என்னால் கடந்து போக முடியாமல் , கதை சொல்லும் தாக்கத்தையும் , அதன் போக்கையும் மறுபடி மறுபடி என் மனதில் அதை உள்வாங்கி , மனதில் எழுந்த குர்ஆன் வசனங்களோடு கதையை ஒப்பிட்டுப் பார்க்கிறேன்.

இப்படி ஒன்றிரண்டு விஞ்ஞானக் கதைகள் அல்ல, இதுவரை சுமார் 30 க்கும் மேற்பட்ட விஞ். கதைகளை சேகரித்துள்ளேன் .

எனக்கு ஒரு பழக்கம் உண்டு. நான் கற்றதையெல்லாம் முகநூல் வாயிலாக உங்களுடன் பகிர்ந்து கொள்வதுதான் .

எனவே நான் சேகரித்த விஞ்ஞான புனைக்கதைகளையும் , குர்ஆனின் அதன் சாரம்சத்தையும் உங்களுடன் தொடர்பதிவுகளாகப் பகிர்ந்து கொள்ளலாம் என நினைக்கிறேன் .

ரஹ்மத் ராஜகுமாரன் .

இன்னொரு பாலு .

(விஞ்ஞான புனைக்கதைகளும் , குர்ஆனின் சாரம்சமும் 1)



"டெலிபோர்ட்டிங் என்றால் என்ன டாக்டர் ? " பாலு கேட்டான்
"தொலைகடத்தல். அதாவது ஒரு நபரை ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு கடத்தல், தெளிவாகச் சொன்னால் ஆளை அனுப்புவதில்லை. அந்த ஆளைப் பற்றிய அத்தனை விபரங்களையும், செய்திகளாக ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு அனுப்பி,மறுமுனையில் அவனை அந்தச் செய்திகளின் பெயரில் மறுபடியும் உருவாக்குவது " என்றார் டாக்டர் மனோ .
"இந்த முனையில் இருக்கும் நான், மற்றொரு முனையில் நான் வெளிப்படுவேன் அப்படித்தானே..? "
"ஆம் "
இந்த ' நான் 'என்னாவது ?"
" கலைக்கப்படுவாய் "
"புரியவில்லை டாக்டர் "
"விஞ்ஞானப்படி பாலு என்பது யார்.. மாலிக்யூல்களின் கூட்டம். அவ்வளவுதான். பாலு என்பது கார்பன், நைட்ரஜன், பாஸ்பரஸ், ஆக்ஸிஜன் இவைகளால் ஆக்கப்பட்ட பெரிய பெரிய மாலிக்யூல்களின் அடுக்கு. அதுமட்டுமில்லை, பாலு என்பது ஞாபகங்கள் அவைகள் உன் மூளை செல்களில் படிந்துள்ள எலக்ட்ரோ கெமிக்கல் பிம்பம். யோசித்தால், பாலு என்கிற உன்னை முழுக்க முழுக்க தகவல் விவரங்களாக ஒரு கம்ப்யூட்டர் ஞாபகத்தில் பைனரி வார்த்தைகளாக மாற்றி அமைத்துவிட முடியும் "
"வலிக்குமா டாக்டர் ?"

"வலிக்காமல் ஒரு லேசர் ஸ்கேன் ஹோரலோகிராம் எடுப்போம். உன் உருவம் 3D யில் எத்தகையதோ அதை அப்படியே மறுமுனையில் திரும்ப அமைக்க , அதன்பின் காமா ரே வழியாக உன்னை வருடி மாலிக்யூலர் ரிப்போ கிராப் முறையில் உன் ஒவ்வொரு செல்லையும், ஒவ்வொரு டி.என்.ஏ அணுக் கூட்டுகளையும் அளவிடவோம் "
"இப்போ வலிக்குமா டாக்டர் ? "
" இதுவும் ஒரு படப்பிடிப்பு போலத்தான். வலி என்பதே என் பரிசோதனையில் கிடையவே கிடையாது "
சரி, வெளிஅமைப்பு, உள்ளமைப்பு எல்லாவற்றையும் அறிந்து கொண்டு செய்தி ரூபமாக கம்ப்யூட்டரில் என்னை வாங்கிக்கொள்வார்கள். அதன்பின் ?
அதன்பின் அத்தனை செய்தியையும் ஆம்தால் 21 கம்ப்யூட்டருக்கு 3 நிமிடத்தில் அனுப்புவோம் . ஃ பைபர் ஆப்டிக்கல் நூல் ஒருவழியாக "
பின் டாக்டர் ?
மறுமுனையில் மற்றொரு பாலு வெளிப்படுவார். அதே பாலு, அதே நிறம், அதே குரல், ஞாபகம் எல்லாம் "
"இந்த முனையிலும் நான் இருப்பேனா டாக்டர் ? "
"ம்ஹூம் ,இல்லை என்றார் டாக்டர் மனோ .
" நான் என்னாச்சு டாக்டர் ?
" மூன்றாவது மாலிக்யுலர் ஸ்கேனின் போது , உன்னை அக்கக்காக பிரித்துவிட வேண்டியதிருக்கும். அதாவது டீகாம்பொஷிஷன் என்றார் டாக்டர் மனோ .
"அப்படி என்றால் நான் அழிந்து விடுவேனோ டாக்டர் ?"
"அப்படிச் சொல்ல முடியாது. பிரிக்கப்பட்டுவிடுவாய். அவ்வளவுதான். ஒரு காரையோ, ஒரு டிவி பெட்டியையோ அக்கக்காக பிரிச்சு சேர்ப்பதில்லையா... அதுமாதிரி.
"என் நினைவுகள் ?"
"மூன்று நிமிடத்துக்கு தவறி விடும். மூன்று நிமிஷம் தூங்குவதில்லையா ? அது மாதிரி."
"மூன்று நிமிஷத்துக்குச் செத்துப்பிழைப்பேன் இல்லையா டாக்டர் ?"
"செத்துப் போவது இல்லை. வடிவம் மாறுவாய். ஸ்தூல வடிவிலிருந்து பைனரி செய்தி வடிவில் மூன்று நிமிஷம் இருப்பாய் "
"அப்போ அந்த 3 நிமிடத்தில் இதயம் ?"
"நின்று போகும். மூன்று நிமிஷம்தான் "
" உயிர் ? "
" உயிர் எங்கும் போவதில்லை வடிவம் மாறுகிறது . அவ்வளவுதான். உன் அத்தனை விபரங்களும் பாதுகாக்கப்படும் போது நீ எப்படி அழிவதாக சொல்லமுடியும் ? பார்க்கப் போனால் உயிர் என்று எதுவும் கிடையாது .இதோ இந்த முயலை எத்தனை தடவை டெலிபோர்ட் பண்ணி இருக்கேன் தெரியுமா ?
" மன்னிக்கவும் டாக்டர் எனக்கு சமாதானம் ஆகவில்லை உங்களை ஒரு கேள்வி கேட்கலாமா டாக்டர் ?"
"என்ன உங்கள் பரிசோதனையை நீங்களே உங்களுக்குச் செய்து பார்த்துக் கொள்ளலாமே! உங்களுக்கு நம்பிக்கை இல்லாததால்தானே மற்றொரு ஆசாமி தேடுகிறீர்கள்"

டாக்டர் லேசாக புன்னகைத்து, " நல்ல கேள்வி. என் மேல் இந்த பரிசோதனை செய்து கொள்ள எனக்கு எவ்வித தயக்கமும் இல்லை. ஆனால் பரிசோதனை என்பது வெறும் தொலை கடத்தல் மட்டுமல்ல; அப்படி கடத்தும்போது ,கடத்தப்படுபவரின் பல்வேறு உணர்ச்சிகளை பல்வேறு தகவல்களை சேகரிக்க வேண்டும். 120 விஷயங்களை கவனிக்க வேண்டும். உடலின் உஷ்ணம், கார்டியோ அனாலிஸ் , என்ஸபலோ, அனாலிசிஸ் கெமிஸ்ட்ரி... என்று . இவையெல்லாம் கவனித்துக் கொள்ள நானே தேவைப்படுகிறேன். அதனால்தான் முதல் டெலிபோர்ட் பிரஜையாகும் பாக்கியம் எனக்கு இல்லை "
பாலு யோசித்துவிட்டு, " முதலில் நீங்கள்... அப்புறம் நான் அதற்குச் சம்மதம் " என்றான் .
" நான் போய் காட்டினால், நீ சம்மதிப்பாயா ?"
"ஆம். தகவல் ஏதும் வேண்டாம். நீங்கள் ஒருமுறை நிரூபித்து காட்டுங்கள். எனக்கு உங்கள் கருவியின் மீதும் உங்கள் மீதும் நம்பிக்கை வந்துவிடும்."
" அப்படியே செய்யலாம் . வா !"

அடுத்த அறைக்கு சென்றார். அங்கே உட்புற அரை அறை குடுவைப் போன்று இருந்தது. அதன் வெளிப்புறம் கலர் கலராக விளக்குகளும் , மானிட்டர்களும் இருந்தன.
" பாலு ! நான் உள்ளே உட்கார்ந்த பின் இந்த கதவை சாத்திவிடு. உள்ளே உள்ள பேனலில் மானிட்டர் கேட்கும் கேள்விக்கு எல்லாம் நான் ஆம் / இல்லை என்று பதில் சொல்வேன் . அதன்பின் நான் டெலிபோர்ட் ஆகிவிடுவேன் "
"குடுவையில் என்ன நடக்கும் டாக்டர் ? "
" நான் அணு அணுவாக பிரிக்கப்பட்டு விடுவேன். அடுத்த அறையில் இருக்கும் ரிஸீவருக்கு ஃபைபர் நூல் மூலமாக மின்சார செய்தியாக அனுப்பப்பட்டுவிடுவேன். அங்கே மறுபடியும் கூட்டமைக்கப்பட்டுத் திரும்ப உன்னை வந்து சந்திப்பேன் "
டாக்டர் மனோ உள்ளே உட்கார வைத்து அதன் விசைப்பலகையில் விளையாடினார். மானிட்டரின் வண்ணத்திரையில் " யார் நீ ? "என்று கேள்வி எழ, "டாக்டர் மனோ " _என்று இவர் தட்ட ஒவ்வொன்றாக கேள்விகள் கேட்டுக் கொண்டே வந்தது கம்யூட்டர். அவைகளுக்கெல்லாம் உண்டு இல்லை என்று பதில் அளித்துவிட்டு,

" பாலு..! ஏறக்குறைய எல்லாம் அமைத்து விட்டேன். மெயின் ப்ரோகிராம் லோட் ஆனதும் நீ அந்த சிவப்பு நிற செம்பொத்தானை அழுத்தினால் போதும். நான் போகிறேன் பை.. பை.. !"
மெஷின் ' உஷ் ' என்றது. மெல்ல மெல்ல நிறம் மாறி, "தயார் !" என்று எழுத்துக்கள் சிமிட்டின . பாலு சிவப்பு நிற செம்பொத்தானை நடுங்கும் விரலால் அழுத்தினான்.
சரித்திரப் புகழ்பெற்ற சோதனை இது. இது வெற்றி பெற்றால், விண்வெளிப் பயணங்கள் எல்லாம் எத்தனை வேகம் ! ஒளி வேகத்திலேயே ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குக் கடத்தப்பட்டுச் சந்திர மண்டலத்துக்குச் சில வினாடிகளில் போய்ச் சேர்ந்து விடலாம். எத்தனை சௌகரியம்...

''எங்கே உள்ளே போனவர் இன்னமும் காணவில்லை ? "உள்ளே ஊ ... என்று ஆழ்ந்த தாழ்வான ரீங்காரம் மட்டும் கேட்டுக் கொண்டிருக்க ஒருவேளை டாக்டர் எத்தனை நிமிஷம் சொன்னார் ஐந்தா ? "
"டாக்டர்..!. டாக்டர் ..! " டாக்டர் பேச்சே இல்லை .
" மிஸ்டர் பாலு...! " திடுக்கிட்டு திரும்பினான் பாலு.
அறையில் வெளிப்புற வாசல் வழியே டாக்டர் மனோ உள்ளே நுழைந்தார். பாலு பதறிப்போய் இதை மூடியிருந்த குடுவைக் கதவைப் பார்த்தான்.
"எப்படி டாக்டர் இது சாத்தியம் ? "
"டெலிபோர்ட்டிங் கம்பி வழியாகச் செய்தியாக தப்பி வந்துவிட்டேன் "
" டாக்டர் ! ஒரு சரித்திரம் படைக்கும் இந்த நூற்றாண்டின் மகத்தான சாதனை "
"இப்போதாவது உங்களுக்கு நம்பிக்கை வந்ததா பாலு ? "
" நம்பிக்கை வந்துவிட்டது டாக்டர் .நான் உங்கள் பரிசோதனைக்குத் தயார் "
அடுத்த அறையில் டாக்டர் மனோ அந்தக் குடுவையைத் திறந்தார். அதிலிருந்த மற்றொரு டாக்டர் மனோ வெளிப்பட்டார்." எத்தனை நேரம் அவருடன் மசமசன்னு பேசிக்கொண்டிருப்பாய் "
வெளிவந்த டாக்டர் மனோ அங்கே இருந்த டாக்டர் மனோவைப் பார்த்து , "என்ன நம்பிவிட்டானா ? "என்று கேட்டார் .
"நிச்சயம். இப்போதே தயார் என்று காத்திருக்கிறான்"
நல்ல வேலை இரட்டையராக நாமிருவரும் பிறந்தோம். பிழைத்தோம் . இல்லையெனில் இந்த பரிசோதனைக்கு யார் சம்மதிப்பார்கள் ? "

" முயலை அனுப்பி வெற்றி கண்டாகி விட்டது என்றெல்லாம் சொல்லி பார்த்து விட்டேன். ஆசாமி பெயரவில்லை. ம்ஹூம் உள்ளே போய் உட்கார்ந்து கொண்டே உன்னை வரவழைக்க வேண்டியதாயிருந்தது ஜனோ "
மனோ தன் இரட்டைச் சகோதரன் ஜனோவைப் பார்த்தார் .

" .ஜனோ.. ! இந்த முறையாவது வெற்றி பெறும் என்று தோன்றுகிறதா ? போனமுறை அனுப்பிய ஆசாமி டிஸ்கிலேயே இன்னுமும் சிறைப்பட்டு செய்தியாகவே இருக்கிறானே ? சமாதிக்குள் இருக்கும் பொணம் மாதிரி.. "
" என்ன செய்வது ஆராய்ச்சி என்றால் அப்படித்தான். இந்த முறை காமா கதிர்கள் காட்டத்தை கொஞ்சம் குறைத்திருக்கிறேன். பார்க்கலாம் வெற்றிபெறும் என்றுதான் எண்ணுகிறேன். போய் அவனை அழைத்து வா... நான் கம்ப்யூட்டர் அறைக்குள் செல்கிறேன். வெற்றி பெறுமா... பார்க்கலாம் .இனிமேலும் பாசாங்குகள் கூடாது.
டாக்டர் ஜனோ லாபின் பின்புறம் செல்ல , டாக்டர் மனோ வெளியே வந்து , " பாலு ..! வாருங்கள் என்று அன்பாக அழைத்தார் .
பாலுவின் சட்டை நீக்கப்பட்டு தலையில் கிரீடம் போல என்ஸபாலோ இணைப்புகள் சூட்டியிருக்க ..,
திறந்த குடுவை அறைக்குள் சென்று உட்கார வைத்து, அந்த நாற்காலியுடன் அவனை நைலான் பட்டைகளால் பூட்டி விட்டு,
மறுபடி புன்னகைத்து , "பெஸ்ட் ஆஃப் லக்" என்று சொல்லி விட்டு வெளியே வந்தார் . கதவு 'உஷ்' என்று மூடிக்கொண்டது.
" ஜனோ ரெடியா ? "
" ரெடிடா மனோ "
இந்த முறை நிஜமாகவே.. டெலிபோர்ட்டர் 'ஆன்' என்கிற சிவப்புநிற செம்பொத்தானை அழுத்தினார் டாக்டர் மனோ .
- சுஜாதா 1996

..........x ..................x ...........x ............... .x .............. .x............. ......x................x..............X...........
மனிதனின் தனித்தன்மையை நிரூபிக்க இன்றைய அறிவியல் ரேகையையும், டி.என்.ஏ மரபணுக்களின் தொகுப்பையும் மட்டுமே நம்பியுள்ளது.

மனிதன் இம்மையில் மரணம் அடையக்கூடியவன்தான். இருந்தும் மறுமை நாளில் அவன் மீண்டும் உயிர்ப்பிக்கப்படுவான். அப்போது அவனது நன்மைகள், தீமைகள், அவனின் உடல் ஜினோ தகவல் தொகுப்பாக செய்தியாக அவனுள்ளேயே பதியப்படுகிறது .

'இறந்த பிறகு அடக்கம் செய்யப்படும் மனித உடல் சில மாதங்களில் சிதிலம் அடைந்து வெவ்றாக பிரிக்கப்பட்டு, மண்ணோடு மண்ணாக மட்கிப்போகும். அப்படிப்பட்ட மனிதன் மீண்டும் எப்படி உருவாக்கப்படுவான் ? ' என்ற கேள்வி ஆதிதொட்டு இன்றுவரை நிலைத்திருக்கின்ற ஒன்று. அருள்மறை திருக்குர்ஆன் இதற்கு இவ்வாறு பதிலுரைக்கின்றது:

"இறந்து, உக்கி மண்ணாய் போன அவனுடைய எலும்புகளை நாம் ஒன்று சேர்க்கமாட்டோம் என்று மனிதன் எண்ணிக்கொண்டிருக்கின்றானா ? ஆம்! அவனுடைய விரலின் நுனியைக் கூட மிக துல்லியமாக அமைப்பதற்கு நாம் ஆற்றல் பெற்றுள்ளோம்" (75: 3 , 4).

அல்லாஹ்வின் தூதர் அருமை நாயகம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்:
"மனிதனின் உடலில் எலும்பு ஒன்று உள்ளது. அதை பூமி ஒருபோதும் புசிக்காது. அதை வைத்தே மீண்டும் மறுமையில் அவன் படைக்கப்படுவான்".
அப்போது அருகில் இருந்த தோழர்கள் கேட்டனர் ''அது எந்த எலும்பு என்று எங்களுக்கு விளக்கிச் சொல்ல முடியுமா? "
அதற்கு நபிகளார் பதில் அளிக்கும்போது, 'உள்வால் எலும்பின் நுனி' என்றார்கள். (முஸ்லிம்-5662)

ஜெர்மன் விஞ்ஞானி ஹான்ஸ் ஸ்பீமேன் என்பவர் உள்வால் எலும்பு நுனி குறித்து தீவிரமாக ஆராய்ந்தார். அதனை பல ஆயிரம் டிகிரி வெப்பத்தில் எரிக்கவும், வீரியம் மிக்க அமிலங்களின் கலவை கொண்டு அதனை கரைக்கவும் முயற்சி செய்தார். அதில் சிறு மாறுதலைக் கூட அவரால் செய்ய முடியவில்லை.

அந்த சிறிய எலும்பு நுனியின் DNA வில் அம்மனிதனைப் பற்றிய உடல் அமைப்பு , அவன் செய்த எல்லா செயல்களும் செய்திகளாக அடங்கி இருக்கலாம். ஹான்ஸ் ஆராய்ச்சியின் முடிவாய் திருக்குர்ஆன் வார்த்தைகளை உண்மைபடுத்தி உலகிற்கு அறிவித்தார்.

ரஹ்மத் ராஜகுமாரன்

ஒரு பூச்சியின் உரையாடல் .
(விஞ்ஞான புனைக்கதைகளும் , குர்ஆனின் சாரம்சமும் 2)



" என்னை காப்பாற்று ! என்னைக் காப்பாற்று ! "
அந்தச் சின்னக் கீச்சுக் குரல் திரும்பத் திரும்ப கேட்ட போது, ஹென்றி திடுக்கிட்டு படுக்கையிலிருந்து எழுந்தான் .
அப்போதுதான் " ஈ " என்ற திகில் படம் பார்த்து விட்டு படுத்தான். அதன் கிளைமாக்ஸ் காட்சியில் ஒரு மனிதன் பிரம்மாண்டமான ஈ ஆகிறான். அதன் நினைவு வந்து இரவில் இன்னும் பயந்தான்.
" சேச்சே, அப்படி இருக்காது " என்று சொல்லிக்கொண்டு சுற்றிலும் பார்த்தான்.
" எங்கே இருக்கே ? "என்று கேட்டான்.
" மூலையில், விட்டத்தில் , சீக்கிரம் ! " என்ற அந்தக் குரலில் பயம் இருந்தது .
மேலே ஏதும் தெரியவில்லை. அறையில் ஒரு 15 வாட் பல்பு மட்டும் இருந்ததால் ஏதும் தெரியவில்லை. நாற்காலி போட்டு அதில் நின்று கொண்டு குரல் வருவதாக இருந்த மேல் விட்டச் சுவர் , மூலையைச் சந்திக்கும் இடத்தைக் கூர்ந்து நோக்கினான்.
ஒரு சிறிய குளவி, ஒரு சிலந்தி வலையில் திணறிக் கொண்டிருந்தது. மூளையில் சற்று தூரத்தில் ஒரு சிலந்தி தன் எட்டு கண்களும் பளிச்சிடக் காத்திருந்தது .
" நீயா, பேசினாய் ? " ஆச்சரியத்துடன் குளவியை நோக்கி .,
" ஆம் " என்றது சின்ன குரல்." என்னை அது தாக்கும் முன் காப்பாற்று "
ஹென்றி வலையில் விரல் வைக்கும்முன், " காப்பாற்றினால் என்ன தருவாய் ? "என்று கேட்டான்
" முதலில் என்னைக் காப்பாற்று. அதன்பின் அதற்கான சன்மானத்தை பற்றி பேசலாம் "என்றது கீச்சுக் குரல்.
"ம்ஹூம் மாட்டேன். நீ ஏதாவது இருட்டில் மறைந்து என்னை அம்போவென்று விட்டு விடுவாய் "
"சேச்சே..சேச்சே.. அப்படியெல்லாம் செய்ய மாட்டேன். நீ நினைப்பது போல் நான் இல்லை. நான் பேசமுடிகிறதே கவனித்தாயா ? பூச்சி எங்கேயாவது பேசுமா ? நான் யார் தெரியுமா ? இந்த வடிவத்துக்குச் சபிக்கப்பட்ட ஒரு ஜீனி "
"அரேபிய இரவுக் கதைகள் போலவா ? மந்திரம் கற்ற , வரம் தரும் ஜீனியா ? "
(ஜீனி- என்றால் ஜின்.அலாவுதீனும் அற்புத விளக்கு கதையில் வரும் பூதம். பட்டணத்தில் பூதம் சினிமாவில் கூட வருமே அந்த பூதம் மாதிரி)

"ஆம்" என்றது அந்தச் சிறிய குரல் ." ப்ளீஸ் சீக்கிரம் ! அது என்னை நெருங்கிக்கொண்டிருக்கிறது. என்னைக் காப்பாற்றினால் , உனக்கு ஒரு வரம் அளிப்பேன்"
" அத்தனை சக்தி இருந்தால் உன்னை சாப்பிட வரும் ஜந்துவை நீயே கொன்றுவிடுவதுதானே ? "
"அதுதானே சிக்கல். ஒரு ஜீனி தன் சக்தியைத் தற்காப்புக்குப் பயன்படுத்தக் கூடாது .அது சுயநலத்துடன் சேர்த்தி. எப்போதும் என் எஜமானின் சேவைக்குத்தான் பயன்படுத்த வேண்டும். இப்போது நீதான் என் எஜமான் !"
" அப்படி ஏதாவது வாக்குறுதி கொடுத்திருக்கிறாயா ? "
"நிச்சயமாக . ஒரு ஜீனி சுயநலத்துக்காக தன் சக்தியைப் பயன்படுத்த முடிந்தால் தலைக்கனம் அதிகமாகி இந்தப் ப்ரபஞ்சத்தையே ஆளலாமே ! "
" விதியை மீறினால் என்ன ஆகும் ? "
" என் மந்திரச் சக்தியை இழந்து சாதாரண ஆவியாக உலாவுவேன். நடப்பதைக் கையாலாகாமல் பார்த்துக் கொண்டிருப்பேன்"
குலவி தன் இறக்கைகளைப் படபடவென்று அடித்துக் கொள்ளச் சிலந்தி மற்றொரு மூளைக்குச் சென்று கவனித்தது.
"என்ன வரம் கேட்பேன் ? " ஹென்றி யோசித்தான் .
" சொத்து ! நிறையக் சொத்து கொடு. பணம் இருந்தால் எல்லாம் வரும் "
" சரி, பணம் ! இந்தா வாங்கிக் கொள் வரம் "
சட்டென்று ஊதல் காற்று கேட்டது. மின்னல் அடித்தது ஹென்றியின் அறை முழுவதும் டாலர் நோட்டுகளாக நிரம்பின. ஆங்காங்கே பவழம், முத்து, வைரம், வைடூரியம் என்று தெரிந்தன. பற்பல கற்கள் பதித்த மோதிரம் தெரிந்தன.
" இப்போது திருப்திதானே ? என்னைக் காப்பாற்று "
ஹென்றி தன் தேகத்தை பார்த்துக்கொண்டான் அதுலயும் ஒரு சின்னத் தொந்தி கண்ணுக்கு கண்ணாடி வேற .
" பணமும் அதன் பலமும் இருந்தும் ,அதனால் கிடைக்கும் சுயநல நண்பர்கள் கிடைத்தும் ஏன் இந்த அழகற்ற வடிவத்துடன் நான் வாழவேண்டும் ? "
"ஓகே..ஓகே.. இந்தா என்றது ஜீனி .
மறுபடி உஷ் என்ற காற்று . எலுமிச்சை நிற மின்னல்.ஹென்றியைச் சுற்றிலுமிருந்த கரன்சி நோட்டுகள் மறைந்துபோய் அவன் உடல் அமைப்பில் மாறுதல் ஏற்பட ஆரம்பித்தன .அவன் உயரம் 6 அடி, அகலமான தோள்களும் அமுந்தின வயிறு, ஆரோக்கியமான உடல் .
" எப்படி இருக்கிறேன் ? என்றான் .
" ஹாலிவுட் நடிகன் போல . சீக்கிரம்பா . கிட்ட வருதுப்பா "
அழகாய் இருந்து என்ன பயன் ? ஏழை அல்லவா நான் "
"புகழ் இருந்த எப்படி இருந்தாலும் கவலையில்லை .மக்கள் உன்னை விரும்புவாங்க. என்ன ... புகழ் கொடுக்கட்டுமா ?
ஹென்றி யோசித்து , "அப்படித்தான் தோணுது " என்றான்.
"அப்ப இந்தா வாங்கிக்க "
மறுபடியும் காற்று. மின்னல். காற்று நீக்கப்பட்ட பலூன் போல சுருங்கி போனான். பழைய வடிவத்தை அடைந்து விட்டான்.
அந்தக்கணமே போன் அடித்தது அறைக் கதவைத் திறந்தது அழகான பெண்கள் சிவந்த கதகதப்பான உதடுகளுடன் ஜொலிக்கும் கண்களுடன் 'ஹென்றி ஹென்றி' என்று அழைத்துக் கொண்டே உள்ளே வர, அவர்களிள் ஒருத்தியை அணைத்துக்கொள்ள அவன் முயன்றபோது, அவள் புறப்பட அவன் அவள் பின்னே செல்ல....
" ஏய் எங்க போறே ? வா "என்று கீச்சுக் குரலில் ஜீனி கத்தியது மறுபடியும் விர்ர்ர் கேட்டது .
ஹென்றி கீழே விழுந்தான். சட்டென்று அறையில் இருந்த பெண்கள் மறைந்துபோக, ஸாரி நான் ஓடிப்போக நினைக்கல, நான் கொஞ்சம் உணர்ச்சிவசப்பட்டுட்டேன்.

" போதும்..போதும் மூணு வரத்தில் ஏதாவது ஒரு வரத்தை தேர்ந்தெடு. டிரையல் பார்த்தது போதும் " ஹென்றி சிலந்தி வலையை பார்த்தான் நிலைமை மோசமாகத்தான் இருந்தது. சிலந்தி நீண்ட கால்களுக்கு அருகில் அந்த பூச்சி இருந்தது. பறக்க முயன்று துடித்து விர்ரியது .

" காப்பாற்றினால் இதில் ஒரு வரம் தரவேதானே ? "

" சரி.. சரி ..சீக்கிரம் சீக்கிரம் "

ஹென்றி தீர்மானித்து விட்டான் .

சமையலறையிலிருந்து ஒரு சுத்தியலை எடுத்துக்கொண்டு திரும்ப வந்தான். "கொஞ்ச நேரம் அசங்காம இரு. குறி தவறிவிடும் "

"சரிப்பா. சீக்கிரம் அவனைக் கொல்லுப்பா " என்று ஏறக்குறைய அழுதது ஜீனி .

ஹென்றி சுத்தியலைப் பலமாக அடித்தான் .சிலந்தி சுவரிலேயே பச்சக் என்று கூழாகியது .ஹென்றி சுத்தியலை கீழே போட்டான். இனிமேல் உனக்கு விடுதலை என்றான் குளவியைப் பார்த்து

மௌனம் !

" உனக்கு விடுதலைப்பா. சுதந்திரம் ! உன்னைக் கொல்ல வந்த சிலந்தியைக் கொன்னாச்சு ! " என்று குளவியைத் தன் விரலால் நெருடினான் . குளவி சுள் என்று கொட்டியது. ஹென்றி ஆச்சரியத்துடன் தன் விரல் வீக்கத்தை பார்த்து , "உன் உயிரைக் காப்பாற்றியதற்கு இதுதான் கைமாறா ? "

மௌனம் . ஹென்றி சிந்தித்தான் சட்டென்று ஒரு சந்தேகம் தோன்றியது டெலிபோனை நோக்கி ஓடினான் அருங்காட்சியகத்தின் நேச்சுரல் ஹிஸ்டரி பகுதியை கூப்பிட்டான்.

" சார் சிலந்திக்கு எதிரிகள் ஏதாவது உண்டா ? "

" ஏன் இல்லை ? பரவைகள், தேரை , 'இங்ந்யுமா'ன்னுட்டு ஒரு ஈ , அப்புறம் வேட்டையாடும் குளவி இது சிலந்தி வலையிலேயே போய் வேட்டையாடும் குளவி "

" குளவியா ? போச்சுரா !" என்ன ஒரு முட்டாள்தனம் இதுவரை அவனுடன் சின்னக் குரலில் பேசிக்கொண்டிருந்தது குளவியில்லை . அந்தச் சிலந்திதான்.

இரண்டு சின்னப்பூச்சிகள் அத்தனை அருகில் இருக்கும் போது, எப்படி அவற்றின் வாயசைப்பைக் கவனிக்க முடியும் ? பேசியது சிலந்தி ! வரம் தருவோனைக் கொன்று விட்டேனே ! ஜீனியைக் கொன்றுவிட்டேனே !

ஹென்றி அந்த வீட்டை காலி செய்துவிட்டான். காரணம் அதன் விட்ட மூலையில் இருந்த அந்தக் கறை அவனைப் பைத்தியமாக்கி விடும் போல இருந்தது .

- "ஜாக் ஷார்க்லி " - ப்ளேபாய் இதழிலிருந்து ... சுஜாதா 1994

..........x ..................x.............x ............... .x ..............x............ x.........x..

وَوَرِثَ سُلَيْمٰنُ دَاوٗدَ وَقَالَ يٰۤاَيُّهَا النَّاسُ عُلِّمْنَا مَنْطِقَ الطَّيْرِ وَاُوْتِيْنَا مِنْ كُلِّ شَىْءٍ اِنَّ هٰذَا لَهُوَ الْفَضْلُ الْمُبِيْنُ

ஸுலைமான் மனிதர்களை நோக்கி "மனிதர்களே! எங்களுக்குப் பறவைகளின் மொழி கற்பிக்கப்பட்டிருக்கிறது.(அல்குர்ஆன் : 27:16)

பறவைகள் மட்டும் அல்லாமல் எல்லா ஜீவராசிகளின் மொழியும், அவைகள் தூரத்திலிருந்து உரையாடினாலும், அவற்றை கேட்கும் ஆற்றலையும் இறைவன் கொடுத்திருந்தான் என்பதற்கு மற்றொரு ஆதாரமாக ...

وَحُشِرَ لِسُلَيْمٰنَ جُنُوْدُهٗ مِنَ الْجِنِّ وَالْاِنْسِ وَالطَّيْرِ فَهُمْ يُوْزَعُوْنَ

மேலும் ஸுலைமானுக்கு ஜின்கள்,மனிதர்கள்,பறவைகள் ஆகியவற்றிலிருந்து அவரது படைகள் திரட்டப்பட்டு, அவை (தனித் தனியாகப்) பிரிக்கப்பட்டுள்ளன.

حَتّٰٓى اِذَاۤ اَتَوْا عَلٰى وَادِ النَّمْلِۙ قَالَتْ نَمْلَةٌ يّٰۤاَيُّهَا النَّمْلُ ادْخُلُوْا مَسٰكِنَكُمْ لَا يَحْطِمَنَّكُمْ سُلَيْمٰنُ وَجُنُوْدُهٗۙ وَهُمْ لَا يَشْعُرُوْنَ

இறுதியாக, எறும்புகள் நிறைந்த இடத்திற்கு அவர்கள் வந்த போது ஓர் எறும்பு (மற்ற எறும்புகளை நோக்கி:) “எறும்புகளே! நீங்கள் உங்கள் புற்றுகளுக்குள் நுழைந்து கொள்ளுங்கள்; ஸுலைமானும் அவருடைய சேனைகளும், அவர்கள் அறியாதிருக்கும் நிலையில் உங்களை நசுக்கி விடாதிருக்கும் பொருட்டு (அவ்வாறு செய்யுங்கள்)” என்று கூறிற்று.

فَتَبَسَّمَ ضَاحِكًا مِّنْ قَوْلِهَا وَقَالَ رَبِّ اَوْزِعْنِىْۤ اَنْ اَشْكُرَ نِعْمَتَكَ الَّتِىْۤ اَنْعَمْتَ عَلَىَّ وَعَلٰى وَالِدَىَّ وَاَنْ اَعْمَلَ صَالِحًـا تَرْضٰٮهُ وَاَدْخِلْنِىْ بِرَحْمَتِكَ فِىْ عِبَادِكَ الصّٰلِحِيْنَ

அப்போது அதன் சொல்லைக் கேட்டு, அவர் புன்னகை கொண்டு சிரித்தார். (அல்குர்ஆன் : 27:17 - 19)

ரஹ்மத் ராஜகுமாரன் .

இல்முல் கீமியா

(விஞ்ஞான புனைக்கதைகளும், குர்ஆனின் சாரம்சமும் 3)





உலகை மறைமுகமாக கட்டி ஆளும் இல்லுமினாட்டிகள் மொத்தம் 13 குடும்பங்களில் இரண்டாவது இடத்தில் இருக்கும் அமென்ஷியோ ஓர்டேகா (ஸ்பெயின் தொழில் அதிபர் ).மூன்றாவது இடத்தில் இருக்கும் வாரன் பபெட் ( அமெரிக்க பங்குச் சந்தை முதலீட்டாளர்) இந்த இரு குடும்பத்தார்களின் கூட்டு முயற்சியால் இரும்பை தங்கமாக மாற்றும் யுக்தியை இந்தியாவிலுள்ள சித்தர்கள் செய்திருப்பதை அறிகிறார்கள்.

ஓலைச்சுவடிகளின் அறிஞர் சிவதாண்டவத்தை ரகசியமாக உளவாளி மூலம் அணுகிறார்கள். அவர் வந்திருந்த உளவாளியிடம் ஒரு கடிதத்தை கொடுத்தனுப்புகிறார் .
கடிதத்தில் ...."இரசவாதம் என்பது தாழ்ந்த உலோகங்களை சில வேதியல் முறைகளைக் கையாண்டு முறைப்படி உயர் வகை உலோகங்களாக மாற்றுவதாகும்.

இந்த உலோக மாற்றத்தை சித்தர்கள் தங்கம் செய்யும் பேராசையால் செய்யவில்லை, அழியக்கூடிய உடம்பை அழியாமல் பாதுக்காக்கும் காயகல்ப மருந்துகள் செய்யவே பயன்படுத்தினார்கள். இவ்வாறு இரசவாதம் காயகல்ப மருந்து தயாரிப்பில் பயன்படுத்தப்பட்டதே தவிர தங்கத் தயாரிப்புக்கு அல்ல.
உலோகங்களைப் பொன்னாக மாற்றியது போக, கல்லையும் மண்ணையும் பொன்னாக மாற்றிய சம்பவங்களும் சித்தர்கள் வாழ்வில் நடந்தேறியுள்ளன.

உலோகங்களை மட்டுமே இரசவாதத்தால் தங்கமாக்கமுடியும் என்ற நியதியை மாற்றி கல்லையும் தங்கமாக மாற்றிக் காட்டியவர் கோரக்கர்.அதே போல் சிவவாக்கியார் வாழ்விலும் கல்லைத் தங்கமாக மாற்றிய சம்பவம் நடந்துள்ளது.

**"சித்தர்களுக்காகவே இந்நூல் சொன்னேன்**
**சிவயோகி மெய்ஞானிக்கு இந்நூல் சொன்னேன்**
**பட்டற்று ஆய்குருவுக்குத் தொண்டு பண்ணி**
**கற்றோம் என்றிருந்த கடைப்பிள்ளைக்கும் சொன்னேன்**
**கல்வி அறிவுல்லோருக்கும் ஈயல் ஆகும்**
**மட்றுல்லோர்க்கு இந்நூல் ஈந்தாயானால்**
**மாண்டிடுவாய் மகத்தான சாபம் எய்தே"**

அந்த சுவடிகளின் அருமை தெரியாத சிலர் குதிரைக்கு வெந்நீர் வைக்க அடுப்பெரிக்கும் பொருளாகச் சுவடிகளைப் பயன்படுத்தி அழித்துள்ளனர் என்பதை, “மதுரை மாநாட்டுக்குத் தலைவராய்ப் போந்திருந்த வேற்று நாட்டவர் ஒருவர் தேடித் தொகுத்திருந்த **பழைய தமிழ் ஓலையேட்டுச் சுவடிகள்,** "இருநூறு

நாட்கள் குதிரைக்கு வெந்நீர் காய்ச்சுதற்குப் பயன்பட்டன என்பர்'' (மதுரைக் குமரன், பக்.9-10) என்ற சு. துரைசாமிப் பிள்ளையின் கூற்றுவழி அறியமுடிகிறது

.....கடிதத்தை படித்ததும் இல்லுமினாட்டிகள் பழந்தமிழ் மூலம் இரவாதத்தை பெற முடியாது என்பதை உணர்ந்து, இஸ்லாத்தின் பக்கம் தங்கள் பார்வையை திருப்பினார்கள் .

இஸ்லாமிய வரலாறு இப்படி சொல்கிறது : காரூன் ,நபி மூஸா (அலை) அவர்களின் சிறிய தந்தையும் ,சிறிய தாயும் மகனும் ஆவான்.நபி மூஸா (அலை) விசுவாசங் கொண்டு , தவ்ராத் வேதத்தை நன்கு கற்றவனும் அழகனும் நல்ல இனிமை குரல் வளமும் பெற்றவன் . மேலும் மிகச் சிறந்த அறிவாளன் இதனால்தான் கோடி கோடி செல்வத்தைப் தன் அறிவினால் பெற்றதாக பிற்காலத்தில் கூறினான்.

" காரூன் , நபி மூஸா (அலை) அவர்களிடமிருந்து " இல்முல் கீமியா " என்னும் தங்கமாக மாற்றும் ரசவாத வித்தையைக் கற்றிருந்தான். இதனைக் கொண்டு தன்னுடைய வீட்டின் எல்லா பொருட்களையுமே தங்கமாக மாற்றினான் . இந்த வித்தையை சொல்லிக் கொடுத்த நபியவர்களை மறுத்து மாறு செய்தான். இது பற்றி குர்ஆனில்

قَالَ اِنَّمَاۤ اُوْتِيْتُهٗ عَلٰى عِلْمٍ عِنْدِىْ اَوَلَمْ يَعْلَمْ اَنَّ اللّٰهَ قَدْ اَهْلَكَ مِنْ قَبْلِهٖ مِنَ الْقُرُوْنِ مَنْ هُوَ اَشَدُّ مِنْهُ قُوَّةً وَّاَكْثَرُ جَمْعًا وَلَا يُسْـَٔـلُ عَنْ ذُنُوْبِهِمُ الْمُجْرِمُوْنَ
அதற்கவன் "(என்னிடம் இருக்கும்) பொருள்களை எல்லாம் என்னுடைய சொந்த அறிவி(ன் திறமையி)னால்தான் நான் அடைந்தேன். (இதில் அல்லாஹ்வின் அருள் ஒன்றுமில்லை)" என்று (பதில்) கூறினான். (அல்குர்ஆன் : 28:78)

அவனின் செல்வங்கள் 4 லட்சம் பொக்கிஷப் பெட்டிகளில் இருந்தன. செல்வத்தின் மதிப்பு சொல்லப்படவில்லை . காரூனுடைய பொக்கிஷங்களது சாவிகளை தூக்குவதற்கு 40 பேர் நியமிக்கப்பட்டிருந்தனர். ஒவ்வொருவரும் 16000 சாவிகளைத் தூக்குவார்கள். அதுவும் அவர்களுக்கு பளுவாக இருந்தனவாம். 60 கோவேறு கழுதையின் சுமையாக அந்த சாவிகள் இருந்தன என்பதாக இஸ்லாமிய கிதாபுகள் வர்ணித்தன.

"நிச்சயமாக அதனுடைய சாவிகள் சக்தியுள்ள ஒரு கூட்டத்திற்கு பெரும் பளுவாக இருந்தன
" குர்ஆன் ( 28 : 76 )

**காரூனை விவிலியம் " கோராக் " என்றும், "ஹார்வட் கார்ட்டர் " என்ற ஆங்கில வரலாற்று ஆய்வாளர் காரூனை "ட்யூடன் கமென் " (Tutankhamun)** என்றும் அழைக்கிறார் .இவனும் மாளிகையும் மண்ணில் ( கி.மு 1350 ) புதைந்து போய் இருப்பதை வேதங்கள் வாயிலாக அறிந்து நிச்சயமாக மற்ற பிரமிடு கொள்ளைப் போனது போல் புதைந்த இவனின் மாளிகை கொள்ளைக்காரர்களின் கண்களுக்கு தெரியாமல் போய் இருக்கும் என்ற நம்பிக்கையில் 30 வருடங்களாக சுற்றிச் சுற்றி வந்தார்

1922 -ல் நவம்பர் மாதம் எகிப்தின் புகழ் பெற்ற புராதன லக்ஸர் கோயில்களுக்கு மேற்கே பாலைவன மணலில் புதைந்து போயிருந்த ட்யூடன் கமென் என்கிற காரூனின் மாளிகையை தோண்டி எடுக்க அதனுள் விலையுயர்ந்த கற்கள் , நெக்லஸ்கள், மோதிரங்கள் தங்க நாற்காலி, தங்க மேஜைகள் அதிலெல்லாம் வைரக்கற்கள் பதித்து மிகச் சிறந்த ஆபரண வேலைபாடுகள் . அப்பப்பா . அவன் தொட்டதெல்லாம் தங்கமாக மாற்றி வைத்திருந்தான் .

ட்யூடன் கமென் கல்லறை முகமூடி. அதாவது புதைக்கப்படும் எகிப்து அரசர்களின் முகங்களை உலோகத்தில் அழகான முகமூடியாகச் செதுக்கி, மம்மியின் மீது வைத்துப் பொருத்தி, சவப்பெட்டியை மூடிவிடுவார்கள். ட்யூடன் கமென் முகமூடி முழுவதும் தங்கத்தால் ஆனது.

குள்ளநரியின் முகம் கொண்ட அனுபிஸ் என்ற கடவுள் சிலை. கல்லறைகளை இந்தக் கடவுளே பாதுகாப்பார் என்பது எகிப்தியர்களின் நம்பிக்கை. ட்யூடன் கமெனின் முக வடிவம் கொண்ட நான்கு ஜாடிகள். இவை ஒவ்வொன்றிலும் அரசரது உள்ளுறுப்புகள் பத்திரப்படுத்தப்பட்டிருந்தன. மறுபிறவியில் அரசர் அந்த உறுப்புகளைப் பொருத்திக்கொள்வார் என்பது அவர்களது நம்பிக்கை.

எகிப்து வெப்பம் நிறைந்த தேசம் அல்லவா? கல்லறைக்கு உள்ளும் வியர்க்கும் அல்லவா? எனவே தங்கத்தாலான, கலைநயமிக்க விசிறி ஒன்றும் அங்கே வைக்கப்பட்டிருந்தது. செனட் என்ற சதுரங்கம் போன்ற விளையாட்டுப் பலகையும், அதற்கான காய்களும் வைக்கப்பட்டிருந்தன.

எகிப்தியர்கள் வலிமையின் அடையாளமாகக் கருதியதும், எகிப்திய அரசர்கள் விரும்பி வளர்த்த செல்லப்பிராணியும் சிறுத்தைதான். ட்யூடன் கமென் கல்லறையில் தங்கத்தாலான சிறுத்தையின் தலை ஒன்று வைக்கப்பட்டிருந்தது.

எகிப்தியர்கள் பூமராங் போன்ற வளைந்த கம்புகளை வைத்து பறவைகளை வேட்டையாடி வந்தார்கள். அவையும் கல்லறையில் இருந்தன. இந்தப் பிரபஞ்சத்தை, இந்த உலகத்தை, உயிர்களை, மனித இனத்தை எல்லாம் படைத்ததாக எகிப்தியர்கள் வழிபடும் நீலத்தொப்பி அணிந்த 'ப்டா' என்ற கடவுளின் சிலை அங்கே இருந்தது. வேறு சில கடவுள்களின் சிலைகளும் இருந்தன. அரசர் அமர்வதற்குத் தங்கத்தாலான அரியணை ஒன்றும், நகர்வலம் செல்ல தங்கத்தாலான ரதம் ஒன்றும் வைக்கப்பட்டிருந்தன.

பளிங்குக்கல்லில் செதுக்கப்பட்ட அலங்கார வேலைப்பாடுகள் அமைந்த நறுமணத் திரவியம் நிரப்பும் ஜாடி ஒன்றும் இருந்தது. ட்யூடன் கமெனின் தங்கத்தாலான காலணி அங்கே வைக்கப்பட்டிருந்தது. தவிர, அவரது கால் விரல்கள் ஒவ்வொன்றின் மீதும் தங்கத்தாலான அச்சுகள் பொருத்தப்பட்டிருந்தன.
இவை தவிர ஓவியங்கள், கலைப்பொருட்கள், நகைகள், ஆயுதங்கள் போன்றவை கல்லறையில் கண்டெடுக்கப்பட்டன. ஆயுதங்களில் அலங்கார வேலைப்பாடுகள் அமைந்த இரண்டு கத்திகள் இருந்தன. அதில் **ட்யூடன் கமெனின்** கல்லறையில் வைக்கப்பட்டிருந்த ஒரு கத்தி தனித்துவமாகத் தெரிந்தது. 35 செ.மீ. நீளமாக இருந்த அந்தக் கத்தி நிக்கல், கோபால்ட் போன்ற உலோகங்களால் செய்யப்பட்டிருந்தது.

விண்கல்லின் துண்டிலிருந்து அந்தக் கத்தி செய்யப்பட்டிருப்பதாக ஆய்வாளர்கள் சில ஆண்டுகளுக்கு முன்பு கண்டுபிடித்துள்ளனர். இதை நிரூபிக்கும் விதமாக 'வானத்திலிருந்து உலோகம் வந்தது' என்று எகிப்தியர்களின் பண்டைய நூல் ஒன்றில் குறிப்பும் காணப்படுகிறது.

இத்தனை ஆயிரம் ஆண்டுகள் ஆகியும் துட்டன்காமனின் விண்கல் கத்தி துருப்பிடிக்கவில்லை. அப்போதே உலோகத்தை வார்க்கும் தொழில்நுட்பத்தில் எகிப்தியர்கள் சிறந்து விளங்கியதை இந்தக் கத்தி உறுதிசெய்கிறது.

காரூன் (துட்டன்காமன்) கல்லறையில் எடுக்கப்பட்ட பொக்கிஷங்களும் காரூனின் மம்மியாக்கப்பட்ட உடலும் கெய்ரோ நகர அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளன.
இல்லுமினாட்டிகள் காரூனின் தங்க புதையல்களில் கவனம் செல்லவில்லை .அவர்களின் கவனமெல்லாம் எந்த பொருளையும் தங்கமாக மாற்றும் அந்த இல்முல் கீமியா யுக்தி மட்டுமே தேவைப்பட்டது .

இல்லுமினாட்டிகளின் கவனம் நவீன விஞ்ஞானமான க்ளோனிங் (Cloning) பக்கம் திரும்பியது . அக்குழுவை வழிநடத்தும் விஞ்ஞானி டியூரோ , க்ளோனிங் பற்றி விவரித்தார் .
1977-ல் ஸ்காட்லாந்து Dr. இயான் வில்மட் என்ற விஞ்ஞானி ஒரு வெள்ளை நிறப் பெண் செம்மறி ஆட்டின் பால் சுரப்பியிலிருந்து ஒரு செல்லைப் பிரித்தெடுத்து , அதை வேறொரு கறுப்பு நிறப் பெண் செம்மறி ஆட்டின் முட்டை செல்லில் உட்கருவை மட்டும் நீக்கி விட்டு பிரித்தெடுத்த செல்லை வைத்து கரு உருவாக்கப்பட்டது .

(இரு ஆம்லெட் முட்டையின் ஒரு முட்டையின் மஞ்சள் கருவை எடுத்து கிடாசி விட்டு இன்னொரு முட்டையின் மஞ்சள் கருவை இதில் வைப்பது மாதிரி ) இரு ஆட்டிலிருந்து உருவான கருவை வேறு ஒரு மூன்றாவது ஆட்டின் கர்ப்பப்பைக்குள் செலுத்த ...150 நாளைக்குப் பிறகு , வெள்ளை நிறப் பெண் செம்மறி ஆட்டின் அச்சு அசலாக ம்..மா... என்று ஒரு ஆட்டுக்குட்டி பிறந்தது . அதன் பெயர் டாலி (Dolly) .

க்ளோனிங்காக ரகசியமாக தேடப்பட்ட பெண்ணிற்கு காரூனை பற்றி எந்த விபரம் சொல்லப்படாமல்,அவளது கரு முட்டையில் இருந்து , உட்கருவை நீங்கி அதற்குள் கெய்ரோ கண்ணாடி பேழையில் படுத்திருக்கும் காரூனின் செல்லை திருடி, கரு முட்டையின் உட்கருவில் வைத்து மீண்டும் காரூனை உருவாக்க திட்டம் நிறைவேற்றப்பட்டது.
இந்தப் புதிய எம்ப்ரியோவில் இருந்து பழைய மனிதனை ஒரு புதிய மனிதனாக உருவாக்க முடியும் . பிறப்பவன் காரூனின்
' ட்ரான்ஸ்ஜெனிக் க்ளோனிங்' காக இருப்பான். அச்சு அசலா காரூனாகவே இருப்பான். ஆனால் காரூனின் நினைவுகள் , ஞாபகங்கள் , யுக்திகள் க்ளோனிங் காரூனுக்கு இருக்குமா ?
முயற்சிக்கலாம் .அதற்கும் நவீன விஞ்ஞானத்தில் ஏதாவது வழி இருக்கும் .அதுவரை அந்த பெண்ணை பத்திரமாக நீங்கள் பாதுகாக்க வேண்டும் என்றார் விஞ்ஞானி டியூரோ
அந்தப் பெண் நேற்றே காணாமல் போய் விட்டாள்.
குறிப்பு : (இல்லுமினாட்டிகளின் நடவடிக்கை மட்டுமே கற்பனை)

ரஹ்மத் ராஜகுமாரன்

## ஜில்லு

(விஞ்ஞான புனைக்கதைகளும், குர்ஆனின் சாரம்சமும் 4 )



ஜன்னலுக்கு வெளியே தொடுவானத்தில் ஒரே ஒரு மேகம் கருப்புத் தீற்றலாகத் தெரிந்தது.ஆத்மா கதவைச் சார்த்தினான்
வரப்போகிறது. தெரிந்துவிட்டது.அவர்கள் கணக்குப்படி சாயங்காலம் மழை வந்து விடும். அதற்குள் புறப்பட்டுவிட வேண்டும்.
திரும்பினான். நித்யா பெட்டியில் துணிகளை அடைத்துக் கொண்டிருந்தாள்."சீக்கிரம் நித்யா!"
“எதை எடுத்துக்கறது எதைவிடறது?”
“மொத்தமே மூணு பேருக்கும் எட்டு கிலோதான். ரொம்ப அவசியமானதை மட்டும் எடுத்துக்க”
“அவசியமானதுங்கறது எது?”
அந்த கேள்விக்கு இந்த சந்தர்ப்பத்தில் 'மூச்சு' என்பதைத் தவிர ஆத்மாவிடம் வேறு பதில் இல்லை
தோருவின் வால்ட்டன் ஞாபகம்வந்தது.ஒன்றுமே தேவையில்லைதான்,எல்லாமே புதுசாக அமைத்துக் கொள்ளலாம்.

அலமாரி நிறையப் புத்தகங்கள் இருந்தன எதையாவது எடுத்துச் செல்லலாம். எதை? தொல்காப்பிய ஆராய்சசி, முக்கூடற்பள்ளு? பாண்டி நாட்டுத் திருப்பதிகள்? புதுக்கவிதை-நாலு கட்டுரைகள்?தமிழர் நாட்டுப்புற இயல் ஆய்வு? பாலையும் வாழையும்? பைபிள் ? திருக்குறள்?

எதை? எல்லாமே இப்போது சப்தங்கள்,வெறும் சப்தங்கள்.
“குண்டுகள் எறிந்து, கூரைகள் எரித்து,பெண்டுபிள்ளை வயோதிகரைக்கொன்று குவிப்பது அன்றாடப் பொழுதுபோக்கு! பாஸ்டர்ட்ஸ்!”என்று யாரையோ திட்டினான்.
“என்ன புஸ்தகம் எடுத்துக்கணும்”
“ஏதாவது எடுத்துக்கலாம் பிரயாணத்தில படிக்கறதுக்கு”
“என்ன, சீக்கிரம் சொல்லுங்க”
ஆத்மா மறுபடி அந்த அலமாரியை வருடினான்.”இது போதும்!”என்று ‘ராணி’ இதழைப் பெட்டியின் மேல் போட்டான்.
“நகைப் பெட்டிகளை என்ன பண்றது?”
“எல்லாத்தையும் போட்டுண்டுவா. அங்க போனா வித்து மரவள்ளிக் கிழங்கு வாங்கலாம்”
நித்யா அவனைக் கலவரத்துடன் பார்த்தாள்.
“ஆளுக்கு மூணு செட்டு துணி வெச்சிருக்கேன்.குமாருக்கு ஸ்வெட்டர் எடுத்துக்கிட்டிருக்கேன்”
“இது என்ன பெரிசா?”
“நம்ம கல்யாண போட்டோ ஆல்பம் இதை விட்டுப் போக மனசு வரலை”
நித்யா கவனிக்காமல் “பூட்டு போறலை.மொத்தமே நாலு பூட்டுத்தான் இருக்கு”
“பூட்டா? எதுக்கு?”
“வீட்டைப் பூட்டிட்டுப் போகவேண்டாம்?”
ஆத்மா கை தட்டிச் சிரித்து “பைத்தியமே பூட்ட வேண்டாம். திருடறதுககு ஒரு ஆள் கிடையாது இந்த வீட்டில இருக்ற அத்தனையும் ஃபரிஜ்,ரேடியோ, டிவி, புஸ்தகங்கள், கித்தார் நாற்காலி, யானை பொம்மை எல்லாமே இங்கதான் இங்கயேதான் இருக்கப் போறது. நூறு வருஷம் ஆனாலும் இங்கேதான் இருக்கப்போறது.ஆல்ஃபா கதிர்களிலும் பீட்டா துகள்களிலும் ஜொலிச்சுண்டு”
நித்யா சற்று நேரம் மௌனமாக இருந்தாள்.
“ஆத்மா நாம் எங்க போறம்?”
“யாருக்குத் தெரியும்? அரபிக் கடல்ங்கறாங்க, மினிக்காய்ங்கறாங்க லட்சத் தீவுங்கறாங்க. காத்துக்கு எதிர்ப்பக்கம் எங்கயாவது கூட்டிட்டுப் போவாங்க”
“முதலில் பம்பாய் போகணுமா?”
“பம்பாயா?அசடே! பம்பாய் காணாமப் போய்டுத்து.ஃபணால்!ப்ஷ்ஷ் ராட்சச நாய்க்குடை. இப்ப அங்க ஒருத்தரும் இல்லை.மெட்றாஸ் போச்சு.டெல்லி போச்சு கல்கத்தா போச்சு நாம ஏதோ இந்த ஊர்ல மாற்றலாகி வந்து சேர்ந்தோம்! தப்பிச்சோம்! மழை துரத்தத் துரத்த ஓடிக்கிட்டே இருக்கலாம்! அதிர்ஷ்டம்!”
“அது அதிர்ஷ்டமா?” என்றாள் நித்யா.
“சரியான கேள்வி. பதில் தெரியலை. குமார் எங்கே-”.
“வெளியில விளையாடிட்டு இருக்கான். குமார்?”
குமார் உற்சாகத்துடன உள்ளே வந்து “அப்பா அப்பா ஏழு எலிகாப்டர். வந்து பாரேன்”என்றான்
ஆத்மா மகனுடன் பால்கனிக்கு வந்தான். படப்படப்பட என்று சிறகு சுற்றி ஸ்டெபிலைசரின் க்றீ…ச்சுடன் அந்த இயந்திரப் பூச்சிகள் மைதானத்தில் இறங்குவதைப் பார்த்தான்.
“நித்யா, வந்துட்டாங்க சீக்கிரம் பேக் பண்ணு”
“அப்பா நாம எலிகாப்டரில் போகப்போறமா?”
“ஆமாடா கண்ணு”
“எங்க போறோம்?”
“தூ..ரத்துக்கு”
“ஸ்கூல் லீவா?”
“இனிமே.. லீவுதான்”

“எப்ப வருவோம்?”
“திரும்பி வரமாட்டோம்”
“ஏன்?”
“ஏன்னா பாக்கிஸ்தான் இல்லை பாக்கிஸ்தான் ? அவாளும் சைனாவும் சேர்ந்துண்டு நம்மோடு சண்டை போட்டுட்டு டபால்னு நிறயப்பேர் செத்துப் போய்ட்டா! நாம இன்னும் செத்துப் போகலை-”
நித்யா உள்ளே இருந்து “ரொம்ப காரியமா குழந்தைக்கு இதெல்லாம் சொல்லியே ஆகணுமா?”
“ ஹி மஸ்ட் நோ நித்யா”
குமார் யோசித்து” அதுக்கு ஏன் ஊருக்குப் போறோம் ?"
“அவாள்ளாம் வெடிச்ச பட்டாசினால புகை நிறைய ஆய்டுத்து. அதில விஷம் நிறைய இருக்கு அது நம்மகிடட வந்துண்டிருக்கு”
“நாம அவாளை ஷுட் பண்ணலியா?”
“ம்! நாமும் ஷூட் பண்ணுனோம்.ஒரே தமாஷ். தீபாவளி மாதிரி வெடிச்சோம்.கராச்சி, ராவல்பிண்டி லாஹூர்,பீக்கிங் !”
“ஏன் நிறுத்திதிட்டோம்?”
“பட்டாசெல்லாம் தீர்ந்து போச்சு , நிறுத்திட்டோம்”
“ஊருக்குப் போனதும் எனக்கும் வாங்கித்தாப்பா”
“என்னது?”
“ஆட்டம் பாம்”
ஆத்மா சிரித்தான். “நீதாண்டா தலைவன்”
“குமார் குமார் ! உன் சமானெல்லாம் எடுத்துண்டியா?”
” ஆச்சு அம்மா ! ” என்று சிறிதாகத் தன் பள்ளிப் பையைக் காட்டினான். அதனுள் ஸ்லேட்டுக்குச்சி, ரப்பர், பம்பரக் கயிறு,தீப்பெட்டி லேபல்கள்,ஸ்டாம்புகள் கண்ணாடிக் கோலி....
“இவ்வளவு தானா ?”
“இவ்வளவுதாம்பா,ஜில்லுவுக்கு இடம் வேணும் இல்லையா?”
“என்னது? ஜில்லுவா?”
தன் பெயர் உச்சரிக்கப் பட்டதை உணரந்து கடடில் அடியில் படுத்திருந்த ஜில்லு திடீர் என்று காதுகளை உயர்த்திக் கொண்டு வெளியே வந்து குமாரிடம் வந்த வாலை ஆட்டியது.
“ஜில்லு ஷேக்காண்ட்” ஒரு காலைத் தூக்கியது.
இரண்டு கால்களில் நின்று நாலு தப்படி நடந்து காட்டியது. சின்ன நாய். பொம்மைபோல் கன்னங்கரேல் என்று கண்களுடன் சடைசடையாக வாசனையாக ஒரு சந்தோஷப் பந்தாக.குமார் அதை தொம்சம் பண்ணினான். காதைப் பிடித்து இழுத்துக் கட்டிக் கொண்டு புரண்டு காலை வாரிவிட்டு குழந்தை செய்த அத்தனை ஹிம்சைகளை சட்டை செய்யாமல் அவனுடனேயே ஒட்டிக்கொண்டது... இரண்டு குழந்தைகள்.
“ஜில்லு ஜில்லு ஜில்லல்லு.. அப்பா நாம ,ஜில்லுவையும் கூட்டிப்போறமில்லை”
“இல்லை கண்ணா விட்டுட்டுப் போறம்”
“பொய் ! அம்மா கூட்டிடடுப் போலாம்னு சொன்னாளே”
“அம்மாதான் பொய் சொன்னா ! இத பார் குமார், அந்த எலிகாப்டர்ல மனுஷாளுக்கே இடம் இல்லை ஜில்லுவை உள்ள விடமாட்டா”
குமார் உடனே அழ ஆரம்பித்தான் நாயைக் கட்டிக் கொண்டான்
“நான் வரலை.”
“நீ வந்துதான் ஆகணும் இங்கே ஒருத்தரும் இருக்க மாட்டா”
“நானும் ஜில்லுவும் வீட்டில இருக்கோம் நீ போய்ட்டுவா”
நித்யா வந்து”என்ன சண்டை” என்றாள் குமார் ஏன் அழறே”
“அப்பா ஜில்லு வேணடாங்கறார்”
“யார் சொன்னா? ஜில்லுவை கூட்டிண்டுதான் போகப்போறோம் நீ உள்ளபோடா கண்ணா”
குமார் தீர்மானமின்றி கண்ணைத் துடைத்துக் கொண்டு நாயைக் கவலையுடன் அள்ளிக் கொண்டு உள்ளே சென்றான்.
ஆத்மா மைதானத்தில் இப்போதே க்யு அமைவதைப் பார்த்தான். ஹெலிகாப்டர்களும் இளைப்பாறிக்

கொண்டிருந்தன.
“எதுக்காகப் பொய் சொல்ற? குழந்தை கிட்ட நாயை அனுதிக்கமாட்டான்னு தெரியும். இல்லையா”
“அதை அவன் கிட்ட எதுக்கு சொல்லணும்? கடைசில சமாதானப் படுத்தி அழைச்சுட்டு போகலாம்னு பார்த்தேன் நீங்க போட்டு உடைச்சுட்டிங்க”
” இல்லை நித்யா, இந்த ஏமாற்றத்துக்கெல்லாம் அவனைத் தயார்ப்படுத்தணும்.சும்மா கனவுகளை சப்ளை செய்துக்கிட்டே இருக்கக் கூடாது.இன்றைய உலகம் என்னன்னு தெரிஞ்சுக்கணும் நெஞ்சில் உறுதி வரணும்”
“ஆ..மாம், ஏழுவயசில இதெல்லாம் தேவையாக்கும்? இத பாருங்க, அவன் இன்னும் குழந்தை. நாயை வுட்டுட்டுப் போறம்னு தெரிஞ்சா தாங்க மாட்டான்.அது மேல அவனுக்கு உசிரு. ஜுரம் வந்துரும்.கடைசில சொல்லி எப்படியாவது சரிக்கட்டிடலாம்.. நாயைக் கூட்டிட்டுப் போறம்னே சொல்லுங்க”
இன்னும் இரண்டு மணி நேரம்.
அறைக்குள்ளிருந்து “ஜில்லு பயப்படாதே.. நான் அழைச்சுட்டுப் போறேன் உன்னை விடமாட்டேன். விடாட்டா அவாளை ஷூட்
பண்ணிடலாம்”
நித்யா திடீர் என்று “இப்படி செஞ்சா என்ன?”எனறாள்.
“என்ன?”
“பொட்டில இடம் இருக்கு பேசாம ஒரு துண்டில சுத்தி..”
“ம்ஹும் கத்திக் கத்தி செத்துப் போய்டும்.”
“கைல ஒரு கூடை வெச்சக்கலாமில்லையா?”
“இதபார் நித்யா அனாவசியமா காம்ப்ளிக்கேட் பண்ணாதே விட்டுட்டுப் போயிரலாம்.சாப்பாட்டுக்குத் தவிக்கும். வெள்ளைக்காரனா இருந்தா சுட்டுட்டுப் போய்டுவான்”
“எனக்குக் கூட இந்த சனியனை விட்டுட்டுப் போறதில இஷ்டமே இல்லை”
“என்ன செய்யறது? தேவடியா பசங்க அவசரப் பட்டு விபரீதம் பண்ணிட்டாங்களே?”
“ஆத்மா ப்ளீஸ்”
அவர்கள் கிளம்பும்போது மணி ஐந்து. அந்தக் கருமேகம் கொஞ்சம் பெரிசாகி இருந்தது.ஆத்மாவும் நித்யாவும் குமாரும் வெளியே வந்து நின்றார்கள். தனியான திறந்த வீட்டை, மல்லிகைப் பந்தலை, மாமரத்தை, மகிழ மரத்தை, கதவருகில் நீலத்தில் 'ஆர்.எஸ் ஆத்மா 'என்ற சிறிய பெயர்ப் பலகையை ஒரு முறை கடைசியாகப் பார்த்தான்.
“காஸை மூடினேனோ ஞாபகமில்லை!” என்றாள்.
“சட்! வா. காஸ் மூடினா என்ன திறந்தா என்ன”
ஒரு பெட்டி, ஒரு சிறிய கூடை கூடை!
“ஏய் கூடைக்குள்ள என்ன?”
“நீங்க பேசாம வாங்க ஜில்லு தூங்கறது .சமாளிச்சுரலாம்”
“இதபாரு, வம்பு. வீண் வம்பு. கூடையைத் திறந்து பார்த்தா அசிங்கமாப் போய்டும்!வேண்டாம் வுட்டுரு” என்று கூடையைப் பிடுங்கினான்.குமார் வீறிட ஆரம்பித்தான்.
“விடுங்கோ நான் சமாளிக்கிறேன்.அவா ஒண்ணும் செக் பண்றதில்லையாம்”
ராணுவத்தின் மூன்று டன் வண்டி ஒன்று வந்து நின்றது.
“கமான் க்விக் க்விக்” என்று ஒரு சீருடைக் குரல் கேட்டது.
ஆத்மாவும் நித்யாவும் குமாரும் பெட்டியும் கூடையுமாக ஏறிக்கொள்ள வண்டி புறப்பட ஆத்மா அந்த முகங்களைப் பார்த்தான்.கவலை முகங்கள். எதிர்காலம் அறியாத முகங்கள். எங்கே போகிறோம் எங்கே நிற்போம் ,எந்த திசை, எந்த மண் எதுவும் தெரியாமல்.. வண்டி ஆடி ஆடி மைதானத்தை நெருங்கியது. ஆத்மா கூடையை அடிக்கடி கவலையுடன் பார்த்துக் கொண்டிருந்தான்.
மைதானத்தில் இறங்கி மெல்ல நகரும் வரிசையில் ஒட்டிக் கொண்டார்கள்.ராணுவ உடையில் அதிகாரிகள் மேலும் கீழும் நடந்து கொண்டிருந்தார்கள்.ஏழு ஹெலிகாட்ர்களிடமும் ஏழு வரிசைகள் இருந்தன. நகரத்தின அத்தனை பேரும் வித்தியாசங்கள் இன்றி சற்றே தவிப்புடன் சற்றே அவசரத்துடன் அந்தப் புரியாத வாசலில் தடுமாறி ஏறிக் கொண்டிருந்தார்கள். இளம் ராணுவ அதிகாரிகள்

வயதானவர்களைத் தூக்கி ஏற்றிக் கொண்டிருந்தார்கள். நிற்பவர்கள், நடப்பவர்கள்,சக்கர நாற்காலிகள், கைத்தடிகள்,ஏழைகள் குழந்தைகள் .. நகரம் முழுவதும் இன்னும் ஒரு மணி நேரத்தில்
காலியாகிவிடும்.
ஆத்மாவும் நித்யாவும் குமாரும் மெல்ல மெல்ல அந்த இயந்திரப் பறவையை அணுக அணுக அவன் இதயம் தவித்தது.எப்படியாவது உள்ளே சென்று ஏறிக்கொண்டு விட்டால்,கிளம்பி விட்டால் அப்புறம் அசட்டு சிரிப்பு சிரித்து சமாளித்து விடலாம்.
அருகே அருகே
“ஒரு பெட்டிதானே” என்றார் அதிகாரி.
“ஒரு பொட்டி இந்தக் கூடை” அதன் மேல் துண்டு போட்டு மூடியிருந்தது.
ராணுவ அதிகாரி பெட்டியை குத்து மதிப்பாகத் தூக்கிப்பார்த்து “போங்க உள்ளே சீக்கிரம்”
“அப்பாடா”
நித்யா கூடையைத் தூக்கிக் கொண்டாள்.அந்த சமயம் அதனுள் உறங்கிக் கொண்டிருந்த ஜில்லு கீச்சுக்குரலில் முனக ஆரமபித்தது.
“சீக்கிரம் ஏறு நித்யா”
இப்போது ஜில்லு ஸ்பஷ்டமாக ஊளையிட ஆரம்பித்தது.
“ஜஸ்ட் எ மினிட் மேடம்”
அதிகாரியின் உப அதிகாரி அவளிடமிருநது கூடையைப் பிடுஙகிக்கொண்டார்.சடுதியில் அதன் மேலிருந்த துணியை விலக்கினார்.
“நாய்!” ஜில்லுவைப் பொறுக்கி மேஜைமேல் வைத்தார்.
“மைகாட் யார் நாய்யா இது”
ஆத்மா “ஆபிஸர் இட்ஸ் லைக் திஸ் என் பையன்..”
“ஏன்யா உங்களுக்குப் படிச்சு படிச்சு சொல்லலை? லவுட் ஸபீக்க்ரல சொல்லலை?வீடு வீடா வந்து சொல்லலை? மிக அவசியமான பொருள்களை மட்டும் எடுத்துட்டு வரணும்னுட்டு.
நாய்! காட்! வாட் ஸ்டுபிடிட்டி ஐ ஸே”
“ஆபிசர் நான் சொல்றதைக் கேளுங்க என் பையன்”
“லுக் மிஸ்டர உன்னோட வாதாடிக்கிட்டிருக்க நேரமில்லை ஹெலிகாப்டர் புறப்பட்டாகணும்.
அத பாருங்க மேகம்..கதிரியக்க மழை வந்துகிட்டு இருக்கு. நாம எல்லோரும் சாவில இருந்து சிலமைல் தூரமே இருக்கோம் . மனுஷங்களுக்கே இடமில்லை. நாயைக் கூட்டி வரேங்கறியே! உனக்கு இப்ப சலுகை தந்தா அந்தளு பியானோ எடுத்துக்கிட்டு வரேம்பான் இன்னொருத்தன் என் பசுமாட்டை ஏன் விடணும்பான் நாம எல்லாம் உயிர் வாழறதுக்கு ஓடிக்கிட்டு இருக்கோம்.
உங்களுக்கு எட்டு கிலோ சலுகை கொடுத்ததுக்கே ஸிஓ என்னைக் காச்சறார். முடியாது நாயை அனுமதிக்க முடியாது”
“இது எங்க குழந்தை மாதிரி ஸார் ” என்றாள் நித்யா.
“உள்ளபோங்க உள்ளபோங்க .நாய் கிடையாது. அடுத்தது அடுத்தது”
“படு பாவிப் பசங்களா” என்றான் ஆத்மா
“என்னது?”
“உங்களாலதானடா சண்டை வந்தது பொறுப்பில்லாம அவசரப் பட்டு அவன் மேல அணுகுண்டைப் போட்டுட்டு அவன் திரும்பிப் போட்டு உங்க மாதிரி ராட்சசப் பிரஜைகளோட அவசரப் போக்கினாலதானே,கொலை வெறியினாலதானே சண்டை வந்து நாங்க,ஒண்ணுமே தெரியாதவங்க மாட்டிக்கிட்டு இறந்து போயி பிரிஞ்சு போயி இப்ப ஊர் ஊரா எல்லாத்தையும் துறந்து ஓட வேண்டியிருக்கு ப்ளடி மிலிட்டரி ராஸ்கல்ஸ் !பாஸ்டர்ட்ஸ்”
ஆத்மாவின் கன்னத்தில் பளேர் என்று அறை விழுந்தது
“லுக் மிஸடர் ! நாங்க இல்லை காரணம். தலைவர்கள்தான்! ஹால் ஹ’ம் அப் ஐஸே”
ஆத்மா குண்டுக் கட்டாக தூக்கப்பட்டு உள்ளே திணிக்கப்பட்டான் நித்யாவும் ஏற்றப்பட்டு அவசர அவசரமாக மற்றவர்கள் ஏற்றப்பட்டு இறதியில் ராணுவ அதிகாரிகள் ஏறிக் கொள்ள கதவு மூடப்பட்டு மண்டைச் சிறகுகள் சுற்ற ஆரம்பித்து சுழற்சி அதிகமாகி ஹெலிகாப்டர்கள் ஒவ்வொன்றாக சாய்வுப் பாதையில் உயர்ந்தன.

“ஆத்மா வலிக்கிறதா?” என்றாள் நித்யா.
ஏகப்பட்ட ஜனங்கள் அடைந்திருந்தார்கள். நித்யாவும் ஆத்மாவும் ஒரு ஓரத்தில் பதிய நின்று கொணடு மேலே கிடைத்ததைப் பற்றிக் கொள்ள ஹெலிகாப்டர் மேலே மேலே செல்ல,வயிற்றுக்குள் பயப் பந்து சுருட்டிக் கொள்ள
“குமார் நாம் ஊருக்குப் போனதும் வேற நாய் வாங்கிக்கலாம் ” என்றான் ஆத்மா.
“குமார்?”
“ஏய் குமார்! நித்யா குமார் எங்கே?”
“உங்க கூடத்தானே இருந்தான்”
“இல்லையே உன் கையைன்னா பிடிச்சிட்டிருந்தான்”
“குமார் ? குமார்! குமா ஆஆஆஆ ர்!”
நித்யாவின் அலறல் அந்த மெஷின் படபடப்பில் கரைந்தது.
“அய்யா அய்யா என் மகன். என் மகனை விட்டுட்டோம். திறங்க. கதவை திறங்க” என்று ஆத்மா மோதினான். ஒரு வலுவான கரம் அவனை அடித்து வீழ்த்திப் பிடித்தது.
ஹெலிகாப்டர்கள் வானத்தில் புள்ளிகளாக மறைய..
குமார் பெஞ்சின் அடியில் பதுங்கியிருந்தவன் ஜில்லுவைத் தடவிக் கொடுத்துக்கொண்டே வெளியே வந்தான்.
“கவலைப்படாதே ஜில்லு.அப்பா அம்மா ஊருக்குப் போய்ட்டு வந்துருவா.நாம வீட்டுக்குப் போகலாம் வா”
சிறுவனும் நாயும் மெல்ல உற்சாகமாக நடந்து செல்ல யாருமில்லாத பிஸ்கட் கடையில் அடுக்கி வைத்திருந்த பிஸ்கட்களில் நிறைய எடுத்துக்கொண்டு ஜில்லுவுக்கும் கொடுத்து தானும் சாப்பிட்டுவிட்டு வீட்டை நோக்கி நடக்கையில்......
வந்த மழையில் சிறுவனும் நாயும் ஆனந்தமாக நனைந்தார்கள். .....
- சுஜாதா -1982
*************************************************************************

நபி (ஸல்) அவர்களது துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் ஒருமுறை அழுதுகொண்டிருந்தார்கள். அங்கே வந்த நபி (ஸல்) அவர்கள், ஆயிஷாவை நோக்கி "ஆயிஷாவே, என்ன நேர்ந்தது? ஏன் அழுகிறாய்?'' என்று
வினவினார்கள்.

அதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள் "எனக்கு நரகம் நினைவுக்கு வந்துவிட்டது. நீங்கள் மறுமை நாளன்று உங்களுடைய குடும்பத்தாரை (அதாவது எங்களை) நினைவு வைப்பீர்களா, இல்லையா? என்பதின் மீது அழுகை வந்து விட்டது'' என பதிலளித்தார்கள்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள் ""மூன்று வேளைகளில் யாரும் யாரையும் நினைக்க மாட்டார்கள்.
ஒன்று: செயல்கள் நிறுக்கப்படும் மீஜானின் போது, அவனுடைய நன்மைகள் தட்டு கனத்தால் தாழ்கிறதா, இல்லையா? என்பதை அறிந்து கொள்ளாத வரையிலும்.
இரண்டாவது: அவரவர் செயலேட்டைப் பெற்றுக்கொள்ளுங்கள் என்று அறிவிக்கப்படும் போது, அவனுடைய செயலேடு வலக்கரத்தில் கிடைக்குமா அல்லது புறமுதுகில் வைத்து இடது கரத்தில் கிடைக்குமா? என்பதைத் தெரிந்து கொள்ளாத வரையிலும்.
மூன்றாவதாக: சிராத்துல் முஸ்தகீம் பாலத்தில் அது நரகின் மீது நிறுவப்பட்டு அதன் மீது நலமாகக் கடந்து சென்றிடாத வரை'' என்று பதிலளித்தார்கள்.
இவ்வுலகில் நாம் உறவுக்கான பாலத்தை அமைத்து என் மனைவி, என் கணவர், என் பிள்ளைகள், எனது குடும்பம் என்று உறவுகளுக்கு பாசத்தைக் கொடுத்த அல்லாஹ்வே, மறுமையில் உறவுகளுக்குள் பாசம் இல்லாமல் ஆக்கிவிடுவான்.

பெற்றோர், பிள்ளை, கணவன், மனைவி ஆகியோர் ஒருவரையொருவர் மறுமையில் பார்த்தால், வேற்று மனிதரைப் பார்ப்பதைப் போல் தான் பார்த்துக் கொள்வர். இன்னும் உறவுகள் தன்னை நெருங்கி விடக்கூடாது என்று பயம் கொள்வர். அங்கே எல்லோருக்கும், அவரவரது செயலில், "யா நப்ஸி, யா நப்ஸி' தான்.
அதாவது என் நிலை இன்று அல்லாஹ்விடம் என்னவாகுமோ என்பதைக் குறித்த கவலையும், பயங்கரமும் மட்டுமே ஒவ்வொருவரிடமும் இருக்கும்.
(மேற்சொன்ன கதையில் சிறுவன் குமார் நப்ஸில் நாய்க்குட்டி ஜில்லு மட்டுமே இருந்தது . விட்டு விட்டு போற தன் பெற்றோர்களைப் பற்றி எந்த தேட்டமும் இல்லை.குமாருக்கு ஜில்லு மட்டுமே கவலையாக இருந்தது )

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக நபித்தோழர் இக்ரிமா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:
"மறுமை நாளன்று தந்தை தனது மகனிடம், "நான் உன்னுடைய தந்தையாக இருந்தேன் அல்லவா?' என்று கேட்பார். அதற்கு மகன் தந்தை செய்த உபகாரங்களையெல்லாம் ஒப்புக்கொள்வார். அதற்குப் பிறகு தந்தையானவர், "எனக்கு ஒரு நன்மை மட்டும் தேவையுள்ளது. அதன் காரணமாக என்னுடைய நன்மையின் தட்டு தாழ்ந்து விடக்கூடும்' என்று கூறி ஒரு நன்மையை வேண்டுவார்.

அதற்கு மகனோ, "நானே துன்பத்தில் இருக்கிறேன். என் மீது என்ன நிகழப்போகிறது என்று என் நிலையே எனக்குத் தெரியாமலிருக்கும் போது, நான் எந்த நன்மையும் கொடுக்க முடியாது' எனக் கூறி மறுத்து விடுவான்.

அதற்குப் பிறகு அம்மனிதன் தனது மனைவியிடம் சென்று அவளுக்குச் செய்த உபகாரங்களைச் சொல்லிக்காட்டி, ஒரு நன்மையை வேண்டுவான். அவளும் மறுத்துவிடுவாள்.
இதனைக் குறித்தே அல்லாஹ் குர்ஆனில், "அந்த (மறுமை) நாளில் மனிதன் மிரண்டு ஓடுவான் - தன் சகோதரனை விட்டும், மனைவியை விட்டும், தன் பிள்ளைகளை விட்டும். அன்று ஒவ்வொரு மனிதனுக்கும் அவனவன் (கஷ்ட) நிலையே போதுமானதாயிருக்கும். ( அல்குர்ஆன் 80 : 34 - 37)

ரஹ்மத் ராஜகுமாரன்

ஆத்மாவாகிய நான் 1



பிரபஞ்சத்தில் உள்ள ஜீவராசிகள் அனைத்திலும் காணப்படும் இணக்கம் என்பது அவைகளில் உறைந்துள்ள ஆன்மாவை (உயிரைக்) கொண்டு நிகழ்கின்றது என்று சொன்னால் மிகையாகாது.
இதுதான் ஜீவராசிகள் அனைத்திற்கும் உரிய மூலப்பொருள் ஆகும் இதனை ஆன்மா என்றும். உயிர் என்றும், உயிர் என்றும், ஜீவன் என்றும், ஜீவாத்மா என்றும் பல்வேறு வகையான பெயர்களால் இதனை அறிய முற்படுவதாக ஆன்மீகவாதிகள் கூறுகின்றனர் . இதையே அருள்மறை திருக்குர்ஆன் ரூஹ் , என்றும் நநப்ஃஸ் என்றும் கல்பு என்றும் பல பெயர்களால் பேசுகின்றது.

ஆக, எப்படி இருப்பினும் இந்த ஆன்மா என்பது சகல ஜீவராசிகளிலும் நிறைந்துள்ளது என்பதில் எல்லோருமே ஒருங்கிணைந்த கருத்து உடையவராகவே இருக்கின்றனர்.

அதேநேரம் இந்த ஆன்மா என்பது என்ன ? அதனுடைய வடிவம் என்ன ? எல்லா ஜீவராசிகளிலும் அமைந்துள்ள இந்த ஆன்மா எல்லா ஜீவராசிகளிலும் ஒரே மாதிரிதான் அமைந்துள்ளதா ?
அல்லது வெவ்வேறான நிலைகளை கொண்டுள்ளதா ? அது திடப்பொருள் அல்லது திரவம் மற்றும் வாயுப் பொருளா ? ஆக மொத்தத்தில் ஆன்மா என்பது என்ன என்பது குறித்து ஆய்வு செய்யத் துவங்குவோமாயின், அதற்கு எந்த நிலையில் உண்டு என்பதை விளங்கிக் கொள்ளலாம் .

ஆனால் அதற்கு முன் அதனுடைய துவக்கம் எங்கிருந்து என்பதை முதலில் பார்த்து விட்டால், அதன் பிறகு உள்ள நிலைகளை எளிதாக விளங்கிக்கொள்ள முடியும் என்று நினைக்கிறேன் . இதை பற்றி திருக்குர்ஆன் கூறும் போதும்

وَيَسْـــَٔلُوْنَكَ عَنِ الرُّوْحِ قُلِ الرُّوْحُ مِنْ اَمْرِ رَبِّىْ وَمَاۤ اُوْتِيْتُمْ مِّنَ الْعِلْمِ اِلَّا قَلِيْلًا
(நபியே!) ரூஹைப் பற்றி (யூதர்களாகிய) அவர்கள் உங்களிடம் கேட்கிறார்கள். அதற்கு நீங்கள் "அது எனது இறைவனின் கட்டளையால் ஏற்பட்டது. (அதைப் பற்றி) வெகு சொற்ப ஞானமேயன்றி உங்களுக்குக் கொடுக்கப்படவில்லை. (ஆதலால், அதன் நுட்பங்களை நீங்கள் அறிந்துகொள்ள முடியாது)" என்று கூறுங்கள். (அல்குர்ஆன் : 17:85)
மேற்கண்ட வசனத்தில் ஆன்மா என்பது இறைவனுடைய கட்டளையின் நின்றுமுள்ள ஒன்றென்பதாக நமக்கு எடுத்து காட்டப்படுவதால், இறைவனுடைய கட்டளையை தாங்கிய "திருக்குர்ஆன் " என்னும் வேதம் எவ்வாறு ஒரு சிருஷ்டின் (படைப்பின்) நிலைக்கு உட்படுத்தப்பட முடியாதோ அவ்வாறே "ஆன்மா " என்பதும் இறைவனுடைய கட்டளையை சார்ந்த ஒன்றாக இருப்பதால் ,ஆன்மாவையும் சிருஷ்டியின் நிலைக்குள் உட்படுத்த முடியாது என்பதாக முதலில் நாம் விளங்கிக் கொள்ள வேண்டும்.

ஆன்மாவின் வெளிப்பாட்டை குறித்து நமக்கு ஆன்மீகவாதிகள் விளக்கித் தரும்போது, இது நினைவுக்குள் இருந்து முதன்முதலாக வெளிப்பட்ட ஒன்றென்பதாகக் கூறுகின்றனர்.
யாருடைய நினவுக்குள் இருந்து ? ஆம் . நினைவு என்பது பரம்பொருளாகிய இறைவனுக்குள் இருந்து முதன்முதலில் வெளிப்பட்டபோது ,அந்த நினைவுக்குள்ளிருந்து " நான் என்பது முதன் முதலில் தோன்றியது .அந்த நான் என்பதுதான் ஆன்மாவாகும் " என்பதாக கூறுகின்றனர்.

ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சொல்லும் ஒரு உவமை மூலம் இதை விளக்க முயற்சிக்கிறார் .
கடலில் உள்ள நீருக்கும் அக்கடலில் மூழ்கிய ஒரு சிறு குடத்தினுள் உள்ள நீருக்கும் இடையே என்ன வேறுபாடோ
அதுதான் பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் இடையேயான வேறுபாடு.
உண்மையில் குடத்தின் உள்ளே உள்ள நீருக்கும் வெளியிலுள்ள நீருக்கும் எந்த வேறுபாடும் கிடையாது, ஆனால் அந்தக் குடத்தினாலேயே உள்ளே உள்ள நீருக்கு ஒரு தனி அடையாளம் கிடைக்கிறது.

'நான்', 'எனது' என்ற மமதையே அந்தக் குடம். உண்மையில் கொஞ்சம் ஆராய்ந்து பார்த்தோமானால் 'நான்', 'எனது' என்பது போன்ற எண்ணங்கள் வெறும் மாயையே என்பது புலப்படும். குடம் உடைந்தால் அந்தப் பொய்யான வேறுபாடு அகல்கிறது. அது போல் 'நான்', 'எனது' என்பது போன்ற எண்ணங்கள் மாயை என உணர்ந்த ஜீவாத்மா, மமதையால் ஆட்கொள்ளப்படாத ஜீவாத்மாவே பரமாத்மாவால் ஆசீர்வதிக்கப்படுகிறது.

ரஹ்மத் ராஜகுமாரன்

ஆன்மாவாகிய நான் 2



தனித்தோனாகிய அல்லாஹுத்தஆலா தான் மட்டும் தனித்து இருந்த போது தான் அறியப்பட வேண்டும் என்று தேட்டம் கொண்டு தன் பேரொளியில் இருந்து ஒரு ஒளியை வெளிப்படுத்தினான்.
அந்தப் பேரொளிக்கு நூரே கரீம் முஹம்மது ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் என்று பெயரிட்டான்.
பேரொளி என்பது தானும் வெளிப்பட்டு தான் அல்லாத மற்றவர்களையும் வெளிப்படுத்தி காட்டுவதாகும்.அந்தப் பேரொளியில் இருந்து பல ஒளிகள் வெளியாகி இருக்கிறது.
உதாரணமாக மலக்குமார்கள் சூரியன் சந்திரன் நட்சத்திரங்கள் இன்னும் அண்ட சராசரங்கள் மற்றும் அதில் உள்ளவைகளையும் அந்த நூரே முஹம்மத் ரசூலே கரீம் என்னும் பேரொளியிலிருந்து படைத்தான். படைத்துக் கொண்டும் இருக்கின்றான். இன்னும் படைப்பான்.

كنت كنزا مخفيا فاحببته ان اعرف وخلقت الخلق
நான் மறைந்த பொக்கிஷமாக இருந்தேன் நான் அறியப்பட வேண்டும் என விரும்பி படைப்பை படைத்தேன் என அல்லாஹுத்தஆலா கூறுகிறான்

அல்லாஹுதஆலா தன்னுடைய நூரில் இருந்து நேரடியாக படைக்கப்பட்ட முதல் படைப்பும் ஒரே படைப்பும் நூரே முஹம்மத் ரசூல் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் மட்டும் தான் மற்ற படைப்புகள் எல்லாம் அந்த நூர் என்னும் நூரில் இருந்தே படைக்கப்பட்டன.
மற்ற படைப்புகள் படைக்கப்படுவதற்கு காரணமாக இருந்த நூரே முஹம்மத் அவர்களைப் பற்றி அல்லாஹ் ஹதீஸே குத்ஸியில் கூறியிருக்கிறான்

"நபியே உண்மை படைத்திடா விட்டால், இந்த வானத்தையும் இன்னும் நான் எனது ருபூபிய்யத்தை இரட்சிப்பு தன்மையையும் வெளிப்படுத்தி இருக்க மாட்டேன்.
இதில் ஆன்மிகவாதிகளான தத்துவவாதிகள் எல்லா ஜீவராசிகளிலும் ஆன்மாவுக்கும் மற்ற ஜீவராசிகளில் உறைந்துள்ள ஆன்மாவுக்கும் இடையே நிறைய வேறுபாடுகள் உண்டு என்றும் கூறுகின்றனர்.

அதாவது மனிதனை தவிர உள்ள மற்ற ஜீவராசிகளான ஆன்மாக்கள் என்பது அதனுடைய ஆன்மா என்னும் தூய நிலையை விட்டு விட்டு இடம் மாறி தத்துவங்கள் என்னும் நிலைக்கு மாறிவிட்டதிருப்பதால், மனிதனைத் தவிர மற்ற ஜீவராசிகள் சிலவற்றின் ஆன்மா என்பது மண்ணாகவும் , சிலவற்றின் ஆன்மா நீராகவும், சிலவற்றின் ஆன்மா காற்றாகவும் , சிலவற்றின் ஆன்மா நெருப்பாகவும் அமைந்துள்ளதால் அவர்களுக்குள் ஆன்மாவின் அகமியத்தை அறியும் ஆற்றல் இல்லை என்பதாக கூறுகின்றனர்.

அதேநேரம் மனிதனின் உறைந்துள்ள ஆன்மாவானது அதனுடைய எதார்த்த நிலையை விட்டும் தடம் மாறாமல் அசல் நிலையில் இருப்பதால் அது தனது இடத்தை அறிந்து தனது மூலமாகிய பரம்பொருளை பெற்றுக்கொள்கிறது என்பதாக கூறுகின்றனர். இதுதான் மனிதனின் அமைந்துள்ள " நான் " என்பதாகும். இந்த " நான் " மற்ற ஜீவராசிகளிடம் இல்லை.

இங்கே இன்னொன்றையும் விளங்கிக் கொள்ளவேண்டும். அதாவது ஜீவராசிகளில் காணப்படும் ஆன்மா என்பதும் அவைகளின் சரீரம் என்பதும் வெவ்வேறு பொருளா ? என்பதை நாம் ஆராய்ந்தால் , இரண்டுக்குரிய அசலும் ஒன்றுதான் என்பது நமக்கு தெரியவரும்.
ஆம் . நினைவொன்றும் பரம்பொருளுக்குள் இருந்து தோன்றிய " நான் " என்பதுதான் பல்வேறு தரப்பட்ட தன்மைக்குத் தக்கவாறு தனக்குள் அமைந்திருந்த தத்துவங்களை தன்னிலிருந்து வெளிப்படுத்திற்று.பின்னர் அந்த தத்துவங்கள்தான் திடப்பொருள்கள் எனும் வடிவத்தில் வானம் என்றும் விலங்குகள் என்றும் பறவைகள் என்றும் தாவரங்களுக்கும் என்றும் சூரிய சந்திரன் என்றும் பல்வேறு வடிவங்களில் வெளியானது .

இப்படி திடப் பொருட்களின் வடிவத்தில் வெளியானதை குறித்தும், திடத்தன்மையற்ற நிலையினை குறித்தும் நபி (ஸல்) அவர்கள் கூறும்போது..
"ஆதம் சரீரங்களின் தந்தையாகவும், நான் ஆன்மாக்களின் தந்தையாகவும் இருக்கிறேன் " எனவே ஆன்மாவின் தோற்றம் என்பது ஒருபக்கம் அதனுடைய அசல் நிலை மாறி சரீரங்களாக வெளிப்பட்டுள்ளதைப் போன்று இன்னொரு பக்கம் அதனுடைய அசல் நிலை மாறாமல் திடமற்ற நிலையில் தனது யதார்த்தத்தை கொண்டு நிலைபெற்றுள்ளது.

இவ்விரு நிலைகளையும் தனக்குள் ஒரு சேர பெற்றுள்ள சிருஷ்டி என்பது மனித சிருஷ்டி மட்டும்தான். இதனால் தான் மனிதன் என்பவன் ஒரு பொதுப்படையாக இருக்கிறான். அதாவது அவனுக்குள் சர்வ லோகமும் இருக்கின்றது. அவன் சர்வ லோகத்தையும் தனக்குள் இருந்து வெளிப்படுத்தும் தகுதியை பெற்றிருக்கிறான். இது மட்டுமல்லாமல் மனிதன் சர்வலோகத்துடையவும் , தன்னுடையவும் மூலப் பொருளாகிய இறைவனையே தன்னிலிருந்து வெளிப்படுத்தும் ஒரு கண்ணாடியாக இருக்கிறான் என்பதுதான் மாபெரும் உண்மை .

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'
அல்லாஹ் கூறினான்:
" என் அடியான் கூடுதலான (நஃபிலான) வணக்கங்களால் என் பக்கம் நெருங்கி வந்து கொண்டேயிருப்பான். இறுதியில் அவனை நேசித்துவிடும்போது, அவன் கேட்கிற செவியாக, அவன் பார்க்கிற கண்ணாக, அவன் பற்றுகிற கையாக, அவன் நடக்கிற காலாக நான் ஆகிவிடுவேன் ."
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி : 6502.

ஆன்மாவாகிய நான் 3



மனிதர்களில் ஆன்மாவின் தாக்கத்தை அதிகம் பெற்றவர்கள் தம்மை ' இல்லாமை ' எனும் நிலைக்கு மாற்றிக் கொண்டு தனது இறைவனின் குணங்களை வெளிப்படுத்தும் துறைகளாக மாறிப் போய், அந்த ஆன்மாவின் துணை கொண்டு ஒரு காரியத்தை நிகழ்த்தும் போது அது சரீரங்களின் ( உணர்வுகளின் ) வழக்கத்திற்கு மாற்றமாக இருப்பதால், அதனை " முஃஜிஸத் " என்றும் "கராமத் " என்றும் கூறப்படுகிறது.
நபிமார்களுக்கு வல்ல அல்லாஹ் “முஃஜிஸத்” என்ற அற்புதத்தைக் கொடுத்தான் அதைக் கொண்டு அவர்கள் “ரிஸாலத், நுபுவ்வத்” என்பவற்றை நிலைநிறுத்தினார்கள்.
அதேபோல் வலிமார்களுக்கு இறைவன் “கராமத்” என்ற அற்புதத்தைக் கொடுத்தான். அதைக் கொண்டு அவர்கள் “விலாயத்” என்பதை உலகில் நிறுவினார்கள்.
இரண்டின் மூலமாக வெளியாகும் செயல்கள் ஒன்றுதான். ஆயினும் நபிமார்கள் , வலிமார்கள் என்று பிரித்துக் காட்டுவதற்காக முஃஜிஸத், கறாமத் என்று சொல்லப்பட்டுள்ளது.

அந்த அடிப்படையில் அல்லாஹ் அவனை நேசம் கொள்கின்ற இறை நேசர்களுக்கு அற்புதங்களைக் கொடுக்கிறான். அதன் மூலம் பல அரிய நிகழ்வுகளும், அசாத்தியமான நிகழ்வுகளும் அவர்களிடமிருந்து வெளிப்படுகிறது.

விஷத்தை உண்டும் சாகாத நிலை, மரணித்தவரை துஆச் செய்து எழுப்பும் நிலை, மயக்க மருந்தில்லா அறுவைச் சிகிச்சை போன்ற அசாத்தியாமான நிகழ்வுகள் ஏற்படுகின்றன. ஆகவே இப்படியான வழக்கத்திற்கு மாற்றமான நிகழ்வுகளே 'கராமத்' என்று செல்லப்படுகின்றன.

இதில் சரீரங்கள் அனைத்தையும் இயக்கக்கூடிய மூலப்பொருளாக ஆன்மா இருப்பதால், சர்வ உலகங்களும் இந்த ஆன்மாவிற்கு அடிமைப் பொருட்களாக இருக்கின்றன என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும் .
இதனை ஆதாரப்படுத்தும் வகையில் தான் இப்பூவுலகிற்கு வருகை தந்த இறைத்தூதர்களாகிய நபிமார்கள் தமது வாழ்க்கையில் எண்ணற்ற பல்வேறு வகையான அற்புதங்களை நிகழ்த்திக் காட்டியதாகும்.
உதாரணமாக ஒரு மனிதனுக்குள் " நான் " என்பதாக உறைந்துள்ள ஆன்மாவானது அவனைவிட்டு அகன்று விடும் போது, அந்த ' நான் ' என்பதை தனக்குள் புகுந்துள்ள (ஆன்மாவின் தன்மைகளை தனக்குள் இருந்து வெளிப்படுத்திக்கொண்டுள்ள ) ஒருவர் தனது ' நான் ' எனும் ஆன்மாவில் இருந்து அதை இழந்து விட்டவருக்குள் நான் என்பதை மீண்டும் ஏற்படுத்தியதாகும் . இதற்கு ஈஸா (அலை) அவர்களை நாம் உதாரணமாகக் காட்டலாம்.

இதுபோன்றே மேலே நாம் சொல்லியது போல ' நான் ' என்பதிலிருந்து தான் திடப் பொருட்களான சரீரகங்கள் அனைத்தும் தோன்றிற்று ( இதில் மண் ,தண்ணீர், காற்று, நெருப்பு போன்றவை அனைத்தும் உள்ளடங்கும் ) என்பதுபோல முதன்மையும் இறுதி நிலையையும் பெற்றவரான முஹம்மது நபி ஸல்லல்லாஹ் அலைஹி வஸல்லம் அவர்களின் தோழர் பெருமக்கள் தண்ணீருக்காக அலைபாய்ந்தபோது அருமை நபியவர்கள் தமது விரலிருந்து தண்ணீர் பாய்ந்து ஓடும் செய்ததும்,

அபூஜஹ்லுடைய கரத்தில் இருந்த கற்களை பேச வைத்ததும், உடும்பை வாய் திறந்து பேச வைத்ததும், மரம் மட்டைகள் போன்றவை நபியவர்களுக்கு ஸலாம் சொன்னதும் போன்ற இவை அனைத்தும் அந்த ஆன்மாவின் செயல் என்பதை நாம் விளங்கிக்கொள்ள வேண்டும்.

இந்த இடத்தில் இன்னொரு முக்கியமான விஷயத்தை நாம் விளங்கிக் கொள்ள வேண்டும். அதாவது எந்தப் பொருளுக்குரிய தன்மைகள் ஒருவருக்குள் மிகைத்திருக்கின்றதோ அந்த பொருளுக்குரிய செயல்பாடு அவருக்குள் இருந்து வெளிப்படும் .இதுதான் இயற்கையின் நியதி.
இந்நிலையில் ஒருவர் தமக்குள் இருந்து தமது தேகத்திற்குரிய தன்மை மிகைத்திருப்பதைக் கண்டால் அவருக்குள்ளிருந்து அந்த தேகத்திற்குரிய செயல்பாடுகள்தான் வெளியாகும்.

இதுபோன்றே ஒருவருக்குள் அவருடைய ஆன்மாவின் தன்மை மிகைத்திருக்குமாயின் அவருக்குள்ளிருந்து அப்போது அவரது ஆன்மாவின் தன்மைக்குரிய செயல்பாடுகள்தான் வெளியாகும்.
இதுபோல, தேகத்தின் தன்மைகளை ஒழித்து ஆன்மாவின் தன்மைகளை மட்டும் தனக்குள் மிகைப்படுத்திக் கொண்டுள்ள ஒருவர் தமது இறப்புக்குப் பின்னரும் உடல் அழியாமல் நிலைத்து இருப்பார் என்பதில் ஆச்சரியமோ அதிசயமோ எதுவும் இல்லை.

وَلَا تَحْسَبَنَّ الَّذِيْنَ قُتِلُوْا فِىْ سَبِيْلِ اللّٰهِ اَمْوَاتًا ‌ بَلْ اَحْيَآءٌ عِنْدَ رَبِّهِمْ يُرْزَقُوْنَۙ
(நம்பிக்கையாளர்களே!) அல்லாஹ்வின் பாதையில் (போர் செய்து) வெட்டப்பட்டோரை இறந்துவிட்டவர்களென நீங்கள் ஒருபோதும் எண்ண வேண்டாம். அவர்கள் தம் இறைவனிடத்தில் நிச்சயமாக உயிரோடு இருக்கின்றார்கள். (அன்றி) அவர்களுக்கு உணவும் அளிக்கப்படுகிறது.
(அல்குர்ஆன் : 3:169)

ரஹ்மத் ராஜகுமாரன் .

ஆன்மாவாகிய நான் 4



ஒரு சமயம் நபி (ஸல்) அவர்கள் தபூக்கு யுத்தத்தில் வெற்றி பெற்று ஜெயபேரிகையுடன் நபித்தோழர்கள் சகிதம் மதீனா நகருக்குள் நுழைகிற போது, " சிறிய போரிலிருந்து பெரிய போர் அளவில் மீண்டுள்ளோம் " என்றார்கள் .
உடனே , நபித்தோழர்கள் , " யா ரசூல்லாஹ்..! இப்போது போர் (பீஸபீல்) செய்துதானே திரும்பினோம். இதைவிட பெரிய போர் யாது ?" என வினவ,
**"நபுஸுடன் போராடுவதுதான் பெரிய போராட்டம்" என்றார்கள் .**

"அல்லாஹ்வுக்கு வழிபட்டு தன்னுடைய நபுஸுடன் போர் புரிபவர் எவரோ அவரே வீரர்" - மிஷ்காத் .
"முஷ்ரிக்குடன் யுத்தஞ் செய்து வெட்டப்பட்டு, ஷஹீதானாலும் சரி; தம்முடைய நப்ஸுடன் ஆத்மார்த்தமாகப் போர் செய்து அதை வெட்டி வீழ்த்தினாலும் சரி, இரண்டுமே யுத்தம்தான் . - முஹ்யித்தீன் இபுனு அறபி தப்ஸீர் 1-வது பாகம் பக் 137

இவ்வாறாக அல்லாஹ்வின் பாதையில் ஷஹீதானவர்கள் தத்துவாதிகளைப் பொதிந்து ஜோதி ஒளியில் ஐக்கியமாகி விடுகிறபடியால், இறந்தும் உயிர் உள்ளவர்களாகி, இறைவனிடம் உணவு பெறுகிறார்கள்.
ஒரு இல்லத்தில் இருந்து மறு இல்லத்திற்கு மாறுகிறார்கள் . தன் ( நான் என்கிற ) நப்ஸோடு போர் செய்து, அதைக் கொன்றொழித்தவர்களின் ஹயாத்தானது மவுத்தில் ஹயாத்தாய் , ஒளியோடு ஒளியாய் சேர்ந்துக் கொள்வதாய் சொல்லப்படுகிறது.

ஜாபிர் (ரலி) அவர்களின் தகப்பனார் அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் உஹது போரில் ஹஷீதாக்கப்பட்டு கபறில் நல் அடக்கம் செய்யப்பட்டார்கள்.
ஜாபிர் (ரலி) கூறியதாவது : "ஒரே கபறில் என் தகப்பனார் உடலுடன் மற்றவர் உடல்களும் நல்லடக்கம் செய்யப்பட்டது. இதை என் மனம் விரும்பவில்லை, ஆறு மாதங்களுக்குப் பிறகு, என் தகப்பனர் உடலை தோண்டி எடுத்தேன். காதில் சிறு மாற்றத்தை தவிர, வேறு எந்த மாற்றமுமின்றி உடல் உறுப்புக்கள் அனைத்தும் அப்படியே இருந்தன. புகாரி ( 1351)
ஹஜரத் முஆவியா (ரலி ) அவர்களின் ஆட்சிக்காலத்தில் உஹது வழியாக வாய்க்கால் தோண்டப்பட்டது .அப்போது அந்த இடத்தில் யாருக்கு கபறு உள்ளதோ அவர்கள் அதை தோண்டி எடுத்து வேறு இடத்துக்கு மாற்றி கொள்ளலாம் என்று பொது அறிவிப்பு ஒன்று செய்யப்பட்டது.
அப்போது ஜாபர் ( ரலி) அவர்கள் தனது தகப்பனருடைய கபறைத் தோண்டி வேறு இடத்திற்கு மாற்றினார்கள் இது இரண்டாவது முறை இது அடக்கம் செய்யப்பட்டு 40 வருடங்களுக்குப் பிறகு நிகழ்ந்தது .
வெள்ளப்பெருக்கு எடுத்து தண்ணீர் கபறுக்குள் புகுந்தது . அப்போதும் ஜாபர் (அலி ) அவர்கள் தனது தகப்பனார் கபறை தோண்டி வேறு இடத்திற்கு மாற்றினார்கள். இது மூன்றாவது முறை இது அடக்கம் செய்யப்பட்டு 46 வருடங்களுக்கு பிறகு நடந்தது.

இது சம்பந்தமாக வரும் பல்வேறு ஹதீஸ்களில் அந்த ஷுஹதாக்களின் உடல்கள் நேற்று அடக்கம் செய்யப்பட்டதைப் போல புதியதாக இருந்தது. மேலும் அவர்கள் தூங்வது போன்று இருந்தால், சாதாரணமாக மரித்துப்போனவர்களின் உடல் மரத்துப் போகும். உறுப்புகள் விரைத்துப்போகும் ரத்தம் உறைந்து குன்றிப்போகும் .ஆனால் இந்த ஷுஹதாக்களின் உடல்கள் சிதையாமல் இணைந்தே இருந்தது . உறுப்புகள் வளையும் விதத்தில் இயல்பாக இருந்தது .காயம்பட்டிருந்த இடத்திலிருந்த கையை நாங்கள் எடுத்து விட்டபோதும் காயத்தின் மீது திரும்பவும் கை வைத்துக் கொண்டார்கள். ரத்தம் சொட்டிக் கொண்டிருந்தது .
உஹதில் வாய்க்கால் தோண்டும்போது ஹஸ்ரத் ஹம்ஸா (ரலி) அவர்களின் கால் வெளிப்பட்டது. அதில் ரத்தம் கொட்டியது. தோண்டப்பட்ட மண்ணில் கூட கஸ்தூரி வாடை மணந்தது என்றெல்லாம் வரும் மணிவாசகங்கள் கூர்ந்து கவனிக்கத் தக்கதாகும்.

ரஹ்மத் ராஜகுமாரன்

ஆன்மாவாகிய நான் 6



ஒருவர் தன்னில் 'நான்' என்பதான உடல் ரீதியானவற்றை விலக்கி, அதாவது கண்ணுக்குத் தெரியும் சூக்ம உடலோடு தொடர்புகள் அற்று, கண்ணுக்குத் தெரியாத சூட்சம உடலின் ஆன்மாவோடு இரண்டற கலந்து கொள்ளும் பரம்பொருளின் எல்லைக்குள் வந்து விடுகிறான் .இந்த நிலையினை தத்துவவாதிகள் 'மனமற்ற நிலை ' என்கிறார்கள் .
இந்த நிலையினை தன்னைப் பின்பற்றும் ஒவ்வொரு முஸ்லிமும் பெற்றுக்கொள்ள வேண்டும் என்பதற்காகவே அருமை நாயகம் (ஸல் ) அவர்கள் தொழுகை, நோன்பு, ஜக்காத், ' ஹஜ் என்ற கடமைகள் ஒவ்வொன்றையும் அவர்களுக்கு தந்ததன் மூலம் அவர்கள் அந்த நிலையை பெற்றுக்கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டார்கள்.
அதனால்தான் தொழுகையை குறித்து நபி (ஸல்) அவர்கள் கூறும்போது, " தொழுகை விசுவாசிகளுக்கு மிஃராஜாகும்" என்றும் , " தொழுகையில் எனக்கு கண் குளிர்ச்சி ஏற்படுகிறது" என்றும் கூறினர்.
இனி தொழுகையை ஒருவர் தொழத் துவங்கினால் அவர் பிரபஞ்சத்தில் உள்ள ஜீவராசிகள் அனைத்தையும் தன்னோடு இணைத்துக் கொள்கிறார். அவர் நிற்கும்போது தாவர வர்க்கங்கள் அனைத்தையும் அவர் தன்னோடு முன்னிறுத்துகிறார்.
அவ்வாறு அவர் குனியும்போது விலங்கினங்கள் அத்தனையும் அவர் தன்னோடு முன் நிறுத்துகிறார்.
இதுபோன்று சிர வணக்கம் செய்யும் போது, அவர் தன்னோடு ஊர்வன வகைகள் , பறவைகள், வானவர்கள் போன்றோர் அனைவரையும் தன்னோடு முன்னிறுத்துகிறார் .
இறுதியாக அவர் இருப்பில் அமரும் போது மலைகள் போன்றவற்றை தன்னோடு முன்னிறுத்துகிறார் .

اِنَّا عَرَضْنَا الْاَمَانَةَ عَلَى السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَالْجِبَالِ فَاَبَيْنَ اَنْ يَّحْمِلْنَهَا وَاَشْفَقْنَ مِنْهَا وَ حَمَلَهَا الْاِنْسَانُ اِنَّهٗ كَانَ ظَلُوْمًا جَهُوْلًا ۙ
நிச்சயமாக "(நம்முடைய) பொறுப்பைச் சுமந்து கொள்வீர்களா?" என்று நாம் வானங்கள், பூமி, மலைகள் ஆகியவற்றிடம் வினவினோம். அதற்கு அவை அதனைப் பற்றிப் பயந்து, அதனைச் சுமந்து கொள்ளாது விலகிவிட்டன. அத்தகைய பொறுப்பைத்தான் மனிதன் சுமந்துகொண்டான். (ஆகவே) நிச்சயமாக அவன் அறியாமையால் தனக்குத்தானே தீங்கிழைத்துக் கொண்டான். (அல்குர்ஆன் : 33:72)
இந்த பொறுப்பு ரொம்பவும் சிரமானதுதான் இருந்தாலும் மனிதனே சுமந்து கொண்டான் .
இப்படி அவர் ஒவ்வொன்றையும் முன்னிறுத்தி முன்னிறுத்தி அவைகள் எதுவுமே சுய அர்த்தமற்றவை என்பதை எடுத்துக்காட்டி, அனைத்திற்கும் மூலம் அந்த 'நான் ' என்னும் சுய அர்த்தம் பொருள்தான் என்பதை உறுதிப்படுத்தி, அதனுடன் இணைந்து முன்னேறி மேலேறுவதால்தான் அதனை நபியவர்கள் மிஃராஜ் என்பதாகக் கூறுகிறார்கள்.

இமாம் அலி (ரலி) அவர்கள் கூபா பள்ளிக்கு சுபுஹ் தொழுகைக்கு வந்து முன்னின்று தொழுகை நடத்தும் போது அவர்களுக்கு பின்னால் இருந்தவனால் அம்பால் தாக்கப்படுகிறார்கள். அந்த அம்பு விலாவிற்கும் முதுகந் தண்டிறகும் இடையே பலத்த காயத்தை ஏற்படுத்தியது
மேலும் அம்பையும் எடுக்க முடியாமல் வலியின் வேதனையில் அம்பைக் கூட தொட முடியவில்லை . அது சமயம் அவர்கள் தக்பீர் கட்டி தொழும் போது, அவர்களின் எண்ணங்கள் முழுவதும் படைத்த அல்லாஹ்வை தரிக்கும் போது அலி (ரலி) அவர்களின் மீது குத்தப்பட்ட அம்பு மிக இலகுவாக எடுக்கப்பட்டது

இதுதான் ஆன்மாவின் அகமியமாகும். இதனை ஒருவர் அறிந்து கொள்வாராயினும் அவர் எந்த உலகத்திலும் அழிவு என்பதை எப்போதும் சந்திக்க மாட்டார் என்பதை ஆன்மீகவாதிகள் திட்டவட்டமாகக் கூறுகின்றனர்.

ரஹ்மத் ராஜகுமாரன்.

இப் பதிவுடன் 'ஆன்மாவாகிய நான் ' தொடர் நிறைவு பெறுகிறது.

ஒன்றே ஒன்றுதான் 1 26-6-2021



"அல்லாஹ்" என்ற அரபிச்சொல்லின் வேர்ச்சொல் "அலாஹா". அலாஹா என்றால் வணங்கப்படுவது என பொருள்.
ஆதலால் "அல்லாஹ்" என்றால் வணக்கத்திற்குத் தகுதியான ஒரே இறைவன் என்பது அதன் பொருள்.
"அல்லாஹ்'' என்பது ஒரு மொழியின் வார்த்தையாகும். அதுவும் அசல் உச்சரிப்பிலிருந்து மருவி அரபு மக்களிடம் ஏற்றதாழ 4000 வருடங்களாக புழக்கத்தில் உள்ள ஒரு வார்த்தையாகும்.

அந்த அரபு மக்களின் பெரும்பான்மையானோர் தாங்கள் வணங்கி வந்த மண், மரம், மட்டை, கற்கள், இன்னபிற மரணித்த மனிதர்கள், நம்பி இருந்த தேவதைகள் இவைகள் அனைத்தையும் 'இலாஹ்' என்று குறிப்பிட்டு வந்தனர்.

இலாஹ் என்பது பிறிதொரு சொல்லாகும். இதற்கு 'வணங்கப்படும் கடவுள்' என்பது பொருள்.
கடவுள், குதா, காட் என்ற பதங்கள் வணங்கப்படுபவை என்ற பொருளில் அவ்வாறு கூறப்படுகின்றன. அதற்குச் சமமான பொருளை உடையதே அரபு மொழியில் உள்ள 'இலாஹ்' என்ற பதம். வணங்கப்படுகின்ற எதனையும் "இலாஹ் " என்று கூறலாம்.

பல வணங்கப்படுபவைகளை உருவாக்கிக் கொண்ட அவர்கள், இவை அனைத்தையும் கடந்து ஒரு பெரிய சக்தி இருக்கின்றது என்றும் அதற்கு "அல்லாஹ் " என்ற பெயரையும் சூட்டி வந்தார்கள். இவை அனைத்தையும் அந்த மக்களிடம் இஸ்லாம் வெளிப்படுவதற்கு முன்பிருந்த வரலாறாகும். இந்த அல்லாஹ் என்ற பெரிய கடவுள் கொள்கை சித்தாந்தம் அரபு மக்களிடம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நிலைபெற்ற ஒன்றாகும்.

பெரியக் கடவுள் (அல்லாஹ்), குட்டிக் கடவுள்கள்(இலாஹ்) என்ற பலவீன சித்தாந்தத்தை இஸ்லாம் முறைப்படுத்தி பல்வேறு குட்டிக் கடவுள்களையெல்லாம் களைந்து விட்டு, அந்த மாபெரும் சக்தியான ஒரே இறைவனை (அரபு மொழிக் குறியீடான அல்லாஹ்வை) நிலைபெறச் செய்தது. .

اَجَعَلَ الْاٰلِهَةَ اِلٰهًا وَّاحِدًا اِنَّ هٰذَا لَشَىْءٌ عُجَابٌ
"பல கடவுள்கள் வேண்டாமென்று (இவர்) ஒரேக் கடவுளாக ஆக்கிவிட்டாரா. இது ஆச்சரியமான ஒன்றுதான் என்று (அந்த அரபு மக்கள்) கூறினர்". (அல் குர்ஆன் 38:5)

"இலாஹ் " என்ற பொதுப் பெயருடன் "அல் " என்ற குறிப்புப் பெயரும் சேர்ந்ததே "அல்லாஹ்" என்பதாக மொழியியல் வல்லுனர்கள் கூறினாலும் , " இலாஹ்" என்னும் சொல் இறைவனைத் தவிரப் பிறவற்றிற்கு ஆளப்பட்டமையால்,
'அல் + இலாஹ்' = ' அல்லாஹ் ' என்னும் இரு சொற்களின் இணைப்பாக இதனக் கருத இயலாது.
'அல்லாஹ்' என்ற சொல்லோ வேறு எதனையும் குறிப்பதற்காக அன்றி ஒரே ஒரு பரம்பொருளைக் குறிப்பதற்காகவே மிகப் பழங்காலத்திலிருந்து அரபியர்களால் பயன்படுத்தப்பட்டு வந்தது.

'அல்லாஹ் ' என்னும் சொல் ஆண் பாலையோ பெண் பாலையோ குறிக்காது. அதை போன்றே பன்மையும் இல்லை. இந்நிலையிலேயே திருக்குர்ஆன் என்ற இஸ்லாமியர்களின்
வேதம் 'அல்லாஹ் ' என்ற வார்த்தையை அறிமுகப்படுத்துகின்றது. இதுவே அல்லாஹ் என்ற சொல்லின் மாபெரும் சிறப்பு,

அச்சொல்லிலிருந்து இடது பக்கமாக ஒவ்வொரு எழுத்தாக நீக்கி வந்தாலும், பொருட் சிதைவின்றி லில்லாஹ் ,லஹு , ஹு என்பதாக அவை அல்லாஹ்வேயே சுட்டிக் காட்டுகின்ற தன்மையைக் காணலாம் .
ரஹ்மத் ராஜகுமாரன்

ஒன்றே ஒன்றுதான் 2




எங்கும் ஏகன் அல்லாஹ்
அங்கிங்கெணாதபடி எங்கும் இருக்கிறான் இறைவன் என்னும் கருத்துக்கு மாற்று கருத்து மாற்றாரிடமும் இல்லை.
இறைவன் நமக்கு அருகில் நம்முடன் நெருங்கி இருப்பதை இயம்பும் இறைமறை குர்ஆனின் வசனங்கள்.
"நீங்கள் எங்கிருப்பினும் அல்லாஹ் உற்று நோக்கிக் கொண்டிருக்கிறான்'' (57-04).
"அல்லாஹ் அனைத்தின் மீதும் ஆற்றல் உடையவன்''
குர்ஆன் (2-284, 3-29)
"நீங்கள் செய்யும் மறைவான அனைத்தையும் அல்லாஹ் நன்கறிவான்'' (2-271)
"அல்லாஹ் அவனின் அடியார்களை உற்று நோக்கியவனாக இருக்கிறான்'' (3-20).
"நாம் மனிதனைப் படைத்தோம். அவன் மனம் அவனிடம் என்ன பேசுகிறது என்பதையும் நாம் அறிவோம். அன்றியும் அவனின் பிடரி நரம்பை விட நாம் அவனுக்கு அருகில் இருக்கிறோம்'' (50-16),
"(நபியே) உங்களிடம் என் அடியார்கள் என்னைப் பற்றி கேட்டால் நிச்சயமாக நான் சமீபமாகவே இருக்கிறேன். என்னை அழைத்தால் அந்த அழைப்பாளரின் அழைப்புக்கு விடை அளிப்பேன். ஆதலால் அவர்கள் என்னிடமே பிரார்த்தனை செய்யவும். என்னையே நம்பவும். அவர்கள் நேரான வழியை அடைவார்கள் (2-186).
"இறக்கும் நிலையில் உள்ளவனுக்கு அருகில் இருக்கின்றோம். நீங்கள் பார்ப்பதில்லை'' (56-85).
சிரமத்தில் சிக்கிய மனிதனின் அபய குரலைக் கேட்டு அல்லாஹ் அவனின் சிரமத்தை நீக்குவான்'' (27-62).

அண்ணல் நபி (ஸல்) அவர்களும், அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களும் மக்கத்து குறைஷிகளின் கொடூர தொல்லைகளை விட்டு மதீனாவிற்கு ஹிஜ்ரத் பயணம் புறப்பட்டனர். மக்காவிற்குத் தெற்கே மூன்று மைல் தொலைவில் இருந்த தௌர் குகையில் தங்கினர்.

கோமான் நபி (ஸல்) அவர்களைக் கொல்ல நினைத்து ஏமாற்றம் அடைந்த கொலைகாரர்கள் பல குழுக்களாகப் பிரிந்து பல குன்றுகளிலும் தேடினர்.

ஒரு குழு தௌர் குகையை அடைந்து வாயிலில் நின்றது. அவர்கள் உள்ளே சென்று பார்க்கலாமா? என்று பேசியதைக் கேட்ட அபூபக்கர் (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் நாம் இருவர் தானே இங்கு இருக்கிறோம். கொலை வெறியர் பெருங்குழுவாக நிற்கின்றனரே என்றார்கள்.
ஏந்தல் நபி (ஸல்) அவர்கள் "நாம் இருவரல்ல. நம்மோடு அல்லாஹ் இருக்கிறான். அஞ்சற்க!'' என்றுரைத்து அச்சம் தவிர்த்தார்கள். கோமான் நபி (ஸல்) அவர்கள் கூறிய பதிலைக் குர்ஆனின் 9-40 ஆவது வசனம் உரைக்கிறது.

தௌர் குகை வாயிலில் சிலந்தி வலையையும் புறா கூட்டையும் கண்டு உள்ளே மனிதர்கள் இருக்க மாட்டார்கள் என்று கொலை வெறி கூட்டம் திரும்பிய நிகழ்ச்சியைச் சிலந்தி நூற்ற வலையாலும், புறா கட்டிய கூட்டினாலும் அல்லாஹ் அளித்த பாதுகாப்பு உயர்ந்த கோட்டைகளைக் காட்டிலும் மேலான பாதுகாப்பாகி விட்டது என்று புர்தா ஷரீப் என்ற அரபி காவியத்தில் பூசரி இமாம் (ரஹ்) கவினுற காட்சி படுத்துகிறார்கள்.

**இந்நிகழ்ச்சியைச் சதாவதானி செய்குதம்பி பாவலர் செய்தமிழில் பாடுகிறார்.**
**"ஒன்னலரோ பற்பலர்நா மோவிருவர் உற்றடந்தா**
**லென்ன செய்வதென்ற முங்க இல்லையில்லை யாமூவர்**
**பன்னரிய யீசனும்நம் பக்கமுளன் அஞ்சலீரென்**
**நுன்னரிய வாய்மைசொற்ற ஊக்கநிலை நோக்கமோ''**

"நாங்கள் கைபர் போருக்கு அண்ணல் நபி (ஸல்) அவர்களுடன் சென்றோம். நாங்கள் மேட்டின் மீது ஏறும்பொழுதும் கணவாய்களில் இறங்கும்பொழுதும் "அல்லாஹ் அக்பர்' (இறைவன் மிக பெரியவன்) என்று உரக்க கூறினோம்.

எங்கள் அருகில் வந்த அண்ணல் நபி (ஸல்) அவர்கள் "உங்களை நீங்கள் கட்டுப்படுத்தி கொள்ளுங்கள். ஏனெனில் நீங்கள் காது கேளாதவனையோ இங்கு இல்லாதவனையோ அழைக்கவில்லை. நன்கு செவியுறுபவனையும் நானிலத்தில் நடப்பதை நன்கு அறிபவனையும் அழைக்கிறீர்கள், உங்களில் ஒருவர் தனது வாகனமான ஒட்டகத்திற்கு எவ்வளவு நெருக்கமாக இருக்கிறீர்களோ அதனினும் நெருக்கமாக உங்களுடன் இருக்கிறான் அல்லாஹ்'' அறிவிப்பவர்.
அபூமூசா அல் அஷ் அரி (ரலி) நூல்- புகாரி.

"அல்லாஹ் மறைந்தவன் அல்ல. மறக்கப்பட்டவன் அல்ல. உன்னை நீ பக்குவப்படுத்தி கொண்டால், உன் அகப் பார்வையால் அவனைக் காண்பாய்'' என்று இப்னு அதாவுல்லா இஸ்கந்தரி (ரஹ்) அறிவிப்பது ஹிகம் என்ற நூலில் உள்ளது.

மகான் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) நம் துன்பங்களுக்கான காரணத்தைக் கூறுகிறார். "நம் சகல கேடுகளுக்கும் மூல காரணம் இறைவனை விட்டு விலகி தொலைவில் கிடப்பதும், இறைவன் அல்லாதவற்றைப் பற்றிப் பிடித்துக் கொண்டிருப்பதும்தான்''.

இறைவனை விட்டு விலகாதிருக்க வீணான செயல்களில் ஈடுபடாதிருக்க மனிதர்களை எச்சரிக்கிறது புனித குர்ஆனின் 4-1 ஆவது வசனம்.
"மனிதர்களே! உங்கள் இறைவனுக்கு அஞ்சி நடந்து கொள்ளுங்கள். நிச்சயம் அல்லாஹ் உங்களை கண்காணிக்கிறான்''.

இக் குர்ஆன் கூற்றுப்படி அல்லாஹ், நம் அருகில் கண்காணிப்பதை அறிந்து புரிந்து உணர்ந்து அல்லாஹ்விற்கு அஞ்சி அருமறை குர்ஆன் கூறும் அறநெறியில் ஒழுகி ஒப்புயர்வற்று செப்பமுற வாழ்ந்து காட்டிய வள்ளல் நபி (ஸல்) அவர்களின் வழியில் வாழ்வோம். - மு.அ. அபுல் அமீன் பதிவிலிருந்து
ரஹ்மத் ராஜகுமாரன் .

ஒன்றே ஒன்றுதான் 3



**வஹ்ததுல் வுஜூத்** என்கிற இந்த பாடம் அல்லாஹுு தஆலாவை அறிதல் அதாவது ' **மஃரிபத்துல்லாஹ்**' என்று பெயர்.
இனி வரக்கூடிய அரபு சொற்களுக்கு தமிழ் அர்த்தங்களை அவ்வப்போது சொல்லிக் கொண்டே வருகிறேன் . புரியவில்லையே என்று கடந்து போகாதீர்கள் .

அல்லாஹ் என்ற பெயர் மட்டும் "தாத்"தின் பெயரென்றும், ஏனைய பெயர்கள் யாவும் "ஸிபாத்" அவனின் தன்மைகளைக் குறிக்கும் பெயர்கள் ஆகும்.

தன்மைகளுக்குரிய பெயர்களை எந்த மொழியிலும் மொழியாக்கம் செய்யலாம். உதாரணமாக "றஸ்ஸாக்" உணவளிப்பவன், "ஹாதீ" நேர்வழி காட்டுபவன் என்பது போன்று. ஆயினும் "தாத்"தின் திருப்பெயரான "அல்லாஹ்" என்ற பெயரை எந்த மொழியிலும் மொழியாக்கம் செய்ய முடியாது. கடவுள், இறைவன் என்று சொன்னாலும் கூட அது "அல்லாஹ்" என்ற திருப்பெயரின் மொழியாக்கம் என்று கொள்ள முடியாது. கொள்ளவும் கூடாதென்பதே கருத்தாகும்.

அல்லாஹுுத் தஆலாவுக்கு தாத்து உண்டென்று மாத்திரம் அறிந்திருக்க வேண்டியதல்லாமல் அந்த தாத்து எது எப்படிப்பட்டது என்று ஆராய்தறியக் கூடாது. அந்த தாத்து ஜௌஹரா (ஆதாரம்) இராது.
அவனுக்கு ஸிபத்து ( பண்பு) உண்டு,பிஅல் (செயல் ) உண்டு , இஸ்மு (நாமம்) உண்டு .
அல்லாஹுுத் தஆலா
**1) உஜூதாகிய உள்ளமையும்,**
**2) கிதமாகிய பூர்வமும்,**
**3) பகாவாகிய அழியாமையும்,**
**4) முகாலபத்துன் லில்ஹவாதிதாகிய ஒப்பில்லாமையும் ,**
**5) கியாமு பிநப்ஸிஹியாகிய தன்னில் தானிருத்தலும் ,**
**6) வஹ்தானிய்யத்தாகிய ஒருமையுமுள்ளவன்.**
**இந்த 6 வகை ஸிபத்துகள் அல்லாமல் ..**
**1) ஹயாத்து (ஜீவன்) ,**
**2) இல்மு (அறிவு) ,**
**3) இறாதத்து ( நாட்டம் ) ,**
**4) குதறத்து (தத்துவம்) ,**
**5) ஸம்உ ( கேள்வி) ,**
**6) பஸனு (பார்வை) ,**
**7) கலாம் (பேச்சு)**
**என்னும் 7 ஸிபத்துகள் அவனுக்கு உண்டு** .
ஆகையால் அவன் ரூஹின்றி (ஆன்மா) ஹயாத்துள்ளவன் ,
புத்தியின்றி அறிவுள்ளவன் ,
இருதயமின்றி நாட்டமுள்ளவன் ,

அவயவமின்றித் தத்துவமுள்ளவன்,
செவியின்றிக் கேள்வியுள்ளவன் ,
கண்ணின்றி பார்வையுள்ளவன் ,
நாவின்றி பேச்சுள்ளவன் ,
ஆனால் இந்த ஸிபத்துகளெல்லாம் வாஜிபு (அவசியம்) என்று சொல்லப்படும் .
இவற்றிற்கு மறுதலையான ஸிபத்துகளும் உண்டு. அவற்றிற்கு முஸ்தஹீல் (ஒன்னாமை) இதற்கு எதிர்பதம் ஜாயிஸு (இடம்பாடு) என்று பெயர் . அவை

**1) முஸ்தஹீல் (ஒன்னாமை)**
**2) இல்லாமை,**
**3) அபூர்வம்,**
**4) அழிவுடமை ,**
**5) வேறொன்றிலிருத்தல் ,**
**6) பன்மை**
**ஆகிய ஆறு மறுதலையான ஸிபத்துக்கள் உண்டு**
**1) மரணம்**
**2) மூடம்**
**3) நாட்டமின்மை**
**4) இயலாமை**
**5) செவிடு**
**6) குருடு**
**7) ஊமை**
**ஆகிய 7ஸிபத்துகள் அன்றியும் ஜாயிஸான மறுதலையான ஸிபத்துகள் அநேகம் உண்டு**.

மேலும்
**1) ஆக்கல்**
**2) அழித்தல்**
**3) இரட்சித்தல்**
**4 ) காத்தல்**
அல்லாஹுத்தஆலாவின் செயலுக்கு கருவியும் , காலமும் இல்லை. அதில் தாமதம் , தடை, தேவை, மிடை , பிராசை, சடைவு இவைகளில் ஒன்றும் இராது .

எந்த பொருளை எவ்விதம் உண்டாக்க நாடுவானனோ அந்த பொருளை அவ்விதமே உண்டாக்குவான். ஆனால் அவன் உண்டாக்கப்பட்டதில் ஆலமுல் அம்று என்றும் ஆலமுல் கல்கு என்றும் இரு வகை உண்டு
ஆலமுல் அம்று ஏதுமின்றி உண்டானது அவை அறுவாஹ் (ஆத்மா) போன்றவை .
ஆலமுல் கல்கு என்பது ஏதுவால் உண்டானது என்பதைப் பற்றி அஜ்ஸாம் (ஜடப் பொருட்கள்) போன்றவை.
அவன் ஆதியில் தன்னில் தானாய் தானன்றி ஒரு பொருளும் இல்லாது இருக்கையிலேயே தன்னை அறியத்தக்க ஒன்றை உண்டாக்க நாடியிருந்தான். அந்த நாட்டத்தின்படி பிரபஞ்சத்தைப் படைத்தான் .
உலகத்தை படைக்கும் முன்னமே எல்லாவற்றையும் பற்றி பொதுவும், விவரமுமாகக் கற்பனை செய்திருக்கிறான். அந்தப் பொது கற்பனையை 'கலா ' என்றும், விவரக் கற்பனையை 'கதறு 'என்றும் சொல்வார்கள்.

அவன் படைக்கும் கர்மமும், பொருளும் படைக்கும் முன் அஃயான் தாபித்தா என்றும் ,படைத்த பின் அஃயான் காறிஜா என்றும் சொல்லப்படும்.
ஒரு அணுவாவது அவன் ஆக்காமல் ஆவதும் இல்லை. அழிக்காமல் அழிவதும் இல்லை. அவன் தன் நாட்டத்திற்கு மாறு செய்கிறவனும் அல்ல .
அல்லாஹ்வின் திருநாமங்கள் 99 .அவை அல்லாஹ், ரஹ்மான், ரஹீம் , முதலானவாம்

இவ்வித மகத்துவமும், மேன்மையும், தகுதியும், சிறப்பும் உள்ளவனும் , எவ்வித குறையும் அற்றவனுமாகிய அல்லாஹுத் தஆலாவுக்கே வணங்கப்படும் பாத்தியம் உரித்தது அன்றி வேறு யாருக்கும் அல்ல.
இவ்விதமாக அல்லாஹுத் தஆலா அறியவேண்டியது கடமை. ஒருவன் இவ்விதம் அறிந்தால் அவனை ஆரிபு (ஞானி) என்று சொல்லலாம் . இவ்வித அறிவுடன் அவன் மவுத்தானால் தடையின்றி மோட்சம் அடைவான். இந்த அறியுதலில் முதன்மையானதும், ஈமானில் முக்கியமானதும் ஆகும்

சகோதரர்களே..! இந்த பரிசுத்த மெய்யறிலை நாம் ஒவ்வொருவரும் கற்றறிந்து அதன் அந்தரங்கங்களையும் தெளிந்து தேற வேண்டியது முக்கிய கடமை. இவ்விதமே கற்றறிந்து தெளிந்து தேறி மோட்சம் அடையும்படி நம் அனைவருக்கும் அல்லாஹுத்தஆலா அருள் புரிவானாக ஆமீன்.
ரஹ்மத் ராஜகுமாரன்

**Mashook Rahman**[**Rahmath Rajakumaran**](#) சார் 99 ஏன்? ஏன் நூறு இல்லை? இந்த கேள்விக்கு ஏதும் தத்துவ விளக்கம் கிடைக்குமா?

**Rahmath Rajakumaran**

**Mashook Rahman** எண்களில் ஆதி 1 , அந்தம் 9 . 6666 வசனங்கள் கொண்ட குர்ஆனில் அவனின் திருநாமங்கள் 99 வரைதான் அவனே குறிப்பிட்டுள்ளான் .ஒன்றை கூட்டி 100 ஆக ஆக்கவில்லை..அவனே ஆதியும் அந்தமுமானவன். ஆகையால் 99 .
999 பெயர் நாமங்கள் அவன் தனக்கு சூட்ட விரும்பினால் , குர்ஆன் வசனங்கள் 66,666 ஆக இருக்கலாம்

**Shaik Salihu**

ஞானியாவதற்கு இதனை கற்றால் மட்டும் போதாது. மரணத்திற்கு முன் மரணித்தல் வேண்டும். அதாவது தன்னை அழித்து தன்னை இல்லாமல் ஆக்க வேண்டும். அதற்கு ஒரு காமிலான ஷைக் கரம் பற்ற வேண்டும். அவர் வழிகாட்டலில் உண்மையாக வாழ்ந்தால் இன்ஷா அல்லாஹ் ஞானி ஆகலாம். அது அவ்வளவு சுலபமும் அல்ல. இதனை கற்றலால் மட்டும் கிட்டாது. ஷைக்கின் மூலம் தானாக புரிய வரும். ஷைகின்றி கிட்ட வே கிட்டாது.

ஒன்றே ஒன்றுதான்- 4




"இக்லாஸ் " அத்தியாயமான 112 வது சூராவில் இஸ்லாத்தின் அடிப்படை கொள்கையான ஏகத்துவம் என்ற ஓரிறைமை குறித்து இரத்தினச் சுருக்கமான நான்கே நான்கு திருவசனங்களில் சொல்லப்படுகிறது.இந்த நான்கு வசனங்களில் முதல் வசனம் :
கூறுவீராக ; " அல்லாஹ் ஒருவனே " _ குர்ஆன் 112 : 01

சொல்லப் போவதை சற்று உன்னிப்பாக கவனியுங்கள். "இக்லாஸ்" என்ற இந்த சொல் மற்ற சூராக்களில் உள்ளதைப் போன்று , இந்த அத்தியாயத்தின் வசனங்களில் எந்த இடத்திலும் சொல்லப்படாத ஒற்றைச் சொல் ' இக்லாஸ் '.

இதன் காரணத்தை உங்கள் இல்ஹாம்தான் உங்களுக்கு சொல்ல வேண்டுமே தவிர பிறர் அல்ல !
இந்தப் பதிவில் ' அஹத் ' என்ற ஒற்றை சொல்லை மட்டும் எடுத்து உங்களுக்கு விளங்குவதற்கு முயற்சிக்கிறேன்.
" சர்வ இலட்சணங்களும் பூரணமாய் அமையப் பெற்ற தனக்கு நிகரில்லாத உள்ளமையை அரபி மொழியில் "அல்லாஹ்" என்று சொல்லப்படுகிறது !
"அல்லாஹ் அஹத் : அல்லாஹ் ஒருவன் , தனித்தவன் , ஏகன் .
'ஒன்று' என்ற பொருளைக் குறிக்க அரபி மொழியில்"வாஹித்" " அஹத் " என்று இரு பதங்கள் இருக்க , இந்த சூராவில் அஹத் என்ற சொல்லை அவன் பயன்படுத்தியுள்ளான் .
காரணம் எண்ணிக்கையில் குறைந்த எண்ணாகிய ஒன்று என்பதைக் குறிப்பதற்காக மட்டும் " வாஹித் " என்ற பதம் பயன்படுத்தப்படுகிறது.
ஆனால் "அஹத் " என்ற பதமானது எந்த ஒன்றும் அந்த ஒன்றுக்குச் சமமாக இருக்க முடியாத அந்த ஒன்றை மட்டுமே குறிக்கும். நன்கு கவனிக்கவும்

**' This one is not equal to another one '**
ஒன்று, இரண்டு, மூன்று ... என்ற எண்ணிக்கையில் வரக்கூடிய ஒன்று அல்ல ; எங்கும் எப்போதும் ஏகமாய் இருக்கும் ஒன்று .இந்த ஒன்று எண்ணிக்கைக்கு வராத வார்த்தைக்கு வரக்கூடிய ஒன்று.
உதாரணமாக ஒரு மனிதன் என்பதை ரஜுலுன் வாஹிதுன் என்று சொல்லலலாம் . ரஜுலுன் அஹதன் என்று சொல்லக் கூடாது . புரியும் என நினைக்கிறேன் .

'அஹத் ' என்ற பதமானது , தனக்கு எவ்வகையிலும் நிகரில்லாத அல்லாஹ் ஒருவனை மட்டுமே குறிப்பதற்காக அவனுக்காகவே படைக்கப்பட்ட பதம்தான் "அஹத் "
"அல்லாஹ்" இறைவன் ஒருவன்தான். மொத்தத்தில் ஒருவனேயன்றி எண்ணிக்கையில் ஒருவனல்ல. எண்ணிக்கையில் ஒருவனென்றால் அவன் எண்ணப்பட்டவனாகி விடுவான்.
ஒன்று ஒன்றுதான். அதை எண்ண முடியாது. ஒருவனிடம் ஒரேயொரு எழுதுகோலைக் கொடுத்து, 'இதை எண்ணு ' என்று சொல்வது பொருத்தமில்லை. மாறாக பல எழுதுகோல்களைக் கொடுத்து, 'இதை எண்ணு ' என்றால் அது பொருத்தமானதும், அவனால் எண்ண முடிந்ததுமாகும். ஆனால் ஒரேயொரு எழுதுகோலைக் கொடுத்து இதை எண்ணு என்று சொன்னால் இது ஒன்றுதானே ஒன்றை எவ்வாறு எண்ணுவது ? என்று அவன் கோட்பான்.

ஆகையால் அல்லாஹ் ஒருவன்தான். ஆயினுமவன் எண்ணிக்கை சார்ந்த ஒருவனல்ல. மொத்தத்தில் ஒருவன் என்பதே சிறந்தது.
ஏனெனில் இறைவனைப் பற்றிக் கூறிய பலர் الله غيرُ مَحْدُوْدٍ وَغَيْرُ مَعْدُوْدٍ அல்லாஹ் கட்டுப்பாடு இல்லாதவனும், எண்ணப்படாதவனுமாவான் என்று கூறியுள்ளார்கள். அவனைக் கொண்டு “ஈமான்” நம்பிக்கை கொள்வதாயின் இவ்வாறுதான் கொள்ள வேண்டும்.
இதை எப்படி இன்னும் உங்களுக்கு விளக்குவது ?
'அஹத் ' என்பது ...
1) அநாதித்துவம் ,
2) நித்தியத்துவம் ,
3) சர்வ வியாபகத்துவம் முதலிய அவனுக்கு மட்டுமே சொந்தமான பூரண சிறப்பு வாய்ந்தது அஹத்
அஹத் என்பது.....
1 ) ஆரம்பமில்லாதிருப்பது
2) என்னென்றும் நிலைத்திருப்பது
3) எங்குமிருத்தல் .

அடுத்து, அது மாதிரி அஹதாகவன் படைத்ததும் அவனைப் போன்றே அஹதானதாகத்தானே இருக்க முடியும் ?
" எப்படி ? "
'உங்களை மாதிரி வேறு ஒருவன் இருக்கமுடியுமா ? அப்படியே இருந்தாலும் உங்களை மாதிரித்தானே யொழிய நீங்கள் அல்ல . உங்கள் கண் கருவிழி, உங்கள் கை விரல்ரேகை யாருக்கும் இதுவரையிலும் இல்லை , இனிமேலும் இருக்கப்போவதில்லை . உங்களை மாதிரி எத்தனயோ பேர்கள் , எத்தனையோ படைப்பினங்கள்..ஒன்று போல் இல்லை . இனிமேல் இருக்கப் போவதும் இல்லை. எல்லாமே தனித்தனியான படைப்புகள் ஒன்று போல் மற்றொன்றொன்று எப்போதும் இல்லவே இல்லை . "Made for Each other "
அட, ஓடுகிற நதி நீரில் முதலில் நீங்கள் தொட்ட தண்ணீர் மறுதடவை தொடும் போது , அது வேற தண்ணீரே தவிர அதுவல்ல .
அப்படியென்றால் அஹதானவன் படைத்தெல்லாமே அஹத் .

**இப்பேர்ப்பட்ட இறைவனை சொற்களில் வைத்து வர்ணிக்க முடியாது என்பதாக நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் ஆழ்வார்கள் ....**
**"சொல்லினால் தொடர்ச்சி நீ**
**சொல்லப்படும் பொருளும் நீ**
**சொல்லினால் சொல்லப்படாது**
**தோன்று கின்ற பொருளும் நீ**
**தோன்றா பொருளும் நீ ! "**
**மக்கள் கவிஞர் கபீர் ....**

" ஓ...! எப்படி என்னால் , அந்த ரகசிய வார்த்தையை உணர்த்த முடியும் ?
அவன் இப்படி இருக்கிறான் , இப்படி இல்லை என்று எப்படி என்னால் சொல்ல முடியும் ?
அவன் என்னுள் இருக்கிறான் என்றால் பிரபஞ்சமே வெட்கப்படும் . அவன் எனக்கு வெளியே இருக்கிறான் என்றால், .அது பொய்.
அவன் உள் உலகத்தையும் , வெளியுலகத்தையும் பிரிக்காமல் ஒன்றாக்குகிறான் . கவனிக்கவும் " ஒன்றாக்குகிறான் "
உணர்வதும், உணரப்படாததும் அவன் இரு பாதங்கள் . அவன் எங்கும் விரவியுமில்லை ; மறைந்தும் இல்லை .
அவன் வெளிப்பட்டதும் இல்லை . வெளிப்படாமலும் இல்லை. அவனை எது என்று சொல்ல வார்த்தைகள் ஏதும் இல்லை .
" ஹக் "_ உண்மை என்பது வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டது .
" ஞானம் " என்பதும் புலன் அறிவிற்கு அப்பாற்பட்டது .
இதனால்தானாலும் கூட இருக்கலாம்,அவன் அஹதானவனாக !

ரஹ்மத் ராஜகுமாரன்

## ஒன்றே ஒன்றுதான் 5

قُلْ هُوَ اللّٰهُ اَحَدٌ
(நபியே !) நீர் கூறுவீராக: அல்லாஹ் அவன் ஒருவனே.
اَللّٰهُ الصَّمَدُ
அல்லாஹ் (எவரிடத்தும்) தேவையற்றவன்.
لَمْ يَلِدْ ۙ وَلَمْ يُوْلَدْ ۙ
அவன் (எவரையும்) பெறவுமில்லை; (எவராலும்) பெறப்படவுமில்லை.

وَلَمْ يَكُنْ لَّهٗ كُفُوًا اَحَدٌ
அன்றியும், அவனுக்கு நிகராக எவரும் இல்லை.
குர்ஆன் (112 : 1 - 4 )

இந்த அத்தியாயத்தின் நான்கு வசனங்களில் அமைந்துள்ள ஐந்து தொடர்களும் " தால் " என்னும் ஈற்றெழுத்துடன் முடிவடைவது பல நுட்பங்கள் இருப்பதாக மறை ஞான வல்லுநர்கள் கூறுகின்றனர்.
நீண்ட அத்தியாயங்களில் கூட இதுபோன்ற தொடை நயம் - ஒளி இயைபு (Rhyme) அமைந்து திருக்குர்ஆனின் ஓசை நயத்தை உயர்வுபடுத்தக் காணலாம்.

இவ்வடிப்படையில் இக்லாஸ் அத்தியாயத்தில் இறைவனின் ஏகத்துவத்தை வலியுறுத்தும் ' அஹத் 'என்ற சொல்லின் ஈற்றெழுத்தாகிய ' தால் ' பின்வரும் நான்கு தொடர்களுக்கும் கூட ஈற்றெழுத்தாக அமைந்தது.
முதல் ' தாலுடன் ' முடிவடையும் 12 எழுத்துக்களும், தவ்ஹீதின் தாரக மந்திரமாகிய கலிமாவின் 12 எழுத்துக்களுக்கும்,

இரண்டாவது ' தாலுடன் ' முடிவடையும் எழுத்துக்கள் ஈமான், இஸ்லாம் ஆகியவற்றுக்கும் ,
மூன்றாவது ' தாலுடன் ' முடிவடையும் ஐந்து எழுத்துக்கள் நிலம், நீர், நெருப்பு. காற்று, ஆகாயம் ,ஆகிய ஐந்து பஞ்ச பூதங்களுக்கும் ,
நான்காவது ' தாலுடன் ' முடிவடையும் ஏழு எழுத்துக்கள் இன்ஸானின் (மனிதனின்) ஏழு ஸிபத்துக்களுக்கும், இறுதியில் உள்ள 15 எழுத்துக்கள் இறைவனின் 14 ஸிபத்துக்களுக்கும், தாத்துக்கும் இஷாராவாக அமைந்துள்ளது என தத்துவ மெஞ்ஞானிகள் அதற்கு விளக்கம் தந்துள்ளனர்.

" லா இலாஹ இல்லல்லாஹ் " - என்ற கலிமாவில் "இல்லை" வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர என்று ஒரே ஒரு ' இல்லை 'யை சொன்னவன் , இக்லாஸ் அத்தியாயத்தில் , தேவை ' இல்லா'தவன் (1). ( யாரையும் ) பெறவும் 'இல்லை' (2), ( யாராலும்) பெறப்படவும் 'இல்லை ' ( 3 ) , (யாரும்) அவனுக்கு நிகரானவராக 'இல்லை' (4) - ஆக நான்கு இல்லை .
கலிமாவில் கூட சொல்லப்படாத ' அஹது ' என்ற ஒற்றைச் சொல்லுக்குரியவனுக்கு நான்கு ' இல்லை '
இதுபற்றிய ஞான ரகசியங்களை அறிந்தோர் நண்பர்கள் அறியச் செய்ய பின்னூட்டமிடலாம் .

ரஹ்மத் ராஜகுமாரன் .

**Rahmath Rajakumaran**

நபி (ஸல்) அவர்கள் ஒரு மனிதரை ஒரு படைப்பிரிவுக்குத் தளபதியாக்கி அனுப்பினார்கள். அந்த தளபதிதான் அந்த படைப்பிரிவினர்க்கு தொழுகை வைப்பார்கள்.
அவர், தமது தொழுகையில் தம் தோழர்களுக்கு சூரா ஃபாத்திகா ஓதிய பின்னர் துணை சூராக்கள் (குர்ஆன் வசனங்களை) ஓதி (தொழுவித்து) வந்தார் பிறகு (ஒவ்வொரு முறையும்) ஓதி முடிக்கும் போதும் குல் ஹுவல்லாஹு அஹத் எனும் அத்தியாயத்துடன் முடிப்பார். இவ்வாறே ஒவ்வொரு முறையும் ஓதி வந்தார்.
அப்படையினர் திரும்பி வந்தபோது நபி (ஸல்) அவர்களிடம் இதைப் பற்றி தெரிவித்தனர். அப்போது நபி (ஸல்) அவர்கள், எதற்காக இப்படிச் செய்கிறார் என்று அவரிடமே கேளுங்கள் என்று கூற, அவர்களும் அவரிடம் கேட்டனர்.
அதற்கு அவர் இந்த சூரா இக்லாஸை நான் தொடர்ந்து ஓத விரும்புகிறேன் ஏனென்றால் அந்த அத்தியாயம் பேரருளாளன் (ஏகத்துவப்) பண்புகளை எடுத்துரைக்கின்றது. நான் அதை (அதிகமாக) ஓதுவதை விரும்புகின்றேன் என்று சொன்னார். (இதைக் கேள்விப்பட்ட) நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ் அவரை நேசிக்கிறான் என்று அவருக்குத் தெரிவியுங்கள் என்று கூறினார்கள்.

ஒருவர் இந்த அத்தியாயத்தின் பொருளை விளங்கி ஓதுவாரானால் அல்லாஹ் அவரை நிச்சயமாக நேசிப்பான் என்பதை இந்த ஹதீஸ் மூலம் விளங்கிக் கொள்ள முடியும். அல்லாஹ்வுக்கு அவரைப் பிடித்துவிட்டால் அவர் நினைப்பதெல்லாம் கிடைக்கும். இது ஸஹீஹ் ஆன ஹதீஸ் ஆகும்.
அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி)
நூல்கள்: புகாரி 7375, முஸ்லிம் 1481

**Rahmath Rajakumaran**

நபி (ஸல்) அவர்கள் (மக்களை நோக்கி), ஓர் இரவில் குர்ஆன் மூன்றில் ஒரு பகுதியை உங்களில் ஒருவரால் ஓத முடியுமா? என்று கேட்டார்கள்.
(ஒரே இரவில்) எவ்வாறு குர்ஆன் மூன்றிலொரு பகுதியை ஓத இயலும்? என்று மக்கள் கேட்டார்கள்.
நபி (ஸல்) அவர்கள் குல் ஹுவல்லாஹு அஹத் (என்று தொடங்கும் 112 ஆவது அத்தியாயம்) குர்ஆன் மூன்றிலொரு பங்கிற்கு ஈடானதாகும் என்று கூறினார்கள்.
அபூதர்தா (ரலி) நூல்: முஸ்லிம் 1477, புகாரி 5014

ஒன்றே ஒன்றுதான் 6



இறைவன் இருக்கின்றானா ?

யார் என்னதான் சொன்னாலும், மனசுக்கு திருப்தியே அடையாத ஒரு கேள்வி இருக்கிறது . கடவுள் இருக்கிறாரா, இல்லையா? என்னதான் சமாதானம் கொடுத்தாலும், நம்ப முடிவதே இல்லை.
"ஆணல்லன் பெண் அல்லன் ; அல்லாது அலியுமல்லன் காணலும் ஆகான் .
உளன் அல்லன் ; இல்லையல்லன் பேணுங்கால் பேணும் உருவும் ஆகும்.
அல்லனுமாம் கோனை பெரிதுடைத்து எம் பொம்மானைக் கூறுதலே !
(அவன் ஆணோ , பெண்ணோ , நபும்சகனோ அல்லன். அவனைப் பார்க்க முடியாது. இருப்பவனுமல்லன். இல்லையுமல்லன். நான் எப்படி பேணுகிறோமோ அந்த உருவாகும். அதுவும் அல்லன். என் கடவுளே கூறுவது பிரயாசம் (கோணை மிக்கது) என் கடவுளை கூறுவது ரொம்ப கடினமானது " என்று பாடலை முடிக்கிறார் பத்து பாடல்களில் நம்மாழ்வார் .

நபிமார்களின் பகுத்தறிவாளரான நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் இறைஞானம் பெற்றதை இறைவன் குர்ஆனிலேயே வர்ணிக்கிறான்....
(ஒரு நாள்) இருள் சூழ்ந்த இரவில் அவர் (மின்னிக் கொண்டிருந்த) ஒரு நட்சத்திரத்தைக் கண்டு "இது என்னுடைய இறைவன் (ஆகுமா?)" என (தம் மக்களைக்) கேட்டு அது மறையவே, "மறையக்கூடியவற்றை (இறைவனாக எடுத்துக்கொள்ள) நான் விரும்பமாட்டேன்" எனக் கூறிவிட்டார்.

பின்னர் உதயமான சந்திரனைக் காணவே "இது என்னுடைய இறைவன் (ஆகுமா?)" எனக் கேட்டு, அதுவும் அஸ்தமித்து மறையவே (அதனையும் நிராகரித்துவிட்டு) "எனது இறைவன் எனக்கு நேரான வழியை அறிவிக்காவிட்டால் வழி தவறிய மக்களில் நிச்சயமாக நானும் ஒருவனாகிவிடுவேன்" என்று கூறினார்.

பின்னர் உதயமான (பளிச்சென்று நன்கு ஒளிரும்) சூரியனைக் கண்டபொழுது "இது மிகப்பெரியதாயிருக்கிறது. இது என்னுடைய இறைவன் (ஆகுமா?)" எனக் கேட்டு, அதுவும் அஸ்தமித்து மறையவே அவர் (தம் மக்களை நோக்கி) "என் மக்களே! நீங்கள் (இறைவனுக்கு) இணையாக்கும் (இவை) ஒவ்வொன்றிலிருந்தும் நிச்சயமாக நான் விலகிக் கொண்டேன்" என்று கூறிவிட்டு,

“வானங்களையும் பூமியையும் படைத்தவன் பக்கமே நான் உறுதியாக என் முகத்தைத் திருப்பிக் கொண்டேன்; நான் முஷ்ரிக்கானவனாக - (இணைவைப்போரில் ஒருவனாக) இருக்க மாட்டேன்” (என்று கூறினார்).
அவருடன் அவருடைய கூட்டத்தார் விவாதித்தார்கள்; அதற்கவர் “அல்லாஹ்வைப் பற்றியா என்னிடம் தர்க்கம் செய்கிறீர்கள்? அவன் நிச்சயமாக எனக்கு நேர்வழி காட்டிவிட்டான்; நீங்கள் அவனுக்கு இணையாக்குபவற்றைப் பற்றி நான் பயப்படமாட்டேன்; என் இறைவன் எதையாவது நாடினாலன்றி (எதுவும் நிகழ்ந்து விடாது); என் இறைவன் (தன்) ஞானத்தால் எல்லாப் பொருட்களையும் சூழ்ந்திருக்கின்றான்; இதை நீங்கள் சிந்திக்க வேண்டாமா?” என்று கூறினார்.
(அல்குர்ஆன் : 6: 76 - 80)

குருடன் ஒருவன் புத்தரிடம் கொண்டுவரப்பட்டான்.அவன் ஒரு தத்துவவாதியாக மிகவும் வாதாடுபவனாக இருந்தான். அவன்
கிராமத்தாரிடம் வெளிச்சம் என்பதே கிடையாது.நான் குருடனாக இருப்பதை போலவே நீங்கள் எல்லோரும் குருடர்கள்.நான் அதை அறிந்து கொண்டேன், நீங்கள் அதை அறியவில்லை,அதுதான் வித்தியாசம் என்று கூறி வாதிட்டான்.
இதை அவன் கண்கள் உள்ள கிராம மக்களிடம் கூறி கொண்டிருந்தான்.அந்த கிராமத்து மக்களே ஒன்றும் பேச முடியாத அளவிற்கு அவன் வாதிடுவதில் வல்லவனாக இருந்தான். அவனை என்ன செய்வது என்று தெரியாமல் கிராமத்தார் தவித்தனர்.
அவன் அவர்களிடம் நீங்கள் கூறும் வெளிச்சத்தை கொண்டு வாருங்கள்.நான் அதை ருசித்து பார்க்கிறேன் , இல்லை நுகர்ந்து பார்க்கிறேன் , இல்லை,தொட்டு பார்க்கிறேன். அதன் பின்தான் நான் நம்ப முடியும்.என்று கூறினான். வெளிச்சத்தை தொடமுடியாது,ருசிக்க முடியாது.நுகரவும் முடியாது. கேட்கவும் முடியாது..

ஆனால் இந்த குருட்டு மனிதனுக்கு உள்ளவையோ
இந்த நான்கு புலன்கள்தான். ஆகவே அவன் வெற்றியடைந்து விட்டதாக சிரிப்பான்.பாருங்கள் ஒளி என்று கிடையாது.உண்டு எனில் எனக்கு நிருபித்து காட்டுங்கள் என்று கூறுவான்.
புத்தர் அந்த கிராமத்துக்கு வந்த போது, அங்குள்ளவர்கள் அவனை அவரிடம் அழைத்து வந்தார்கள். அவனது வரலாறு முழுவதையும் புத்தர் கேட்டார்.
அதன் பின் அவர் " இவனுக்கு நான் தேவை இல்லை.வெளிச்சத்தை பற்றி இவனிடம் பேசுவது முட்டாள்தனம்.இவனோடு நீங்கள் வாதிட்டால் அவன்தான் வெற்றி பெறுவான்.அவனால் வெளிச்சம் இல்லை என்பதை நிருபிக்க முடியும்.எனவே இவனை என் மருத்துவரிடம் அழைத்து செல்லுங்கள். என்று கூறினார்.

ஆறு மாத காலத்தில் புத்தருடைய மருத்துவர் அவனை குணப்படுத்தினார். அவன் புத்தர் கால்களில் வந்து விழுந்தான்.
" நீங்கள் மட்டும் இல்லையெனில் நான் என் வாழ்நாள் முழுவதும் வெளிச்சத்தை பற்றி விவாதம் செய்தே கழித்திருப்பேன்.ஆனால் வெளிச்சம் உள்ளது.இப்போது நான் அதை அறிகிறேன் " என்று கூறினான்.

இப்போது புத்தர், " நீ அதை நிருபிக்க முடியுமா ? வெளிச்சம் எங்கே உள்ளது? நான் அதை ருசிக்க வேண்டும்.அதை தொட வேண்டும்.நுகர வேண்டும் " என்று கேட்டார்.

உடனே அந்த முன்னாள் குருடன் , " அது முடியாத காரியம் அதை பார்க்க மட்டும்தான் முடியும் என்பதை இப்போதுதான் நான் அறிகிறேன். அதை அடைவதற்கு வேறு வழி இல்லை.என்னை மன்னித்து விடுங்கள் " என்றான்.

تَبْصِرَةً وَّذِكْرٰى لِكُلِّ عَبْدٍ مُّنِيْبٍ

" (குர்ஆன் எனும் இறைவேதம் இறைவன் பக்கம்) திரும்பும் அடியார்கள் எல்லோருக்கும் (அகப்) பார்வை அளிப்பதாகவும், (நினைவூட்டும்) நல்லுபதேசமாகவும் உள்ளது. (அல்குர்ஆன் : 50:8)

ஓஷோ சொல்கிறார்:

ஞாபகத்தில் கொள்ளுங்கள் எதிர்மறையானவற்றை மிக எளிதில் நிருபித்து விடலாம். ஆனால் நேர்மறையானவற்றை நிரூபித்தல் சாத்தியமில்லை. எனவே தான் நாத்திகன் மிகவும் விவாதிப்பவனாகவும், ஆத்திகன் எப்போதும் தோல்வியுறுபவனாகவும் இருக்கிறான். அவன் கடவுள் அல்லது ஆன்மா இருப்பதை நிரூபிக்க முடியாது.

ஒரு மதியப் பொழுதில் ராபியாத்துல் பஸரிய்யா அவர்கள் தன்னிடமிருந்த ஒரே ஒரு அப்பத் துண்டை சாப்பிட்டு கொண்டு இருந்தார்கள். ஞானம் தேடும் இருவர் அப்போது ராபியாவை பார்ப்பதற்கு வந்தார்கள். அந்த இருவரும் ஏதும் சாப்பிட்டு இருக்கவில்லை. சற்றென்று ஏதும் கொண்டு வரவும் முடியவில்லை.

சாப்பிடுவதை நிறுத்திவிட்டு ராபியா அவர்களை வரவேற்றார்கள். ஒரு நொடி கண் மூடினார்கள். பிறகு பேசத் தொடங்கினார்கள்.

.

வந்தவர்கள் கேட்டார்கள்: " நீங்கள் எப்படி கடவுளை அறிந்து கொண்டீர்கள் ? "

ராபியா சொன்னார்கள் : " எப்படி என்ற கேள்வியை நான் இல்லாமல் செய்து விட்டேன்.கடவுள் எனக்கு வெளிப்பட்டார். கடவுளுக்கும் நமக்கும் இடையில் கேள்விகள் திரையைப் போன்றிருக்கின்றன "

அப்போது ஒரு சிறுமியை கொஞ்சம் அப்பங்களுடன் வீட்டுக்கு வாசலுக்கு வந்தாள். ராபியா மகிழ்ச்சியுடன் அப்பங்களை வாங்கி எண்ணிப் பார்த்தார்கள். எட்டு அப்பங்கள் இருந்தன. பக்கத்து வீட்டு பெண் , ராபியாவுக்காக கொடுத்து அனுப்பி அவை .

ராபியா அந்த சிறுமியிடம் கேட்டார்கள் : "மகளே உன்னிடம் உன் எஜமானி கொடுத்து அனுப்பியது 10 அப்பங்கள் அல்லவா.நீ என்னிடம் எட்டு தானே கொடுத்து இருக்கிறாய் மிச்சமுள்ள இரண்டு அப்பங்கள் எங்கே ?"

சிறுமி அதைக் கேட்டு வியப்படைந்து சொன்னாள் :

" மன்னிக்க வேண்டும் அம்மா. இரண்டு அப்பங்களை நான் என் அம்மாவுக்கு கொடுத்துவிட்டேன் .எங்கள் வீட்டில் சாப்பிடுவதற்கு ஒன்றும் இல்லை "

ராபியா சொன்னார்கள்: " சரி நீ பயப்படாமல் செல். உன் எஜமானிக்கு என் நன்றியும் , அன்பையும் சொல்

அந்த சிறுமி சென்றபிறகு , இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த இருவரும் ராபியாவிடம் கேட்டார்கள்.

" அந்த சிறுமியின் எஜமானி பத்து அப்பங்கள் கொடுத்து அனுப்பினார்கள் என்று நீங்கள் எப்படி தெரிந்து கொண்டீர்கள்? "

ராபியா சொன்னார்கள் : "அது மிகவும் சாதாரணம். நீங்கள் வந்தபோது நான் கடவுளிடம் பிரார்த்தித்தேன். உங்களுக்குத் தருவதற்கு இங்கே ஒன்றும் இல்லை. பத்து அப்பளங்களாவது இருந்தால்தான் உங்கள் பசி

தீரும் என்று பிரார்த்தித்தேன். என் ஆத்ம நண்பனான கடவுள் பத்து கேட்டால் எட்டு தருகிறவன் அல்ல, அவன் ,கேட்டது முழுவதையும் தரக் கூடியவன்"
இப்படித்தான் சூஃபி ஞானிகள் கடவுளை இருப்பதாக நம்புகிறார்கள் . நீங்கள் ... ?

ரஹ்மத் ராஜகுமாரன்

## ஒன்றே ஒன்றுதான் 7



'அல்-இஹ்ஸான் ' எனும் உயரிய பண்பு புனித அல்குர்ஆனில் பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ள உயரிய பண்பாகும். அல்-இஹ்ஸான் எனும் பதம் நன்மை செய்தல், உபகாரம் செய்தல், நேர்த்தியாக செய்தல், குறையின்றி பரிபூரணமாக செய்தல் முதலான அர்த்தங்களைக் கொண்ட ஒரு சொல்லாகும்.

ஒரு வேலையை முழு அழகோடு சிறப்பாகச் செய்து முடிப்பதற்கு அல்-இஹ்ஸான் என்று அழைக்கப்படுவதுண்டு. தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட வேலையைச் செய்து முடிப்பது ஒரு சாதாரண நிலையாகும். ஆனால், அதை முழு அழகுடனும் முழுக் கவனத்துடனும் தன் திறமைகள் அனைத்தையும் பயன்படுத்தி நேர்த்தியாக செய்து முடிப்பது உன்னத நிலையாகும். இத்தகைய நடைமுறைதான் இஹ்ஸான் எனப்படும். அதனைப் பேணுபவர்கள் முஹ்ஸின்கள் ஆவார்கள்.

நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களிடம்
ஜிப்ரயீல் (அலை) அவர்கள் 'அல்-இஹ்ஸான்' என்றால் என்ன என்று வினவப்பட்டபோது,
"நீ அல்லாஹ்வை பார்ப்பது போன்று அவனை வணங்குவதாகும். நீ அவனை பார்க்கா விட்டாலும், அவன் உன்னை பார்க்கின்றான் என்ற உணர்வோடு அவனை வணங்குவதாகும்'' என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அல்லாஹ் நம்மை பார்த்துக் கொண்டே இருக்கின்றான் என்றால் அந்த வணக்கம் மற்றும் நம் செயல்களை நாம் எவ்வளவு முழுமையாக அழகாக செய்து முடிப்போம் .

அனைத்து நற்பண்புகளையும் உள்ளடக்கிய ஒரு பண்பாக அல்-இஹ்ஸான் அமைந்துள்ளது. அது ஈமானின் அடிப்படையாகும். ஈமானின் அனைத்துப் பண்புகளையும் உள்ளடக்கிய உயரிய பண்பாக அல்-இஹ்ஸான் கருதப்பட்டுள்ளது.

'அல்-இஹ்ஸானை' இரு வகைப்படுத்த முடியும். ஒன்று, அல்லாஹ்வுக்காக செய்ய வேண்டிய கடமைகளை சரிவர குறைவின்றி நிறைவேற்றுவதாகும்.
அடுத்தது, அல்லாஹ் படைத்துள்ள உயிரினங்களுக்கு அனைத்து வகையான நன்மையும் சென்றடைவதற்கு முயற்சித்து செயற்படுவதாகும்.

‘அல்-இஹ்ஸான்’ எனும் பண்பு ‘அல்-ஈமான்’ என்பதற்கு மேலாக இருக்கின்ற ஓர் உயரிய உன்னத பண்பாகும். ஏனெனில், ஈமான் உள்ள ஒருவன் தன்மீது விதியாக்கப்பட்ட கடமைகளை மாத்திரம் நிறைவேற்றிக் கொண்டால், அவன் ஓர் இறை விசுவாசம் கொண்ட முஃமினாக கருதப்படுவான்.
…ஆனால் 'அல்-இஹ்ஸான்' எனும் உயரிய பண்பைக் கொண்டுள்ள முஹ்ஸின் தன்மீது கடமையாக்கப்பட்ட கடமைகளுக்கு அப்பால் உபரியாக நன்மைகளைச் செய்பவனாகவே இருப்பான்.

உதாரணமாக, ஒருவன் ஐங்காலத் தொழுகையை குறையின்றி நிறைவேற்றுவது, கடமையாக்கப்பட்ட ஸகாத்தை நிறைவேற்றுவது ஈமானியப் பண்பாகும். ஆனால், ஒருவன் ஐங்காலத் தொழுகைக்கு மேலதிகமாக ஸுன்னத்தான தொழுகைகளை நிறைவேற்றுவது, கடமையாக்கப்பட்ட ஸகாத்துக்கு மேலதிகமாக தானதர்மங்களை நிறைவேற்றுவது இஹ்ஸானியப் பண்பாகும்.

இது பற்றி ஜென் குரு வாழ்வில் நடந்த சம்பவம் .
ஜப்பானைச் சேர்ந்த ஜென் துறவியான 'பொகூயூ' மற்றவர் ஞானிகளை விட ரொம்பவே வித்தியாசமானவர். இவருக்கு ஏராளமான சீடர்கள் உண்டு.

பொகூயூவுக்கும் அவரைச் சந்திக்க வந்தவருக்கும் நடந்த உரையாடலைப் பார்ப்போம்.
வந்தவர்: " உங்கள் பயிற்சி என்ன?"
பொகூயூ: " பயிற்சி என்று எதுவும் இல்லை. பசிக்கும்போது உண்பேன். உறங்கத் தோன்றும்போது உறங்குவேன் ".
வந்தவர்: " நானும் இவற்றையெல்லாம் செய்கிறேன். நான் மட்டும் அல்ல. உலகிலுள்ள அனைவரும் இதைத்தான் செய்கிறார்கள். இதில் என்ன பயிற்சி இருக்கிறது? "
பொகூயூ: " நீங்கள் செய்யும் செயல் என்ன என்பதையே உணராமல் செயல்படுகிறீர்கள். மேலும் திட்டங்கள் போடுகிறீர்கள். என்ன சாப்பிட்டுக்கொண்டிருக்கிறோம் என்பதை அறியாமலே, வேறு ஒன்றை சிந்திக்கிறீர்கள். வேறு ஒன்றைப் பார்க்கிறீர்கள். வேறு ஒன்றைப் பற்றி பேசுகிறீர்கள். அத்துடன் உங்களை அறியாமலேயே சாப்பிட்டு முடிக்கிறீர்கள். அதாவது நீங்கள் சாப்பிடுவது உங்களுக்கே தெரியாமல் நடக்கிறது. ( டிவி பார்க்காமல் டிபன் பண்றதில்லை , வம்பு வழக்கு பேசாமல் வாக்கிங் போறதில்லை )
வணங்கும் போது பல எண்ணங்கள் குறுக்கிடுகின்றன. வணக்கம் முழு ஈடுபாடு இல்லாத குறை வணக்கமாக மாறி விடுகிறது .

உறங்கும் போது உருண்டு புரண்டு தூங்குகிறீர்கள். கனவு காணுகிறீர்கள், விழிக்கிறீர்கள், மீண்டும் உறங்குகிறீர்கள்.

ஆனால் …நான் உண்ணும்போது உண்பதை மட்டும்தான் செய்கிறேன், உறங்கும் போது உறங்குவதை மட்டும்தான் செய்கிறேன். ஆனால், எல்லா செயல்களையும் முழுமையாகச் செய்கிறேன்.
(பொகூயூ தங்கியிருக்கும் இடத்தில் தங்கியிருந்து அவரை அவதானித்த பிறகும் வந்தவர் பெரும் குழப்பத்துக்குள்ளானார்).

வந்தவர்: எனக்கு எதுவும் விளங்கவில்லை.
பொகூயூ: நான் நடக்கும்போது நடத்தல் என்ற செயல் மட்டுமே நடக்கும். உண்ணும் போது உண்ணல் மட்டும்தான் அங்கு நிகழும். ஆனால் அங்கு பொகூயூ என்பவர் இருக்க மாட்டார். நீங்கள் கவனித்திருந்தால் ‘செயல்கள்’ முழுமையாக நடைபெறுவதை பார்க்கலாம். இதுதான் எனது பயிற்சிகள், மிகச் சுலபமானவை.

ரஹ்மத் ராஜகுமாரன் .

ஒன்றே ஒன்றுதான் 8



"வஹ்ததுல் வுஜூத்" கோட்பாட்டில் "ஹுலூல்" என்பதற்கும் "இத்திஹாத்" என்பதற்கும் இடமில்லை.
ஹுலூல் – இறங்குதல்
ஹுலூல் என்றால் ஒருபொருள் இன்னொரு பொருளில் வந்து இறங்குதல். இதற்கு இரண்டு பொருட்கள் தேவைப்படும். உதாரணம் பூவில் வண்டு வந்து இறங்குவதுபோல.
இவ்வாறு அல்லாஹ்தஆலா படைப்புகளில் வந்து இறங்கவில்லை. இதற்கு அல்லாஹ் என்று ஒரு உள்ளமையும் படைப்பு என்று இன்னொரு உள்ளமையும் தேவைப்படும் இது ஷிர்க்- இணை ஆகும்.

இத்திஹாத் - இரண்டறக் கலத்தல்.
இத்திஹாத் என்றால் இரண்டு பொருட்கள் ஒன்று மற்றொன்றுடன் கலந்து ஒரேபொருளாக மாறுதல். இதற்கு இரண்டுபொருட்கள் தேவைப்படும். உதாரணம் சீனி நீருடன் கலத்தல்.
இவ்வாறு அல்லாஹ் தஆலா படைப்புகளில் வந்து கலக்கவில்லை. இதற்கு அல்லாஹ் என்று ஒரு உள்ளமையும் படைப்பு என்று இன்னொரு உள்ளமையும் தேவைப்படும் இதுவும் ஷிர்க்- - இணை ஆகும்.
"வஹ்ததுல் வுஜூத்" கோட்பாட்டின் படி ஒரே உள்மையான அல்லாஹ் தான் ஹுலூல், இத்திஹாத் இன்றி
**பஞ்சு - புடவையாக, சட்டையாக , சாரமாக, தோற்றுவது போலவும்,**
**தங்கம் - காப்பாக, மாலையாக, மோதிரமாக தோற்றுவது போலவும்,**
**கடல் - அலையாக, நுரையாக தோற்றுவது போலவும்,**
**இரும்பு - சாவியாக , பூட்டாக தோற்றுவது போலவும் படைப்புகளாக தோற்றமளிக்கின்றான்.**

இங்கு இரண்டு உள்ளமைகளுக்கு, இரண்டு பொருட்களுக்கு இடமில்லை. எனவே ஷிர்க் எனும் இணைக்கு இடமில்லை. உள்ளமை அல்லாஹ் மாத்திரம்தான். அந்த உள்ளமைதான் சர்வ படைப்புகளாக தோற்றுகின்றது.
இதை இன்னுமோரு விஞ்ஞான உதாரணத்துடன் சொல்றேன் .
" புலம் என்பது எங்கணும் எப்பொழுதும் நிலவுகின்றது;

அது நீக்கமற்றது. பருண்மையான நிகழ்வுகள் அனைத்தையும் சுமந்து செல்கிறது.இத்தகைய வெற்றிடத்திலிருந்துதான் புரோட்டான் பைமேசான்களை உருவாக்குகின்றது. துகள்களின் இருப்பும் மறைவும் புலத்தின் இயக்க வடிவங்களே " _ வால்ட்டர் திர்ரிங்
இன்னும் கொஞ்சம் உரத்த சிந்தனையில் சொல்றேன்

" பேரமைதியான ஏகாந்தத்தை ஒருவன் பூஜிக்க வேண்டும். ஏனெனில் ,
அவன் அதிலிருந்துதான் பூத்தான்
அவன் அதற்குள்ளேயேதான் காணாமல் போகிறான்

அவன் அதனையேதான் சுவாசிக்கின்றான் "

"வடிவமும் வெற்றிடமும் கொண்டுள்ள உறவினை ஒன்றை ஒன்று ஒதுக்கிப் புறந்தள்ளுகின்ற எதிர்மறைகள் என்கிற அளவில் மனம்கொள்ள இயலாது. (வடிவமும் அதன் பிம்பமும் போல ) உடன் உறையக்கூடியனவும், இடையுறா ஒட்டுறவு கொண்டவையுமான , ஒரே மெய்ப்பொருள் இரு அம்சங்கள் என்று மட்டுமே உணர்ந்தறியப்பட வேண்டும்"
வடிவம் என்பதோ வெற்றிடம் ;
வெற்றிடம் என்பதும் வடிவமே !
வடிவம் வெற்றிடத்திலிருந்தோ .
வெற்றிடம் வடிவத்திலிருந்தோ
வேறுபட்ட ஒன்றல்ல ;
எது வடிவமோ அதுவே வெற்றிடம் ;
எது வெற்றிடமோ அதுவே வடிவம் .
இதை உங்களால் ஊகித்தறிந்து கொள்ள முடிந்தால் , அதுவே வஹ்ததுல் வுஜூத்தின் விளக்கத்தை விளங்கிக் கொண்டவராக இருக்கிறீர்கள். அல்லாஹ் போதுமானவன் .
ரஹ்மத் ராஜகுமாரன் .

**Sirajudeen Nainarmohamed**

இதைத்தான் திருமூலர் மிக அழகாக விளக்கியுள்ளார். 'மரத்துள் மறைந்தது மாமத யானை. மரமாய் நின்றது மாமர யானை. '
மரத்தால் செய்யப்பட்ட யானை யானையாக காட்சியளித்த போதிலும் அதுவே மரமாகவும் யானையாகவுமிருக்கிறது. தமிழ் முன்னோடிகள் பலரும் சத்திய சன்மார்க்கத்திலேயே இருந்திருக்கிறார்கள். ஆதியில் எல்லோரும் நல்வழியிலேயிருந்தார்கள் எனும் இறைமறை இதனை உறுதிசெய்கிறது.

ஒன்றே ஒன்றுதான் 9



மறைந்த பொக்கிஷமாக இருந்த அல்லாஹ்வின் அகத்தே அமைந்த அவனது அருளாளன் (ரஹ்மான்), உணவளிப்பவன் (ரஜ்ஜாக்), படைப்பவன் (காலிக்) முதலிய நாமறிந்த 99 திருநாமங்கள் தவிர எண்ணற்ற திருநாமங்களும்(அஸ்மாக்களும்) அந்த திருநாமங்களுக்குரிய தெய்வீக குணங்களும் (சிஃபாத்துகளும்) கொண்டவன்தான் அவன்
"அவனுடைய அனைத்து திருநாமங்களும் அடிப்படை இயல்பால் பெயர்க்கக் கூடியவையோ , வெளிப்படையில் இதுதான் என்று விவரிக்கக் கூடியவையோ அல்ல.
எந்தவொரு மொழி வடிவத்தாலும் அவற்றை முற்ற முழுக்க வெளிப்படுத்திட இயலாது " என்பதை மெஞ்ஞானிகள் உணர்ந்து,வஹ்ததுல் வுஜூத் கோட்பாட்டையே விவரிக்க தயங்குகிறார்கள்.

“நீங்கள் (அவனை) அல்லாஹ் என்று அழையுங்கள்; அல்லது அர்ரஹ்மான் என்றழையுங்கள்; எப்பெயரைக் கொண்டு அவனை நீங்கள் அழைத்தாலும், அவனுக்கு(ப் பல) அழகிய திருநாமங்கள் இருக்கின்றன” (அல்குர்ஆன் : 17:110)

இந்த குணங்கள் அனைத்தையும் ஒட்டு மொத்தமாக சேர்த்து "உலூஹிய்யத் " என்னும் இறைத் தன்மை, "ருபூபிய்யத் " என்னும் இரட்ஷகத்தன்மை கொண்ட குணங்கள் எனவும் கூறுவார்கள்.
' இலாஹ் ' என்பதும், ' ரப்பு ' என்பதும் இந்த 99 பண்புப் பெயர்களில் ஒன்றானதல்ல .இந்த இரண்டு பெயர்களும் இறைவனது ஒட்டுமொத்த இறைப்பண்புகளையும் தன்னுள் அடங்கியவை.
" இலாஹ் யார் ? அவன் தான் கஃபூர் "
" இலாஹ் யார் ? அவன் தான் கஃப்பார் "
" இலாஹ் யார் ? அவன் தான் ரஹ்மான் "
" இலாஹ் யார் ? அவன் தான் கய்யூம் "

இவ்வாறு இந்த அனைத்துப் பண்புகளையும் தன்னகத்தேக் கொண்டு சிருஷ்டிகளைப் படைத்து, வளர்த்து , போஷித்து , அதன் அனைத்து தேவைகளையும் நிறைவேற்றக் கூடியவன் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை .
இந்த திருநாமங்களுக்கும், அத்தனை தெய்வீக குணங்களுக்கும் உரிமையாளன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்பதே நாம் அறிந்து கொள்ள வேண்டிய மகத்தான ஏகத்துவ ஞானத்தின் மையக் கருப்பொருளாய் இருக்கின்றது.

' இலாஹ் ' என்பதும், ' ரப்பு ' என்பதும் ஏனைய அவனின் திரு நாமங்களில் அனைத்தினுள்ளும் ஊடுருவிக் கொள்வதையும், அதே சமயத்தில் தனக்குள் அவை அனைத்தையும் தழுவிக் கொள்வதையும் மெஞ்ஞானிகள் சுட்டிக் காட்டுகிறார்கள் .
அவனின் திருநாமங்கள் ஒவ்வொன்றும் ஏனையவை அனைத்தையும் உள்ளடக்கப் பெற்றுள்ளன என்கிற கருத்தை ஆன்மீகவாதிகள் குறிப்பிடுகிறார்கள் .
" மணற் துகள் ஒன்றினுள் உலகத்தையும் ,
மலைப்பூ ஒன்றினுள் சொர்க்கத்தையும்
கண்டு களிக்கலாம் .
உள்ளங்கையினுள் பேரண்டத்தையும் ,
ஒரு மணி நேரத்திற்குள் யுகாந்தரத்தையும் ( யுகங்கள் )
அடக்கி ஆர்க்கலாம் "
என்கிறார் மேற்கத்திய ஆன்மீக சிந்தனையாளர் வில்லியம் பிளாக் குறிப்பிடுகிறார் .
ரஹ்மத் ராஜகுமாரன்

## கலிமா

(ஒன்றே ஒன்றுதான் 10)

(இஸ்லாத்தின் அடிப்படை கோட்பாடுகள் 13)

கலிமா பற்றியும் எழுதுங்கள் என்று நண்பர் Ramees Deen பின்னூட்டத்தில் கேட்டுக் கொண்டதற்கு ,

#RameesDeen இன்ஷா அல்லாஹ் . கலிமா வெறும் ஈரடிகள் கொண்ட மாதிரி சின்ன விஷயம் அன்று . அது மிகப் பெரிய விஷயம் . அதனால் இறைவன் குர்ஆனில் ,

اَلَمْ تَرَ كَيْفَ ضَرَبَ اللّٰهُ مَثَلًا كَلِمَةً طَيِّبَةً كَشَجَرَةٍ طَيِّبَةٍ اَصْلُهَا ثَابِتٌ وَّفَرْعُهَا فِى السَّمَآءِۙ

(நபியே! "தவ்ஹீத் கலிமா" என்னும்) நல்ல வாக்கியத்திற்கு அல்லாஹ் எவ்வாறு (மிக்க மேலான) உதாரணத்தைக் கூறுகிறான் என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா? (அவ்வாக்கியம்) வானளாவிய கிளைகளையும் (பூமியில்) ஆழப்பாய்ந்த வேரையும் உடைய ஒரு நல்ல மரத்திற்கு ஒப்பாக இருக்கிறது.

(அல்குர்ஆன் : 14:24)

பொதுவாக அரபிச்சொற்களில் புள்ளி (நுக்தா ) உள்ள எழுத்துக்கள் கலந்தே வரும் . ஆனால் இதயத்தின் கரும் புள்ளிகளைப் போக்கும் மாமருந்தாகிய மூவெட்டு எழுத்துக்களைக் கொண்ட கலிமாவில் புள்ளியுள்ள எழுத்துக்களே இடம் பெறவில்லை. இது நம்மை சற்று சிந்திக்க வைக்கிறது.

ஷரியத் , தரீக்கத் . அகீகத் , மஃஹ்றிபத் ஆகிய 4 நிலைகளில் கலிமா பார்க்கப்படுகிறது .இது அசாதாரணமானது. சிந்திக்க ஏதுமில்லாத வெறும் நம்பிக்கை மட்டும் அடிப்படையாகக் கொண்டது . சிந்தனைகள் இல்லா சிந்தனை .இதை எப்படிச் சொல்வது ? இதனால்தான் இதை புரிய வைக்க முடியாது. புரிய வைக்க முற்பட்டால் தப்பர்த்தம் கொள்ள பல வழிகள் பிறக்கும் .

தவ்ஹீத் கலிமாவின் ஞான விளக்கம் ஒவ்வொரு ஆன்மாவிற்கு ஆன்மா வித்தியாசப்படுகிறது. ஒவ்வொரு ஆன்மா தான் பெற்றுக் கொண்ட ஈமானின் கொள்ளளவிற்கு தக்கவாறு அதன் விளக்கத்தை பெற்றுக் கொள்கிறது என்பதற்கு உதாரணமாக அல்லாஹ் தன் திருமறையில் சூசகமாக குறிப்பிடுகிறான் .

"அவன்தான் மேகத்திலிருந்து மழையைப் பொழிவிக்கிறான். (அது பொழிகின்ற) நீருக்குத் தக்கவாறு (சிறிய பெரிய) ஓடைகளாக ஓடுகிறது" (அல்குர்ஆன் : 13:17)

அதனால்தான் " பைஅத் " தில் மானசீகமாக சொல்லி தரப்பட்டு, 'ஆயுளில் 1 லட்சம் தடவையாவது ஓதிக் கொள் ' என்று அவரின் குருமார்கள் வழிகாட்டி , வழிவிட்டு ஒதுங்கிக் கொள்கிறார்கள் .

வெளிப்படையான இந்த கலிமாவை ஏன் மானசீகமாக ரகசியமாக செய்குமார்கள் போதிக்க வேண்டும் ?

அதனை சற்று மறைத்து ரகசியமாக போதிக்கும் போது அதன் பொருள் விரியும் . விரிந்த பொருளால் எல்லையில்லாத பெருவெளியில் ஆன்மா ஆனந்தம் பெறும்

இறக்கை முளைத்த பிறகு தாய்ப்பறவை இல்லாமல் ஏகாந்த வானத்தை குஞ்சு ஏறிட்டு பார்த்து பறந்து கொள்ள வேண்டியது அதனதன் ஆற்றலைப் பொறுத்து .

பொது தளத்தில் எழுதுவதற்கு சற்று யோசிக்க வேண்டும் . சில கேள்விகளுக்கு பதில் சொன்னாலும் பல கேள்விகளுக்கு பதில் சொல்ல முடியாது .கூடாது .அது உணர வேண்டிய விஷயங்கள் .

கலிமாவின் கட்டமைப்புகள் வித்தியாசமானவை .

அதன் சொல் அமைப்பை ஒருமைப்பட்டோடு உச்சரித்ததும் உணரும் நிலை பரவசமானது.

ஏகாந்த நிலையில் காணும் காட்சிகளுக்கு மொழியில் வார்த்தைகள் இல்லை . காரணம் கண்ட காட்சி கண்களால் அல்ல ; ஆன்மாவால் . இதனால்தான் இதனை விவரிக்க முடியவில்லை .

பய பக்தியுடையோர்கள் மறைவானவற்றை உண்டென்று ஈமான் கொள்வார்கள் (குர்ஆன்)

இவங்களுக்குத்தான் உணர்த்த முடியும் . அதுவும் எழுதி சொல்ல முடியாது.

இக் கலிமாவினை நாவினால் உச்சரிக்கின்ற போது இதழ்களைக் குவிக்கவோ , மூடவோ தேவையில்லை.

இதழ்கள் கூட இயங்காத மரண வேளையில் கூட இதனை மொழிவதற்கு ஏற்ற முறையில் இறைவன் இக் கலிமாவின் சொற்றொடர்களை கட்டமைத்துக் கொடுத்துள்ளான் .

உடல் ஆரோக்கியமாக ஒருமித்த மனோ நிலையில் இறைவனின் ஒரு சில திக்ரியாத்துக்களை தியானித்துக் கொண்டிருக்கும் பரவச ஐக்கிய நிலையில் 'இப்போது மரணித்தால்தான் என்ன ' என்று ஆன்மா யோசிக்க வைக்கும் .

அந்த வகையில் " லாயிலாஹ இல்லல்லாஹ் " என்ற இந்த கலிமா விற்கு அந்த உணர்வு ஏற்படும் .

எனவேதான் மரணப்படுக்கையில் இருப்பவர்களுக்கு இதனை ஓதிக் காண்பிக்கப்படுகிறது.

(மீள் பதிவு)

ர.ரா

ஒன்றே ஒன்றுதான் 11

தஜல்லீ - வெளியாகுதல்
இந்த தஜல்லீ - தமஸ்ஸுல் உடைய விளக்கத்தை சிருஷ்டிகளின் தோற்றத்தில் ஹக்கு ஸூபானாஹூத்தஆலா காட்சி அளிப்பதை குர்ஆனிலும் காணலாம்.
மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு நெருப்பின் தோற்றத்தில் தூர்ஸீனா மலையில் ஒரு மரத்தின் அடியில் அல்லாஹ் காட்சியளித்தான்; நெருப்பை கண்டு அதன் அருகில் அவர் சென்றபோது ,

يٰمُوْسٰٓى اِنَّـهٗۤ اَنَا اللّٰهُ الْعَزِيْزُ الْحَكِيْمُۙ
“மூஸாவே! நிச்சயமாக நானே அல்லாஹ்! (யாவரையும்) மிகைத்தவன்; ஞானம் மிக்கோன் " (அல்குர்ஆன் : 27:9)
நெருப்போ ஒரு சிருஷ்டி ! அது எப்படி " நான் " என்று கூறும் அதற்கு ' அனிய்யத் ' ஏது ? என்ற கேள்வியெல்லாம் உங்கள் மனதில் எழலாம். இருந்தாலும் வேறு என்ன கூற முடியும் ? நெருப்பின் தோற்றத்திலே அல்லாஹ்தான் காட்சியளித்தான்.

மூஸா (அலை) அவர்களும் ஆரம்பத்தில் அதை நெருப்பு என்றுதான் கருதினார்கள் ! அருகில் சென்றவுடன் நுபுவ்வத்தின் பேரொளி அவர்களில் இருந்ததினால், நெருப்புடைய தோற்றத்தில் அல்லாஹ்தான் காட்சியளிக்கிறான் என்ற உண்மையை உணர்ந்து கொண்டார்கள்.
இந்த சம்பவத்தின் மூலமாக உலகில் ஹாதிஸான சிருஷ்டி (படைப்புகளின்)களின் தோற்றத்தில் ஹக் தஆலா காட்சியளிப்பது சாத்தியமானதுதான் என்பது தெள்ளத்தெளிவாக தெரிகிறது !
இப்படி காட்சியளிப்பதற்குப் பெயர் " தஜல்லியே தஷ்பீஹீ ஜுஹூரி " எனப்படும் .இதைப் பார்த்த மூஸா (அலை) அவர்கள் மயக்கம் அடையவில்லை.
அவர்கள் நபியாக இல்லாதிருந்தால், நெருப்பிலிருந்து இறைவன் பேசியதைக் கண்டு குழப்பமடைந்து நம்பாமல் அங்கிருந்து ஓடியே சென்றிருப்பார்கள். நபியாக இருந்ததால், இறைவன்தான் நெருப்புடைய தோற்றத்தில் காட்சியளிக்கிறான் என்று உணர்ந்து கொண்டார்கள்.
அடுத்து , அதே மூஸா (அலை) அவர்கள் , அதே தூர்ஸீனா மலை
وَلَمَّا جَآءَ مُوْسٰى لِمِيْقَاتِنَا وَكَلَّمَهٗ رَبُّهٗ ۙ قَالَ رَبِّ اَرِنِىْۤ اَنْظُرْ اِلَيْكَ قَالَ لَنْ تَرٰٮنِىْ وَلٰـكِنِ انْظُرْ اِلَى الْجَبَلِ فَاِنِ اسْتَقَرَّ مَكَانَهٗ فَسَوْفَ تَرٰٮنِىْ فَلَمَّا تَجَلّٰى رَبُّهٗ لِلْجَبَلِ جَعَلَهٗ دَكًّا وَّخَرَّ مُوْسٰى صَعِقًا فَلَمَّاۤ اَفَاقَ قَالَ سُبْحٰنَكَ تُبْتُ اِلَيْكَ وَاَنَا اَوَّلُ الْمُؤْمِنِيْنَ
நாம் (குறிப்பிட்ட இடத்திற்கு) குறிப்பிட்ட நேரத்தில் மூஸா வந்தபொழுது அவருடைய இறைவன் அவருடன் பேசினான். (அப்பொழுது மூஸா தன் இறைவனை நோக்கி)
"என் இறைவனே! நான் உன்னை (என் கண்ணால்) பார்க்க (விரும்புகின்றேன்.) நீ உன்னை எனக்கு காண்பி" என்று கூறினார்.

(அதற்கு இறைவன் "நேர்முகமாக) என்னைக் காண உங்களால் ஒருக்காலும் முடியாது. எனினும் இம்மலையை நீங்கள் நோக்குங்கள். அது தன்னுடைய இடத்தில் நிலைத்திருந்தால், பின்னர் நீங்கள் என்னைக் காண்பீர்கள்" என்று கூறினான்.

அவருடைய இறைவன் அம்மலை மீது தோற்றமளிக்கவே அது தவிடு பொடியாயிற்று. மூஸா திடுக்கிட்டு (மூர்ச்சையாகி) விழுந்தார். அவர் தெளிவுபெறவே (இறைவனை நோக்கி) "நீ மிகப் பரிசுத்தமானவன். நான் (உன்னைப் பார்க்கக் கோரிய குற்றத்திலிருந்து விலகி) உன்னிடம் மன்னிப்புக் கோருகின்றேன். அன்றி, உன்னை நம்பிக்கை கொள்பவர்களில் நான் முதன்மையானவன்" என்று கூறினார். (அல்குர்ஆன் : 7:143)

அல்லாஹ்வின் இந்தக் காட்சியைக் கண்டு மூஸா (அலை) அவர்கள் மயக்கமடைந்தார்கள் .இந்த காட்சிக்குப் பெயர் **"தஜல்லியே தன்ஜீஹி நூரி "** எனப்படும் .

முதலில் வெளிப்பட்ட " தஜல்லியே தஷ்பீஹீ ஜுஹுரி "மூஸா (அலை ) அவர்கள் ஒரு மரத்தின் அடியில் கண்ட நெருப்பின் காட்சியில் கண்டார். அதாவது ஒரு திருஷ்டியின் தோற்றத்திலும், அதன் தன்மையிலும் அல்லாஹ் வெளிப்பட்டான் அதை அவர்களால் தாங்கிக் கொள்ள முடிந்தது.
ஆனால் தஜல்லியே தன்ஜீஹி நூரி எனும் தன்மையில் வெளிப்பட்டதால் , அதை நபியவர்களால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.
ரஹ்மத் ராஜகுமாரன் .

## ஒன்றே ஒன்றுதான் 12



அல்லாஹ்வின் வாஜிபான (கட்டாயமான ) 20 தன்மைகள்
அல்லாஹுவின் வாஜிபான 20 தன்மைகளுக்கு குர்ஆனின் மூலம் விளக்கம் தரப்பட்டுள்ளன. அல்லாஹு தன் திருமறையில்

الَّذِيْنَ يَذْكُرُوْنَ اللّٰهَ قِيَامًا وَّقُعُوْدًا وَّعَلٰى جُنُوْبِهِمْ وَيَتَفَكَّرُوْنَ فِىْ خَلْقِ السَّمٰوٰتِ وَالْاَرْضِ رَبَّنَا مَا خَلَقْتَ هٰذَا بَاطِلًا سُبْحٰنَكَ فَقِنَا عَذَابَ النَّارِ

இத்தகையவர்கள் (தங்கள்) நின்றநிலையிலும்,இருப்பிலும், படுக்கையிலும் அல்லாஹ்வை யே நினைத்து, வானங்களை யும் பூமியையும் அவன்படைத்திருப்பதை ஆராய்ச்சி செய்வார் கள்.மேலும்,"எங்கள்இறைவனே! நீ இவற்றை வீணாக படைக்க வில்லை. நீ மிகத் தூயவன். (நரக) நெருப்பின் வேதனையிலிருந்து எங்களை நீ காப்பா ற்றுவாயாக!
(அல்குர்ஆன் : 3:191)

நபி(ஸல்)தன் மொழியில்

1 - عنِ ابنِ عبَّاسٍ: أنَّه صلَّى اللهُ عليه وسلَّم خرَج على أصحابِه فقال: ما جمَعكم ؟ فقالوا: اجتمَعْنا نذكُرُ ربَّنا ونتفكَّرُ في عظَمتِه، فقال: تفكَّروا في خَلْقِ اللهِ، ولا تفكَّروا في اللهِ؛ فإنَّكم لن تقدُروا قَدْرَه. .

الراوي: عبدالله بن عباس المحدث: السخاوي - المصدر: المقاصد الحسنة - الصفحة أو الرقم: 191

خلاصة حكم المحدث: إسناده ضعيف

நபி (ஸல்)அவர்கள் ஒரு நாள் வெளியே வந்தார்கள் தம் தோழர்கள் ஒன்று சேர்ந்து இருந்தார்கள் " தோழர்களே !எதற்காக ஒன்று சேர்ந்து இருக்கிறீர்கள் ? என்று நபியவர்கள கேட்க ," நாங்கள் நம் ரப்பை "திக்ரு "செய்கிறோம் அவனின் கண்ணியத்தை பற்றி சிந்திக்கிறோம்" என்று கூறினார்கள்.
அப்போது நபி( ஸல்) அவர்கள்: " அல்லாஹ்வால் படைக்கப்பட்ட படைப்புகளைப் (எவ்வாறு படைத்திருக்கிறான்) என்று சிந்தியுங்கள் நிச்சயமாக அவன்(எப்படி,எவ்வாறு) இருக்கிறான் என்ற கற்பனை செய்வதற்கு நீங்கள் சக்தி பெறமாட்டீர்கள்?ஆகவே அல்லாஹ்வின் உள்ளமையைபற்றி மட்டும் சிந்திக்காதீர்கள் "
அறிவிப்பு:இப்னு அப்பாஸ் ரலி அவர்கள்
பதிவு:மகாஸீதுல் ஹஸனா ஹதீஸ் எண் 191

١.الوجود
அல்உஜூத்
உள்ளமை கொண்டவன்
اَللّٰهُ خَالِقُ كُلِّ شَىْءٍ‌ وَّ هُوَ عَلٰى كُلِّ شَىْءٍ وَّكِيْلٌ
அல்லாஹ்வே எல்லாபொருள்க ளையும் படைத்தவன்; அவனே எல்லா பொருள்களின் பொறுப்பாளன். (அல்குர்ஆன் : 39:62)

٢. القديمகதீம்
-பூர்வீகமானவன்
وَالْقَمَرَ قَدَّرْنٰهُ مَنَازِلَ حَتّٰى عَادَ كَالْعُرْجُوْنِ الْقَدِيْمِ
(உலர்ந்து வளைந்த) பழைய பேரீச்சமடலைப்போல்(பிறையாக) ஆகும்வரையில்சந்திரனுக்கு நாம் பல நிலைகளைஏற்படுத்தி இருக்கின்றோம். (அல்குர்ஆன் : 36:39)
٣.البقاء
அல்பகாஃவு முடிவில்லாதரிபாடுவுள்ளவன்
وَّيَبْقٰى وَجْهُ رَبِّكَ ذُو الْجَلٰلِ وَالْاِكْرَامِ
மிக கண்ணியமும் பெருமையும் தங்கிய உங்களது இறைவனின் திருமுகம் மட்டும் (அழியாது) நிலைத்திருக்கும்.
(அல்குர்ஆன்55:27)
٤. المخالفة الحواديث
முஹாலிபஃதுல் ஹலாதிஸி
புதிய புதிய நிகழ்வுக்கு மாற்றமானவன்
لَيْسَ كَمِثْلِهٖ شَىْءٌ
அவனுக்கு ஒப்பானது ஒன்றுமில்லை
அல்குர்ஆன்:42:11
٥ قيامه بنفسه
கியாமுஹூ பிநஃப்ஸிஹி
தன்தானே என்றும் நிலையானவன்
وَعَنَتِ الْوُجُوْهُ لِلْحَىِّ الْقَيُّوْمِ
(அந்நாளில்) நிரந்தரமானவனும் நிலையானவனுமாகிய (இறை)வன் முன் அனைவருடைய தலைகளும் குனிந்துவிடும்.
(அல்குர்ஆன் : 20:111)

٦ وحدانيته
வஹ்தானிய்யதிஹி
..என்றும் தனித்தவன்
وَاِلٰهُكُمْ اِلٰهٌ وَّاحِدٌ
(மனிதர்களே!)உங்கள்வணக்கத்திற்குத்தகுதியானவன்ஒரேயொரு இறைவனே ஆவான். (அல்குர்ஆன் : 2:163)
حياة.٧
ஹயாத்து
என்றும் வாழ்பவன்
اللّٰهُ لَاۤ اِلٰهَ اِلَّا هُوَ الْحَىُّ الْقَيُّوْمُ
அல்லாஹ் (எவ்வித மகத்துவமு டையவனென்றால்) அவனைத் தவிர வணக்கத்திற்குத் தகுதி யான இறைவன் வேறு யாரும் (இல்லவே) இல்லை. அவன் (மரணமில்லா) உயிருள்ளவன்; என்றும் நிலையானவன் (அல்குர்ஆன்3:2)
العلم.٨ -இல்மு
அறிவு
الوجود.قُلْ اِنَّمَا الْعِلْمُ عِنْدَ اللّٰهِ ١
அல்உஜூத்
உள்ளமை கொண்டவன்
நபியே! நிச்சயமாக கல்வி (ஞானம்) அல்லாஹ்விடத்தில்தான் இருக்கின்றது. என்று கூறுங்கள். (அல்குர்ஆன் : 67:26)
الارادة.٩
இராதத்
நாட்டம்
اِنَّمَاۤ اَمْرُهٗۤ اِذَاۤ اَرَادَ شَيْـــًٔا اَنْ يَّقُوْلَ لَهٗ كُنْ فَيَكُوْنُ
அவன் யாதொரு பொருளை(ப் படைக்க)க் கருதினால் அதனை "ஆகுக!" எனக் கூறுவதுதான் உடன் அது ஆகிவிடுகின்றது.
(அல்குர்ஆன் : 36:82)
قدير.١٠
கதீருன்
ஆற்றல்
اِنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ
நிச்சயமாகஅல்லாஹ்அனைத்தின் மீதும் (எவ்விதமும் செய்ய) பேராற்றலுடையவன். (அல்குர்ஆன் : 2:20)
السمع .١١
ஸம்உ
கேள்வி
والبصر .١٢
பஸருன்
பார்வை
وَّ جَعَلَ لَـكُمُ السَّمْعَ وَالْاَبْصٰرَ وَالْاَفْـِٕدَةَ‌ ۙ لَعَلَّكُمْ تَشْكُرُوْنَ
உங்களுக்குச் செவிகளையும், கண்களையும், அறிவையும் கொடுத்தவனும் அவன்தான். இதற்கு நீங்கள் (அவனுக்கு) நன்றி செலுத்துவீர்களாக! (அல்குர்ஆன் : 16:78)
الكلام .١٣
கலாம்
பேச்சி
وَكَلَّمَ اللّٰهُ مُوْسٰى تَكْلِيْمًا
மூஸாவை அல்லாஹ் பேச வைத்தான் மூஸாவுடன்அல்லாஹ்பேசியும் இருக்கின்றான்.
(அல்குர்ஆன் : 4:164)
١٤ الحي

அல்ஹைய்யு
என்றும் தன்தானே உயிருடன் இருப்பவன்
اللهُ لَآ اِلٰهَ اِلَّا هُوَۚ اَلْحَىُّ الْقَيُّوْمُ
அல்லாஹ், அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு எவனுமில்லை. அவன் நிரந்தரமானவன்; என்றும் நிலையானவன். (அல்குர்ஆன் : 3:2)
العالم
அல்ஆலிமு
என்றும்தன்தானே அறிவுடனிருப்பவன்
هُوَ اللّٰهُ الَّذِىْ لَاۤ اِلٰهَ اِلَّا هُوَ‌ ۚ عٰلِمُ الْغَيْبِ وَالشَّهَادَةِ‌ ۚ هُوَ الرَّحْمٰنُ الرَّحِيْمُ
அந்த அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய வேறொரு நாயனில்லை. (அவனே) மறைவானதையும்வெளிப்படை யானதையும் நன்கறிந்தவன். அவனே அளவற்ற அருளாளன்; நிகரற்ற அன்புடையவன். (அல்குர்ஆன் : 59:22)
١٦. المريد
அல்முரீது
என்றும்தன் நாட்டமுடையவன்
فَعَّالٌ لِّمَا يُرِيْدُ
தான் விரும்பியதையெல்லாம் செய்யக்கூடியவன்.
(அல்குர்ஆன் : 85:16)
١٧. القادر
அல்காதிர்
என்றும் தன் ஆற்றலுள்ளவன்
قُلْ اِنَّ اللّٰهَ قَادِرٌ عَلٰٓى اَنْ يُّنَزِّلَ اٰيَةً وَّلٰـكِنَّ اَكْثَرَهُمْ لَا يَعْلَمُوْنَ
நபியே!) நீங்கள் கூறுங்கள்: (அத்தகைய) ஓர் அத்தாட்சியை இறக்கிவைக்க நிச்சயமாக அல்லாஹ்சக்தியுடையவன்தான். (அவ்வாறு இறக்கியும் வை த்துள்ளான்.) எனினும் அவர்க ளில்பெரும்பாலோர்(அதனை)அறிந்துகொள்வதில்லை.
(அல்குர்ஆன்6:37)
١٨ السميع
அஸ்ஸமீஉ
என்றும் தானே கேட்பவன்
وَهُوَ السَّمِيْعُ الْعَلِيْمُ
அவன் (அனைத்தையும்) செவியுறுபவனும் அறிபவனாகவும் இருக்கின்றான். (அல்குர்ஆன் : 2:137)
١٩.البصير
அல்பஸீர்
என்றும்.தானே பார்ப்பவன்
وَاللّٰهُ بَصِيْرٌ بِمَا يَعْمَلُوْنَ
அல்லாஹ் அவர்கள் செய்வதை உற்றுநோக்குபவனாகஇருக்கின்றான். (அல்குர்ஆன் : 2:96)
١٢٠ ا لمتكلم ا
அல்முதகல்லிம்
என்றும்சுயமாகபேசுபவன்
قَالُوْۤا اَنْطَقَنَا اللّٰهُ الَّذِىْۤ اَنْطَقَ كُلَّ شَىْءٍ وَّهُوَ خَلَقَكُمْ اَوَّلَ مَرَّةٍ وَّاِلَيْهِ تُرْجَعُوْنَ
அதற்கு அவைகள், "எல்லா பொருள்களையும் பேசும்படி செய்கின்ற அல்லாஹ்வே எங்களையும் பேசும்படி செய்தான். அவன்தான் உங்களை முதல் முறையாகவும் படைத்தான்.(இறந்த)பின்னரும் நீங்கள் அவனிடமே கொண்டு வரப்பட்டிருக் கின்றீர்கள்" என்றும் அவை கூறும்.
(அல்குர்ஆன் : 41:21)
மேற்கண்ட அனைத்து தன்மைகளும் வணங்கப்படுபவனுக்கு
கட்டாயம் நிரந்தரமாக அழிவில்லாமல் இருக்க வேண்டிய தன்மைகளாகும்.
ர.ரா

ஒன்றே ஒன்றுதான் 13



குர்ஆன் விரிவுரையாளர்களின் தலைவர் என்று அழைக்கப்படும் செய்யிதினா இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

" ஒவ்வொரு பொருளிலும் அல்லாஹ்டைய திருப்பெயர்களிலிருந்தும் ஒரு பெயர் இருக்கிறது ( அதாவது ஒவ்வொரு பொருளும் அல்லாஹ்வுடைய திருநாமங்களின் - அஸ்மாக்களின் வெளிப்பாடாக இருக்கிறது ) ஒவ்வொரு பொருளின் பெயரும் அவனுடைய பெயரின் விளைவே ஆகும் . நீ அவனுடைய அஸ்மாக்கள், ஸிபத்துக்கள் ( பண்புகள்) அப்ஆல்களுக்கு மத்தியில் தோன்றிய அஸராக விளைவாகத்தான் இருக்கிறாய் .

உதாரணமாக குத்ரத் உடையவன் காதிர் ஆக இருக்கிறான். இல்மை உடையவன் ஆலிமாக இருக்கிறான். மற்ற ஸிபத்துகளும் இவ்வாறுதான் இருக்கிறது. அதாவது ஸிபத்துக்களை வைத்துதான் ஜாத்தை சுட்டிக் காட்ட முடியும் ஸிபத்துக்கள் பலதாக இருந்தாலும் ஜாத் ஒன்றுதான்.

நாம் எந்த வஸ்துக்களை பார்த்தாலும் அதில் பல தன்மைகளை பார்க்கிறோம். கருப்பு அல்லது வெள்ளை, உயரம் அல்லது குட்டை , கடினம் அல்லது மென்மை அதன் சுவைகள் என்று பல ஸிப்த்துக்கள் அந்த ஒரே பொருளில் இருக்கும் ஒரே ஜாத்தில் எத்தனையோ ஸிபத்துக்கள் வெளிப்படுகின்றன.

قَالَ فَمَنْ رَّبُّكُمَا يٰمُوْسٰى

(இதற்கு ஃபிர்அவ்ன்) “மூஸாவே! உங்களிருவருடைய இறைவன் யார்?” என்று கேட்டான். (அல்குர்ஆன் : 20:49)

قَالَ رَبُّنَا الَّذِىْٓ اَعْطٰى كُلَّ شَىْءٍ خَلْقَهٗ ثُمَّ هَدٰى

“ஒவ்வொரு பொருளுக்கும் அதற்கான அமைப்பை வழங்கி பின்னர் வழிகாட்டியிருக்கிறானே அவன்தான் எங்கள் இறைவன்” என்று கூறினார். (அல்குர்ஆன் : 20:50)

ஜான்லாக் என்னும் ஆங்கில தத்துவ ஞானி பொருள்களின் உண்மை சமாச்சாரத்தை ஊடுருவி அறியும் போது , பொருள்களின் குணங்களை இரண்டாக பிரித்தார். முதல் பிரிவில் பொருளின் உருவம், இயக்கம், கனம் முதலியவைகள் அடங்கும் என்றும் ,

இரண்டாவது பிரிவில் பொருளின் நிறம், ருசி, சப்தம் முதலியவைகளை அடங்கும் என்றும் பொருளின் இரண்டாம் பிரிவைச் சேர்ந்த குணங்கள் யாவும் நம் புலன்களால் பாதிக்கப்படுபவை என்பதும் அவர் கூற்று.

லீப்னிட்ஸ் என்ற ஜெர்மானிய தேசத்து விஞ்ஞானி , வெளிச்சம் , நிறம், வெப்பம் முதலிய குணங்கள் மாத்திரமின்றிப் பொருளின் உருவம் , இயக்கம் முதலியவை வெறும் தோற்றமே என்பது இவருடைய கொள்கை.
ஏனெனில் வெளிச்சம், வெப்பம், நிறம், வெப்பம் , நிறம், உருவம் , இயக்கம் இன்னும் பொருளின் மற்றெல்லாக் குணங்களும் மனிதனுடைய புலன்களின் அறிவாலேயே ஏற்படுகின்றன; மனிதப் புலன் அறிவுக்கும் அப்பால் அப்பொருள் பொருளே அல்ல !

ஒரு "பொருள் " என்று நாம் குறிப்பிடுவது அப்பொருளினுடைய குணங்களின் கூட்டுத்தொகை . அக்குணங்களை உணருவது நம்புலன்கள். நம் புலன்களை இயக்குவது நம் மனம். ஆகவே நம் மனம்தான் வெளிப் பொருளைப் பற்றிய குணங்களின் இருப்பிடம் .

சக்தியும், பொருளும் , அணுவும் , அண்டமும் நிறைந்து காணப்படும் இப்பரந்த பிரபஞ்சம் முழுவதும் நம் மனத்தால் உண்டாக்கிய சிருஷ்டி ! கொஞ்சம் யோசித்துப் பாருங்கள் மனோ விகாரத்தைக் களைந்து விட்டு நோக்கினால் , இப்பிரபஞ்சம் இல்லை - அது ஒன்றுமில்லாத ஒரு சூன்ய வெளி !

பெர்க்கலே என்கிற விஞ்ஞானி, "மண்ணுலகிலும், விண்ணுலகிலும் நிறைந்து கிடப்பதாகத் தோன்றும் அத்தனைப் பொருள்களுக்கும் , என்னுடைய மனமே , உருவம் கொடுக்கிறது .என்னால் , என் மனத்தால் அவை உணரப்படாத வரையில் அவற்றின் உருவங்கள் அனைத்தும் அருவமே " என்கிறார்
அணுவும், அண்டமும், பொருளும், பிரபஞ்சமும் , காலமும் வெளியும் நம் மனத்தின் உணர்வால் எழுந்த மகத்தானதொரு மாய மாளிகை !

நம் புலன்களின் அறிவால் கட்டுப்படுத்தப்பட்ட நமது மனத்தின் உணர்வுக்கும் அப்பால் சென்று விட்டால் ..., அணுவும் இல்லை அண்டமும் இல்லை , பொருளும் இல்லை இப் பிரபஞ்சமும் இல்லை. காலமும் இல்லை இப் பரந்த வெளியும் இல்லை என்கிறார்கள்
" இறைவனே ! நீ எதற்காக படைப்பினங்களைப் படைத்தாய் ?" என்று தாவூத் (அலை) அவர்கள் இறைவனிடம் கேட்டதற்கு ,
" நீ இருப்பது என்னால் வெளிப்பட்டது .
நான் இருப்பது உன்னால் உண்டாக்கப்பட்டது .
என்னாலேயன்றி நீ வெளியாக்கப்பட்டிருக்க மாட்டாய்.
உன்னாலேயன்றி நான் உண்டாக்கப்பட்டிருக்க மாட்டேன் "

ரஹ்மத் ராஜகுமாரன்

ஒன்றே ஒன்றுதான் 14



( இறைவனின் திருநாமங்களும் , இயற்கையின் தனிமங்களும் )

" ஒவ்வொரு பொருளிலும் அல்லாஹ்டைய திருப்பெயர் களிலிருந்தும் ஒரு பெயர் இருக்கிறது ( அதாவது ஒவ்வொரு பொருளும் அல்லாஹ்வுடைய திருநாமங்களின் - அஸ்மாக்களின் வெளிப்பாடாக இருக்கிறது )

_இப்னு அப்பாஸ் (ரலி).

1912-ல் மோஸ்லே என்ற அறிவியலறிஞர் தனிமங்களின் இயற்பியல் மற்றும் வேதியியல் பண்புகள் அணு எண்களின் அடிப்படையில் அமைந்துள்ளன என்று உலகிற்கு அறிவித்தார்.

இதன் அடிப்படையில் நவீன ஆவர்த்தன விதி உருவானது. இவ்விதிப்படி தனிமங்களின் இயற்பியல் மற்றும் வேதிப் பண்புகள் அத்தனிமங்களின் அணு எண்களுக்கு ஏற்ப ஆவர்த்தன முறையில் மாற்றமடைகின்றன.

தனிமங்களை அவற்றின் அணு எண்களின் ஏறுவரிசையில் அமைத்தால் ஒத்த பண்புகளையுடைய தனிமங்கள் சீரான இடைவெளிக்குப் பின் அமைகின்றன. இதுவே ஆவர்த்தனத் தன்மை எனப்படுகிறது.

வேதித் தனிமம் (Chemical element: மூலகம்) என்பது அணுக்கருவில் ஒரே எண்ணிக்கையில் புரோட்டான்களைப் பெற்றிருக்கும் ஒரே வகையான அணுக்களைக் குறிக்கும். 118 தனிமங்கள் இதுவரை அடையாளம் காணப்பட்டுள்ளன. இவற்றில் #94தனிமங்கள் #இயற்கையில்தோன்றுவனவாகும் .

இதுவரை இயற்கையில் கண்டெடுக்கப்பட்ட தனிமங்கள் 94 .அநேகமாக இன்னும் 5 தனிமங்கள் இயற்கையில் இருந்து விஞ்ஞானம் கண்டெடுக்கப்படலாம். காரணம் இறைவனின் திருநாமங்கள் 99 அல்லவா

விண்மீன்களிலும் தனிமம்

ஒன்றிலிருந்து 92 வரையான தனிமங்கள் (தனிம எண் 43 ம் 61-ம் தவிர) பூமியில் இயல்பில் உள்ளன. டெக்னிஷியம் (Technetium-Tc) எனும் தனிமத்தின் அரை வாழ்நாள் வெறும் 42 லட்சம் வருடங்கள்தான். 42 லட்சம் வருடமா என வாயைப் பிளக்க வேண்டாம்.

பூமியின் வயது சுமார் 450 கோடி ஆண்டுகள். எனவே, பூமி தோன்றியபோது இருந்த அனைத்து டெக்னிஷியமும் இதற்குள் சிதைந்து போயிருக்கும். எனவேதான் இந்தத் தனிமம் இயற்கையில் பூமியில் இல்லை. பூமியில் இல்லை என்றாலும் எங்கும் இல்லை என கருதவேண்டாம். சில விண்மீன்களில் இந்தத் தனிமங்கள் காணக் கிடைக்கின்றன

பூமியில் இயற்கையில் ஆனால் அரிதாகக் கிடைக்கும் பிரசியோடைமியம் (praseodymium Pr-59) எனும் தனிமத்தை 1841-ல் தான் கண்டுபிடித்தனர். அப்போது அந்தத் தனிமத்துக்கு என்ன பயன் என்பது தெரியாமலிருந்தது. இன்று அந்தத் தனிமத்தைக் கலந்து தயாரிக்கப்படும் கண்ணாடிகள் வெல்டிங் பணிகளுக்குப் பயன்படுகின்றன.

எந்தத் தனிமம் என்னவிதமான பயனைத் தரும் என்பது முன்கூட்டியே அறிய முடியாது.

மொத்த தனிமங்கள் 118. இதில் இயற்கைத் தனிமங்கள் 94 போக மீதி 24 தனிமங்களும் செயற்கை முறையில் தயாரிக்கப்படுவனவாகவும் இருக்கின்றன.

அண்டமும் அதில் அடங்கியுள்ள அனைத்தும் பருப்பொருட்களால் ஆனவையாகும். இப்பருப்பொருட்கள் யாவும் வேதிதனிமங்களால் உருவாக்கப்பட்டவையாகும்.

நாம் கண்களால் காணக்கூடிய சாதாரணமான பருப்பொருட்கள் பிரபஞ்சத்தில் உள்ள பருப்பொருட்களில் வெறும் 15% மட்டுமே உருவாக்குகின்றன என்று வானியல் ஆய்வுமுடிவுகள் தெரிவிக்கின்றன எஞ்சியுள்ளவை கரும்பொருள் (Dark Energy) எனப்படுகிறது. இதன் பகுதிக்கூறுகள் இதுவரை அறியப்படவில்லை. ஆனால் நிச்சயமாக அது வேதித்தனிமங்களால் ஆக்கப்படவில்லை என்று விஞ்ஞானம் உறுதியாகக் கூறப்படுகிறது.

அண்டத்தில் கரும்பொருள் பங்கு

ஐதர்சன், ஈலியம் என்ற இரண்டு இலேசானத் தனிமங்களும் பெருவெடிப்பில் பிரபஞ்சம் உருவானபோது தோன்றியவைகளாகும். இவை பிரபஞ்சத்தில் காணப்படும் மிகப்பொதுவான தனிமங்களாகும்.

அடுத்த தனிமங்களான இலித்தியம், பெரிலியம், போரான்

மூன்றும் பெரும்பாலும் அண்டக்கதிர்வீச்சின் அணுக்கருத் தொகுப்பு வினையால் உருவானவையாகும். எனவே இவை கன உலோகங்களைக் காட்டிலும் அரிதாகக் கிடைக்கின்றன.

விண்மீன்களுக்குள் நிகழும் அணுக்கரு இணைவு மூலம் 6 முதல் 26 வரை புரோட்டான்களைக் கொண்ட தனிமங்கள் உருவாகின்றன. ஆக்சிசன், சிலிக்கன், இரும்பு போன்ற தனிமங்கள் அதிக அளவில் காணப்படுவது இதன் பிரதிபலிப்பாகும்.

26 புரோட்டான்களைவிட அதிகமாகக் கொண்ட தனிமங்கள் மீயொளிர் விண்மீன் வெடிப்பு மூலம் மீயொளிர் விண்மீன்களில் தோன்றியவை ஆகும். இவ்விண்மீன்கள் வெடித்துச் சிதறும் போது இத்தனிமங்கள் விண்ணில் சிதறி கோள்கள் உருவாகும்பொது அவற்றுக்குள் சென்றிருக்கலாம் எனக் கூறப்படுகிறது

"இரும்பையும் ( வானிலிருந்து ) இறக்கினோம்" - குர்ஆன் 57: 25

என்ற வசனத்திலுள்ள அன்ஸல்னா என்ற வார்த்தை க்கு பலம் மற்றும் வலிமையால் இரும்பு உருவாக்கப்படுகிறது எனவே இரும்பின் பலம் இறைவனிடமிருந்து இறங்குகிறது என்பதாக குர்ஆனின் விரிவுரையாளர்கள் ஆரம்பத்தில் விளக்கம் அளிக்கப்பட்டது

ஆனால் இரும்பு நம் பூமிக்கு சூரிய மண்டலத்திற்கும் வெளியே அண்ட பெரு வெளியிலிருந்து பூமிக்கு கிடைக்கிறது என்பதை அண்மையில் விஞ்ஞான ஆய்வுகள் நிரூபித்து உள்ளன

அல்லாஹ்வின் திருநாமங்கள்

1. அர் ரஹ்மான் - الرَّحْمٰنُ - அளவற்ற அருளாளன்

2. அர் ரஹீம் - الرَّحِيمُ - நிகரற்ற அன்புடையோன்.

3. அல் மலிக் - المَلِكُ - பேரரசன்

4. அல் குத்தூஸ் - القُدُّوسُ - மிகப் பரிசுத்தமானவன்

5. அஸ்ஸலாம் - السَّلاَمُ - சாந்தி மயமானவன்

6. அல் முஃமின் - المُؤْمِنُ - அபயமளிக்கிறவன்

7. அல் முஹைமின் - المُهَيْمِنُ - கண்காணிப்பவன்

8. அல் அஜீஜ் - العَزِيزُ - மிகைத்தவன்

9. அல் ஜப்பார் - الجَبَّارُ - அடக்கியாள்கிறவன்

10. அல் முதகப்பிர் - المُتَكَبِّرُ - பெருமைக்குரியவன்

11. அல் காலிக் - الخَالِقُ - படைப்பவன்

12. அல் பாரிஉ - البَارِئُ - படைப்பை ஒழுங்கு படுத்துபவன்

13. அல் முஸவ்விர் - المُصَوِّرُ - உருவமளிப்பவன்

14. அல் கஃப்ஃபார் - الْغَفَّارُ - மிக்க மன்னிப்பவன்.

15. அல் கஹ்ஹார் - الْقَهَّارُ - அடக்கி ஆள்பவன்

16. அல் வஹ்ஹாப் - الْوَهَّابُ - கொடையாளன்

17. அர் ரஜ்ஜாக் - الرَّزَّاقُ - உணவளிப்பவன்

18. அல்ஃபத்தாஹ் - الْفَتَّاحُ - தீர்ப்பு வழங்குகிறவன்

19. அல் அலீம் - اَلْعَلِيْمُ - மிக அறிபவன்

20. அல் காபிள் - الْقَابِضُ - கைப்பற்றுவோன்

21. அல் பாஸித் - الْبَاسِطُ - விரிவாக்குபவன்

22. அல் காஃபிள் - الْخَافِضُ தாழ்த்துவோன்

23. அர் ராஃபிஃ - الرَّافِعُ - உயர்த்துவோன்

24. அல் முஇஜ்ஜு - الْمُعِزُّ - கண்ணியப்படுத்துவோன்

25. அல் முதில்லு - المُذِلُّ - இழிவடையச்செய்பவன்

26. அஸ்ஸமீஉ - السَّمِيعُ - செவியேற்பவன்

27. அல் பஸீர் - الْبَصِيرُ - பார்ப்பவன்

28. அல் ஹகம் - الْحَكَمُ - தீர்ப்பளிப்பவன்

29. அல் அத்லு - الْعَدْلُ - நீதியுள்ளவன்

30. அல் லதீஃப் - اللَّطِيفُ - நுட்பமாகச் செய்கிறவன்

31. அல் ஃகபீர் - الْخَبِيرُ - நன்கறிகிறவன்

32. அல் ஹலீம் - الْحَلِيمُ - சகிப்புத் தன்மையுடையவன்

33. அல் அழீம் - الْعَظِيمُ - மகத்துவமிக்கவன்

34. அல் கஃபூர் - الْغَفُورُ - மிகவும் மன்னிப்பவன்

35. அஷ் ஷகூர் - الشَّكُورُ - நன்றி பாராட்டுபவன்

36. அல் அலிய்யு - الْعَلِيُّ - மிக உயர்ந்தவன்

37. அல் கபீர் - الْكَبِيرُ - மிகப்பெரியவன்

38. அல் ஹஃபீழ் - الْحَفِيظُ - பாதுகாவலன்

39. அல் முகீத் - المُقيِت - ஆற்றல் உள்ளவன்

40. அல் ஹஸீப் - الْحسِيبُ - கணக்கெடுப்பவன்

41. அல் ஜலீல் - الْجَلِيلُ - கண்ணியமானவன்

42. அல் கரீம் - الْكَرِيمُ - தயாளன்

43. அர் ரகீப் - الرَّقِيبُ - கண்காணிப்பவன்

44. அல் முஜீப் - الْمُجِيبُ - பதிலளிப்பவன்

45. அல் வாஸிஃ - الْوَاسِعُ - விசாலமானவன்

46. அல் ஹகீம் - الْحَكِيمُ - ஞானமுடையோன்

47. அல் வதூத் - الْوَدُودُ - பிரியமுடையவன்

48. அல் மஜீத் - الْمَجِيدُ - மகிமை வாய்ந்தவன்

49. அல் பாஇத் - الْبَاعِثُ - உயிர்த்தெழச் செய்பவன்

50. அஷ் ஷஹீத் - الشَّهِيدُ - சாட்சியாளன்

51. அல் ஹக் - الْحَقُّ - உண்மையானவன்

52. அல் வகீல் - الْوَكِيلُ - பொறுப்பேற்பவன்

53. அல் கவிய்யு - الْقَوِيُّ - வலிமை மிக்கவன்

54. அல் ம(த்)தீன் - الْمَتِينُ - உறுதியானவன்

55. அல் வலிய்யு - الْوَلِيُّ - பாதுகாவலன்

56. அல் ஹமீத் - الْحَمِيدُ - புகழுக்குரியவன்

57. அல் முஹ்ஸி - الْمُحْصِي - கணக்கிட்டு வைப்பவன்

58. அல் முப்திஉ - الْمُبْدِئُ - துவங்குவோன்

59. அல் மூஈத் - الْمُعِيدُ - மீளச்செய்பவன்

60. அல் முஹ்யீ - الْمُحْيِي - உயிர்ப்பிக்கிறவன்

61. அல் முமீத் - اَلْمُمِيتُ - மரணிக்கச் செய்பவன்

62. அல் ஹய்யு - الْحَيُّ - நித்திய ஜீவன்

63. அல் கய்யூம் - الْقَيُّومُ - நிலைத்திருப்பவன்

64. அல் வாஜித் - الْوَاجِدُ - என்றும் இருப்பவன்

65. அல் மாஜித் - الْمَاجِدُ - மகிமை வாய்ந்தவன்

66. அல் வாஹித் - الْواحِدُ - ஏகன்

67. அல் அஹத் - اَلأَحَدُ - ஒருவன்

68. அஸ் ஸமத் - الصَّمَدُ - தேவையற்றவன்

69. அல் காதிர் - الْقَادِرُ - சக்தியுள்ளவன்

70. அல் முக்ததிர் - الْمُقْتَدِرُ - ஆற்றலுடையவன்

71. அல் முகத்திம் - الْمُقَدِّمُ - முற்படுத்துவோன்

72. அல் முஅக்ஃகிர் - الْمُؤَخِّرُ - பிற்படுத்துவோன்

73. அல் அவ்வல் - الأوَّلُ - முதலாமவன்

74.அல் ஆகிர் - الآخِرُ - கடைசியானவன்

75. அழ் ழாஹிர் - الظَّاهِرُ - மேலானவன்

76. அல் பா(த்)தின் - الْبَاطِنُ - அந்தரங்கமானவன்

77. அவ்வாலீ - الْوَالِي - உதவியாளன்

78. அல் முதஆலீ - الْمُتَعَالِي - மிக உயர்ந்தவன்

79. அல் பர்ரு - الْبَرُّ - நன்மை செய்கிறவன்

80. அத் தவ்வாப் - التَّوَابُ - பாவ மன்னிப்பை ஏற்பவன்

81. அல் முன்தகிம் - الْمُنْتَقِمُ - தண்டிப்பவன்

82. அல் அஃபுவ்வு - العَفُوُّ - மன்னிப்பவன்

83. அர் ரஊஃப் - الرَّؤُوفُ - இரக்கமுடையவன்

84. மாலிகுல் முல்க் - مَالِكُ الْمُلْكِ - ஆட்சிக்கு அதிபதி

85. துல்ஜலாலிவல் இக்ராம் -

ذُوالْجَلاَلِ وَالإكْرَامِ - கண்ணியமும் சங்கையும் உள்ளவன்

86. அல் முக்ஸித் - الْمُقْسِطُ - நீதியானவன்

87. அல் ஜாமிஃ - الْجَامِعُ - ஒன்று சேர்ப்பவன்

88. அல் கனிய்யு - الْغَنِيُّ - தேவையற்றவன்

89. அல் முக்னீ - الْمُغْنِي - தேவையற்றவனாக்குவோன்

90. அல் மானிஃ - اَلْمَانِعُ - தடுப்பவன்

91. அள் ளார்ரு - الضَّارَّ - இடரளிப்பவன்

92. அன் நாஃபிஃ - النَّافِعُ - நற் பயனளிப்பவன்

93. அன் நூர் - النُّورُ - ஒளியானவன்

94. அல் ஹாதி - الْهَادِي - நேர்வழி காட்டுபவன்

95. அல் பதீஉ - الْبَدِيعُ - முன்மாதிரியின்றி படைப்பவன்

96. அல் பாகீ - اَلْبَاقِي - நிலையானவன்

97. அல் வாரித் - الْوَارِثُ - அனந்தரம் பெறுவோன்

98. அர் ரஷீத் - الرَّشِيدُ - நேர்வழி காட்டுவோன்

99. அஸ் ஸபூர் - الصَّبُورُ - பொறுமையுள்ளவன்

ஸஹீஹ் புகாரி : 2736

இறைத்தூதர் ( ஸல் ) அவர்கள் கூறினார்கள் : அல்லாஹ்வுக்கு நூறில் ஒன்று போக தொண்ணூற்றொன்பது திருப்பெயர்கள் உள்ளன . அவற்றை அறிந்து ( அதன் மீது நம்பிக்கை வைத்து அதை நினைவில் ) கொள்பவர் சொர்க்கத்தில் நுழைவார் . என அபூ ஹுரைரா ( ரலி ) அறிவித்தார் .

ரஹ்மத் ராஜகுமாரன்

**Rahmath Rajakumaran**

' வஹ்ததுல் வுஜூத் ' என்கிற மிக உயர்வான ஆன்மீமாக உங்கள் பதிவு போய் கொண்டு இருந்தது .இப்போது திடீரென அறிவியலும் சேர்ந்து அதனுடன் பயணிக்க ஆரம்பித்து விட்டதே . விஞ்ஞானம் தவிர்க்க முடியாதா ? என்று நண்பர்கள் கேட்கிறார்கள்

விஞ்ஞானமும், மெய்ஞானமும் இருவேறுபட்ட துறைகள் அல்ல; ஒன்றுக்கொன்று மிகை நிரப்பிகள் (Complementary) இக்கருத்தினை ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் மிக தெளிவாக குறிப்பிட்டுள்ளார்.

"மெஞ்ஞானம் சாராத விஞ்ஞானம் நொண்டி ;

விஞ்ஞானம் சாராத மெய்ஞ்ஞானம் குருடு"

" Science without religion is lame

Religion without science is blind "

மேலும் விஞ்ஞானத்தின் மூலம் ஆன்மிகம் செல்வது எனக்கு எளிதாக இருக்கிறது. அவ்வளவே !

ஒன்றே ஒன்றுதான் 15

Chapter (24) sūrat l-nūr (The Light)

ٱللَّهُ نُورُ ٱلسَّمَٰوَٰتِ وَٱلْأَرْضِ ۚ مَثَلُ نُورِهِۦ كَمِشْكَوٰةٍ فِيهَا مِصْبَاحٌ ۖ ٱلْمِصْبَاحُ فِى زُجَاجَةٍ ۖ ٱلزُّجَاجَةُ كَأَنَّهَا كَوْكَبٌ دُرِّىٌّ يُوقَدُ مِن شَجَرَةٍ مُّبَٰرَكَةٍ زَيْتُونَةٍ لَّا شَرْقِيَّةٍ وَلَا غَرْبِيَّةٍ يَكَادُ زَيْتُهَا يُضِىٓءُ وَلَوْ لَمْ تَمْسَسْهُ نَارٌ ۚ نُّورٌ عَلَىٰ نُورٍ ۗ يَهْدِى ٱللَّهُ لِنُورِهِۦ مَن يَشَآءُ ۚ وَيَضْرِبُ ٱللَّهُ ٱلْأَمْثَٰلَ لِلنَّاسِ ۗ وَٱللَّهُ بِكُلِّ شَىْءٍ عَلِيمٌ ﴿٣٥﴾

**Sahih International**: Allah is the Light of the heavens and the earth. The example of His light is like a niche within which is a lamp, the lamp is within glass, the glass as if it were a pearly [white] star lit from [the oil of] a blessed olive tree, neither of the east nor of the west, whose oil would almost glow even if untouched by fire. Light upon light. Allah guides to His light whom He wills. And Allah presents examples for the people, and Allah is Knowing of all things.

اَللّٰهُ نُوْرُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ ‌ؕ مَثَلُ نُوْرِهٖ كَمِشْكٰوةٍ فِيْهَا مِصْبَاحٌ‌ ؕ الْمِصْبَاحُ فِىْ زُجَاجَةٍ‌ ؕ اَلزُّجَاجَةُ كَاَنَّهَا كَوْكَبٌ دُرِّىٌّ يُّوْقَدُ مِنْ شَجَرَةٍ مُّبٰـرَكَةٍ زَيْتُوْنَةٍ لَّا شَرْقِيَّةٍ وَّلَا غَرْبِيَّةٍ ۙ يَّـكَادُ زَيْتُهَا يُضِىْٓءُ وَلَوْ لَمْ تَمْسَسْهُ نَارٌ‌ ؕ نُوْرٌ عَلٰى نُوْرٍ‌ ؕ يَهْدِى اللّٰهُ لِنُوْرِهٖ مَنْ يَّشَآءُ‌ ؕ وَ يَضْرِبُ اللّٰهُ الْاَمْثَالَ لِلنَّاسِ‌ؕ وَاللّٰهُ بِكُلِّ شَىْءٍ عَلِيْمٌ ۙ

அல்லாஹ் வானங்களுடையும் , பூமியினுடையவும் ஒளியாக இருக்கிறான். அவனது ஒளிக்கு உதாரணம் ஒரு மாடத்தைப் போன்றதாகும் .அதில் ஒரு விளக்கு இருக்கிறது.அவ்விளக்கு ஒரு கண்ணாடி(க் குவி)யில் இருக்கிறது; அக் கண்ணாடி ஒளிவீசும் நட்சத்திரத்தைப் போன்றதாகும். அது பாக்கியம் பெற்ற ஜைத்தூன் மரத்தி(ன் எண்ணெயி)னால் எறிக்கப் படுகிறது. அது கீழ்த்திசையை சேர்ந்ததுமன்று; மேல்திசையை சேர்ந்ததுமன்று. அதனை நெருப்புத் தீண்டாவிடினும், அதன் எண்ணெய் ஒளி வீச முற்படும், (இவை எல்லாம் சேர்ந்து) ஒளி மேல் ஒளியாகும். அல்லாஹ் தான் நாடியவரை தன்னுடைய ஒளி (என்னும் சத்தியப்பாதை)யின் பால் நடத்திச் செல்கிறான். மனிதர்களுக்கு இத்தகைய உவமைகளை அல்லாஹ் தெளிவுபடுத்துகிறான். அல்லாஹ் யாவற்றையும் நன்கு அறிபவன். .(அல்குர்ஆன் : 24:35)

முதல் வரி : " அல்லாஹ் வானங்களுடையும் , பூமியினுடையவும் ஒளியாக இருக்கிறான் "

முதலில் ஒளி என்றால் என்ன ?

‘வெளிச்சம்’ எதார்த்தமாக இப்படித் தான் நாம் ஒளியை அழைக்கிறோம். இந்த வெளிச்சம் எங்கிருக்கிறது? எப்படி இருக்கிறது? ஏன் இருக்கிறது? வெளிச்சம் இல்லாவிட்டால் என்னதான் நிகழும்?

நம்மைப் பொருத்தவரை பகல் பொழுதில் சூரியனில் இருந்தும், இரவு பொழுதில் நிலா மற்றும் நட்சத்திரங்களில் இருந்தும் இயற்கையாக வெளிச்சம் கிடைக்கிறது. மழைக் காலங்களில் மின்னலின் வெளிச்சம் மின்னலாக வந்து போகிறது.

எதாவது ஒரு பொருளை எரிய வைப்பதால் செயற்கையாக நம்மால் வெளிச்சத்தை உண்டாக்க முடியும்.

முன்பு தீப்பந்தம், எண்ணெய் விளக்குகள், மின்னும் கற்கள் இவற்றின் உதவியுடன் செயற்கை வெளிச்சத்தை உண்டாக்கினர். தற்போது மின் விளக்குகள், கிரிஸ்டல் உப்புகள், லேசர்கதிர்கள் என செயற்கை வெளிச்ச புரட்சியே நடக்கிறது.

வெளிச்சம் உண்டாக இரண்டு பொருட்கள் வேண்டும்.

1.எரியும் பொருள், 2.ஒளிரும் பொருள்.

எரியும் பொருள் தெரியும்., அது என்ன ஒளிரும் பொருள் ? -

இங்கே தான் வெளிச்சத்திற்கும் ஒளிக்கும் உள்ள வேறுபாட்டை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டிய சரியான தருணம் வருகிறது.

ஒரு பொருள் வெளிச்சத்தை ஏற்படுத்தினால், அது எரியும் பொருள். ஒரு பொருள் வெளிச்சத்தை ஏற்றுக்கொண்டால் அது ஒளிரா பொருள். இதற்கு ஓர் உதாரணத்தை குர்ஆன் வசனம் மூலம் சொல்றேன்.

وَّجَعَلَ الْقَمَرَ فِيْهِنَّ نُوْرًا ۙ وَّجَعَلَ الشَّمْسَ سِرَاجًا

அவனே, அவைகளில் சந்திரனைப் பிரதிபலிக்கும் வெளிச்சமாகவும், சூரியனை ஒளி விளக்காகவும் அமைத்தான். (அல்குர்ஆன் : 71:16)

இறைவனின் ஒளியைக் கொண்டு பூமி பிரகாசிக்கும்.

(அல்குர்ஆன் : 39:69)

அடுத்து சொல்லப் போற விஷயத்தில் குழப்பம் ஏற்படாமல் இருக்க மெதுவாக படியுங்கள்.

வெளிச்சத்தை ஏற்படுத்தும் பொருளும், வெளிச்சத்தை <u>#ஏற்கும்</u> பொருளும் எதிர்எதிரே இருந்தால் அங்கு வெளிச்சம் ஏற்படாது.

வெளிச்சத்தை ஏற்படுத்தும் பொருளும் வெளிச்சத்தை <u>#ஏற்கா</u> பொருளும் எதிரெதிரே இருந்தால் அங்கு வெளிச்சம் ஏற்படும்.

மேற்சொன்ன விளக்கத்தை நிதானமாக ஆய்வு செய்தீர்களானால் ஒளி என்றால் என்ன? என உங்களுக்கு புலப்பட்டிருக்கும்.

எரியும் பொருள் ஏதோ ஒன்றை எறிகிறது (வீசுகிறது). வீசப்பட்டது ஏதிரே இருக்கும் பொருள் மீது மோதி எதிர்விளைவை ஏற்படுத்துகிறது என்றால், அங்கு வெளிச்சம் பிறக்கிறது. எதிர்விளைவை ஏற்படுத்தவில்லை என்றால் வெளிச்சம் எரியும் பொருளிலும் இல்லை. ஏற்ற பொருளிலும் இல்லை.

உதாரணமாக : நீங்கள் விளக்கை எரிய விடுகிறீர்கள். விளக்கை எரித்தால் மட்டும் வெளிச்சம் வந்து விடாது. வெளிச்சம் பட்டு பிரதிபளிக்க சுவரோ, மேசையோ, பேனாவா, கட்டிலோ, திரைச்சீலையோ என எதாவது ஒரு பொருள் இருக்க வேண்டும். எந்த பொருளுமே இல்லாத ஒரு வெற்றிடத்தில் வெளிச்சத்தை பார்க்க முடியாது.

காற்றில் உள்ள சின்ன சின்ன தூசுகள் ஒளியை பிரதிபளிப்பதால் தான் ஒளிக்கதிர்கள் நமது கண்களுக்குத் தெரிகிறது.

ஒளியை வெளியிடும் ஒரு பொருள் வேண்டும். அதே போல ஒளியை பிரதிபளிக்கும் ஒரு பொருள் வேண்டும். இந்த இரண்டும் இருந்தால் மட்டுமே வெளிச்சத்தை நம்மால் பார்க்க முடியும்.

அதனால் மேற்கண்ட வசனத்தில் " அல்லாஹ் வானங்களுடையும் , பூமியினுடையவும் ஒளியாக இருக்கிறான் " இதை கொஞ்சம் மாற்றி சொல்றேன் அவனின் ஒளியைப் பிரதிபலிக்க வானங்களும் , பூமியும் இருக்கின்றன.

ஹதீஸ் குதுஸியில் " உம்மை படைத்திருக்காவிடில் வான மண்டலங்களை நான் படைத்திருக்க மாட்டேன் " என்று இறைவன் கூறியிருக்கிறான். இது சற்று உங்களை யோசிக்க செய்யும் என நினைக்கிறேன் .

சரி ஒளிக்கும் வெளிச்சத்துக்குமான வித்தியாசத்திற்கு வருவோம்.

எரியும் ஒரு பொருளில் இருந்து எறியப்படும் ஒன்று எதிரே உள்ள பொருளில் பட்டு பிரதிபளித்தால் அது ஒளி. அந்த பிரதிபளிப்பை நம் கண்கள் உணர்ந்தால் அது வெளிச்சம். வெளிச்சம் எல்லாம் ஒளியாகும். ஆனால் ஒளி எல்லாம் வெளிச்சம் ஆகாது. குறிப்பிட்ட ஒளியை மட்டுமே நமது கண்கள் உணர்கிறது. நமது கண்கள் உணரும் ஒளி வெளிச்சம் எனப்படுகிறது.

உதாரணமாக வெளிச்சம் என்பது ஒரு நீர்த்துளி அளவு என்றால், ஒளி என்பது கடலின் அளவை விட அதிகமானது. அதனால் சிறுதுளியான வெளிச்சத்தை கொண்டே ஒளியை புரிந்து கொள்ள முடியும் .

இப்போ விஷயத்திற்கு வருவோம் .

இறைவன் தனக்கு அந்நூர் என்று பெயர் வைத்துக் கொண்டான். ஒன்றிலிருந்து மற்றொன்று உண்டாகுமாயின் இரண்டுக்கும் ஒரே பெயர் கூறுவது அரபியரது அது வழக்கம். மேகத்தினால் தான் மழை உண்டாகிறது ஆகவே மேகத்துக்கும் அவர்கள் மழை என்று கூறுகின்றனர் .இதுபோல வெளிச்சத்துக்கு நேர்வழி என்றும் , நேர்வழிக்கு பிரகாசம் என்றும் கூறப்படுகிறது .

இதன்படி திருக்குர்ஆனை கொண்டு நேர்வழி ஏற்படுவதால், திருக்குர்ஆனுக்கும் ' நூர் ' (வெளிச்சம்) என்றும் கூறப்படுகிறது.

நிச்சயமாக, அல்லாஹ்விடமிருந்து ஒளியும் , தெளிவுமுள்ள ஒரு வேதமும் (இப்போது) உங்களிடம் வந்திருக்கின்றது.

(அல்குர்ஆன் : 5:15)

ரஹ்மத் ராஜகுமாரன்

**Rahmath Rajakumaran**

வெளிச்சத்தில் இல்லாத ஒரே நிறம் கருப்பு. கருப்பில் வெளிச்சம் மட்டுமல்ல ஒளியும் இல்லை. இந்த பிரபஞ்சத்தில் அதிகமாக உள்ள நிறம் கருப்பு தான்.
ஆனால் உண்மையில் கருப்பு ஒரு நிறம் அல்ல. எந்த நிறமும், எந்த வெளிச்சமும் இல்லாத ஒன்றிற்கு கருப்பு என பெயரிட்டுள்ளோம்.
கருப்பில் பொருள் கூட இல்லை. கருப்பான பொருள் பிரபஞ்சத்தில் இல்லவே இல்லை. பொருளே அல்லாத இந்த கருப்பை தான் வெளி என்கிறோம். பிரபஞ்ச வெளி எங்கும் கருப்பே நிறைந்திருக்கிறது.
படைப்புகளை படைப்பதற்கு முன் இறைவன் : "நான் மறைக்கப்பட்ட புதையலாக இருந்தேன் அதன் பின் நான் அறியப்பட வேண்டும் என்று விரும்பினேன் எனவே படைப்பினங்களைப் படைத்தேன். மறைக்கப்பட்ட புதையல் இருட்டில் தானே இருந்திருக்க வேண்டும் .
படைப்புகளைப் படைத்த பின் இறைவன் : "அதனால்தான் அல்லாஹ் வானங்களுடையவும், பூமியுடையவும் ஒளியாக (பிரகாசமாக) இருக்கின்றான்" என்று சொன்னானோ ..?

**Rahmath Rajakumaran**

**Zakir Hussain**

வெளிச்சத்தில் இல்லாத ஒரே நிறம் கருப்பு. கருப்பில் வெளிச்சம் மட்டுமல்ல ஒளியும் இல்லை. இந்த பிரபஞ்சத்தில் அதிகமாக உள்ள நிறம் கருப்பு தான்.
ஆனால் உண்மையில் கருப்பு ஒரு நிறம் அல்ல. எந்த நிறமும், எந்த வெளிச்சமும் இல்லாத ஒன்றிற்கு கருப்பு என பெயரிட்டுள்ளோம்.
கருப்பில் பொருள் கூட இல்லை. கருப்பான பொருள் பிரபஞ்சத்தில் இல்லவே இல்லை. பொருளே அல்லாத இந்த கருப்பை தான் வெளி என்கிறோம். பிரபஞ்ச வெளி எங்கும் கருப்பே நிறைந்திருக்கிறது.
படைப்புகளை படைப்பதற்கு முன் இறைவன் : "நான் மறைக்கப்பட்ட புதையலாக இருந்தேன் அதன் பின் நான் அறியப்பட வேண்டும் என்று விரும்பினேன் எனவே படைப்பினங்களைப் படைத்தேன். மறைக்கப்பட்ட புதையல் இருட்டில் தானே இருந்திருக்க வேண்டும் .
படைப்புகளைப் படைத்த பின் இறைவன் : "அதனால்தான் அல்லாஹ் வானங்களுடையவும், பூமியுடையவும் ஒளியாக (பிரகாசமாக) இருக்கின்றான்" என்று சொன்னானோ ..?

ஒன்றே ஒன்றுதான் 16



அல்லாஹ் வானங்களுடையும் , பூமியினுடையவும் ஒளியாக இருக்கிறான். அவனது ஒளிக்கு உதாரணம் ஒரு மாடத்தைப் போன்றதாகும் .அதில் ஒரு விளக்கு இருக்கிறது.அவ்விளக்கு ஒரு கண்ணாடி(க் குவி)யில்

இருக்கிறது; அக் கண்ணாடி ஒளிவீசும் நட்சத்திரத்தைப் போன்றதாகும். அது பாக்கியம் பெற்ற ஜைத்தூன் மரத்தி(ன் எண்ணெயி)னால் எறிக்கப் படுகிறது. அது கீழ்த்திசையை சேர்ந்ததுமன்று; மேல்திசையை சேர்ந்ததுமன்று. அதனை நெருப்புத் தீண்டாவிடினும், அதன் எண்ணெய் ஒளி வீச முற்படும், (இவை எல்லாம் சேர்ந்து) ஒளி மேல் ஒளியாகும். அல்லாஹ் தான் நாடியவரை தன்னுடைய ஒளி (என்னும் சத்தியப்பாதை)யின் பால் நடத்திச் செல்கிறான். மனிதர்களுக்கு இத்தகைய உவமைகளை அல்லாஹ் தெளிவுபடுத்துகிறான். அல்லாஹ் யாவற்றையும் நன்கு அறிபவன். .(அல்குர்ஆன் : 24:35)

" நூர் " என்பதற்கு ' திருக்குர்ஆன் ' எனவும் ஒரு கருத்து கூறப்படுகிறது . இதனைக் குறித்து திருக்குர்ஆனின் பிறிதோரிடத்தில் " நிச்சயமாக உங்களுக்கு அல்லாஹ்விடமிருந்து ஒரு பிரகாசம் வந்துவிட்டது (5 : 15) என்று கூறப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கதாகும் .

அல்லாஹ்வின் அர்ஷு (ஆசனம்) ஓர் உண்மை விசுவாசியின் இருதயம் ஆகும் (அல்ஹதீஸ்) என்பதற்கிணங்க ஒரு விசுவாசியின் இதயத்திற்கு இது உதாரணம் கூறப்படுகிறது என்று கருத்தும் உண்டு.

'மாடம்'. என்பது ஓர் உண்மை விசுவாசியைக் குறிக்கும் 'கண்ணாடி' என்பது அவனுடைய இருதயம் ஆகும்.

' விளக்கு' என்பது அந்த இருதயத்தில் இறைவன் அமைத்துள்ள ஈமான் என்னும் விசுவாசம் ஆகும்.

அல்லாஹ்விற்காக தூய்மையாக வாழ்வது எனும் எண்ணெய் மூலம், அந்த ஈமான் உருவாக்கப்படுகிறது. கிழக்கிலிருந்து உதயமாகும் சூரிய வெளிச்சமும் , மேற்கிலிருந்து வீசும் வெளிச்சமும் (இரவும், பகலும் ) அந்த விலக்கினை மென்மேலும் அதிகமாக ஒளியாக்குகின்றன. அதாவது உலகின் மாறுபாடுகள் எதுவும் அந்த விளக்கினை கெடுத்து விடாது .

'விளக்கம் ' என்னும் நெருப்பு அந்த விளக்கினைத் தொடாவிட்டாலும் , அந்த விசுவாசம் என்னும் விளக்கானது பிரகாசித்துக் கொண்டே இருக்கும் .திருக்குர்ஆனின் விளக்கமும் அதற்கு கிடைத்துவிட்டால் பிரகாசத்திற்கு மேல் பிரகாசமே ஏற்பட்டு விடும் எனவும் ஒரு கருத்து கூறப்படுகிறது.

பொதுவாக #விளக்கம் என்ற சொல் உண்மைப் பொருளைக் கண்டறிய முன்னேறும் ஒவ்வொரு படியிலும் சுருங்கிக்கொண்டே வருகிறது. அதாவது உண்மையை அதிகமாக அறிய , அறிய அதை விளங்கிச் சொல்வது கடினமாகிக் கொண்டே போகிறது !"

மனிதனுக்கு வழங்கப்படும் ஞானத்திற்கும் ' நூர் 'எனக் கூறப்படுகிறது. அந்த ஞானமும் அல்லாஹ்வின் ஞான ஜோதிலிருந்து வழங்கப்படுவதால், 'நூர்' என்றும் திருக்குர்ஆன் என்றும் கூறப்படுகிறது .

'விளக்கு ' என்பது குர் ஆனாகும். விளக்கினைக் கொண்டு வெளிச்சத்தை பெறுவது போல், குர்ஆனைக் கொண்டு 'நேர்வழி' என்னும் வெளிச்சம் பெறப்படுகிறது.

'கண்ணாடி ' என்பது உண்மை விசுவாசியின் இருதயம் ஆகும் இதில் குர்ஆனின் ஞானம் வைக்கப்பட்டுள்ளது.

' மாடம் ' என்பது அவனுடைய வாய், நா ஆகியவையாகும்.

புனிதமான மரத்தின் ' எண்ணைய் ' என்பது அவனுடைய இதயத்தில் உதயமாகிற ஞானமாகும் .அந்த ஞானத்தில்

'வெளியாகும் விளக்கம்' என்னும் நெருப்பு தொடாவிடினும் அந்த ஞானம் ஒளிமிகுந்து கொண்டே போகும். விளக்கம் கிடைத்து விட்டால் ஒளிக்கு மேல் ஒளியாகும் என்பது இதன் கருத்தாகும்.

இன்னும் அநேக விளக்கங்கள் மேற்கண்ட வசனத்திற்கு சொல்லப்பட்டுக் கொண்டே இருக்கிறது என்றாலும், உண்மை விசுவாசி அவனின் 'நூர்' என்னும் பிரகாசத்தை மட்டுமே எதிர்பார்க்கிறார் .மற்ற விளக்கங்களை விட்டு விடுகிறார் .

'மீன்பிடி கூடைகள் மீன்பிடிக்க கையாளப்படுகின்றன. மீன் பிடிபட்ட பின்னர் கூடைகளை மறந்து விடுவார்கள்.'

'முயல்களை பிடிக்க தொரட்டிகள் பயன்படுத்தப்படுகின்றன. முயல்கள் பிடிபட்டதும் தொரட்டிகளை மறந்துவிடுவார்கள்'

' கருத்துக்களை வெளியிட சொற்களை ஆளுகிறோம். கருத்துக்கள் கிரகிக்கப்பட்டபின் வார்த்தைகளை மறந்து விடுவோம்'

'நிலவைச் சுட்டிக்காட்ட விரல் தேவைதான் ; நிலவைக் கண்டு கொண்டபின் விரலைப் பற்றிய சிந்தனையில் நம்மை நாமே நோகடித்து கொள்ளக் கூடாது என்கிறார்கள் தத்துவஞானிகள்.

ரஹ்மத் ராஜகுமாரன் .

**Rahmath Rajakumaran**

" அல்லாஹ்வை நூர் என்று கூறுவது ஹகீகத்தான் .மஜாஜ் அல்ல .பார்த்து அறிவதை விட அறிவால் விளங்குவது ஏற்றமானது. இரண்டுமே ஜுஹூர் வெளியாவதைத் தேடுகின்றன. ஒளியின் தன்மையோ வெளிப்படுவதுதான் எனவே இரண்டு அறிவாலும் நூர் அறியப்படுகிறது.. இதற்கு பின் அவர்கள் கூறுவதாவது சிருஷ்டி அசல் மஃதூம் (இல்லாமை) ஆகும் அதற்கு வேறு ஒருவரிடமிருந்து வழங்கப்படுகிறது. அதன் வுல் மத்ரூளா ஆகவும் இருக்கிறது"
....இது மாதிரியான என்னால் புரிந்து கொள்ள முடியாத கடின அரபிப் பதத்தின் பிரயோகங்களைத் தவிர்க்கிறேன் . மேலும் அதை உங்களிடம் தருவதில் எனக்கு இஷ்டமுமில்லை .
பொதுவாக ' விளக்கம் ' என்ற சொல் உண்மைப் பொருளைக் கண்டறிய முன்னேறும் ஒவ்வொரு படியிலும் சுருங்கிக்கொண்டே வருகிறது. அதாவது உண்மையே அதிகமாக அறிய , அறிய அதை விளங்கிச் சொல்வது கடினமாகிக் கொண்டே போகிறது !"

ஒன்றே ஒன்றுதான் 17




அல் ஹய்யு - நிலையானவனே
அல் கைய்யூம் _ நித்திய ஜீவனே
அல்லாஹ் தன்னை அல் ஹய்யு – நித்திய ஜீவன், என்றும் வாழ்பவன் - என குர்'ஆனில் ஐந்து இடங்களில் குறிப்பிடுகிறான். அல் ஹய்யு என்பவன் ஆதியிலிருந்து இருந்தவன், இருப்பவன், இருக்கப்போகிறவன், அவன் என்றும் உயிரோடிருப்பான்!

அல்லாஹ் தன்னை அல் ஹய்யு – நித்திய ஜீவன், என்றும் வாழ்பவன் - என குர்’ஆனில் ஐந்து இடங்களில் குறிப்பிடுகிறான். அல் ஹய்யு என்பவன் ஆதியிலிருந்து இருந்தவன், இருப்பவன், இருக்கப்போகிறவன், அவன் என்றும் உயிரோடிருப்பான்!

ஹய்யு என்பது நான்கு முக்கியமான கருத்துக்களைக் குறிக்கும் ‘ஹா – யா – யா’ என்ற எழுத்துக்களிலிருந்து பிறக்கிறது. முதல் கருத்து – வாழ்தல். இரண்டாவது கருத்து – தெளிவாக இருப்பதுka, மூன்றாவது கருத்து – புத்துயிர் பெறுதல், புதுப்பித்தல், ஆற்றல் பெறுதல், பிறப்பித்தல், நான்காவது கருத்து – நலம், முழுமையாக இருத்தல்.
இம்மூல எழுத்துக்கள் குர்’ஆனில் 184 இடங்களில் 12 திரிந்த வடிவங்களில் இடம்பெறுகின்றன. உதாரணம், ‘யுஹ்யீ’’ (வாழ்வளிப்பவன்), ‘ஹய்யான்’ (உயிருடன் இருப்பவன்), ‘அல் ஹயாத்து’ (வாழ்வு/உயிர்).

அல் ஹய் என்பவன், தொடக்கமும், முடிவும் இல்லாமல், தொடர்ந்து வாழ்பவன்.
அவனுடைய வாழ்வும், தன்மைகளும் குறைகளற்றவை. அவனுடைய வாழ்வு சுயசார்புடையது, வேறு எதையும் சார்ந்திராதவன் அவன். நம் வாழ்வு நம்மைப் படைத்தவன் அளித்த கொடை. அல் ஹய் தான் எல்லா உயிர்களையும் வாழ வைக்கிறான், அவன் தான் உயிர்கள் திரும்பச் செல்ல வேண்டிய மூலம்!
அல் ஹய் கூறுகிறான்: ‘......இன்னும் நிலைத்தவனாகிய நித்திய ஜீவனான (அல்லாஹ்வுக்கு) யாவருடைய முகங்களும் பணிந்து தாழ்ந்துவிடும். ஆகவே எவன் அக்கிரமத்தைச் சுமந்து கொண்டானோ, அவன் நற்பேறிழந்தவனாகி விடுவான். [அல் குர்’ஆன் 20:111]
எனவே, மரிக்க மாட்டானே அந்த நித்திய ஜீவ(னாகிய அல்லாஹ்வி)ன் மீதே முற்றிலும் நம்பிக்கை வைப்பீராக.
[அல் குர்’ஆன் 25:58]
அவனே (என்றென்றும்) உயிரோடிருப்பவன், அவனையன்றி (வேறு) நாயனில்லை - ஆகவே நீங்கள் அவனுக்கே முற்றிலும் வழிபட்டு தூய உள்ளத்தோடு அவனை அழையுங்கள்.
[அல் குர்’ஆன் 40:65]

அல் ஹய் என்ற பெயர் பெரும்பான சமயங்களில் அல் கைய்யூம் – என்றும் நிலையானவன் என்ற பெயருடன் சேர்ந்து வரும். இது, அல்லாஹ்வுடைய தன்மைகளின் முழுமையையும், அவனுடைய செயல்களையும் குறிக்கும் ஒரு மிக அழகிய சேர்க்கை!

அல் ஹய் என்றால், முழுமையான வாழ்வைப் பெற்றவன், அதனால், அவனுடைய செவியேற்கும் தன்மை, பார்வை, அழகு, போன்ற தன்மைகள் அனைத்தும் குறைகளற்றவை. மனிதனுடைய வாழ்வு எல்லா விதங்களிலும், முழுமையற்றது, குறைகள் நிறைந்தது. நம் செவியேற்கும் தன்மை, பார்வை, பேச்சு, செயல்கள் எல்லாமே பூரணமானவை அல்ல.

அல்லாஹ்வுடைய எல்லா தன்மைகளும் முழுமையானவை, ஏனென்றால், குறைகள் ஏற்படுவது உயிரின் பலவீனத்தினால் தான். ஆனால், அவனுடைய வாழ்வோ மிகவும் முழுமையானது!

1. நித்திய ஜீவனான அல் ஹய்யைச் சார்ந்திருங்கள் மரிக்க மாட்டானே அந்த நித்திய ஜீவ(னாகிய அல்லாஹ்வி)ன் மீதே முற்றிலும் நம்பிக்கை வைப்பீராக. இன்னும் அவன் புகழைக் கொண்டு (அவனைத்) துதி செய்து கொண்டிருப்பீராக.
[அல் குர்’ஆன் 25:58]
நம்முடைய எல்லா பிரச்சினைகள் மற்றும் துன்பங்களுடைய பிறப்பிடம் இந்த உலகில் தான் இருக்கிறது. செல்வம், குடும்பம், போன்ற எதுவாக இருந்தாலும், அவை அனைத்தும் ஒரு நாள் அழியக்கூடியவைதான். இவ்வசனம் ஒரு அழகிய சிந்தனையைத் தருகிறது: நீங்கள் உங்கள் நம்பிக்கையை அல்லாஹ்வின் மீது வைக்கும்போது, உண்மையிலேயே உணருங்கள், நீங்கள் யாரை நம்புகிறீர்களோ அவன் எத்தனை பெரியவன் என்பதை!

உங்கள் கற்பனையை உபயோகியுங்கள், 100 ஆண்டுகள், 1000 ஆண்டுகள், ஒரு மில்லியன் அல்லது ஒரு பில்லியன் ஆண்டுகள் பின்னோக்கி செல்லுங்கள், அப்போதும் அல்லாஹ் இருந்தான்! அதே போல, வருங்காலத்தைப் பற்றி சிந்தித்து, அவனுடைய பெருமையை, மகத்துவத்தை உணருங்கள்!

2. நன்மைகள் செய்ய ஊக்கம் பெறுங்கள்.
அந்த வசனம் தொடருகிறது. இன்னும் அவன் தன் அடியார்களின் பாவங்களை அறிந்தவனாக இருப்பதே போதுமானதாகும். [அல் குர்'ஆன் 25:58]
உங்களுடைய எல்லா காரியங்களையும் அவனிடம் ஒப்படைத்து விட்டு, அல் ஹய்யுடைய மேன்மையை உணர்ந்து, நீங்கள் உணர்ந்ததை உங்கள் உதடுகளிலிருந்து வரும் தஸ்பீஹ் (சுபஹானல்லாஹ்) சொல்வதன் மூலம் வெளிப்படுத்துவதோடு, உங்கள் உறுப்புகளைக் கொண்டு செயலாற்றுங்கள்.
அல் ஹய்யிடமிருந்து நற்செயல்கள் புரிய ஊக்கம் பெறுங்கள். மக்கள் உங்கள் வாழ்வின் எல்லா பகுதியிலும், நீங்கள் செய்த தீச்செயல்களைப் பார்க்கவோ, கேட்கவோ இயலாமல் இருந்த போதும், அல் ஹய் உங்களுடன் இருந்தான், இருக்கிறான், அவனுடைய குறைகளற்ற வாழ்வின் பகுதியான செவியேற்கும் திறன் மற்றும் பார்வையுடன் என்றும் இருப்பான்!

3. ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னும், உறங்குமுன்னும் ஆயத்துல் குர்ஸியை ஓதுங்கள். குர்'ஆனிலுள்ள இந்த மாபெரும் வசனத்தில் அல்லாஹ்வின் அழகிய பெயராகிய அல் ஹய் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆயத்துல் குர்ஸியுடைய நன்மைகள் பல ஹதீஸ்கள் உள்ளன. அதன் ஒவ்வொரு வாக்கியத்திலும் அல்லாஹ்வின் ஒன்றிரண்டு தன்மைகள் அடங்கியுள்ளன. இந்த ஆயத்தை ஓதும்போதெல்லாம், அல்லாஹ்வின் தன்மைகளைப் பற்றியும், அவை எப்படி அவனுடைய குறைகளற்ற வாழ்விலிருந்து வெளிப்படுகின்றன என்று சிந்தியுங்கள். அவன் அல் ஹய்!

4. அல் ஹய்யிடம் கேளுங்கள். நபி (ஸல்) அவர்கள் கடுமையான சிரமத்தில் இருக்கும்போது, அவர்கள் கூறுவார்கள்:
நித்திய ஜீவனே, (பேரண்டம் முழுவதையும் நிர்வகிப்பவனே உனது அருளைக்கொண்டு ரட்சிக்கத் தேடுகிறேன். என்னுடைய எல்லாக் காரியங்களையும் சீர்படுத்துவாயாக. கண் இமைக்கும் நேரத்திற்கு கூட என்னை (உன் பொறுப்பை விடுத்து) என் பாதுகாப்பில் விட்டுவிடாதே. [சுனன் திர்மிதி]

5. அல் ஹய்யிடம் ஆறுதல் பெறுங்கள். அல் ஹய்யிடம் ஆறுதல் பெறுங்கள், அவன் எப்போதும் இருப்பவன் என்பதை அறிந்து நீங்கள் எதையாவது இழந்து விட்டால் அவனிடம் திரும்புங்கள். உங்களுக்கு அநீதி இழைக்கப்பட்டால், அல்லது உங்களைச் சுற்றிலும் அநீதி இழைக்கப்படுவதைக் கண்டால், அல் ஹய்யுடைய சட்டங்களுக்கு உட்பட்டு உங்களால் இயன்ற அளவு உதவ முயலுங்கள்.
ஆனால், ஒவ்வொரு தனிமனிதனுடைய அநீதியும் மறுமையில் தோல்விக்கு காரணமாக இருப்பதை அறிந்து கொள்ளுங்கள். அதனால், உங்களுடைய கைகளினால் அநீதி இழைப்பதிலிருந்தும் உங்களைக் காத்துக் கொள்ளுங்கள்!!
இன்னும், நிலைத்தவனாகிய நித்திய ஜீவனான (அல்லாஹ்வுக்கு) யாவருடைய முகங்களும் பணிந்து தழ்ந்துவிடும். ஆகவே எவன் அக்கிரமத்தைச் சுமந்து கொண்டானோ, அவன் நற்பேறிழந்தவனாகி விடுவான்.
[அல் குர்'ஆன் 20:111]

6. உங்களுடைய அன்றாட வழிகாட்டுதலுக்கு அல் ஹய்யிடம் திரும்புங்கள்.
நபி (ஸல்) அவர்கள் ஒரு முறை ஃபாத்திமா (ரலி) அவர்களிடம்
'யா ஹைய்யு, யா கைய்யூம், பி ரஹ்மதிக அஸ்தகீஸ், அஸ்லிஹ்லி ஷா'னி குல்லஹு, வலா தகில்னீ இலா நஃப்ஸீ தர்ஃபத அய்ன்.'
[பொருள்: நித்திய ஜீவனே, (பேரண்டம் முழுவதையும் நிர்வகிப்பவனே உனது அருளைக்கொண்டு ரட்சிக்கத் தேடுகிறேன். என்னுடைய எல்லாக் காரியங்களையும் சீர்படுத்துவாயாக. கண் இமைக்கும்

நேரத்திற்கு கூட என்னை (உன் பொறுப்பை விடுத்து) என் பாதுகாப்பில் விட்டுவிடாதே.] என்ற துவாவை காலையிலும், மாலையிலும் ஓதும்படி கூறினார்கள். [அன்நஸாயி].

அல் ஹய் உங்களை ஒரு வினாடியின் ஒரு சிறு பகுதியில் கூட உங்கள் பொறுப்பில் விட்டு விட்டால், நீங்கள் அழிந்து போவீர்கள்.!
நிச்சயமாக அல்லாஹ் யாவற்றையும் அறிந்தவன்.
யா அல்லாஹ், யா ஹய்யு, நீ தான் நித்திய ஜீவன், குறைகளற்றவன் என்பதை நாங்கள் அறிகிறோம்.
உன் மீது சார்ந்திருப்பவர்களாக நாங்கள் இருப்பதற்கு அருள் புரிவாயாக. உன்னுடைய முழுமையான வாழ்வையும், உன்னுடைய எல்லா தன்மைகளையும் நாங்கள் உணர்ந்து அவற்றின்படி நாங்கள் வாழ வழிகாட்டி அருள் புரிவாயாக.

எங்கள் வாழ்வை நன்மை நிறைந்ததாக செய்து, எங்களுடைய முடிவையும் நன்மை நிறைந்ததாக ஆக்குவாயாக. உன்புறம் மட்டுமே நாங்கள் திரும்புவதற்கு உதவி, ஜன்னதுல் ஃபிர்தௌஸில் எங்களுக்கு முடிவில்லா வாழ்க்கையைத் தருவாயாக. ஆமீன்!

ர.ரா

ஒன்றே ஒன்றுதான் 18




அல் ஹய்யு - நிலையானவனே

அல் ஹய்யு _ நித்திய ஜீவனே

( இரண்டாம் பாகம்)

"அல்லாஹ்" -அவனைத்தவிர (வணக்கத்திற்குரிய) நாயன் வேறு இல்லை; அவன் என்றென்றும் ஜீவித்திருப்பவன்; என்றென்றும் நிலைத்திருப்பவன் " குர்ஆன் ( 2 : 255 )

அல்லாஹ் என்பது அவனுக்கு உரிய தொண்ணூற்றொன்பது திருப்பெயர்களில் மிகவும் பிரதானமானது. இந்தப் பெயர் அவனது ' தாத்' தை அறிவிக்கிறது. இந்த பெயரை அவனுக்குத் தவிர வேறு யாருக்கும் எக்காரணத்தைக் கொண்டும் கூறுவதில்லை.

இதனை தவிர உள்ள இதர பெயர்களை சில காரணங்களால் அல்லாஹுத்தஆலா தவிர உள்ளவைகளுக்கும் கூறமுடியும். "#அவனைத்தவிரவேறுநாயன்இல்லை" என்ற இந்த வாக்கியம் அல்லாஹுத்தஆலா - ஒருவன்தான் வணக்கத்திற்குரியவன் .அவனுக்கு இணையானவர் எவருமில்லை , அவனைத் தவிரவுள்ளவைகளெல்லாம் சிருஷ்டிக்கப்பட்டவைகள் என்பதை அறிவிக்கிறது.

" ஹைய்யுல் கையூம் " என்பது அல்லாஹுத்தஆலாவின் 'இஸ்முல் அஃலம்' என்று சிலர் கூறியிருக்கிறார்கள்.

இஸ்முல் அஃலம் _ இது சூராக்களில் இருக்கின்றன. அதனைக் கொண்டு இறைவனிடம் துஆ கேட்டால், உடனே கேட்டது கொடுக்கப்படும்.

சூரத்துல் பகரா, ஆல இம்ரான், தாஹா ஆகிய மூன்று சூராக்களில் இருக்கிறது என்பதாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியிருப்பதாக அபீ உமாமா ( ரலி )அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

இன்னும் அவற்றை நான் தேடிப் பார்த்து, சூரத்துல் பகராவில் ஆயத்துல் குர்ஸியில் " அல்லாஹு லாயிலாஹ இல்லா ஹுவல் ஹய்யுல் கய்யூம் " என்ற வாக்கியமும்,

ஆல இம்ரானில் , " அலிஃப் , லாம் , மீம் அல்லாஹு லாயிலாஹ இல்வா ஹுவல் ஹய்யுல் கய்யூம் " (1,2 ) என்ற வாக்கியமும்,

சூரா தாஹாவில் "வஅனதில் ஷஜுஹு லில்ஹய்யுல் கய்யும் " (111 ) என்ற வாக்கியமும் என்று கண்டேன் என்பதாக அபீ உமாமா (ரலி) கூறியதாக இமாம் பைஹக்கி (ரஹ்) அவர்கள் ரிவாயத்துச் செய்திருக்கிறார்கள் .

நபி ஈஸா (அலை) அவர்கள் இறந்தவர்களை உயிர்ப்பிக்க நாடும் போதெல்லாம் யா ஹைய்யு யா கைய்யூம் என்பதாக துஆ செய்து கொண்டிருப்பார்கள்.

கடலில் செல்பவர்கள் தங்களது மரக்கலங்கள் மூழ்கி விடும் என்று பயந்தால் யா ஹைய்யு யா கைய்யூம் என்பதையே கூறியே நபி ஈஸா (அலை) அவர்கள் துஆ செய்வார்கள் என்றும் சொல்லப்படுகிறது

" இன்னும் பத்ருப் போர் நடந்துகொண்டிருந்தபோது ,நான் நபி (ஸல்) அவர்களை பார்க்க வந்தேன். அப்பொழுது நபி (ஸல்) அவர்கள் சுஜூது செய்தவர்களாக"யா ஹைய்யு யா கைய்யூம் " என்பதாக பலமுறை திரும்பத் திரும்ப கூறிக் கொண்டே இருந்தார்கள். இன்னும் இறைவன் தங்களுக்கு வெற்றி அளிக்கும் வரை இதே விதமாக பிரார்த்தித்துக் கொண்டே இருந்தார்கள்" - என்பதாக அலி (ரலி) அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

ரஹ்மத் ராஜகுமாரன்.

ஒன்றே ஒன்றுதான் 19

(அவனை சிறு தூக்கமும் , பெரும் நித்திரையும் பீடிக்காது)
உறக்கம் - நாம் அனைவரும் அன்றாடம் செய்யும் ஒன்றுதான். அதில் என்ன இருக்கிறது என்று எண்ணுகிறீர்களா ? 24 மணி நேரத்தில் சராசரியாக எட்டு மணிநேரம் உறங்குகிறோம் எனும்போது நம் வாழ்வில் மூன்றில் ஒரு பங்கு உறக்கத்தில் செலவிடுகிறோம்.

நம்முடைய இயற்கையின் அமைப்பில் சூரியனும், சந்திரனும் பகல்-இரவு என்ற சுழற்சியை சீராக செயல்படுத்துவது போலää நம்முடைய உடலிலும் செயல்களை சீராக்கும் 'Circadian Clock' என்ற ஒரு கடிகாரம் மூளையில் செயல்படுகிறது.

அந்த அகசுழற்சி சரியாக இயங்குவதற்கு ஆரோக்கியமான ஆழமான உறக்கம் மிக முக்கியம். நம் உடலில் உள்ள பல்வேறு ஹார்மோன்கள் சரியாக சுரப்பதற்கு அதுவே அடிப்படை. சரியாக தூங்கவில்லை என்றால் அந்த நாளில் நம்முடைய செயல்திறன் குறைவதை நாம் உணர்ந்திருப்போம்.

எதிரி நாட்டு உளவாளி பிடிபட்டதும் , சாப்பாடு கொடுப்பார்கள் ஆனால் ஒரு நிமிடம் கூட உறங்கவிடாமல் நிமிடத்திற்கு இரு சொட்டு நீர் உச்சந்தலையில் விழ , கட்டி வைப்பார்கள்.24 மணி நேரத்திற்குள் தூக்கமின்மையால் பிடிபட்ட உளவாளி தன் தாயை மட்டுமல்ல , தன் தாய் நாட்டையும் காட்டி கொடுத்து விடுவான். தூக்கமின்மை அத்தனை கொடூரமானது.

இரவில் தூங்காமல் அதை ஈடுகட்ட பகலில் தூங்குவது இன்று சகஜமாக காணும் சூழலே. எத்தனை மணி நேரம் பகலில் தூங்கினாலும் அது இரவு தூக்கத்திற்கு ஈடாகாது. கால் சென்டர்களில் இரவு நேரம் வேலை செய்பவர்கள் பொழுது போக்கிற்காக இரவு கண் விழிப்பவர்கள் என அனைவருக்கும் 'Circadian Rythm" சார்ந்த கோளாறுகள் ஏற்படுவதற்கு வாய்ப்புகள் அதிகம்.

உறங்கும் நேரத்தில் இயற்கையாக **'Melatonin"** எனப்படும் உறக்கத்தை ஏற்படுத்தும் ஹார்மோன் சுரக்க வேண்டும். அது நாம் ஒரு விஷயத்தை கைபேசியிலோ மடிக்கணினியிலோ ஆர்வமாக பார்த்துக் கொண்டிருக்கும் போது சுரப்பதில்லை.

தூங்குவதற்கு முன் உடற்பயிற்சி செய்தல் அன்று நடந்த பிரச்சனையை மற்றவர்களோடு விவாதித்தல் போன்ற செயல்கள் நம்முடைய உறக்கத்தின் தரத்தை பாதிக்கும். நாளடைவில் அதுவே நம் உடல் ஆரோக்கியத்திற்கும் மன நலத்திற்கும் தீங்கு விளைவிக்கும்.
وَهُوَ الَّذِىْ جَعَلَ لَـكُمُ الَّيْلَ لِبَاسًا وَّالنَّوْمَ سُبَاتًا وَّجَعَلَ النَّهَارَ نُشُوْرًا
அவன்தான் உங்களுக்கு இரவைப் போர்வையாகவும், ஓய்வளிக்கக் கூடியதாகவும், பகலை (உங்கள்) நடமாட்டத்திற்காக (பிரகாசமாக)வும் ஆக்கினான்.
(அல்குர்ஆன் : 25:47) என்ற திருக்குர்ஆன் வசனம் சொல்வது எத்தனை உண்மை என்பதை கால் சென்டர்களில் இரவு நேரம் வேலை செய்பவர்களிடம் கேட்டுப் பாருங்கள் .

" அவனை சிறு தூக்கமும் , பெரும் நித்திரையும் பீடிக்காது" என்பது அல்லாஹுத்தஆலாவுக்கு தூக்கம், அசதி போன்றவைகள் ஏற்படுவதை விட்டும் அவன் தூயவன் என்பதையும் சிருஷ்டிப் பொருட்களுக்கு சம்பவிக்கிற இத்தன்மைகள் அவனுக்கு சம்பவிக்க மாட்டா என்பதையும் அப்படி சம்பவிப்பது கைய்யூம் என்கிற அவனது திரு பெயருக்கு முரண்பட்டதாக இருக்கிறது.

" ஸனத்துன் " என்பது ஆழ்ந்த தூக்கத்திற்கு முன் வருகிற அசதி அல்லது தூக்க மயக்கம் அல்லது சிறு தூக்கத்திற்குப் பெயர் .
ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்கள் தூங்கும்போது ,கனவில் மலக்குகளை நோக்கி, " நமது ரப்புக்கு தூக்கம் வருமா ?" என்பதாக வினவினார்கள் .
ஆகவே மூஸா (அலை) அவர்களை மூன்று நாளைக்கு தூங்கவிடாமல் விழித்திருக்க செய்யும்படி மலக்குகளுக்கு அவன் கட்டளையிட்டான்.
பிறகு மூஸா (அலை) அவர்களை நோக்கி, " உமது கையால் இரண்டு சீசாக்களை எடுத்து பிடித்துக் கொள்ளுங்கள் " என்று கட்டளையிட்டான்.
அவர் அவ்விரண்டையும் எடுத்து பிடித்துக்கொண்ட பின் அவருக்கு தூக்கத்தை விட்டான் . அவர் கையில் இருந்த இரண்டு சீசாக்களும் நழுவி கீழே விழுந்து உடைந்து விட்டன.
பிறகு அல்லாஹுத்தஆலா மூஸா (அலை )அவர்களை நோக்கி, " நான் வானங்களையும் , பூமியையும் எனது குத்ரத் என்னும் வல்லமை கொண்டு தடுத்து வைத்துக் கொண்டிருக்கிறேன். ஆகவே எனக்கு தூக்கம் அல்லது அசதி ஏற்பட்டுவிடுமாயின் அவைகள் என்னை விட்டு நழுவி விடும் " என்று கூறினான் என்பதாக தஃப்ஸீர் கஷ்ஷாஃபில் எழுதப்பட்டிருக்கிறது.
"நிச்சயமாக அல்லாஹ் தூங்க மாட்டான். மேலும் அவனுக்கு தூங்க தேவையுமில்லை ".என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியிருக்கிறார்கள்.
ரஹ்மத் ராஜகுமாரன்

ஒன்றே ஒன்றுதான் 20

**(ஒன்றுக்கு மேற்பட்ட** *கடவுள்*



" வானங்களிலுள்ளவையும், பூமியிலுள்ளவையும் அவனுக்கே உரியன; அவன் அனுமதியின்றி அவனிடம் யார் பரிந்துரை செய்ய முடியும்? (படைப்பினங்களுக்கு) முன்னருள்ளவற்றையும், அவற்றுக்குப் பின்னால் உள்ளவற்றையும் அவன் நன்கறிவான்" - குர்ஆன் (2:255)
இந்த வசனம் அவனது 'கைய்யூம்' என்ற தன்மையை ஊர்ஜிதம் செய்கிறது. இன்னும் தெய்வத் தன்மையில் அவனுக்கு வேறு யாரும் கூட்டாக இல்லை அவன் தான் ஒரே இறைவன் என்பதையும் வலியுறுத்துகிறது.
எவ்வாறெனில் அல்லாஹ் தான் வானங்களையும் பூமியையும் இவற்றில் உள்ளவைகளையும் சிருஷ்டித்தான். இவைளெல்லாம் அவனுக்கே சொந்தமானவை. எனவே அவனுக்கு சொந்தமாக உள்ள ஒரு பொருள் அவனது தெய்வீக தன்மையில் கூட்டாக இருக்கிறது என்பது பொருந்தாத விஷயமாகும்.
இன்னும் இவைகள் மீது அவனைத் தவிர வேறு யாருக்கும் அதிகாரம் இல்லை. ஆதலால் அவைகள் அவனைத் தவிர்த்து வேறு யாரையும் வணங்கக் கூடாது என்ற விஷயமும் இதிலிருந்து வெளியாகிறது

ஆக்குவதற்கு ஒரு கடவுள் ! அழிப்பதற்கு ஒரு கடவுள்!
காப்பதற்கு ஒரு கடவுள்! துன்பத்தை நீக்க ஒரு கடவுள்!

இன்பத்தை வழங்க மற்றொரு கடவுள்! மழைக்குத் தனி கடவுள்! உணவு வழங்க இன்னொரு கடவுள்! கல்விக்கு என்று ஒரு கடவுள்! என்று கணக்கின்றி கடவுள்கள் இருப்பதாக மக்கள் நம்புகின்றனர்.
ஒரு மனிதனை அழிக்க வேண்டுமென அழிக்கும் கடவுள் முடிவு செய்து அதற்கான முயற்சியில் இறங்கும் வேளையில் காக்கும் கடவுள் அதே மனிதனைக் காக்கும் முயற்சியில் இறங்கினால் என்ன ஏற்படும்? அந்த மனிதன் அழிக்கப்படுவானா? காக்கப்படுவானா? தெரியாது.
இரண்டில் எது நடந்தாலும் ஒரு கடவுள் தோற்று விடுகிறான். தோற்றவன் கடவுளாக இருக்க முடியுமா ? தான் நினைத்ததைச் சாதிக்க இயலாதவன் கடவுள் என்ற தகுதிக்கு எப்படிச் சொந்தம் கொண்டாட முடியும்?

தமிழனுக்கும், மலையாளிக்கும் அல்லது இந்தியனுக்கும், அரபியனுக்கும் அல்லது குரைஷிக்கும், ஹபஷிக்கும் சண்டை ஏற்பட்டால் இருவரும் தத்தமது கடவுள்களை அழைத்து உதவி தேடினால், இரு கடவுள்களும் தத்தமது அடிமையைக் காக்க முன் வந்தால் என்னவாகும்? இருவரில் யார் தோற்றாலும் அங்கே கடவுளல்லவா தோற்றுப் போகிறான் ?
இந்தப் பூமியையும், ஏனைய கோள்களையும், அண்ட வெளியையும், அவற்றில் வாரி இறைக்கப்பட்டுள்ள அதிசயங்களையும் நாம் காண்கிறோம். இவற்றின் இயக்கங்கள் யாவும் ஒரே சீராகவும், ஒழுங்குடனும் அமைந்துள்ளதையும் பார்க்கிறோம்.

ஆயிரம் வருடத்துக்குப் பிறகு ஒரு ஜனவரி 7ம் தேதியில் சென்னையில் எத்தனை மணிக்கு சூரியன் உதிக்கும்; அல்லது மறையும் என்பதை இப்போதே நம்மால் விஞ்ஞானத்தின் மூலம் கணித்துச் சொல்ல முடிகிறது. கணித்துச் சொல்ல முடிகிற அளவுக்கு சூரியன் மற்றும் பூமியின் இயக்கங்கள் திட்டமிட்டபடி சீராக உள்ளன என்பதை இதிலிருந்து நாம் அறிகிறோம்.

எப்போதோ ஏற்படும் சூரிய, சந்திர கிரகணங்களை இன்றைக்கே கணக்கிட முடிகிறது. 'எந்தெந்தப் பகுதியில் எவ்வளவு நேரம் கிரகணம் நீடிக்கும்; எந்தெந்தப் பகுதியில் முழுமையாக இருக்கும் என்றெல்லாம் கூட அறிவிக்க முடிகிறது.

பல கடவுள்கள் இருந்தால் ஒரே சீராக இவை இயங்கவே முடியாது. ஒருவனின் ஒரே உத்தரவின்படி இயங்குவதால் தான் கோள்கள் ஒன்றுடன் ஒன்று மோதுவதில்லை.
மொத்த உலகத்திற்கும் ஒரே கடவுள்தான் இருக்க முடியும் பல கடவுள்கள் இருக்க முடியாது என்றும் இஸ்லாம் கூறுகின்றது. இதை குர்ஆன் தர்க்க ரீதியாகவே சொல்லி வாதிக்கிறது.

அவ்விரண்டிலும் (வானங்களிலும், பூமியிலும்) அல்லாஹ்வைத் தவிர வேறு கடவுள்கள் இருந்திருந்தால் இரண்டும் சீரழிந்திருக்கும். அவர்கள் கூறுவதை விட்டும் அர்ஷின் அதிபதியாகிய அல்லாஹ் தூயவன்.(திருக்குர்ஆன் 21:22)

இப்படி அழுத்தம் திருத்தமான கடவுள் கொள்கையை இஸ்லாம் கொண்டிருக்கின்றது.
ஆனால் கடைசி இறைத் தூதரான நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் ஒரு கடவுள்' கொள்கையைச் சொன்னார்கள்.
அவர்கள் மரணித்து பதினான்கு நூற்றாண்டுகள் கடந்து விட்ட நிலையிலும் அவர்கள் கடவுளாக ஆக்கப்படவில்லை.
நபிகள் நாயகத்துக்கு சிலை வைக்கப்படவில்லை. நபிகள் நாயகத்தை எந்த முஸ்லிமும் வழிபடுவதில்லை.
நபிகள் நாயகத்தின் மீது அளப்பரிய அன்பு வைத்திருந்தும் அதன் எல்லையை முஸ்லிம்கள் மிகச் சரியாக விளங்கி வைத்துள்ளனர்.
மனிதர்களிலேயே நபிகள் நாயகம் மிகச் சிறந்தவர்கள் என்பது தான் அந்த எல்லை.
இதைக் கடந்து கடவுள் நிலைக்கு அவர்களை எந்த முஸ்லிமும் உயர்த்துவதில்லை.
அதனால் தான் இஸ்லாத்தில் ஓரிறைக் கொள்கை வறட்டுத் தத்துவமாக இல்லாமல் உயிரோட்டத்துடன் ஒளிர்ந்து கொண்டிருக்கின்றது.

இத்தகைய தெளிவான கடவுள் கொள்கை உலகில் எந்த மதத்திலும் காண முடியாததாகும்.
அந்த ஊரில் உள்ள அவர் மிகப்பெரிய மார்க்க மேதை அவரை யாரும் வாதத்தில் வெல்ல முடியாது என்று அந்த ஊர் மக்கள் மெச்சுவார்கள்

அதேபோல யாராலும் ஏற்றுக்கொள்ள முடியாத ஒரு விஷயத்தை சொல்லி அதை மெய்யென்று தன் வாதத் திறமையினால் மக்களை ஏற்க்க செய்வதில் அவர் வல்லவர்
தன்னை வாதத்தில் வெல்ல யாரும் இல்லை என்கின்ற கர்வம் அவர் உள்ளத்தில் எப்போதும் உண்டு
அவருடைய இறுதி நேரம் நெருங்கி விட்டது அவருடைய ரூஹ்ஹை கைப்பற்ற இருந்த கடைசி நேரத்தில் அவரிடம் அழகிய தோற்றத்தில் சைத்தான் வந்தான் வந்து சாலாம் உரைத்து தனக்கு உள்ள சந்தேகத்தை நீக்க வேண்டும் அவரிடம் தன் வாதத்தை முன் வைத்தான்

அவன் சொன்னான் அல்லாஹ் இருவர் என்று உடனே அவர் சொன்னார் இல்லை இல்லை அல்லாஹ் ஒருவரே என்று எப்படி சொல்கிறீர்கள் என்று கேட்ட சைத்தான் அல்லாஹ் இரண்டு நபர்கள் என்று பல்வேறு விதமான ஆதாரங்களை முன்வைத்தான் சைத்தான்

ஆனால் இவரோ தன் வாதத் திறமையால் அவனை வென்று விடலாம் என்று வழக்கம் போல வாதத்தை தொடர்ந்தார் அல்லாஹ் ஒருவன் என்று இவர் வைத்த வாதங்கள் அடுத்தடுத்து மண்ணைக்கவ்வ அல்லாஹ் இருவர் என்று சைத்தான் வைத்த வாதங்கள் மேலும் துவங்கியது

மெல்ல மெல்ல ஷைத்தானுடைய வலையில் இந்த மார்க்க மேதை விழ ஆரம்பித்தார் அவருடைய உள்ளத்தில் அல்லாஹ் இருவர் தானோ என்கின்ற எண்ணம் ஏற்பட்டது என்றாலும் நாம் தவறு செய்கிறோம் என்ற எண்ணம் ஏற்பட..

இறுதியாக சைத்தான் கேட்டான் அல்லாஹ் தன்னை ஒருவன் என்று எங்கேனும் சொல்லி இருக்கிறான் என்று கேட்க இவருக்கு பல்வேறு விஷயங்கள் நினைவுக்கு வந்தாலும் அல்லாஹ் ஒருவன் என்று ஆதாரமாகச் சொல்லக்கூடிய ஆயத்துகள் நினைவுக்கு வரவே இல்லை
அப்போதுதான் தன்னுடைய கதன்னுடைய ஆன்மீக ஆசானை மனதில் நினைத்தார் அப்போது தன்னுடைய முரீதுகளுக்கு பயான் செய்துகொண்டிருந்த அந்த பெருந்தகை தன் பயானை இடைநிறுத்தி குல்ஹு அல்லாஹு அஹது என்று சொல்லிவிட்டு தன் பயானை முரீத்துகளிடம் தொடர்ந்தார் துவங்கினார்கள்

அவர்கள் சொன்ன அந்த வார்த்தை இவருடைய உள்ளத்தில் எதிரொலித்தது இவரும் ஷைத்தானிடம் அல்லாஹ் ஒருவன் தான் என்று அல்லா சொல்லிய குல்ஹு அல்லாஹு அஹத் என்ற ஆயத்தை ஓத
சைத்தானும் தன் தோல்வியை ஒப்புக் கொண்டு தன் மூரீதின் ஈமானை பாதுகாத்த அந்த பெருந்தகையை திட்டியவன்னம் வெருண்டோடினான்
இவருடைய ரூஹ் கலிமா தையிபாவை மொழிந்த வண்ணம் பிரிந்தது இன்னாலில்லாஹி வ இன்ன இலைஹி ராஜிவூன்
சக்கராத்துடைய ஹாலில் தன்னுடைய முரீதின் ஈமானை பாதுகாத்த அந்த இறைநேசச் செல்வர் வேறு யாரும் அல்ல பக்தாதின் மாமணி ஹழ்ரத் ஜுனைதுல் பக்தாதி ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஆவார்கள்.
ரஹ்மத் ராஜகுமாரன்

ஒன்றே ஒன்றுதான் 21



"அவனுடைய அரியாசனம் (குர்ஸிய்யு) வானங்களிலும், பூமியிலும் பரந்து நிற்கின்றது; அவ்விரண்டையும் காப்பது அவனுக்குச் சிரமத்தை உண்டாக்குவதில்லை - அவன் மிக உயர்ந்தவன்; மகிமை மிக்கவன் ". (அல்குர்ஆன் : 2:255)

"அவனுடைய அரியாசனம் (குர்ஸிய்யு) வானங்களிலும், பூமியிலும் பரந்து நிற்கின்றது " என்ற இந்த வசனம் அல்லாஹுத்தஆலா உடைய மகத்துவத்தையும், வல்லமையும் பற்றி உருவகமாக கூறப்பட்டது.

ஏனெனில் '
குர்ஸீ 'என்பதற்கு ஆசனம் என்பது பதப்பொருள். இப்பொருளின்படி அல்லாஹுத்தஆலா உடைய ஆசனம் வானங்களையும், பூமியையும் பார்க்கினும் விஸ்தீரமானது என்றும், இந்த ஆசனத்தை வைப்பதற்கு ஒரு இடம் இருக்க வேண்டும் என்றும், இவ்வளவு பெரிய ஆசனத்தின் மீது அமருபவன் மிகப் பருமன் உள்ளவனாக இருக்கவேண்டும் என்றும் ஓர் எண்ணம் ஏற்படுகிறதா ?

அல்லாஹுத்தஆலா மற்றவர்களைப்போல் குறிப்பான ஒரு ஸ்தூலமுள்ளவன் என்றும் , ஸ்தூலங்களுக்குத் தேவையானவைகள் அவனுக்குத் தேவை என்றும் நினைக்க இடமுண்டு. அவன் தேவையற்றவன். நம்மைப்போல் ஸ்தூலமும், உருவமற்றவன் என்பதை உணருங்கள் .

குர்ஸி என்பது ஏழு வானங்களையும் சூழ்ந்து கொண்டிருக்கக்கூடியது. எவ்வாறெனில், பூமி முட்டை வடிவத்தில் இருக்கிறது .முதலாவது வானம் இந்த பூமியை சுற்றிலும் சூழ்ந்து கொண்டு இருக்கிறது. இரண்டாவது வானம் பூமியையும் முதலாவது வானத்தையும் சூழ்ந்து கொண்டிருக்கிறது. இவ்விதமாக ஏழு வானங்களும் ஒன்றுக்கு மேல் மற்றொன்று சூழ்ந்து கொண்டிருக்கிறது.

இந்த ஏழு வானங்களையும் சூழ்ந்து கொண்டிருப்பதற்கு குர்ஸி என்ற பெயர். இதற்கு மேல் அனைத்தையும் சூழ்ந்து கொண்டிருப்பதற்கு என்று பெயர் "அர்ஷ் "
"காட்டில் கிடக்கும் ஒரு வளையம் காட்டுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது எவ்வளவு அற்பமாக இருக்கிறதோ, அதுபோல ஏழு வானங்களும், ஏழு பூமிகளும் குர்ஸியுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது மிகவும் அற்பமாக இருக்கின்றன" என்று நபி (ஸல் ) அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

குர்ஸி அர்ஷுக்கு முன்னாள் இருக்கிறது. குர்ஸியுடைய ஒவ்வொரு தூணும் ஏழு வானங்கள் ஏழு பூமிகளினுடைய நீளமிருக்கிறது.
குர்ஸியை 4 மலக்குகள் சுமந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் நான்கு முகங்கள் இருக்கின்றன. அவர்களது கால்கள் பூமிக்கு கீழில் பாதாளத்தில் இருக்கின்றன !
அவர்களில் ஒருவர் மனித உருவத்தில் இருக்கிறார். இவர் மனிதர்களுக்கு உணவும், மழையும் அளிக்கும்படி இறைவனை இறைஞ்சுகிறார்.
மற்றொரு மலக்கு காளை மாட்டின் உருவத்தில் இருக்கிறார் .இவர் மாடு முதலிய கால்நடைகளுக்கு இரை அளிக்கும்படி பிரார்திக்கின்றார் .
இன்னொரு மலக்கு புலியுடைய வடிவத்தில் இருக்கிறார். இவர் புலி போன்ற கொடிய மிருகங்களுக்கு இரை அளிக்கும்படி வேண்டுகிறார் .
மற்றொரு மலக்கு கழுகின் உருவத்தில் இருக்கிறார். இவர் கழுகு முதலிய பறவை இனங்களுக்கு உணவு அளிக்கும்படி வேண்டுகிறார்.

"அர்ஷ்" என்பது அல்லாஹ்வின் ஒரு பிரமாண்டமான படைப்பாகும். மேலும் அர்ஷ் என்பதை ஒரு வித பசுமையான இரத்தினத்திலிருந்து இறைவன் படைத்தான். அதன் ஒளி, நிறம், அழகிய தோற்றம், போன்ற விபரம் தெரிந்தவன் வல்லவன் வலிமையுள்ளவன் அல்லாஹ் ஒருவனே அறிந்து வைத்துள்ளான்!
எழுபதாயிரம் நாக்குகள் அர்ஷ்க்கு இருக்கும். எழுபதாயிரம் மொழியில் அது தினமும் தஸ்பீஹ் செய்த வண்ணம் தன் இறைவனைத் துதிக்கும் !

அது தண்ணீருக்கு மேலே இருந்து தலை வணங்கும் . தினமும் ஓயாமல் தஸ்பீஹ் செய்வதனால், அதன் நாக்குகள் வறண்டு போகும். ஆனாலும் கூட இறைவனின் திருநாமம் ஒவ்வொரு நொடியும் ஓதும்; அது இன்றியமையாத காரியம். தினமும் தஸ்பீஹ் ஓதும் அதனை இதுவரை எவரும் கண்டது கிடையாது.

அதனை வானம் பூமி இரண்டுக்கும் முன்னாலேயே இறைவன் படைத்து விட்டான் எனும் தகவல் உலகில் அனைவரையும் சிந்திக்க வைக்கிறது!
அல்லாஹ்வின் அர்ஷை **"கரீபிய்யூன் "** எனும் எட்டு மலக்குமார்கள் சுமந்துகொண்டிருக்கின்றார்கள். "இன்னும் மலக்குகள் அதன் கோடியிலிருப்பார்கள், அன்றியும், அந்நாளில் உம்முடைய இறைவனின் அர்ஷை (வானவர்) எட்டுப் பேர் தம் மேல் சுமந்திருப்பார்கள்".(அல்குர்ஆன் : 69:17)

அவர்களில் ஒரு மலக்கின் ஒரு காது சோணையிலிருந்து தோள் புஜம் வரை உள்ள தூரம் எழுநூறு ஆண்டுகள் பயணிக்கும் தூரமாகும்'' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் கூறினார்கள்.
ஜாபிர் (ரலி) - அபூதாவூத்: 4102

நபி(ஸல்) அவர்கள் சூரியன் மறைந்த நேரத்தில் என்னிடம், 'அது (சூரியன்) எங்கு செல்கிறது என்று உனக்குத் தெரியுமா?' என்று கேட்டார்கள்.
நான், 'அல்லாஹ்வும்,அவனது தூதருமே அறிவார்கள் என்று கூறினேன்.
நபி(ஸல்) அவர்கள், 'அது அர்ஷுக்கு இறை சிம்மாசனத்திற்குக் கீழே ஸஜ்தா (வணக்கம்) செய்வதற்காகச் செல்கிறது. அங்கு அது (கிழக்கிலிருந்து உதயமாகுவதற்கு இறைவனிடம்) அனுமதி கேட்கிறது. உடனே அதற்கு அனுமதியளிக்கப்படுகிறது.

(இறுதியாக ஒரு நாள்) அது ஸஜ்தா செய்ய, அந்த ஸஜ்தா ஏற்கப்படாமல் போகவிருக்கிறது. அப்போது அது (வழக்கம் போன்று) கிழக்கிலிருந்து உதயமாகுவதற்கு அனுமதி கேட்கும்; அதற்கு அனுமதியளிக்கப்படாது. மாறாக, 'வந்த வழியே திரும்பி விடு' என்று அதற்கு உத்தரவிடப்படும். அதன்படி அது மேற்கிலிருந்து உதயமாகும்' என்றார்கள்.

இதைத் தான், 'சூரியன், தான் நிலை கொள்ளும் ஓர் இடத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. அது பேரறிவாளனான வல்லமை மிக்க (இறை)வனின் நிர்ணயமாகும்' என்னும் (திருக்குர்ஆன் 36:38) இறைவசனம் குறிக்கிறது' என்றார்கள்.
அபூதர்(ரலி) ,ஸஹீஹ் புகாரி : 3199.

நபி (ஸல்) அவர்களிடம் , "அல்லாஹ் வானத்தில் இருக்கிறானா ? பூமியில் இருக்கிறானா ? என்று ஸஹாபாக்கள் கேட்ட கேள்விக்கு ,
"அல்லாஹ் முஃமீனானவர்களின் கல்புகளிலே இருக்கின்றான் என்று நபி (ஸல் ) கூறினார்கள்.

" லா யஸ்அனி அர்லி வலா சமாயி வலாகின் யஸ்அனி அர்லி கல்பி அப்துல் முஃமீன் " -
"வானத்திலும் பூமியிலும் என்னை அடக்கி விட முடியாது. ஒரு முஃமீன் உள்ளத்தில் என்னை அடக்கிவிட முடியும் " என்று கல்பின் மகிமை பற்றி அல்லாஹ் கூறியிருப்பதை மனிதன் சிந்தித்தால், தன்னை ஒரு சிறிய பொருளாக தேகத்தின் அளவில் தன்னைத் தானே கைது செய்து கொள்ள மாட்டான்.
" பனித்துளி ஒன்றில்
பனை மரத்தைப் பார்க்கிறேன்.
அடுத்த துளியில் - அட ,
அர்ஷைப் பார்க்கிறேன்.
கண்ணுக்குள் காட்சியாய் இல்லை
கல்புக்குள் அது மட்டுமே இருக்கிறது ! "

ரஹ்மத் ராஜகுமாரன்.

ஒன்றே ஒன்றுதான் 22

أَلَمْ تَرَ أَنَّ ٱللَّهَ يَعْلَمُ مَا فِى ٱلسَّمَٰوَٰتِ وَمَا فِى ٱلْأَرْضِ ۖ مَا يَكُونُ مِن نَّجْوَىٰ ثَلَٰثَةٍ إِلَّا هُوَ رَابِعُهُمْ وَلَا خَمْسَةٍ إِلَّا هُوَ سَادِسُهُمْ وَلَآ أَدْنَىٰ مِن ذَٰلِكَ وَلَآ أَكْثَرَ إِلَّا هُوَ مَعَهُمْ أَيْنَ مَا كَانُوا۟ ۖ ثُمَّ يُنَبِّئُهُم بِمَا عَمِلُوا۟ يَوْمَ ٱلْقِيَٰمَةِ ۚ إِنَّ ٱللَّهَ بِكُلِّ شَىْءٍ عَلِيمٌ ﴿٧﴾

( 3 பேர் ரகசியத்தில் அவன் 4-வது
5 பேர் ரகசியத்தில் அவன் 6-வது )
اَلَمْ تَرَ اَنَّ اللّٰهَ يَعْلَمُ مَا فِى السَّمٰوٰتِ وَمَا فِى الْاَرْضِ مَا يَكُوْنُ مِنْ نَّجْوٰى ثَلٰثَةٍ اِلَّا هُوَ رَابِعُهُمْ وَلَا خَمْسَةٍ اِلَّا هُوَ سَادِسُهُمْ وَلَاۤ اَدْنٰى مِنْ ذٰ لِكَ وَلَاۤ اَكْثَرَ اِلَّا هُوَ مَعَهُمْ اَيْنَ مَا كَانُوْا ثُمَّ يُنَبِّئُهُمْ بِمَا عَمِلُوْا يَوْمَ الْقِيٰمَةِ اِنَّ اللّٰهَ بِكُلِّ شَىْءٍ عَلِيْمٌ
"நிச்சயமாக அல்லாஹ் வானங்களிலுள்ளவற்றையும் பூமியிலுள்ளவற்றையும் நன்கு அறிகிறான் என்பதை நீர் பார்க்கவில்லையா?

மூன்று பேர்களின் இரகசியத்தில் அவன் அவர்களில் நான்காவதாக இல்லாமலில்லை; இன்னும் ஐந்து பேர்களி(ன் இரகசியத்தி)ல் அவன் ஆறாவதாக இல்லாமலில்லை; இன்னும் அதைவிட மிகக் குறைந்தோ, அதைவிட மிக அதிகமாகவோ, அவர்கள் எங்கிருந்தாலும் அவன் அவர்களுடன் இல்லாமலில்லை" (அல்குர்ஆன் : 58:7)

மேற்கண்ட திரு வசனத்தில் "எல்லாம் தனக்குத் தெரியும் " என்று தொடங்கிய அல்லாஹ் , "எல்லாம் தனக்குத் தெரியும் " என்று அதை நிறைவு செய்துள்ளான் என்பது சிந்திக்கக் கூடிய விஷயம் என அஹமது பின் ஹன்பல் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

"ஒவ்வொரு பொருளின் மீது அல்லாஹ் பிரசன்னமாக இருப்பதால் , அந்த ஒவ்வொரு பொருளைக் குறித்தும், அதன் தொழிலை குறித்தும் அவன் நன்கு தெரிந்து கொள்வான்" என்பது விளங்குகிறது .
இதனை இவ்வாயத்தின் முதல் பகுதியில் " வானங்களில் உள்ளதையும் ,பூமியில் உள்ளதையும் அல்லாஹ் அறிவான் என்பதை நீர் பார்க்கவில்லையா ? "என்ற வசனம் பகிரங்கமாக கூறுகிறது .

பிரபஞ்சம் என்பதும் அகிலம் என்பதும் வானங்களுக்கும் பூமிக்கும் புறம்பாக இல்லை . ஆகவே அவன் ஒவ்வொன்றிலும் பிரசன்னமாக இருப்பது போல அதனை நன்கு உணர்ந்தும் இருக்கிறான் என்பது கருத்து .ஒவ்வொரு பொருளுடனும் அவன் இருப்பதால், அவனுக்குத் தெரியாமல் எதுவும் நிகழ முடியாதென்பதற்குரிய உதாரணம் இவ்வாயத்தின் பிற்பகுதியில் கூறப்பட்டிருக்கிறது.

அம்ருடைய இரு மகன்களாகிய ரபீஆவும் , ஹுபைபும் , உமய்யாவின் மகனாகிய ஸஃப்வானும் ஒரு நாள் கூடி பேசிக் கொண்டிருந்தனர். அப்போது அவர்களில் ஒருவன், "இப்பொழுது நாம் சொல்வதை அல்லாஹுத்தஆலா அறிகிறான் என்று நீ கருதுகிறயோ ?" என்று கேட்டான்.
" சிலவற்றை அறிவான் " என மற்றொருவன் பதில் கூறினான்.

அப்போது மூன்றாமவன் , " சிலவற்றை அவன் அறிபவனாக இருந்தால் எல்லாவற்றையுமே அவன் அறிவான் "என்று கூறினான் .அந்த சந்தர்ப்பத்தில் இந்த வசனம் அருளப்பட்டது என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நயவஞ்சகர்கள் பெரும்பாலும் மூவராக அல்லது ஐவராக சேர்ந்துதான் சன்மார்க்கத்திற்கு எதிராக கூடிப் பேசுவது வழக்கம். இதனால் இறைவன் அவ்விரு எண்ணிக்கையையும் இங்கு குறிப்பாகச் சுட்டிக் காட்டியுள்ளான்.

மேலும் முக்கியமாக ஒரு விஷயத்தைக் குறித்து தனியாக கலந்து ஆலோசனை செய்வது பெரும்பாலும் மூவர் அல்லது அறுவர் வரையில்தான் நிகழ்ந்து வருகிறது. இதற்கு மேல் அதிகமாகும் போது அது ரகசியமாக இல்லாமல் பகிரங்கமாக ஆகிவிடுகிறது. இதனால் தான் உமர் (ரலி) அவர்கள் தங்களது இறுதி காலத்தில் தங்களுக்கு பின் கலீஃபாவாக தேர்ந்தெடுத்துக் கொள்வது சம்பந்தமாக கலந்து பேச 6 பேர்களை தேர்ந்தெடுத்தார்கள்.

மக்காவில் நாளுக்கு நாள் இறைமறுப்பாளர்களின் துன்பங்களும், கொடுமைகளும் அதிகரித்தன. ஏக இறைக்கொள்கைகளை மக்களிடம் எடுத்துச்சொல்ல முடியாத அளவுக்கு எதிரிகளின் ஆதிக்கம் மேலோங்கி இருந்தது.
எனவே இறைக்கட்டளைப்படி நபிகளார் தனது தோழர் அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்களுடன் மக்காவில் இருந்து மதினாவுக்கு புலம் பெயர்ந்து சென்றார். இந்த நிகழ்ச்சி 'ஹிஜரத்' என்று அழைக்கப்பட்டது.
அருமை நாயகம் நபி (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து தப்பி விட்டார்கள் என்ற செய்தி அறிந்த எதிரிகள் கோபம் அடைந்தனர். குறிப்பாக அபூஜஹில் ஆத்திரத்தின் உச்சியில் இருந்தான், 'அவர்கள் அவ்வளவு எளிதில் எல்லையை கடந் திருக்க முடியாது. முகம்மதை உயிரோடு பிடித்து கொண்டு வருபவர்களுக்கு நூறு வெள்ளை ஒட்டகங்கள் பரிசாக அளிப்பேன்' என்று அறிவித்தான்.
ஆனால், அருமை நபிகளும், அபூபக்கரும் பாலைவனத்தில் மாற்றுப் பாதையை தேர்ந்தெடுத்தார்கள். கிட்டத்தட்ட பாதி தூரம் சென்றவர்கள், அந்த பாலைவனத்தைக் கடந்து தௌர் மலையில் உள்ள ஒரு குகையை அடைந்தார்கள்.
பரிசுகளின் அறிவிப்பை தொடர்ந்து மேலும் பலர் அண்ணலாரை எல்லா இடங்களிலும் தேட ஆரம்பித்தார்கள். ஒரு கூட்டத்தினர் அண்ணலார் இருந்த குகை வாசல் வரை வந்து விட்டார்கள். அவர்களின் கால் பாதங்களை அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்களால் பார்க்க முடிந்தது.

"அண்ணலே! நம்மை எதிரிகள் சூழ்ந்து விட்டார்கள். சற்று குனிந்து பார்த்தால் நாம் இருவரும் பிடிபட்டு விடுவோம். என்ன செய்வது யா ரசூலே ? " என்றார்கள்.
குகையில் இருவரில் ஒருவராக இருந்த போது, (நம் தூதர்) தம் தோழரிடம், "கவலைப்படாதீர்கள்; நிச்சயமாக அல்லாஹ் நம்முடன் இருக்கின்றான்" என்று கூறினார்.(அல்குர்ஆன் : 9:40)
ஞானி ஒருவர் இருந்தார். ஒரு நாள் அந்தத் ஞானியிடம் இரண்டு இளைஞர்கள் வந்தனர். அவர்கள், 'குருவே ! நாங்கள் தவம் செய்து ஆத்மஞானம் பெற விரும்புகிறோம். எங்களை உங்களுடைய சீடர்களாக ஏற்றுக்கொள்ள வேண்டும்' என்றார்கள்.

அவர்கள் இருவரையும் தன்னுடைய ஆசிரமத்திலேயே தங்க வைத்துக் கொண்டார் ஞானி. ஆசிரமத்தில் தங்கிய இளைஞர்கள், குரு ஏதாவது உபதேசம் செய்வார் என்று நினைத்து காத்திருந்தனர். ஆனால் குரு தன்னுடைய தியானத்திலேயே ஆழ்ந்திருந்தார். இருவருக்கும் எந்த விதமான உபதேசமும் செய்யவில்லை. நாட்கள் பல கடந்துவிட்டன.

இரண்டு இளைஞர்களும் நேராக குருவிடம் சென்று, ' குருவே ! நாங்கள் இங்கு வந்து பல நாட்கள் ஆகிவிட்டன. நீங்களாக ஏதாவது உபதேசம் செய்வீர்கள் என்று எதிர்பார்த்தோம். ஆனால் இதுவரை எந்த உபதேசமும் வழங்கவில்லை. எங்களுக்கு ஏதாவது உபதேசம் செய்தருளுங்கள்' என்று வேண்டினர்.

அவர்களின் ஆர்வத்தைக் கண்ட ஞானி , 'சரி.. நான் உங்களுக்கு உபதேசம் செய்கிறேன். ஆனால் அதற்கு முன்பாக நீங்கள் இருவரும் ஒரு காரியம் செய்ய வேண்டும். நான் உங்களுக்கு ஆளுக்கொரு சிவலிங்கம் தருகிறேன். அதைக் கொண்டு போய், யாருமே பார்க்காத ரகசியமான இடத்தில் வைத்து விட்டு வாருங்கள். அதன்பிறகு உங்களுக்குத் தேவையான உபதேசத்தை நான் வழங்குகிறேன்' என்றார். பின்னர் அவர்களிடம் ஒவ்வொரு சிவலிங்கத்தையும் கொடுத்தார்.

அவர் சொன்னபடியே சிவலிங்கத்தை, யாரும் பார்க்காத இடத்தில் வைத்து விட்டு வருவதற்காக புறப்பட்டுச் சென்றனர். இருவரும் வேறு வேறு திசைகளில் சென்றார்கள்.
ஒரு சீடன், காடு மேடெல்லாம் சுற்றித் திரிந்தான். இறுதியில் மனித சஞ்சாரமே இல்லாத ஒரு குகையைத் தேர்ந்தெடுத்து, அதற்குள் சிவலிங்கத்தைப் புதைத்து வைத்தான். புறப்பட்ட சிறிது காலத்திற்குள்ளாகவே அந்த சீடன் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்தான். அவனின் முகத்தில் குருவின் கட்டளையை நிறைவேற்றிவிட்ட திருப்தி தென்பட்டது.

மற்றொரு சீடனைப் பற்றிய விவரம் எதுவும் தெரியவில்லை. அவன் எங்கே போனான்? என்ன ஆனான்? என்று எதுவும் அறியப்படவில்லை. இந்த நிலையில் ஒரு வருடம் கழிந்த நிலையில், அந்தச் சீடன் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்தான். வந்தவன் அந்த சிவலிங்கத்தை மகரிஷியிடமே திருப்பிக் கொடுத்தான்.

' குருவே ! என்னை மன்னித்துவிடுங்கள். இந்த சிவலிங்கத்தை ஒருவரும் காணாத இடத்தில் வைக்க என்னால் முடிந்த வரை முயற்சி செய்து விட்டேன். ஆனால் முடியவில்லை. நான் மிகவும் ரகசியமான இடம் என்று நினைத்துப் பல இடங்களிலும் சிவலிங்கத்தை வைக்க முயன்றேன். அப்போதெல்லாம் என் உள்ளத்தில் இருந்து, 'நான் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறேன்; நான் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறேன்' என்று ஒரு குரல் கேட்பது போல் இருந்தது. அது யாருடைய குரல்? என்று தெரியவில்லை. இப்போதும் கூட அந்தக் குரல் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறது. அந்தக் குரல் கேட்காமல் இருந்தால்தான், என்னால் இந்த சிவலிங்கத்தை மறைத்து வைக்க முடியும். உங்கள் கட்டளையை நிறைவேற்றத் தவறிய குற்றத்திற்காக தாங்கள் அளிக்கும் தண்டனையை ஏற்றுக்கொள்கிறேன்' என்றான்.

அந்தச் சீடனின் விளக்கத்தைக் கேட்டதும், ஞானி அவனை மகிழ்ச்சியோடு தழுவிக்கொண்டார். பின்பு, 'மகனே! நீ உண்மையை உணர்ந்து விட்டாய். தண்டனையை கேட்டுப்பெற நினைத்தபோதே, பரிசு பெறும் தகுதி உனக்கு வந்துவிட்டது. உனக்குள் சாட்சியாக குடி கொண்டிருக்கும் பரம்பொருளை நீ அறிந்து கொண்டு விட்டாய். அவன் எங்கும் நிறைந்திருக்கிறான். இந்த பெரிய உண்மை உனக்கு விளங்கிவிட்டது. இதுவே உனக்கு என்னுடைய உபதேசமாகும்' என்றார்.

ஆம்! இறைவன் எங்கும் நிறைந்திருக்கிறான். அவன் இல்லாத இடம் என்று எதுவும் கிடையாது. அந்த உண்மையான பரம்பொருள் ஆத்மாதான்.
நான் இந்தக் கட்டுரையை எழுதிக் கொண்டிக்கும் போதும், இப்பொழுது இதை நீங்கள் படித்துக் கொண்டிருக்கும் போதும் அவன் நம்மோடு இருந்து , நம்மை கவனிக்கிறான் என்பதை இப்பொழுது நீங்கள் உணர்கிறீர்கள் .

" நீங்கள் எந்த நிலையில் இருந்தாலும், "குர்ஆனிலிருந்து நீங்கள் எதை ஓதினாலும், நீங்கள் எந்தக் காரியத்தை செய்தாலும், நீங்கள் அவற்றில் ஈடுபட்டிருக்கும்போது நாம் கவனிக்காமல் இருப்பதில்லை". (அல்குர்ஆன் : 10:61)

ரஹ்மத் ராஜகுமாரன்

ஒன்றே ஒன்றுதான் 23




( பிடரி நரம்பை விட சமீபம் )

وَلَقَدْ خَلَقْنَا الْاِنْسَانَ وَنَعْلَمُ مَا تُوَسْوِسُ بِهٖ نَفْسُهٗ وَنَحْنُ اَقْرَبُ اِلَيْهِ مِنْ حَبْلِ الْوَرِيْدِ
மேலும் நிச்சயமாக நாம் மனிதனைப் படைத்தோம், அவன் மனம் அவனிடம் என்ன பேசுகிறது என்பதையும் நாம் அறிவோம்; அன்றியும், (அவன்) பிடரி(யிலுள்ள உயிர்) நரம்பை விட நாம் அவனுக்கு சமீபமாகவே இருக்கின்றோம்.
(அல்குர்ஆன் : 50:16)

ஹப்லுல் வரீத் ' (உயிர் முடிச்சு எனப்படும் முகுளம்) என்பது இருதயத்துடன் ஒட்டிக் கொண்டிருக்கிற நரம்பு மனிதனுடைய நஃப்ஸின் அங்கங்களில் நஃப்ஸுக்கு மிகவும் நெருங்கிய பாகத்திற்கு ஹப்லுல் வரீத் என்று பெயர்.

மனிதன் ஒவ்வொரு வினாடியிலும் தனது நஃப்ஸைத் தேடி அதனை கண்டு கொள்வது போன்று, மனிதன் ஒவ்வொரு வினாடியிலும் தனது ரப்பைத் தேடி கண்டு கொள்கிறான்.
ஏனெனில் மனிதனுக்கு அவனது நட்பு எவ்வளவு தூரத்தில் இருக்கிறதோ அதனை விட அதிக நெருக்கத்தில் இறைவன் இருக்கிறான். மேலும் " நான் அவனுக்கு உயிர் நாடியை விட மிக நெருங்கியவர்கள் என்பதற்கு நான் அவனுக்கு அவனது உயிரை விட மிக நெருங்கி இருக்கிறோம்" என்பது கருத்து

" பாம்பு தன் சட்டையை கழற்றுவதுபோன்று நான் என் நஃஸைக் கழற்றிப் பார்த்தேன். அப்பொழுது நான் அவனாகவே இருந்தேன் "என்று அபூயஸீதுல் பிஸ்தாமி (ரஹ்) அவர்கள் கூறியிருக்கிறார்கள் .
அதாவது தன்னுடைய நஃப்ஸின் இச்சைகளையும் அதன் அவாக்களையும் கழற்றி, எவர் எறிந்து விடுவாரோ அவரில் , அல்லாஹ் அல்லாததற்கு இடமே இருக்காது .அல்லாஹ்வைத் தவிர உள்ள கவலையும் அவருக்கு இருக்காது .
எனவே அல்லாஹுதஆலாவினது ஜலாவையும், ஜமாலையும் தவிர, இருதயத்தில் வேறு எதற்கும் இடமில்லாமலாகி அவனிலிலேயே மூழ்கிவிட்டால் அவனைப் போன்றே அவனாகி விடுவான்.

விஞ்ஞான ரீதியில் ஆய்வு செய்யும்போது, மூளையின் அடியில் பிட்யூட்டரி சுரப்பி உள்ளது (Pituitary gland) உள்ளது இதனை நெற்றியில் ஒளிரும் நீல நிற விளக்கு என்கிறார்கள் இது பட்டாணி சைஸ்க்கு இருக்கிறது இதற்குள்ளும் இரண்டு சுரப்பி உள்ளது உங்கள் வளர்ச்சி ஆண் - பெண் பிரத்தியேகங்கள், இரவு சாப்பாட்டை சக்தியாக மாற்றி, நடுநிசியில் உங்கள் பிரத்யேகமான சிறப்பு இயக்கத்திற்கு உதவுகிறது

இந்த சுரப்பி குறைவாக சுரந்தால் குள்ளர்களும், அதிகமாக சுரந்தால் ராட்சதர்களும் உண்டாகிறார்கள். மூத்திரம் பெய்வது , தாய்ப்பால் சுரப்பது இந்த மாதிரியான காரியங்களை செய்கிறது. எங்கிருந்து எங்கே கட்டுப்படுத்துகிறது பாருங்கள் !

அடுத்து மூளைத் தண்டின் பின் பக்கத்தில் புடைத்தது போல இருப்பது பினியல் சுரப்பி (Pineal gland ) இது ரொம்பவும் வித்தியாசமானது. இதை 'மூன்றாவது கண் ' என்கிறார்கள். கண்களுக்கும் இதற்கும் கனெக்ஷன் இருக்கிறது கண்ணை மூடும்போது சாந்தமாக இருக்கிறது திறந்ததும் சிலிர்த்துக் கொள்கிறது இது மனிதனாய் மனிதனுக்குள்ளேயே மறைந்திருக்கிறது என்கிறார்கள். அது எப்படி என்று என்னிடம் கேட்காதீர்கள் .

இதுவே உடலியல் கடிகாரமாக இயங்கிக் கொண்டு இருக்கிறது. இது இரவு 9 மணிக்கு சுரக்கிறது. இது சூரிய சந்திர மற்றும் நட்சத்திரங்களின் ஒளியுடன் தொடர்பு உடையது
ஆன்மீக முன்னேற்றத்திற்கு இதுவே பாலமாக அமைகிறது. தியானம், திக்ரு போன்றவற்றில் ஈடுபடும் போது, இது வலிமைப் பெறுகிறது . இதன் வளர்ச்சி அதிகமானால் மறைவான சேதிகள் கண்களுக்கு தெரியும் என்கிறார்கள் .

இதனுள் மிக மிக சிறிய வெற்றிடம் இருக்கிறது இதைத்தான் கல்ப் என்று சொல்கிறார்களோ எனக்குத் தெரியவில்லை .
குர்ஆனில், பிடரி நரம்பை விட பக்கத்தில் இருக்கிறான்
திருக்குர்ஆன் (50 : 16) அந்த இடம் இதுதானா ? என்பது இன்னும் சிந்தனைக்குரியதாக இன்னும் இருக்கிறது மொத்தத்தில் பினியல் சுரப்பி விஞ்ஞானத்தையும், மெஞ்ஞானத்தையும் இணைக்கும் ஒரு கடவுச் சொல்லாக எனக்குப்படுகிறது . . . உங்களுக்கு ?

ரஹ்மத் ராஜகுமாரன்

## ஒன்றே ஒன்றுதான் 24

( நஃப்ஸும் அதில் தோன்றும் எண்ணங்களும் )



" மனிதனை நிச்சயமாக நாம் சிருஷ்டித்திருக்கிறோம். இன்னும் அவனது நஃப்ஸு அவனுக்கு வஸ்வஸா உண்டு பண்ணுவதையும் நாம் அறிவோம் " - குர்ஆன் (50 :16)
மிகத்தூரத்தில் விலகி இருப்பது திரையாக மறைப்பாக இருப்பது போன்று, மிகவும் அதிகமாக நெருங்கி இருப்பதும் திரையாக மறைப்பாக இருக்கிறது. அவ்வாறு இல்லாவிடில் நமக்கும் அவனுக்கும் இடையில்

எழுபதாயிரம் திரைகள் இருக்கின்றன என்று கூறப்பட்டிருப்பதற்கு அர்த்தமே இல்லை என்றாகிறது " என்று ஒரு பெரியார் கூறியிருக்கிறார்.

**" மனிதன் தனது நஃப்ஸைப் பார்த்து விட்டால், அதன் நுட்பத்தை அவன் கண்டுகொள்வான். எனவேதான் தன் நப்ஃஸை எவர் அறிந்தாரோ அவர் தனது ரப்பையும் அறிந்து கொள்வார் " என்றும் கூறப்பட்டிருக்கிறது.**

"இன்னும் அவனுடைய நஃப்ஸில் வஸ்வஸா உண்டாக்குவதையும் நாம் அறிகிறோம் " -என்பது மனிதனது இருதயத்திற்குள் உண்டாகும் எண்ணங்கள் எல்லாவற்றையும் இறைவன் அறிகிறான் என்பதையும் அறிவிக்கிறது. 'வஸ்வஸா' என்ற பதம் மனத்தினுள்ளே தோன்றும் எல்லா எண்ணங்களையும் குறிக்கும். ஆனாலும் கெட்ட எண்ணங்களுக்குத்தான் இது அதிகமாக
உபயோகிக்கப்படுகிறது.

**நம் வாழ்க்கையை தீர்மானிப்பது நம் செயல்களை விட நம் எண்ணங்கள்தான்**
**“எண்ணங்களைப் பற்றி கவனமாக இருங்கள்.அவைகள் வார்த்தைகளாக மாறுகின்றன.**
**வார்த்தைகளில் கவனமாக இருங்கள்.அவை தான் செயல்களாக மாறுகின்றன.**
**செயல்களில்கவனமாக இருங்கள்.அவை தான் பழக்கமாக மாறுகின்றன.**
**பழக்கங்களில்கவனமாக இருங்கள். அவை தான் ஒழுக்கமாக மாறுகின்றன.**
**ஒழுக்கத்தில் கவனமாக இருங்கள். அவை தான் உங்கள் வாழ்க்கையை உருவாக்குகின்றன.”**
**ஆம்!ஷைத்தான் வழி தவறியதும் அவனுடைய கீழான எண்ணத்தால் தானே!**
**ஒருவனின் உயர்வும்,தாழ்வும் அவனின் எண்ணத்தால் தான் அமைகிறது என்று இஸ்லாம் உரக்கச்சொல்கிறது**

அல்லாஹ் கூறுகின்றான்:
”ஒவ்வொருவரும் தத்தமது எண்ணங்களின் (வழிமுறைப்) படி செயலாற்றுகின்றனர்” (அல்குர்ஆன்:17:84)

மனிதனைச் சிருஷ்டிப்பதற்கு முன்னர் அவனது நிலையைக் குறித்து " இல்மன் துபூத்திய்யன் " என்ற முறையில் அறிவது போன்று, அவனை சிருஷ்டித்த பிறகும் " இல்மன் ஃபிஃலிய்யன் " (செயலில் உணருதல்) என்ற முறையில் தெரிந்து கொள்கிறான். ஆகவே மனதில் உண்டாகும் எண்ணங்களும் கூட செய்கைகள் என்பது இதிலிருந்து தெரிய வருகிறது. அப்படியானால் இவ்வஸ்வஸாவும் கூட சிருஷ்டிக்கப்பட்ட பொருளாகும்.

நபிமார்களது அகங்களில் சைத்தானுக்கு எவ்வித வழியும் இல்லை .அவர்களுடைய எண்ணங்களில் சைத்தானுக்கு எவ்வித பேறும் இல்லை. ஆனால் அவன் புற உணர்வில் அவர்களிடம் வருவான் .ஆனால் அவர்களுக்கு அவன் கூறுவதை அவர்கள் அறியமாட்டார்கள்.
பின்னர் ஷைத்தானை விட்டும் காக்கப்படுபவர்களும் வலிமார்களில் இருக்கிறார்கள். இந்த வகையில் அவர்கள்
மஃசூம்களாக இருக்கிறார்கள். அதாவது இருதயத்தில் அவ்வெண்ணத்தைப் போட்டு அது அவர்களுக்குத் தைப்பதில்லை என்ற முறையில் அவர்களது இஸ்மத்து இல்லை. ஏனெனில் வலிமார்கள் ஷரீஅத்தை ஏற்படுத்துபவர்கள் இல்லை . ஆனால் நபிமார்கள்தாம்
ஷரீஅத்தை ஏற்படுத்துவார்கள். ஆதலின் , அவர்களுக்கு மட்டும்தான் அக இஸ்மத் ஏற்பட்டிருக்கிறது என்று ஒரு பெரியவர் கூறுகிறார்.
பைத்துல் மஃமூர் என்பது வான லோகத்தில் மலக்குமார்கள் வலம் வரும் கஃபா. இந்த கஃபாவின் மத்தியிலிருந்து ஒரு கயிற்றை கட்டி பூமியில் இறக்கினால், அது பூமியிலுள்ள நம் கஃபாவின் மத்தியில் இறங்கும் .

ஒரு ஆதமுடைய மக்களில் தினந்தோறும் இரவு -பகல்களில் எழுபதாயிரம் எண்ணங்கள் உண்டாகாமல் இருப்பதில்லை.இந்த பைத்துல் மஃமூரில் தினந்தோறும் நுழைகிற மலக்குகளின் எண்ணிக்கைக்கு கூடாமலும் குறையாமலும் மனிதனின் எண்ணங்கள் உண்டாகின்றன !

ஒவ்வொரு மனிதனுக்கும் தினசரி உண்டாகிற எண்ணங்கள் அளவுக்கு ஒவ்வொருவருக்கும் எழுபதாயிரம் மலக்குகள் அந்த உடனேயே சிருஷ்டிக்குப்படுகிறார்கள். இவர்கள் பைத்துல் மஃமூரின் பக்கம் செல்கிறார்கள் .

தினந்தோறும் பைத்துல் மஃமூரிலிருந்து வெளியாகிற எழுபதாயிரம் மலக்குகளும் இந்த எண்ணங்களால் உண்டாகிற மலக்குகளுடன் சேர்ந்து கொள்கிறார்கள். இவர்களுடைய திக்ரு, இந்த எண்ணங்கள் தோன்றிய மனிதர்களுக்காக பாவ மன்னிப்பு கேட்பதுதான். இவ்வாறு கியாமத் நாள் வரை நிகழ்ந்துகொண்டிருக்கும்.

ஆனால் எவருடைய இருதயத்தில் நிரந்தரமாக எப்பொழுதும் அல்லாஹுத்தஆலாவை திக்ரு இலங்கிக்கொண்டிருக்கிறதோ அவர்களுடைய எண்ணங்களிலிருந்து சிருஷ்டிக்கப்படுகிற மலக்குகள், இந்த நிலை இல்லாத மற்றவர்களுடைய எண்ணங்களிலிருந்து உண்டாகிற மலக்குகளை விட்டு வேறாக இருப்பார்கள். இவர்களுடைய எண்ணங்கள் அவசியமானதாக இருந்தாலும் சரி, அவசியமற்றதாக இருந்தாலும் சரி இருதயங்கள் யாவும் இந்த பைத்துல் மஃமூரிலிருந்து சிருஷ்டிக்கப்படுகின்றன. ஆகவே அவைகள் எப்போதும் நிறைந்தே இருக்கும் என்றும் கூறுகிறார்கள்.

நம் ஒவ்வொரு எண்ணங்களைக் கொண்டும் ஒவ்வொரு மலக்குகள் படைக்கப்பட்டு , அந்த மலக்கும் அந்த எண்ணத்தை எண்ணியவனுக்காக பைத்துல் மஃமூர் கஃபாவில் தஃவாப் செய்து பாவமன்னிப்பு கேட்பது அல்லாஹ் நம் மீது எத்தனை கருணை காட்டியுள்ளான் என்பதை உணருங்கள் .

ரஹ்மத் ராஜகுமாரன்

ஒன்றே ஒன்றுதான் 25

سَنُرِيهِمْ ءَايَٰتِنَا فِى ٱلْءَافَاقِ وَفِىٓ أَنفُسِهِمْ حَتَّىٰ يَتَبَيَّنَ لَهُمْ أَنَّهُ
ٱلْحَقُّ ۗ أَوَلَمْ يَكْفِ بِرَبِّكَ أَنَّهُۥ عَلَىٰ كُلِّ شَىْءٍ شَهِيدٌ ٥٣

We will show them Our signs in the horizons and within themselves until it becomes clear to them that it is the truth. But is it not sufficient concerning your Lord that He is, over all things, a Witness?

"உண்மை (ஹக்) அவர்களுக்குத் தெளிவாகும் பொருட்டு, நம்முடைய அத்தாட்சிகளை உலகத்தின் பல பாகங்களிலும் காண்பிப்பதுடன், அவர்களுக்குள்ளாகவும் அதிசீக்கிரத்தில் நாம் (அத்தாட்சிகளைக்) காண்பிப்போம். . (நபியே!) உங்கள் இறைவன் நிச்சயமாக அனைத்தையும் பார்த்துக் கொண்டிருக்கின்றான் என்பது (உங்களுக்கு) போதாதா?
(குர்ஆன் : 41:53)

"தன்னை அறிந்தவன் தன் இறைவனை அறிந்தவனாவன் " - நபி மொழி . தன்னை அறிவது என்பது இறைவனைப் பற்றிய ஞானத்துக்குத் திறவுகோலாகும்.
" அவன் -
வெகு தொலைவில் இருப்பான் .
அந்த வானத்தைப் போல,
மிக அருகில் இருப்பான்
நம் இதயத்தைப் போல .. "
உன்னை விட உனக்கு மிகவும் சமீபமாய் இருப்பது வேறு எதுவுமில்லை. அப்படி இருக்க நீ உன்னை அறியாவிட்டால் , மற்றவைகளை நீ எங்ஙனம் அறிந்து கொள்வாய் ?

ஒரு சீடன் தன் குருவோடு முதல் முறையாக மிகப் பெரிய மலைப் பள்ளத்தாக்கிற்கு பயணமானான். வானுயர மலையும் , கிடுகிடு பள்ளத்தாக்கும் , மலைகளுக்கு நடுவே எறும்பு போல தான் இருப்பதைக் கண்டு அவனுக்கு பிரமிப்பையும் ஊட்டின.
கீழே இருக்கும் தன் நண்பனை " வாடா " என்றழைத்தான் .
சப்தமாய் மலையிலிருந்து " வாடா " என்று எதிரொலித்தது .
தன்னை " யார் வாடா ! " என்று கூப்பிட்டது என்பதைத் தெரிந்து கொள்ள " யாரது ? " என்றான் . மலையும் "யாரது ?" திரும்பக் கேட்டது .
சிறுவன் கொஞ்சம் பயத்தோடு, " நீங்க யாரு ? " என்றான் . உடனே மலையும் அதேக் கேள்வியைத் திரும்பக் கேட்க, பயந்து , ஓடிப்போய் குருவைப் பார்த்து நடந்ததைச் சொன்னான் .
குரு சிரித்தப்படி சொன்னார் .
" உனக்குள்ளே கேள்வியும் , உனக்குள்ளே பதிலும் நீயே நீதான் ! " என்றார் குர்ஆன் வசனம் (41 : 53 ) சற்றென எளிதாக விளங்கிற்று .

ஓர் அமாவாசை. நடுநிசி. இறைவனைப் பார்க்க ஆசைப்பட்ட தன் முரீதிடம் ஞானகுரு , " தூரத்தில் தெரியும் காட்டு மண்டபத்தைக் காட்டி அதனுள் நீ தேடும் உன் இறைவன் இருக்கின்றான் போய் பார் . அதற்கு முன் அவனைப் பற்றி சொல்லுகின்றேன் கேள். எந்த தேவையும் இல்லாத அங்கே ஒரே ஒரு ஒருவனாக அவன் மட்டும் தனித்து இருக்கிறான் . அவனை யாரும் பெறவும் இல்லை அவன் யாரையும் பெறவும் இல்லை அதாவது அவனுக்கு உறவுகள் இலலை . மேலும் அவனுக்கு ஒப்பாக எதுவும் இல்லை . அப்படிப்பட்டவனை

நீ போய் பார்க்கப் போகிறாய் போ போய் பார் " எனறார் .
அந்த மண்டபத்திற்கு ஒரே ஒரு கதவு மட்டுமே . முரீது உள்ளே போனார் ஒரே இருட்டு ஆழ்ந்த நிசப்தம் ஆசனமிட்டு கண்ணை மூடவும் அந்த கதவும் "படார்" மூடப்பட்டது
ஞானி சொன்னதை மனம் திரும்ப திரும்ப நினைத்துக் கொண்டே இருந்தது காலைப் பொழுதில் ஞானி கதவை திறக்கிறார் .
மூரீதிடம் "அவனைப் பார்த்தாயா ? "
" இல்லை உணர்ந்தேன் "
" எப்படி ? ."
" அவன் தன்னந்தனியானவன் ஆனால் நான் அவனோடு இருக்கும் போது அவன் எப்படி தன்னந்தனியானவன் ?
உறவுகள் அற்றவனோடு எனக்கு மட்டும் எப்படி உறவு வரும் ?
அவனுக்கு ஒப்பாக எதுவுமே இல்லாத போது , எதுதான் என் கூட இருக்க முடியும் ? ...இருந்தாலும் அவன் இருந்தான். அவன் எநத தேவையும் இல்லாமல் அங்கே ஒரே ஒருவனாக அவன் மட்டும் தன்னந்தனியாக தனித்து இருந்தான் .
"இதுதான் ஹக் " என்றார் ஞானகுரு.

கதவு திறக்கும் போதே முரீதின் முகத்தில் புத்தொளி வீசக் கண்டார் ஞானிகுரு . . . . இப்போ நீங்க சொல்லுங்க அந்த பழய மண்டபத்தில் இருந்து யார்?

ரஹ்மத் ராஜகுமாரன் .
(இத்துடன் "ஒன்றே ஒன்றுதான் " தொடர் பதிவுகள் நிறைவு பெறுகிறது .இத்தொடரைப் பற்றி உங்களது மேலான கருத்துகளை விரும்புகிறேன். ர.ரா

இஸ்லாமும் , கிருஸ்தவமும் 1



இறைவன் ஒருவனே அவனே அனைத்து உலகங்களையும் படைத்துப் பரிபாலிக்கின்றான். அவன் ஆணும் அல்ல, பெண்ணும் அல்ல, அலியும் அல்ல ,அவன் யாரையும் பெறவும் இல்லை, எவருக்கும் பிள்ளையாகவும் இல்லை, நாம் எண்ணும் எண்ணங்கள் நாம் சிந்திக்கும் சிந்தனைகளுக்கும் அப்பாற்பட்ட ஒரு மகத்தான சக்தியுள்ளவனுமான அல்லாஹ் ஒருவன் இருக்கிறான் என்றும் நம்பும் மனிதர்களை மனிதர்கள் மிகச் சிறந்தவர்கள், மனிதத்தன்மை உள்ளவர்கள்.

நல்ல மனிதர்கள் தங்கள் வாழ்க்கைக்கு வழிகாட்ட வேதங்கள் வேண்டும் . அவற்றின் படி வழிகாட்ட இறைத்தூதர்கள் வேண்டும் என்று விரும்பி இறைவனை வேண்டிக் கொண்டதற்கிணங்க பரம்பொருளாகிய அல்லாஹ் வேதங்களையும், அதன்படி நடந்து காட்டும் தனது தூதர்களையும் மனத இனத்திலிருந்தே தேர்ந்தெடுத்து மக்களுக்கு உதவினான் .
இத்தகைய வேதங்கள் - இன்றக் கட்டளைகள் பல அவனால் உலகுக்கு அருளப்பட்டன. இறைத்தூதர்களான நபிமார்களும் பலர் தோன்றினர் .மனிதர்கள் முதல் மனிதர் ஆதம் (அலை) அவர்கள் மனிதனாகவும் ,அதே நேரத்தில் இறைதூதராக உலகில் தோன்றி வாழ்ந்து வழிகாட்டினார்கள் .
நூஹ் (அலை) என்ற நோவா அவர்கள் இறைத்தூதராகவும் , மனித குலத்தில் நீண்ட காலம் வாழ்ந்து காட்டிய பெரியவராகவும் இருந்தார்கள்.

இப்ராஹீம் (அலை) என்ற ஆப்ரஹாம் அவர்களும் அவர்கள் சந்ததியில் இஸ்மாயில் (அலை) , இஸ்ஹாக் (அலை) ஆகியோர்களும் அவர்களின் சந்ததிகளும் , இறைத்தூதர்களாக வந்து வாழ்ந்து மக்களுக்கு வழிகாட்டினார்கள்.
பின் மூஸா (அலை) என்ற மோசே அவர்களும் ,ஈஸா (அலை) என்ற இயேசு நாதர் அவர்களும் இறைத்தூதர்களாக தோன்றி வேதங்களும் பெற்று மக்களுக்கு வாழ்ந்து காட்டினார்கள்
இயேசுநாதர் அவர்களுக்கு சுமார் 570 ஆண்டுகளுக்கு பின் இஸ்மாயில் (அலை) அவர்கள் சந்ததியில் திருமக்காவில் முஹம்மது நபி (ஸல் ) அவர்கள் இறைவனின் இறுதி தூதராகவும் வழிகாட்டியாகவும் தோன்றினார்கள் .

உலகம் அழியும் காலம் வரை, மக்களுக்கு வழிகாட்டியாக இருக்க தக்க ''திருக்குர்ஆன் '' என்ற இறைவேதத்தை முஹம்மது நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் இறக்கி அருளினான்.
இந்த வேதமும் இந்த நபி அவர்களும் உலக மக்களுக்கு அறிவித்த ஒரே செய்தி இதுதான் , "தனக்கு முன் தோன்றிய இறைத் தூதர்கள் அனைவரையும் , அவர்களுக்கு வழங்கப்பட்ட வேதங்கள் அனைத்தையும் மக்கள் யாவரும் ஏற்றுக்கொள்ள வேண்டும். அந்த நபியவர்கள் ,அந்த வேதங்களின் காலங்கள் முடிந்து விட்டன. இப்போது இறுதி வேதத்தையும் இது நபியும் ஏற்றுக்கொள்ள வேண்டும் " என்பதுதான்.
வேதங்கள் இறைத்தூதர்களுக்கு அருளப்பட்டது உண்மை. அவ்வேதங்களுள் தவ்ராத், ஸபூர், இன்ஜீல் ஆகிய முக்கிய மூன்று வேதங்களும் முறையே மூஸா . தாவூத் , ஈஸா (அலைஹிஸ்ஸலாம்) இறைத்தூதர்களுக்கு அவ்வக் கால பாஷைகளில் அருளப்பட்டன. இந்த உண்மையை குர்ஆன் சந்தேகத்திற்கிடமின்றி ஏற்றுக்கொண்டு உறுதி செய்கிறது.

காலக்கிரமத்தில் அந்த வேதங்களும் அந்த வேதங்கள் இறங்கிய பாஷைகளும் மறைந்துவிட்டன. அந்த நபிமார்களின் மறைவுக்குப் பின் அந்த வேதங்களை அவ்வக் கால மக்கள், மாற்றித் திரித்து அதன் புனிதத்துவத்தை குலைத்து விட்டனர் .
இன்று இறைவன் அருளிய வேதங்கள் என்று சொல்லத்தக்க முறையில் அந்த வேதங்கள் நிச்சயமாக இல்லை, அறிவுக்கும் சிந்தனைக்கும் ஏற்றுக்கொள்ள இயலாத செய்திகளும், மக்கள் ஏற்றுக்கொள்ள முடியாத எத்தனையோ விஷயங்களும் வேதங்கள் என்று அந்த மக்கள் நம்பிக் கொண்டிருக்கும் அந்த நூல்களில் காணப்படுகின்றன.

வேதங்கள் என்றால், அவை இறைவனால் வழங்கப்பட்டிருக்க வேண்டும். அவை அழியாத்தன்மை பெற்றதாக மனிதர்களின் கரங்கள் அதில் நுழைய முடியாததாக இருக்கவேண்டும். அவற்றில் கூறப்பட்டுள்ள விஷயங்கள் எவராலும் மறுக்கப்பட முடியாத, குறை கூற முடியாததாக இருக்க வேண்டும். அறிவுக்கு புறம்பானதாக இருக்கக்கூடாது.

அது அருளப்பட்ட காலம் முதல் இன்றளவும் எத்தகைய இடைச்செருகலுக்கும் வழியில்லாததாக இருக்கவேண்டும். என்றென்றும் மக்களுக்கு வழிகாட்டக் கூடியதாக அது இறங்கப் பெற்ற பாஷையிலேயே அப்படியே இருக்கவேண்டும் . அப்பாஷையும் மக்களால் பேசப்படும் பாஷையாக எல்லோருக்கும் புரியும்படியாக அமைந்திருக்க வேண்டும். எப்போது எடுத்தாலும், எந்த காலத்தில் அதை படித்தாலும் புதுப்புது தத்துவங்களையும், விளக்கங்களையும் தருவதோடு, எந்த நிலையிலும் மக்களுக்கு வழிகாட்ட தக்கதாக இருக்க வேண்டும் . இத்தகைய சிறப்புகள் அனைத்தும் திருக்குர்ஆன் ஒன்றுக்கே இருப்பதாக முஸ்லிம்கள் நம்புகிறார்கள். பிறரை நம்பும்படி வேண்டிக் கொள்கிறார்கள்.

திருக்குர்ஆனும் தன்னை ஆராய்ந்து பார்க்கும்படி உலக மக்களை வேண்டிக் கொண்டேயிருக்கிறது. இந்த வேதத்தை ஏற்றுக் கொள்வதன் மூலமே மனிதனுக்கு மேன்மையும்,
நல்வாழ்வும் இருக்கிறது. சிந்தித்துப் பாருங்கள் " என்று பல வாக்கியங்கள் மூலம் நல்ல சமுதாயத்தை குர்ஆன் அறைகூவி அழைக்கிறது - வேண்டிக் கொள்கிறது
ذٰ لِكَ الْڪِتٰبُ لَا رَيْبَ فِيْهِ هُدًى لِّلْمُتَّقِيْنَۙ
இது, (அல்லாஹ்வின்) திருவேதமாகும்; இதில் எத்தகைய சந்தேகமும் இல்லை; பயபக்தியுடையோருக்கு (இது) நேர்வழிகாட்டியாகும். (அல்குர்ஆன் : 2:2)
الَّذِيْنَ يُؤْمِنُوْنَ بِالْغَيْبِ وَ يُقِيْمُوْنَ الصَّلٰوةَ وَمِمَّا رَزَقْنٰهُمْ يُنْفِقُوْنَۙ
(பயபக்தியுடைய) அவர்கள், (புலன்களுக்கு எட்டா) மறைவானவற்றின் மீது நம்பிக்கை கொள்வார்கள்; தொழுகையையும் (உறுதியாக முறைப்படிக்) கடைப்பிடித்து ஒழுகுவார்கள்; இன்னும் நாம் அவர்களுக்கு அளித்தவற்றிலிருந்து (நல்வழியில்) செலவும் செய்வார்கள்.
(அல்குர்ஆன் : 2:3)

وَالَّذِيْنَ يُؤْمِنُوْنَ بِمَٓا اُنْزِلَ اِلَيْكَ وَمَآ اُنْزِلَ مِنْ قَبْلِكَ وَبِالْاٰخِرَةِ هُمْ يُوْقِنُوْنَ
(நபியே!) இன்னும் அவர்கள் உமக்கு அருளப்பெற்ற (வேதத்)தின் மீதும் உமக்கு முன்னர் அருளப்பட்டவை மீதும் நம்பிக்கை கொள்வார்கள்; இன்னும் ஆகிரத்தை(மறுமையை) உறுதியாக நம்புவார்கள். (அல்குர்ஆன் : 2:4)
اُولٰٓٮِٕكَ عَلٰى هُدًى مِّنْ رَّبِّهِمْ وَاُولٰٓٮِٕكَ هُمُ الْمُفْلِحُوْنَ
இவர்கள் தாம் தங்கள் இறைவனின் நேர்வழியில் இருப்பவர்கள்; மேலும் இவர்களே வெற்றியாளர்கள். (அல்குர்ஆன் : 2:5)
كِتٰبٌ اَنْزَلْنٰهُ اِلَيْكَ مُبٰرَكٌ لِّيَدَّبَّرُوْۤا اٰيٰتِهٖ وَلِيَتَذَكَّرَ اُولُوا الْاَلْبَابِ
(நபியே!) பாக்கியம் பெற்ற இவ்வேதத்தை உம்மீது அருளியுள்ளோம் - அவர்கள் இதன் வசனங்களைக் கவனித்து ஆய்வதற்காகவும், அறிவுடையோர் நல்லுணர்வு பெறுவதற்காகவும். (அல்குர்ஆன் : 38:29)
وَلَقَدْ يَسَّرْنَا الْقُرْاٰنَ لِلذِّكْرِ فَهَلْ مِنْ مُّدَّكِرٍ
நிச்சயமாக, இக் குர்ஆனை நன்கு நினைவு படுத்திக் கொள்ளும் பொருட்டே எளிதாக்கி வைத்திருக்கின்றோம். எனவே (இதிலிருந்து) நல்லுணர்வு பெறுவோர் உண்டா?
(அல்குர்ஆன் : 54:17)

ரஹ்மத் ராஜகுமாரன்

இஸ்லாமும் , கிருஸ்தவமும் 2



நபி இப்ராஹீம் அவர்களுக்கும்,நபி மூஸா அவர்களுக்கும் இறைவனை நேர்முகமாக செய்திகளை அறிவித்தான். ஈஸா நபி அவர்கள் தங்களது 'பிதா ' வின் பெயரால் அறிவிப்புகள் செய்து உள்ளார்கள். முஹம்மது நபி (ஸல்) அவர்களுக்கு வானவர் தலைவர் ஜிப்ரயீல் மூலமாக அறிவிப்புகள் கிடைத்துள்ளன.இவ்வாறு அந்தந்த மதத்தவர்கள் சொல்கிறார்கள்.
அப்படி பார்க்கும்போது பழைய ஏற்பாடு, பைபிள், குர்ஆன் ஆகிய மூன்றையும் ஒரே அளவில் ஒரே அந்தஸ்தில் வைத்து கணிக்கப்பட வேண்டிய வருகிறது .
ஆனால் இம்மூன்று மதத்தவர்களும் தங்களுடைய வேதம் ஒன்றே சரியானது, மற்றவை அப்படி அல்ல என்று வாதம் புரிகிறார்கள் ஒருவர் மற்றவருடைய வேதத்தை ஏற்க அல்லது ஒப்புக்கொள்ள மறுக்கிறார். இந்நிலை நூற்றாண்டுக் கணக்காக நீடித்து வருகிறது.

ஈஸா நபி மறைவுக்கு ஆறு நூற்றாண்டுகளுக்குப் பிறகு குர்ஆன் இறங்கியது ஹீப்ரு பைபிளிலுள்ள சில செய்திகளையும், சுவிசேஷங்களில் உள்ள சில செய்திகளையும் குர்ஆன் உறுதிபடுத்துகிறது.தவ்ராத், இஞ்ஜீல் ஆகிய வேதங்கள் பற்றி குர்ஆன் அடிக்கடி குறிப்பிடுகிறது. முந்திய வேதங்களை நம்ப வேண்டும் என முஸ்லிம்களுக்கு அது ஆணையிடுகிறது

يَاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْۤا اٰمِنُوْا بِاللّٰهِ وَرَسُوْلِهٖ وَالْكِتٰبِ الَّذِىْ نَزَّلَ عَلٰى رَسُوْلِهٖ وَالْكِتٰبِ الَّذِىْۤ اَنْزَلَ مِنْ قَبْلُ‌ وَمَنْ يَّكْفُرْ بِاللّٰهِ وَمَلٰۤٮِٕكَتِهٖ وَكُتُبِهٖ وَرُسُلِهٖ وَالْيَوْمِ الْاٰخِرِ فَقَدْ ضَلَّ ضَلٰلًاۢ بَعِيْدًا
முஃமின்களே! நீங்கள் அல்லாஹ்வின் மீதும், அவனுடைய தூதர் மீதும், அவன் தூதர் மீது அவன் இறக்கிய (இவ்) வேதத்தின் மீதும், இதற்கு முன்னர் இறக்கிய வேதங்களின் மீதும் ஈமான் கொள்ளுங்கள்; எவர் அல்லாஹ்வையும், அவனுடைய மலக்குகளையும், அவனுடைய வேதங்களையும், அவனுடைய தூதர்களையும், இறுதி நாளையும் (நம்பாமல்) நிராகரிக்கிறாரோ அவர் வழிகேட்டில் வெகு தூரம் சென்றுவிட்டார். (அல்குர்ஆன் : 4:136)

நூஹ், இப்ராஹிம், மூஸா ,ஈஸா மற்றும் நபிமார்களின் சிறப்புகளை அது அடிக்கடி இயங்கிக்கொண்டிருக்கிறது. சுவிசேஷங்களில் குறிப்பிட்டிருப்பது போல் ஈஸா நபியின் பிறப்பு அதி அற்புதமானது என குர்ஆனும் கூறுகிறது. ஈஸாவின் தாயார் மரியம் அவர்களுக்கு தனிச்சிறப்பு அளிக்கப்படுகிறது. குர்ஆனில் ஒரு அத்தியாயம் (19 ) ஸூரத்து மர்யம் அந்த அம்மையாரின் பெயராலேயே அழைக்கப்படுகிறது.

இஸ்லாமும் , கிருஸ்தவமும் 3




இயேசுவைப் பற்றி பைபிளும், குர்ஆனும்
இஸ்லாமிய நம்பிக்கைப் பிரகாரம் இயேசு (ஈஸா) ஒரு இறைத் தூதராவார். அவர் பத்தினியான மர்யம்(ர) (மரியாள்) அவர்களுக்கு எவ்வித ஆண் தொடர்பும் இல்லாமல் அற்புதமான முறையில் பிறந்தவர். பிறந்தவுடன் தனது தீர்க்கதரிசனம் குறித்தும் எதிர்காலம் குறித்தும் பேசியவர். இறையுதவியால் பல்வேறுபட்ட அற்புதங்களை நிகழ்த்திக் காட்டியவர்.
அவர் கடவுளோ, கடவுளின் குமாரரோ அல்ல; அவர் சிலுவையில் அறையப்படவும் இல்லை; கொலை செய்யப்படவும் இல்லை. இன்று வரை உயிருடன் இருக்கிறார். உலக அழிவு நெருங்கும்போது அவர் மீண்டும் வருவார். நீதி நெறி தவறாத ஒரு நல்லாட்சியை மக்களுக்கு வழங்குவார் என்பது இஸ்லாத்தின் நம்பிக்கையாகும்.

அல்குர்ஆன் என்பது இறுதி இறைத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் மூலமாக மக்களுக்குப் போதிக்கப்பட்ட இறைவேதமாகும். இது முஹம்மது நபி (ஸல்) மூலம் போதிக்கப்பட்டிருந்தாலும், இதில் இயேசு குறித்தும் அவரது தாயார் குறித்தும் அதிகமாகவே பேசப்பட்டுள்ளது.

' முஹம்மத்' எனும் பெயர் அல்குர்ஆனில் 4 இடங்களில்தான் இடம்பெற்றுள்ளது. ஆனால், ' ஈஸா ' எனும் பெயர் 25 இடங்களிலும், ' மர்யம் 'எனும் இயேசுவின் தாயார் பெயர் 31 இடங்களிலும் இடம்பெற்றுள்ளன. இயேசுவின் தாயாரின் பெயரில் தனி அத்தியாயமே அல்குர்ஆனில் உள்ளது. சூறா மர்யம் என்பது அல்குர்ஆனின் 19 ஆவது அத்தியாயமாகும். இயேசுவின் குடும்பத்தின் பெயரிலும் தனி அத்தியாயம் உள்ளது. சூறா ஆலஇம்றான் . இம்றானின் சந்ததியினர் என்பது திருக்குர்ஆனின் மூன்றாவது அத்தியாயமாகும்.

எனவே, கிறிஸ்தவ நண்பர்கள் இஸ்லாம் கிறிஸ்தவத்திற்கு எதிரானது; என்ற வெறுப்புணர்வுடன் இஸ்லாத்தை நோக்காது இஸ்லாமும் கிறிஸ்தவமும் சகோதர மதங்கள் என்கின்ற நம்பிக்கையுடன் அல்குர்ஆனைப் படித்துப் பாருங்கள் உண்மை புரியும்.

அல்குர்ஆனைப் படிக்க வேண்டும் என்ற எண்ணத்தை கிறிஸ்தவ நண்பர்களின் உள்ளங்களில் ஏற்படுத்துவதற்காக இயேசுவை இன்று மக்கள் மத்தியில் உள்ள பைபிள் எப்படி இழிவுபடுத்துகின்றது என்பதையும் அல்குர்ஆன் அவரை எப்படி கண்ணியப்படுத்துகிறது என்பதை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

முஹம்மத் இயேசு(ஈஸா)வை நேசிக்கிறார்

'மற்ற அனைவரையும் விடவும் நானே இயேசு(ஈஸா)வுக்கு நெருக்கமானவனும், நேசத்திற்குரியவனுமாவேன்.' என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அது எவ்வாறு என நபித்தோழர்கள் வினவியபோது,

"இறைத்தூதர்கள் அனைவரும் சகோதரர்கள். அவர்களின் தாய்மார்கள்தான் வேறு பட்டவர்கள். அத்தோடு எல்லா இறைத்தூதர்கள் போதித்த மார்க்கமும் ஒன்றுதான். அத்துடன் எனக்கும் இயேசுவுக்கும் இடையில் வேறு இறைத் தூதர்கள் எவரும் வந்ததில்லை' என நபி(ச) அவர்கள் கூறினார்கள்.' -அபூஹுரைரா (ரலி) முஸ்லிம் (2365) 145

முஹம்மத் இயேசுவை நேசிக்கிறார். கிறிஸ்தவ அன்பர்களே நீங்கள் ஏன் முஹம்மதை நேசிக்கக் கூடாது. அவரது போதனையில் இயேசு எப்படி கண்ணியப் படுத்தப்பட்டுள்ளார் என்பதை அறிய ஏன் ஆவல் கொள்ளக் கூடாது. இயேசுவைப் பற்றி குர்ஆன் சொல்வதையும் பைபிள் சொல்வதையும் படித்துப் பார்த்து உண்மையில் இயேசுவை கண்ணியப் படுத்துவது குர்ஆனா? பைபிளா? என்பதை நீங்களே உறுதி செய்யுங்கள்.

இயேசுவின் பிறப்பு உலக அதிசயங்களில் ஒன்றாகும். அதே வேளை பலத்த சர்ச்சையான ஒரு நிகழ்வாகும். கன்னிப் பெண்ணான மர்யம்(அலை) அவர்களுக்கு ஆண் தொடர்பு இன்றியே இயேசு அற்புதமான முறையில் பிறந்தார்கள். இந்த அற்புதத்தை ஏற்றுக் கொள்ளாத யூத சமூகம் இயேசுவை விபச்சாரத்தில் பிறந்தவராகவும், இயேசுவின் தாயாரை ஒழுக்கம் கெட்டவராகவும் சித்தரித்தது. இஸ்லாம் இதை வன்மையாக மறுத்துரைக்கிறது.

'மர்யமின் மகன் மஸீஹ்' ஒரு தூதரேயன்றி வேறில்லை. அவருக்கு முன்னரும் பல தூதர்கள் சென்றுவிட்டனர். அவரின் தாயோ உண்மையாளர். அவ்விருவரும் உணவு உண்பவர்களாகவே இருந்தனர். அத்தாட்சிகளை அவர்களுக்கு நாம் எவ்வாறு தெளிவு படுத்துகின்றோம் என்பதை (நபியே!) நீர் கவனிப்பீராக! பின்னர் இவர்கள் எவ்வாறு திசை திருப்பப்படுகின்றனர்? என்பதையும் கவனிப்பீராக!' (5:75)

இந்த இறைவசனம் இயேசுவோ, அவரது தாயாரோ கடவுள்கள் இல்லை என்று சொல்லும் அதே வேளை, இயேசுவை இறைத்தூதர் என்றும் அவரது தாயார் (ஆண் தொடர்பு இல்லாமல் குழந்தை பெற்றெடுத்தேன் என்று சொல்லும் விடயத்தில்) உண்மையளர் என்றும் உறுதிப்படுத்துகின்றது.

'இன்னும் இம்ரானின் மகள் மர்யமையும் (உதாரணமாகக் கூறுகின்றான்.) அவள் தனது கற்பைக் காத்துக் கொண்டாள். எமது 'ரூஹி'ல் இருந்து அதில் நாம் ஊதினோம். அவள் தனது இரட்சகனின் வார்த்தைகளையும், அவனது வேதங்களையும் உண்மைப்படுத்தினாள். மேலும், அவள் வழிப்பட்டு நடப்போரில் ஒருவராகவும் இருந்தாள்.' குர்ஆன் (66:12)

உண்மையான இறை விசுவாசிகளுக்கு பிர்அவ்னின் மனைவியையும் கன்னி மர்யத்தையும் இவ்வசனம் உதாரணமாகக் கூறுகின்றது. மர்யம்(அலை) பற்றிக் கூறும் போது கற்பொழுக்கத்துடன் வாழ்ந்த மர்யம் என்றே புகழப்படுகின்றார். இது போன்ற வசனங்கள் மர்யம்( அலை) அவர்களது கற்பொழுக்கத்தை சிறப்பித்துப் பேசியுள்ளது.

இயேசுவின் தாயார் ஆசீர்வதிக்கப்பட்ட பெண்ணாவார். அவருக்கு அற்புதமான முறையில் இறைவன் உணவளித்தான் என அல்குர்ஆன் கூறுகின்றது.
'எனவே, அவரது இரட்சகன் அதை அழகிய முறையில் ஏற்றுக்கொண்டு, அவரை அழகிய முறையில் வளர்த்தான். மேலும், அதற்கு ஸகரிய்யாவைப் பொறுப்பாளராக ஆக்கினான். அவள் இருக்கும் தொழுமிடத்திற்குள் ஸகரிய்யா நுழையும் போதெல்லாம் அவர் அவளிடத்தில் உணவைக் கண்டு, 'மர்யமே! இது உனக்கு எங்கிருந்து கிடைத்தது! என (ஆச்சரியமாக)க் கேட்டார்'. 'இது அல்லாஹ்விடமிருந்து வந்ததாகும். நிச்சயமாக அல்லாஹ், தான் நாடுவோருக்கு கணக்கின்றி வழங்குவான்' என்று அவள் கூறினாள்.'
குர்ஆன் (3:37)

இறைவன் மர்யமை ஏற்றுக் கொண்டான் என்பதும், ஸகரிய்யா எனும் இறைத் தூதரால் அவர் வளர்க்கப்பட்டார் என்பதும், அவருக்கு அற்புதமான முறையில் இறைவன் புறத்திலிருந்து உணவு அளிக்கப்பட்டது குறித்தும் இந்த வசனங்கள் பேசுகின்றன.

ஒரு பெண் கருவுற வேண்டுமானால் ஆணின் விந்து அவர் கருவிற்குள் செலுத்தப்பட வேண்டும். ஆனால், இறைவன் தன் ஆற்றலை வெளிப்படுத்த ஒழுக்கமுள்ள ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுத்தான். ஆண் துணை இல்லாமலும் தன்னால் மனிதனைப் படைக்கமுடியும் என்பதை இதன் மூலம் நிரூபித்தான். இது குறித்து குர்ஆன் இப்படி விபரிக்கிறது.
'(நபியே!) இவ்வேதத்தில் மர்யம் குறித்தும் நினைவு கூர்வீராக! அவர் தனது குடும்பத்தை விட்டும் கிழக்குப் பக்கமுள்ள ஓரிடத்தில் தனித்தபோது. அவர் அவர்களை விட்டும் (தன்னை மறைத்துக் கொள்ள) ஒரு திரையை எடுத்துக் கொண்டார். அப்போது (ஜிப்ரீல் ஆகிய) நமது ரூஹை அவரிடம் அனுப்பினோம். அவர் அவளிடம் நேர்த்தியான ஒரு மனிதராகத் தோற்றமளித்தார். நீர் பயபக்தியாளராக இருந்தால் உம்மை விட்டும் அர்ரஹ்மானிடம் நிச்சயமாக நான் பாதுகாவல் தேடுகின்றேன் என (மர்யம்) கூறினார்.
'பரிசுத்தமான ஒரு மகனை உமக்கு நான் கொடையாக வழங்குவதற்காக (அனுப்பப்பட்ட) உமது இரட்சகனின் தூதராவேன்', என்று அவர் கூறினார்.

'எந்த ஆடவரும் என்னைத் தீண்டாமலும், நான் நடத்தை கெட்டவளாக இல்லாமலும் இருக்க எவ்வாறு எனக்கு ஒரு மகன் உண்டாக முடியும்?' என (மர்யம்) கேட்டார்.
'அது அவ்வாறுதான். அது எனக்கு இலகு வானதாகும் என உமது இரட்சகன் கூறுகின்றான். அவரை மக்களுக்கு ஓர் அத்தாட்சியாகவும், எம்மிடமிருந்துள்ள அருளாகவும் நாம் ஆக்குவதற்காகவுமே (இவ்வாறு செய்துள்ளோம்.) இது விதிக்கப்பட்டுவிட்ட ஒரு காரியமாகிவிட்டது' என்று (ஜிப்ரீல்) கூறினார்.'
குர்ஆன் (19:16-21)

மர்யம் அவர்களுக்கு ஆண் துணையின்றி குழந்தை பிறக்கும் என்பது மட்டுமன்றி, அந்தக் குழந்தையின் பெயர், அவர் இறைத்தூதராக வருவார், மடியில் குழந்தையாக இருக்கும் போதே பேசுவார் என்பன போன்ற பல அம்சங்களும் முன்னறிவிப்புச் செய்யப்பட்டுள்ளன.
"மர்யமே! நிச்சயமாக அல்லாஹ் தன்னிடமிருந்துள்ள ஒரு வார்த்தையைக் கொண்டு உமக்கு (ஒரு குழந்தையை வழங்க) நன்மாராயம் கூறுகின்றான். அதன் பெயர் மர்யமின் மகன் ஈஸா அல்மஸீஹ் என்பதாகும். அவர் இம்மையிலும், மறுமை யிலும் உயர்ந்த அந்தஸ்துடையவராகவும் (அல்லாஹ்வுக்கு) நெருக்கமானவர்களில் உள்ளவராகவும் இருப்பார்' என வானவர்கள் கூறியதை (எண்ணிப் பாருங்கள்.)
மேலும் அவர் தொட்டிற் பருவத்திலும், வாலிபப் பருவத்திலும் மக்களுடன் பேசுவார். இன்னும் (அவர்) நல்லவர்களில் உள்ளவருமாவார் (என்றும் கூறினர்.)
(அதற்கு மர்யம்) 'என் இரட்சகனே! எந்த ஆடவரும் என்னைத் தீண்டாத நிலையில் எனக்கு எவ்வாறு குழந்தை உண்டாகும்!' என்று கேட்டார். 'அவ்வாறே அது' (நடக்கும்) என்று அவன் கூறினான்.
அல்லாஹ், தான் நாடுவதைப் படைப்பான். அவன் ஒரு விடயத்தைத் தீர்மானித்து விட்டால் அதற்கு 'குன்' (ஆகுக!) என்று கூறுவதுதான், உடனே அது ஆகிவிடும்.

மேலும், அவருக்கு வேதத்தையும், ஞானத்தையும், தவ்றாத்தையும், இன்ஜீலையும் அவன் கற்றுக்கொடுப்பான்.'
குர்ஆன் (3:45-48)
இவ்வாறு தேவ தூதர் வந்து அனைத்து முன்னறிவிப்புக்களையும் செய்கிறார். இதன் பின்னர் மர்யம் கருவுற்று குழந்தையை ஈன்றெடுத்து சமூகத்துக்கு வந்தபோது நடந்ததை அல் குர்ஆன் இப்படி விபரிக்கிறது.

'நீர் உண்டு, குடித்து, கண்குளிர்ச்சி அடைவீராக! எந்த ஒரு மனிதனை நீர் கண்டாலும் 'நான் அர்ரஹ்மானுக்காக மௌனம் அனுஷ்டிக்க நேர்ச்சை வைத் திருக்கின்றேன். எனவே, இன்றைய தினம் எந்த மனிதனுடனும் நான் பேசமாட்டேன்' என (சைகை மூலம்) கூறுவீராக! (என்றும் அவர் கூறினார்).'
குர்ஆன் (19:26)

மர்யம் (அலை) மீது அவரது சமூகம் மாசுகற்பித்த போது குழந்தை இயேசுவை இறைவன் பேசச் செய்து அந்தக் களங்கத்தை நீக்கினான் என குர்ஆன் கூறுகின்றது. உலக முஸ்லிம்கள் அனைவரும் இந்தச் செய்திகள் அத்தனையையும் உறுதியாக நம்புகின்றனர்.

நான் அறிந்தவரையில் இயேசு (ஈஸா(அலை)குழந்தைப் பருவத்தில் பேசிய அற்புதச் செய்தியை பைபிளில் காண முடியவில்லை. அல்குர்ஆனின் எந்த இடத்திலும் இயேசுவின் தந்தை என்று எவரும் குறிப்பிடப்படவில்லை. அவர் தந்தையின்றி பிறந்தவர். எனவே, மர்யமின் மகன் ஈஸா என்றே அழைக்கப்படுகின்றார். அல் குர்ஆனில் 16 இடங்களில் இந்த வார்த்தைப் பிரயோகத்தைக் காணலாம்.

யூதர்கள் சொல்வது போல் அவர் விபச்சாரத்தில் பிறந்தவரும் அல்ல. தல்மூத் எனும் யூத ஏடு ரோமானியப் படை வீரருடன் மர்யமுக்கு ஏற்பட்ட தகாத உறவால் பிறந்தவரே இயேசு என்ற கூறுகிறது. கிறிஸ்தவர்கள் கூறுவதுபோல் அவர் கடவுளுக்குப் பிறந்த கடவுளின் குமாரனும் அல்ல. அல்லது இவ்வற்புதத்தை நம்பாதவர்கள் கூறுவது போல் அவர் யோசேப்பின் குமாரனும் அல்ல. கடவுளின் சித்தப் பிரகாரம் அற்புதமாக கன்னி மர்யத்திற்குப் பிறந்த மர்யமின் குமாரராவார்.

இயேசுவிற்குத் தந்தையில்லை; தாய் மட்டுமே உள்ளார் எனக் குர்ஆன் மிகத் தெளிவாகக் கூறுகின்றது. அந்தக் காலத்தில் வாழ்ந்த யூதர்கள் இயேசுவின் இந்த சிறப்பம்சத்தைச் சிதைக்க விரும்பினர். எனவே, அவரை விபச்சாரத்தில் பிறந்தவர் என்றனர். அல்லாஹ்வின் அற்புதமான படைப்பில் நம்பிக்கையில்லாதவர்கள் அவரை யோசேப்புக்குப் பிறந்தவர் என்றனர். பைபிளின் பல வாசகங்கள் அவர்களின் இந்த தவறான நம்பிக்கைக்கு இடம் கொடுக்கும் விதத்தில் இயேசுவை யோசேப்பின் மகனாக அறிமுகப்படுத்தகின்றது. இது அவர்களின் நம்பிக்கையீனத்தை வெளிப்படுத்துகின்றது. இதோ இயேசுவின் பரம்பரை பற்றிய பைபிளின் தகவல்களைப் பாருங்கள்.

'யாக்கோபு மரியாளுடைய புருஷனாகிய யோசேப்பைப் பெற்றான்,அவளிடத்தில் கிறிஸ்து எனப்படுகிற இயேசு பிறந்தார்.' (மத்தேயூ: 1:-16)
'அப்பொழுது இயேசு ஏறக்குறைய முப்பது வயதுள்ளவரானார். அவர் யோசேப்பின் குமாரனென்று எண்ணப்பட்டார். அந்த யோசேப்பு ஏலியின் குமாரன்,' (லூக்கா 3:23)
மத்தேயூ, லூக்கா இருவருமே யூதர்களாக இருந்து கிறிஸ்தவத்தை ஏற்றவர்கள். அவர்கள் இயேசுவின் அற்புதப் படைப்பை நம்பாததால் அவரை யோசப்பின் மகனாகக் காட்ட முயல்கின்றனர். மத்தேயுவைப் பொறுத்தவரையில் இதில் உறுதியாகவே இருந்தவராவார்.
மத்தேயு, லூக்கா இருவரும் இயேசுவின் சீடர்கள் அல்லவா என நினைக்கலாம். இயேசுவிற்கு மத்தேயு என்றொரு சீடர் இருந்தது உண்மையே. இருப்பினும் மத்தேயு சுவிஷேத்தை எழுதிய வேறு ஒருவராவார். அல்லது எவரோ ஒருவர் ஒரு நூலை எழுதி அதை மத்தேயு என மத்தேயுவின் பெயரில் பிரபலப்படுத்தியுள்ளார் என்றே கூற வேண்டும்.

‘இயேசு அவ்விடம் விட்டுப் புறப்பட்டுப்போகையில், ஆயத்துறையில் உட்கார்ந்திருந்த மத்தேயு என்னும் ஒரு மனுஷனைக் கண்டு: எனக்குப் பின்சென்றுவா என்றார், அவன் எழுந்து, அவருக்குப் பின்சென்றான்.’ (மத்தேயு 9:9)

இயேசுவின் சீடர் மத்தேயு இந்த சுவிசேகத்தை எழுதியிருந்தால் மத்தேயு என்னும் ஒரு மனுசனைக் கண்டு என்று இருக்காது. மத்தேயு எனும் என்னைக் கண்டு என்று இடம் பெற்றிருக்க வேண்டும். அவன் எழுந்து அவருக்குப் பின் சென்றான் என்று இருக்காது நான் எழுந்து அவருக்குப் பின் சென்றேன் என்று வந்திருக்க வேண்டும். எனவே, மத்தேயு ஏற்பாடு என்பது இயேசுவின் சீடர் மத்தேயுவால் எழுதப்பட்டது அல்ல.
‘மகா கனம்பொருந்திய தேயோப்பிலுவே, நாங்கள் முழுநிச்சயமாய் நம்புகிற சங்கதிகளை,’
‘ஆரம்ப முதல் கண்ணாரக்கண்டு வசனத்தைப் போதித்தவர்கள் எங்களுக்கு ஒப்புவித்தபடியே அவைகளைக் குறித்துச் சரித்திரம் எழுத அநேகம்பேர் ஏற்பட்டபடியினால்,’
‘ஆதிமுதல் எல்லாவற்றையும் திட்டமாய் விசாரித்தறிந்த நானும் உமக்கு உபதேசிக்கப்பட்ட விசேஷங்களின் நிச்சயத்தை நீர் அறிய வேண்டுமென்று,’
‘அவைகளை ஒழுங்காய் உமக்கு எழுதுவது எனக்கு நலமாய்த் தோன்றிற்று.’ (லூக்கா: 1: 1-4)

லூக்கா தன்னை இயேசுவின் சீடர் என அறிவிக்கவில்லை. கண்ணால் கண்டவர்கள் சொன்னவற்றை எழுதுகின்றேன் என்றே கூறியுள்ளார். எனவே, இயேசுவை யோசேப்பின் மகன் எனக் கூறும் மத்தேயுவும் லூக்காவும் உண்மையான இயேசுவின் சீடர்களே அல்ல. இருப்பினும் இயேசு அற்புதமாகப் பிறந்தவர் என குர்ஆன் உறுதியாகக் கூறுகின்றது. இருப்பினும் பைபில் அதேயளவு உறுதியுடன் இயேசுவின் அற்புதப் பிறப்புப் பற்றிக் கூறாது சந்தேகம் கலந்தே கூறுகின்றது.
இவ்வாறு நோக்கும் போது இயேசுவை அல்குர்ஆன் கண்ணியப்படுத்தும் அளவுக்கு பைபிள் கண்ணியப்படுத்தவில்லை என்பது மிகத் தெளிவாகின்றது.

( S.H.M. இஸ்மாயில் ஸலபி பதிவிலிருந்து )
ர.ரா

## இஸ்லாமும் , கிருஸ்தவமும் 4

ஆதியாகமத்தின் முதல் அத்தியாயத்தில் முதல் இரண்டு வாசனங்கள்..
1) "ஆதியிலே தேவன் வானத்தையும், பூமியையும் சிருஷ்டித்தார்.
2) " பூமியானது ஒழுங்கின்மையும், வெறுமையுமாய் இருந்தது **( without form and Void)** ஆழத்தின் மேல் இருள் இருந்தது தேவ ஆவியானவர் ஜலத்தின் மேல் அசைவாடிக்கொண்டிருந்தார்"

உலகம் உருவாக்கப்படும் முன் எங்கும் இருள் மயமாய் இருந்தது என்று இவ்வேதம் ஆரம்பிக்கிறது. இருள்மயமாய் இருந்திருப்பதில் விஞ்ஞானத்திற்கு எந்த மாற்றுக் கருத்தும் கிடையாது . ஆனால் ஆரம்பத்திலேயே நீர் காணப்பட்டது என்பதை விஞ்ஞானிகள் ஒத்துக் கொள்ள மாட்டார்கள். ஆரம்பத்தில் ஒரு புகை மண்டலமாக இருந்ததுதான், இப்பிரபஞ்சம் வடிவம் பெற்றிருக்க வேண்டும் என்பது அறிவியல் ஆய்வாளர்களின் கருத்தாகும். புகை மண்டலமாக உருவாகிறது முன் தண்ணீர் தோன்றியிருக்க முடியாது என்பது விஞ்ஞானிகளின் கருத்து .
ஆனால் குர்ஆன் கூறுவதைப் பாருங்கள்.
ثُمَّ اسْتَوٰٓى اِلَى السَّمَآءِ وَهِىَ دُخَانٌ فَقَالَ لَهَا وَلِلْاَرْضِ ائْتِيَا طَوْعًا اَوْ كَرْهًا قَالَتَاۤ اَتَيْنَا طَآٮِٕعِيْنَ
பிறகு அவன் வானம் புகையாக இருந்தபோது (அதைப்) படைக்க நாடினான்; ஆகவே அவன் அதற்கும் பூமிக்கும்: “நீங்கள் விருப்புடனாயினும் அல்லது வெறுப்பிருப்பினும் வாருங்கள்” என்று கூறினான். (அதற்கு) அவையிரண்டும் “நாங்கள் விருப்புடனேயே வருகின்றோம்” என்று கூறின.
(அல்குர்ஆன் : 41:11)

அகிலங்கள் படைக்கப்படுவதற்கு முன்னர் ஒரே புகை மண்டலமாக இருந்தது பற்றி வேறு எந்த வேத நூலும் இந்த உண்மையை அறிவித்ததே இல்லை.

14 பில்லியன் வருடங்களுக்கு முன்னர், பெருவெடிப்பு **(Big Bang)** மூலமாக இந்தப் பிரபஞ்சம் உருவாகியது என்று பெரும்பாலான விஞ்ஞானிகள் கருதுகின்றனர். அன்றிலிருந்து இன்றுவரை இந்தப் பிரபஞ்சம் பெரிதாகிக்கொண்டே வந்துள்ளது – இன்னும் அது பெரிதாகிக்கொண்டே இருக்கிறது!
பிரபஞ்சம் விரிவடைவதையோ அல்லது வளர்வதையோ பல்வேறு வழிகளில் நாம் அளக்கலாம். அதில் ஒரு முறை பிரபஞ்சம் உருவாகிய பின்னரான பின்ஔளிர்வை **(afterglow)** அளப்பதன் மூலம் கண்டறிவது. அதாவது, வாண வேடிக்கைகள் முடிவடைந்ததும் அதிலிருந்து வரும் புகை பரவுவதைப் போல, பிரபஞ்ச பெருவெடிப்பின் பின்னர் அதன் பின்ஔளிர்வு இன்றும் பிரபஞ்சத்தில் எஞ்சி இருக்கிறது.

ரஹ்மத் ராஜகுமாரன்

இஸ்லாமும் , கிருஸ்தவமும் 5

ஆதியாகமத்தில் 3 வசனம் முதல் 5 வசனம் வரை...
3) " தேவன் வெளிச்சம் உண்டாகக்கடவது என்றார்.வெளிச்சம் உண்டாயிற்று.
4)வெளிச்சம் நல்லது என்று தேவன் கண்டார்
5) வெளிச்சத்தையும் , இருளையும் தேவன் வெவ்வேறாகப் பிரித்தார். தேவன் வெளிச்சத்திற்கு பகல் எனப் பெயரிட்டார் இருளுக்கு இரவு எனப் பெயரிட்டார். சாயங்காலமும் விடியற்காலமுமாகி முதலாம் நாள் ஆயிற்று "

இந்த உலகத்திற்கு வெளிச்சத்தை கொடுக்கக்கூடியது இப்பிரபஞ்சத்தில் உள்ள கிரகங்களும் நட்சத்திரங்களும்தான். வான்வெளியில் உள்ள ' வெளிச்சங்கள் எல்லாம் ' நான்காம் நாள்தான் படைக்கப்பட்டதாக இதே ஆதியாகமத்தில் 14 ஆம் வசனம் கூறுவதை கவனியுங்கள்
14) " பின்பு தேவன் பகலுக்கும்,இரவுக்கும் வித்தியாசம்
உண்டாக்கத் தக்க வானம் என்கிற ஆகாய விரிவிலே சுடர்கள் உண்டாகக்கடவது "

இரவிலிருந்து பகலை பிரிப்பதும் பூமிக்கு வெளிச்சம் கொடுப்பது என்பதெல்லாம் இந்த வசனத்தில் தான் குறிக்கப்படுகிறது. எனவே முதல் நாளே வெளிச்சத்தை பற்றி பிரஸ்தாபிப்பது வேடிக்கையாக இருக்கிறது. ஏனெனில் வெளிச்சத்திற்கு மூலமான கிரகங்கள் மூன்று நாட்கள் கழித்தே படைக்கப்பட்டன என அவ்வேதமே கூறுகிறது .

முதல் நாளே " சாயங்காலமும், விடியற்காலமும் " என்று கூறப்பட்டிருப்பது முழு கற்பனையாகவே இருக்க வேண்டும். பூமியையும் படைத்து அத்துடனேயே சூரியனையும் படைத்து இரண்டையும் சுற்ற விட்டிருந்தால்தானே விடியக் காலத்தையும் ,சாயங்காலத்தில் காண முடியும்.
ஆனால் திருக்குர்ஆனில் படைப்பில் வரிகைக் கிரமமாக இவைகள் கூறப்பட்டிருக்கிறது என்பதை கவனியுங்கள்
ءَاَنْتُمْ اَشَدُّ خَلْقًا اَمِ السَّمَآءُ‌ ؕ بَنٰٮهَا
உங்களைப் படைத்தல் கடினமா? அல்லது வானத்தை (படைத்தல் கடினமா?) அதை அவனே படைத்தான்.
(அல்குர்ஆன் : 79:27)

رَفَعَ سَمْكَهَا فَسَوّٰٮهَا ۙ
அதன் முகட்டை அவன் உயர்த்தி அதை ஒழுங்கு படுத்தினான்.
(அல்குர்ஆன் : 79:28)
وَ اَغْطَشَ لَيْلَهَا وَاَخْرَجَ ضُحٰٮهَا
அவன்தான் இரவை இருளுடையதாக்கிப் பகலின் ஒளியை வெளியாக்கினான். (அல்குர்ஆன் : 79:29)
وَالْاَرْضَ بَعْدَ ذٰلِكَ دَحٰٮهَا
இதன் பின்னர், அவனே பூமியை பிரித்தான்.
(அல்குர்ஆன் : 79:30)
اَخْرَجَ مِنْهَا مَآءَهَا وَمَرْعٰٮهَا
அதிலிருந்து அதன் தண்ணீரையும், அதன் மீதுள்ள (பிராணிகளுக்கான) மேய்ச்சல் பொருள்களையும் அவனே வெளியாக்கினான். (அல்குர்ஆன் : 79:31)
وَالْجِبَالَ اَرْسٰٮهَا ۙ
அதில், மலைகளையும் அவனே நிலை நாட்டினான்.
(அல்குர்ஆன் : 79:32)
مَتَاعًا لَّـكُمْ وَلِاَنْعَامِكُمْ
உங்களுக்கும், உங்கள் கால் நடைகளுக்கும் பயனளிப்பதற்காக (இவ்வாறு செய்துள்ளான்).
(அல்குர்ஆன் : 79:33)

ரஹ்மத் ராஜகுமாரன்

இஸ்லாமும் , கிருஸ்தவமும் 6



ஆதியாகமம் 6 முதல் 8 வரை உள்ள வசனங்கள்
6 ) பின்பு தேவன், ஜலத்தின் மத்தியில் ஆகாயவிரிவு உண்டாகக்கடவது என்றும் அது ஜலத்தின்று ஜலத்தை பிரிக்க கடவது என்றும் சொன்னார்.

7) தேவன் ஆகாய விரிவை உண்டுபண்ணி,ஆகாய விரிவுக்கு கீழே இருக்கிற ஜலத்திருக்கும் ஆகாய விரிவுக்கு மேலே இருக்கிற ஜலத்திற்கும் பிரிவு உண்டாக்கினார் அது அப்படியே ஆயிற்று.
தேவன் ஆகாய விரிவுக்கு வானம் என்று பெயரிட்டார். சாயங்காலமும் விடியற் காலமுமாகி இரண்டாம் நாள் ஆயிற்று

9) பின்பு தேவன் வானத்தின் கீழே இருக்கிற ஜலம் ஓரிடத்தில் சேரவும், வெட்டாந்தரை காணப்படவும் கடவது என்றார்.

10) அது அப்படியே ஆயிற்று தேவன் வெட்டாந்தரைக்கு பூமி என்று பெயரிட்டார் . சேர்ந்த ஜலத்திற்கு சமுத்திரம் என்று பெயரிட்டார் தேவன் அது நல்லது என்று கண்டார்.

11) அப்பொழுது தேவன் பூமியானது புல்லையும் விதையைப் பிறப்பிக்கும் பூண்டுகளையும் பூமியின்மேல் தங்களில் தங்கள் விதையையுடைய கனிகளைத் தங்கள் தங்களின் ஜாதியின்படியே கொடுக்கும் கனி விருட்சங்களையும் முளைத்த கடவது என்றார் அது அப்படியே ஆயிற்று.

12) பூமியானது புல்லையும் தங்கள் தங்கள் ஜாதியின்படியே தங்களில் தங்கள் விதையையுடைய கனிகளைக் கொடுக்கும் விருட்சங்களையும் முளைப்பித்தது தேவன் அது நல்லது என்று கண்டார்.

13) சாயங்காலமும் விடியற்காலமுமாகி மூன்றாம் நாள் ஆயிற்று "
தண்ணீர் சூழ்ந்திருந்த காலத்திலிருந்து வெற்றாந்தரை தோன்றிற்று என்பது சரிதான். ஆனால் சூரியன் படைக்கப் படுவதற்கு முன்னரே புல்பூண்டுகள் முளைக்க ஆரம்பித்து விட்டன என்பதும் விதைகள் தோன்றி விட்டன என்பதும் கற்பனைகளே.

اِنَّ رَبَّكُمُ اللّٰهُ الَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَ الْاَرْضَ فِىْ سِتَّةِ اَيَّامٍ ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ يُغْشِى الَّيْلَ النَّهَارَ يَطْلُبُهٗ حَثِيْثًا ۙ وَّالشَّمْسَ وَالْقَمَرَ وَالنُّجُوْمَ مُسَخَّرٰتٍ بِاَمْرِهٖ اَلَا لَـهُ الْخَـلْقُ وَالْاَمْرُ تَبٰرَكَ اللّٰهُ رَبُّ الْعٰلَمِيْنَ
நிச்சயமாக உங்கள் இறைவனாகிய அல்லாஹ்தான் வானங்களையும், பூமியையும் ஆறு நாட்களில் படைத்து அர்ஷின் மீது (தன் மகிமைக்குத் தக்கவாறு) உயர்ந்துவிட்டான். அவனே இரவால் பகலை மூடுகிறான்; (பகலால் இரவை மூடுகிறான்.) அது வெகு தீவிரமாகவே அதனைப் பின் தொடர்கிறது. (அவனே) சூரியனையும், சந்திரனையும், நட்சத்திரங்களையும் (படைத்தான். இவை அனைத்தும்) அவனது கட்டளைக்கு உட்பட்டவைகளே. படைப்பினங்களும் (படைத்தலும்) அதன் ஆட்சியும் அவனுக்கு உரியதல்லவா? அனைத்து உலகங்களையும் படைத்து, வளர்த்து, பரிபக்குவப்படுத்தும் அல்லாஹ் மிக்க பாக்கியமுடையவன்.
(அல்குர்ஆன் : 7:54)

وَهُوَ الَّذِىْۤ اَنْزَلَ مِنَ السَّمَآءِ مَآءً فَاَخْرَجْنَا بِهٖ نَبَاتَ كُلِّ شَىْءٍ فَاَخْرَجْنَا مِنْهُ خَضِرًا نُّخْرِجُ مِنْهُ حَبًّا مُّتَرَاكِبًا وَمِنَ النَّخْلِ مِنْ طَلْعِهَا قِنْوَانٌ دَانِيَةٌ وَّجَنّٰتٍ مِّنْ اَعْنَابٍ وَّالزَّيْتُوْنَ وَالرُّمَّانَ مُشْتَبِهًا وَّغَيْرَ مُتَشَابِهٍ اُنْظُرُوْۤا اِلٰى ثَمَرِهٖۤ اِذَاۤ اَثْمَرَ وَيَنْعِهٖ اِنَّ فِىْ ذٰ لِكُمْ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يُّؤْمِنُوْنَ

அவன்தான் மேகத்திலிருந்து மழையை இறக்கி வைக்கின்றான். அதைக் கொண்டே சகல வகைப் புற்பூண்டுகளையும் நாம் முளைக்க வைத்து, அதில் இருந்து பசுமையான தழைகளையும் நாம் வெளியாக்குகின்றோம். அதிலிருந்தே அடர்ந்த வித்துக்களை (யுடைய கதிர்களை)யும் நாம் வெளியாக்குகின்றோம். பேரீச்ச மரத்தின் பாளைகளில் வளைந்து தொங்கும் பழக்குலைகளும் இருக்கின்றன. (அவற்றையும் நாமே வெளியாக்குகின்றோம்.) திராட்சைத் தோட்டங்களையும், (பார்வைக்கு) ஒன்றுபோலும் (ரசனையில்) வெவ்வேறாகவும் உள்ள மாதுளை, ஜெய்த்தூன் (ஒலிவம்) ஆகியவற்றையும் (நாமே வெளியாக்குகின்றோம்.) அவை (பூத்துக்) காய்ப்பதையும், பின்னர் கனிந்து பழமாகும் விதத்தையும் (மக்களே!) உற்று நோக்குங்கள். நம்பிக்கை கொள்ளும் மக்களுக்கு நிச்சயமாக இதில் பல அத்தாட்சிகள் இருக்கின்றன. (அல்குர்ஆன் : 6:99)

ரஹ்மத் ராஜகுமாரன்

இஸ்லாமும் , கிருஸ்தவமும் 7

ஆதியாகமத்தில் 14 முதல் 19 வசனங்கள் கூறப்படுவது:

14) தேவன் பகலுக்கும் இரவுக்கும் வித்தியாசம் உண்டாக்க தக்க வானம் என்கிற ஆகாய விரிவிலே சுடர்கள் உண்டாகக்கடவது. அவைகள் அடையாளங்களுக்காக காலங்களையும் நாட்களையும் வருடங்களையும் குறிப்பதற்காகவும் இருக்கக்கடவது என்றார் .

15) அவைகள் பூமியின் மேலே பிரகாசிக்கும்படிக்கு வானம் என்கிற ஆகாய விரிவிலே சுடர்களாக இருக்கக் கடவது என்றார். அது அப்படியே ஆயிற்று .

16) தேவன், பகலை ஆளப் பெரிய சுடரும் இரவை ஆளச் சிறிய சுடரும் ஆகிய இரண்டு மகத்தான சுடர்களையும் நட்சத்திரங்களையும் உண்டாக்கினார் .

17) அவைகள் பூமியின் மேலே பிரகாசிக்கவும், பகலையும், இரவையும் ஆளவும் வெளிச்சத்துக்கும் இருளுக்கும் வித்தியாசம் உண்டாக்கவும் தேவன் அவைகளை வானம் என்கிற ஆகாய விரிவிலே வைத்தார். தேவன் அது நல்லது என்று கண்டார்.

19) சாயங்காலமும் விடியற்காலமுமாகி நாலாம் நாள் உதயமாயிற்று

சூரியனுடையவும், சந்திரனுடையவும் பணிகள் குறித்து விளக்கப்பட்டிருப்பது சரிதான். சூரியனிலிருந்தே பூமியும் சந்திரனும் பிரிந்து தனித்து இயங்க ஆரம்பித்தன என்பது விஞ்ஞானிகளின் கண்டுபிடிப்பு. ஆனால் இங்கு பூமி முதல் நாளே படைக்கப்பட்டதாகவும் , சந்திரனும், சூரியனும் நான்காம் நாள் படைக்கப்பட்டதாகவும் வர்ணிக்கப்படுகின்றன.

هُوَ الَّذِىْ جَعَلَ الشَّمْسَ ضِيَآءً وَّالْقَمَرَ نُوْرًا وَّقَدَّرَهٗ مَنَازِلَ لِتَعْلَمُوْا عَدَدَ السِّنِيْنَ وَالْحِسَابَ مَا خَلَقَ اللّٰهُ ذٰلِكَ اِلَّا بِالْحَقِّ يُفَصِّلُ الْاٰيٰتِ لِقَوْمٍ يَّعْلَمُوْنَ
அவனே சூரியனை ஒளியாகவும் (பிரகாசமாகவும்), சந்திரனை (அழகிய) வெளிச்சம் தரக்கூடியதாகவும் ஆக்கி, ஆண்டுகளின் எண்ணிக்கையையும் (மாதங்களின்) கணக்கையும் நீங்கள் அறிந்து கொள்வதற்காக அவைகளுக்கு (மாறிமாறி வரக்கூடிய) தங்கும் இடங்களையும் நிர்ணயம் செய்தான். மெய்யான தக்க காரணமின்றி இவைகளை அல்லாஹ் படைக்கவில்லை. அறியக்கூடிய மக்களுக்காக(த் தன் ஆற்றலுக்குரிய) சான்றுகளை இவ்வாறு விவரிக்கிறான்.
(அல்குர்ஆன் : 10:5)

ரஹ்மத் ராஜகுமாரன்

இஸ்லாமும் , கிருஸ்தவமும் 8

ஆதியாகமத்தில் 20 முதல் 24 வரை உள்ள வசனங்கள் கூறுவது

20) பின்பு தேவன் நீந்தும் ஜீவ ஜந்துக்களையும் பூமியின்மேல் வானம் என்கிற ஆகாய விரிவிலே பறக்கும் பறவைகளையும் ஜலமானது திரளாக ஜனிப்பிக்கக்கடவது என்றார்.

21) தேவன் மகா மச்சங்களையும் ஜலத்தில் தங்கள் தங்கள் ஜாதியின்படியே திரளாக ஜனிக்கப்பட்ட சகலவித நீர் வாழும் ஜந்துக்களையும், சிறகுள்ள ஜாதி ஜாதியான சகலவிதப் பட்சிகளையும் சிருஷ்டித்தார். தேவன் அது நல்லது என்று கண்டார்.

22) தேவன் அவைகளை ஆசீர்வதித்து, நீங்கள் பலுகிப் பெருகி சமுத்திர ஜலத்தை நிரப்புங்கள் என்றும், பறவைகள் பூமியில் பெருக் கடவது என்றும் சொன்னார் .

24) சாயங்காலமும் விடியற்காலமுமாகி மூன்றாம் நாள் ஆயிற்று .

முதன் முதலில் உயிர் வாழும் பிராணிகள் தண்ணீரில் தான் தோன்றின அப்பிராணிகள் தரையிறங்கி பூமியில் சுற்றித் திரிந்த போதுதான் முதுகெலும்புள்ள பிராணிகள் உருவாகின அதன்பிறகு பறவைகள் உருவாகி இருக்க வேண்டும் என்பது விஞ்ஞானிகளின் கருத்தாகும் ஆனால் ஐந்தாம் நாளே பறவைகள் தோன்றின என்றும் ஆறாம் நாள் தான் கரை வாழும் மிருகங்கள் படைக்கப்பட்டன என்றும் இந்நூல் கூறியிருப்பது விஞ்ஞான கருத்துக்கு முரணாகப்படுகிறது.

ஆனால் குர்ஆனில்  ஜீவராசிகளின் படைப்புகளைப் பற்றி கூறுவது :
وَاللّٰهُ خَلَقَ كُلَّ دَآبَّةٍ مِّنْ مَّآءٍ فَمِنْهُمْ مَّنْ يَّمْشِىْ عَلٰى بَطْنِهٖ وَمِنْهُمْ مَّنْ يَّمْشِىْ عَلٰى رِجْلَيْنِ وَمِنْهُمْ مَّنْ يَّمْشِىْ عَلٰٓى اَرْبَعٍ يَخْلُقُ اللّٰهُ مَا يَشَآءُ اِنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ
மேலும், எல்லா உயிர்ப் பிராணிகளையும் அல்லாஹ் நீரிலிருந்து படைத்துள்ளான்; அவற்றில் தன் வயிற்றின் மீது நடப்பவையும் உண்டு; அவற்றில் இரு கால்களால் நடப்பவையும் உண்டு; அவற்றில் நான்கு (கால்)களை கொண்டு நடப்பவையும் உண்டு; தான் நாடியதை அல்லாஹ் படைக்கிறான்; நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுடையவனாக இருக்கின்றான். (அல்குர்ஆன் : 24:45)

ரஹ்மத் ராஜகுமாரன்

இஸ்லாமும் , கிருஸ்தவமும் 9

ஆதியாகமம் 25 லிருந்து 31 வரை உள்ள வசனங்கள் கூறுவது :
25) தேவன் பூமியிலுள்ள ஜாதி ஜாதியான காட்டு மிருகங்களையும், பூமியில் ஊரும் பிராணிகள் எல்லாவற்றையும் உண்டாக்கினார். தேவன் அது நல்லது என்று கண்டார்

26) பின்பு தேவன் நமது சாயலாகவும், நமது ரூபத்தின்படியேயும், மனுசனை உண்டாடுக்குவோமாக, அவர்கள் சமுத்திரத்தின் மச்சங்களையும், ஆகாயத்துப் பறவைகளையும், மிருக ஜீவன்களையும் பூமி அனைத்தையும் பூமியின் மேல் ஊரும் சகலப் பிராணிகளையும், ஆளக்கடவார்கள் என்றார்.

27) ஆணும் பெண்ணுமாக அவர்களைச் சிருஷ்டித்தார்.

26) பின்பு தேவன் அவர்களை நோக்கி, " நீங்கள் பலுகிப்பெருகி பூமியை நிரப்பி, அதைக் கீழ்ப்படுத்தி சமுத்திரத்தின் மக்களையும், ஆகாயத்துப் பறவைகளையும் பூமியின்மேல் நடமாடுகிற சகல ஜீவ ஜந்துக்களையும் ஆண்டு கொள்ளுங்கள்" என்று சொல்லி தேவன் அவர்களை ஆசீர்வதித்தார்.

29 - 31) பின்பும் தேவன் இதோ பூமியின்மேல் எங்கும் விதை தரும் சகலவிதப் பூண்டுகளையும் , விதை தரும் கனி மரங்களாகிய சகல விருட்சங்களையும் உங்களுக்குக் கொடுத்தேன். அதை உங்களுக்கு ஆகாரமாயிருக் கடவது என்றார். அது அப்படியே ஆயிற்று .அப்பொழுது தேவன் தாம் உண்டாக்கின எல்லாவற்றையும் பார்த்தார். அது மிகவும் நன்றாயிருந்தது. சாயங்காலமும் விடியற்காலமுமாகி ஆறாம் நாள் ஆயிற்று.

எல்லா ஜீவராசிகளும் படைக்கப்பட்ட பின்னரே மனிதன் தோன்றினான் என்ற கூற்று விஞ்ஞானிகளுக்கு ஏற்புடைய ஒன்றுதான்.

இது பற்றி குர்ஆனில் ,
اَوَلَمْ يَرَ الَّذِيْنَ كَفَرُوْۤا اَنَّ السَّمٰوٰتِ وَالْاَرْضَ كَانَتَا رَتْقًا فَفَتَقْنٰهُمَا وَجَعَلْنَا مِنَ الْمَآءِ كُلَّ شَىْءٍ حَىٍّ اَفَلَا يُؤْمِنُوْنَ
நிச்சயமாக வானங்களும், பூமியும் (முதலில்) இணைந்திருந்தன என்பதையும், இவற்றை நாமே பிரித்(தமைத்)தோம் என்பதையும், உயிருள்ள ஒவ்வொன்றையும் நாம் தண்ணீரிலிருந்து படைத்தோம் என்பதையும் காஃபிர்கள் பார்க்கவில்லையா? (இவற்றைப் பார்த்தும்) அவர்கள் நம்பிக்கை கொள்ள வில்லையா?(அல்குர்ஆன் : 21:30)

தாவரமானாலும் சரி , ஜீவராசிகளானாலும் சரி அவற்றுக்கெல்லாம் மூலப்பொருளாக அமைந்துள்ளது நீர் என்பது மற்றொரு விஞ்ஞான பேருண்மையாகும். தாவர வர்க்கங்களும், மிருகங்களும் , மனித இனமும் படைக்கப்பட்ட மூலப்பொருள் முக்கால்வாசி நீரே அடங்கும்.நீர் இல்லாமல் இந்த பூமியில் வாழ்க்கையே இல்லை. மற்ற கோள்களில் மனித இனம் இருக்க முடியுமா என்று ஆராயும் பொழுது மனிதனுக்கு தேவையான நீர் அங்கே தங்கு தடையின்றி கிடைக்கிறதா என்ற பிரச்சனையே முதன்முதலாக ஆராயப்படுகிறது.

பூமியின் மேற்பரப்பில் உள்ள வெப்பம் தணிந்து, குளிர் ஆரம்பித்ததும், அதில் முதலில் புற்பூண்டுகளை தான் முளைத்தன. இவை நீரின் உதவினாளேயே முளைத்தன. சமுத்திரத்தில் தான் ஜீவராசிகள் முதலில் தோன்றின பின்னரே அவை தரையிலும் வசிக்க ஆரம்பித்தன. பல்வேறு இனங்களாக பெருகின அதன்பிறகு உலகில் மனித சஞ்சாரம் ஏற்பட்டிருக்க வேண்டும்.

அரபியில் " மாஉ " என்ற சொல்லுக்கு நீர் என்று பொருள். என்றாலும் அச்சொல் கடல் நீரையும் குறிக்கும். மழை நீரையும் குறிக்கும். திரவமாக உள்ள அனைத்தையும் அது குறிக்கும் தாவரங்கள் மிருகங்கள் மனித இனம் எல்லாவற்றிற்குமே நீர் இன்றியமையாதது என்பதை வலியுறுத்தி கூறியிருப்பது வேறு எந்த வேத நூல்களிலும் வலியுறுத்திக் கூற வில்லை
وَاللّٰهُ خَلَقَ كُلَّ دَآبَّةٍ مِّنْ مَّآءٍ‌ ۚ فَمِنْهُمْ مَّنْ يَّمْشِىْ عَلٰى بَطْنِهٖ‌ ۚ وَمِنْهُمْ مَّنْ يَّمْشِىْ عَلٰى رِجْلَيْنِ‌ ۚ وَمِنْهُمْ مَّنْ يَّمْشِىْ عَلٰٓى اَرْبَعٍ‌ ؕ يَخْلُقُ اللّٰهُ مَا يَشَآءُ‌ ؕ اِنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ
(மனிதர்களே!) ஊர்ந்து செல்லக்கூடிய (உயிர்ப் பிராணிகள்) அனைத்தையும் அல்லாஹ் ஒரேவித தண்ணீரைக் கொண்டு படைத்திருந்த போதிலும் (அவை யாவும் ஒரு வகையாக இருக்க வில்லை.) அவைகளில் சில தன் வயிற்றால் (பாம்புகளைப் போல்) ஊர்ந்து செல்கின்றன. அவைகளில் சில இரு கால்களால் நடக்கின்றன. அவைகளில் சில நான்கு கால்களால் நடக்கின்றன. (இவ்வாறு) அல்லாஹ் தான் விரும்பியவைகளை (விரும்பியவாறு) படைப்பான். நிச்சயமாக அல்லாஹ் அனைத்தின் மீதும் மிக்க ஆற்றலுடையவன்.
(அல்குர்ஆன் : 24:45)

ரஹ்மத் ராஜகுமாரன்

## இஸ்லாமும் , கிருஸ்தவமும் 10

ஆதியாகமம் இரண்டாவது அத்தியாயம் முதல் மூன்று வசனங்களில் கூறுவது :

" இவ்விதமாக வானமும் பூமியும் அவைகளின் சர்வசேனையும் உண்டாக்கப்பட்டுத் தீர்ந்தன. தேவன் தாம் செய்த தம்முடைய கிரியையை ஏழாம் நாளிலே நிறைவேற்றி தாம் உண்டாக்கின தம்முடைய கிரியைகளையெல்லாம் முடிந்த பின்பு, ஏழாம் நாளிலே ஓய்ந்திருந்தார். தேவன் அந்த ஏழாம் நாளை ஆசீர்வதித்து, அதைப் பரிசுத்தமாக்கினார் "

அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்: –

அவர்கள் அல்லாஹ்வைக் கண்ணியப்படுத்த வேண்டியவாறு கண்ணியப்படுத்தவில்லை; நிச்சயமாக அல்லாஹ் வல்லமை மிக்கவன்; (யாவரையும்) மிகைத்தவன். (அல்-குர்ஆன் 22:74)

"...ஆறுநாளைக்குள்ளே கர்த்தர் வானத்தையும் பூமியையும் உண்டாக்கி, ஏழாம் நாளிலே ஓய்ந்திருந்து பூரித்தார்.." (யாத்திராகமம் 31:17) என்கிறது பைபிள்

மாட்சிமையும் வல்லமையும் பொருந்தியவனான இறைவனுக்கு களைப்பு ஏற்படுமா? அவனுக்கு ஓய்வு தேவையா? நிச்சயமாக இல்லை! இத்தகைய பலஹீனங்கள் எல்லாம் இறைவனின் படைப்பினங்களுக்கு உரியதாகும்.

இறைவன் அகில உலக மனிதர்களுக்கு நேர்வழிகாட்டிட இறக்கியருளிய சத்திய திருவேதாகிய அல்-குர்ஆனிலே கூறுகிறான் :

" நிச்சயமாக நாம் தாம் வானங்களையும், பூமியையும் அவ்விரண்டிற்குமிடையே உள்ளவற்றையும் ஆறு நாட்களில் படைத்தோம்; (அதனால்) எத்தகைய களைப்பும் நம்மைத் தீண்டவில்லை. (அல்-குர்ஆன் 50:38)

**https://m.facebook.com/story.php?story_fbid=2283575051901837&id=100007480923921**

இறைவன் தூங்குவானா?

ஆம். இறைவனும் தூங்கி பின்னர் விழித்தெழுவார் – பைபிள்!

இந்து சமயத்திலும் ஆயர்பாடியில் மாயக் கண்ணன் உறங்குவதாக, அட , நமக்கு உறக்கம் வருகிற மாதிரி பாடல்

ஆயர்பாடி மாளிகையில் தாய் மடியில் கன்றினைப்போல்

மாயக்கண்ணன் தூங்குகின்றான் தாலேலோ...

அவன் வாய் நிறைய மண்ணை உண்டு மண்டலத்தை காட்டியதில்

ஓய்வெடுத்து தூங்குகின்றான் ஆராரோ

ஓய்வெடுத்து தூங்குகின்றான் ஆராரோ

பின்னலிட்ட கோபியரின் கன்னத்திலே கன்னமிட்டு

மன்னவன் போல் லீலை செய்தான் தாலேலோ

அந்த மந்திரத்தில் அவன் உறங்க

மயக்கத்திலே இவன் உறங்க

மண்டலமே உறங்குதம்மா ஆராரோ

மண்டலமே உறங்குதம்மா ஆராரோ

ஆனால் மனிதனுக்கு தூக்கம் அவசியம் என்பதை விஞ்ஞான ஆய்வுகள் நிரூபிக்கின்றன .

நாம் தூங்குவதை ஹார்மோன்கள் தான் தீர்மானிக்கின்ற என்றால் நம்ப முடிகிறதா ஆமாம், தூக்கம் என்பது ஹார்மோன்களின் மாற்றங்களினால் தான் ஏற்படுகிறது,

தினம்தோறும் நமது உடலில் நிறைய ஹார்மோன்கள் சுரக்கின்றன உடலின் வெப்ப அளவும், நமது உடலில் சுரக்கும் “என்சைம்” ம் சேர்ந்து “அடினோசின்” என்ற திரவத்தை சுரகின்றன இந்த திரவம் தான் நம்மை விழித்திருக்கவிடாமல் கண்களை மூடி தூங்க வைக்கிறது,

அடினோசின் என்ற திரவம் பகல் முழுக்க உற்பத்தியாகிக் கொண்டேதான் இருக்கும்.உடலில் எந்த அளவுக்கு அடினோசின் உள்ளதோ அந்த அளவிற்க்கு தூக்கம் சீக்கிரம் வந்து விடும், தூக்கமின்மையால் இன்சோமேனியா மனநோய் போன்ற பல பிரச்சினைக்கு ஆளாகி உடலளவிலும் மனதளவிலும் மனிதன் பாதிப்படைகிறான். இது மாதிரி இறைவனுக்கும் ஏற்படும் என்பதாக பைபிள் கூறுகிறது

“அப்பொழுது ஆண்டவர் நித்திரை தெளிந்தவனைப்போலவும், திராட்சரசத்தால் கெம்பீரிக்கிற பராக்கிரமசாலியைப்போலவும் விழித்து,” (சங்கீதம் 78:65)

அல்லாஹ்-அவனைத்தவிர (வணக்கத்திற்குரிய) நாயன் வேறு இல்லை; அவன் என்றென்றும் ஜீவித்திருப்பவன்; என்றென்றும் நிலைத்திருப்பவன்; அவனை அரி துயிலோ, உறக்கமோ பீடிக்கா; வானங்களிலுள்ளவையும், பூமியிலுள்ளவையும் அவனுக்கே உரியன” (அல்-குர்ஆன் 2:225)

ரஹ்மத் ராஜகுமாரன்.

இஸ்லாமும் , கிருஸ்தவமும் 11




ஆதியாகமம் இரண்டாவது அத்தியாயத்தில் 4 முதல் 7 வரை உள்ள வசனங்கள் கூறுவது :
" தேவனாகிய கர்த்தர் பூமியையும் வானத்தையும் உண்டாக்கின நாளிலே வானம் பூமி சிருஷ்டிக்கப்பட்ட வரலாறு இவைகளே. நிலத்தினுடைய சகலவித செடிகளும் பூமியின்மேல் இன்னும் உண்டாகவில்லை. நிலத்தினுடைய சகல விதப் பூண்டுகளும் இன்னும் முளைக்கவில்லை. ஏனெனில் தேவனாகிய கர்த்தர் பூமியின்மேல் இன்னும் மழையை பெய்யப் பண்ணவில்லை. நிலத்தைப் பண்படுத்த மனுஷனும் இருந்ததில்லை .- அப்பொழுது மூடுபனி, பூமியிலிருந்து எழும்பி ,பூமியெல்லாம் நனைத்தது. தேவனாகிய கர்த்தர் மனுஷனைப் பூமியின் மண்ணினாலே உருவாக்கி, ஜீவசுவாசத்தை அவன் நாசியிலே ஊதினார். மனுஷன் ஜீவாத்துமாவானான். "
" பூமியும் வானங்களும் எப்போது படைக்கப்பட்டன என தெளிவாக கூறவில்லை. மனிதன் படைக்கப்பட்ட போது புல் பூண்டுகள் முளைக்கவில்லை ஏனெனில் இன்னும் மழை பொழிய வில்லை " என்று கூறுகிறது .
மனிதனை உருவாக்கியதும் ஒரு தோட்டத்தையும் (வசனங்கள் 8 முதல் 14 வரை ) இறைவன் படைத்தான் என இவ்வசனங்கள் மேலும் தெரிவிக்கின்றன .
அதாவது மனிதனும் புல்பூண்டு தாவரங்களும் ஏக காலத்தில் படைக்கப்பட்டன என்று அர்த்தம் படும்படியாக இவ்வசனங்கள் அமைந்திருக்கின்றன.

ஆனால் விஞ்ஞான உண்மை அப்படி அல்ல, தாவர உலகம் தோன்றி எத்தனையோ மில்லியன் ஆண்டுகளுக்கு பிறகு மனிதன் இம்மண்ணில் அவதரித்தான் என்பது விஞ்ஞான ஆராய்ச்சிகள் முடிவாகும்.

நம் ஆதிபிதா (அலை) அவர்களின் காலம் இன்றைக்கு 8000 ஆண்டுகளுக்கு முன்தான் என்று கணிக்கப்படுகிறது.

எனினும் , இவர்களுக்கு முன் ஆயிரத்திற்கும் மேற்பட்ட ஆதம்கள் இவ்வுலகில் தோன்றியுள்ளனர் என்று முஹம்மது இப்னு பாக்கிர் (ரஹ்) கூறுகின்றார் .
இப்னு அரபி (ரஹ்) அவர்கள் தமது **'புத்தூஹாத்தில் மக்கிய்யா '** என்னும் நூலில், "நம் ஆதத்திற்கு முன் ஒரு லட்சம் ஆதமும் , அவருடைய கூட்டத்தினரும் தோன்றி மறைந்துள்ளரென்றும் , தாம் ஓரிரவு கஃபாவை இடம் சுற்றி வரும்பொழுது , நீண்டு உயர்ந்த சில மனிதர்களைக் கண்டு அவர்கள் எவவெரன விசாரித்த பொழுது ,

"ஆதத்திற்கு நாற்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன் இவ்வுலகில் வாழ்த்தவர்களின் ஆன்மாக்கள் " என்றனர் .
விஞ்ஞானம் கூறுவது , மனிதகுலம் ஆப்பிரிக்காவில் 2,00,000
ஆண்டுகளுக்கு முன்பு தோன்றியது. அதில் சிற்றினங்களாக **நியாண்டர்தாவர்கள்** , **ஹோமோ எரக்டஸ் , ஹோமோ சேப்பியன்** என்ற 3 இனங்கள் தோன்றின.

இம்மூன்று இனங்களின் மனித ஃபாஸில்களாக கிடக்கின்றன. இவர்கள் 60,000 ஆண்டுகளுக்கு முன்பு எப்படி, எங்கெல்லாம் இந்த முதல் குடிமக்கள் உலகில் பரவினர் என்பதை கண்டுபிடிக்க ஜீனோகிராஃபிக் (Genographic ) புரோஜெக்ட் துவக்கப்பட்டது. நேஷனல் ஜீனோகிராஃபிக் (மாத இதழ் ) , IBM மற்றும் Waitt ஆகிய 3 நிறுவனங்கள் 40 மில்லியன் டாலர் செலவில் இந்த ஆய்வு தொடக்கப்பட்டது .

இதற்காக உலகின் எல்லா மூலை முடுக்குகளிலிருந்தும் ஒரு லட்சம் பேர்களிடமிருந்து இரத்த சேம்பிள் எடுக்கப்பட்டது. **DNA** யிலிருந்து பிரித்தெடுக்கப்பட்டு , கம்ப்யூட்டர் மூலம் அது ' மேப்' செய்யப்பட்டது .
**ஜிப்ரால்டர்** என்ற இடத்திலுள்ள குகையிலிருந்து அண்மையில் கிடைத்த நியாண்டர்தால் மனிதர்களின் அடிப்படையில் , இந்த மனித இனம் 2,30,000 வருடங்களுக்கு முன்பு தோன்றி , அன்றிலிருந்து 40 ,000 வருடங்களுக்கு முன்புதான் மறைந்தது என்பதற்கு ஆதாரமாக ஜிப்ரால்டர் குகைகளில் கிடைத்த எலும்புக் கரிகளின் ரேடியோ கார்பன் தேதியிடும் முறையில் மிகத்துல்லியமாக கணிக்கப்பட்டுள்ளது .
கலிபோர்னியா பல்கலைக்கழக "சேன் பெர்னாடினோ **(San Bernadino )** " என்பவர் நியாண்டர்தால் மனிதர்களின் கைவிரல் எலும்புகளைக் கொண்டு செய்த மாதிரியை கம்யூட்டரில் சிமுலேட் செய்ததில் அவர்கள் , நம்மைப் போலவே கை விரல்களைப் பயன்படுத்தி நுணுக்கமான வேலைகளைச் செய்யக் கூடியவர்கள் .

**'ஜொஹனஸ் பர்க்'** என்னுமிடத்திலுள்ள ஸ்டெக்ஃபான்டீன் என்ற குகையில் கிடைத்த எலும்புகள் , அதில் எதுவும் சிம்பன்ஸி குரங்கு போலவோ, கொரில்லா குரங்கு போலவோ இல்லை. சிம்பன்ஸி, கொரில்லா குரங்குகள் தமது கைமுட்டிகளைத் தரையில் ஊன்றியபடி நாலுகால் நடையில் செல்வது வழக்கம். ஆனால் மனித மூதாதையர் ஃபாஸில்களில் அதுவும் 2,30,000 வருடங்களுக்கு முன்பு வாழ்ந்த மனித ஃபாஸில்களில் கூட அப்படி குரங்குபோல நடந்ததற்கான எவ்வித தடயமும் தெரியவில்லை.
எனவே மனித மூதாதையர்கள் ஆதிகாலத்தில் இருந்தே மனிதர்களாகவேதான் இருந்திருக்கிறார்கள் என்பது இந்த ஆய்வில் தெரிய வந்துள்ளது.
இதனால் சார்லஸ் டார்வின் கொள்கையான குரங்கின் பரிமணாமத்தில் மனிதன் என்ற நியதி பொய்ப்பித்து விடுகிறது .

ஏன் நியாண்டர்தால் மனித இனம் அழிந்தது ?

உலகில் ஒரே வாழ் இடங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட உயிரினங்கள் வாழ்வது கடினம். அவற்றில் எது சிறந்ததோ அது நிலைக்கும் .மற்றவை மறைந்து விடும் என்பதே இயற்கையின் நியதி

اِنْ يَّشَاْ يُذْهِبْكُمْ اَيُّهَا النَّاسُ وَيَاْتِ بِاٰخَرِيْنَ وَكَانَ اللّٰهُ عَلٰى ذٰلِكَ قَدِيْرًا

மனிதர்களே! அவன் விரும்பினால் உங்களை அழித்து (உங்களுக்குப் பதிலாக) வேறு மனிதர்களைக் கொண்டு வந்து விடுவான். அல்லாஹ் இவ்வாறு செய்ய ஆற்றலுடையவனாகவே இருக்கின்றான்.
(குர்ஆன் : 4:133)

ரஹ்மத் ராஜகுமாரன்

## இஸ்லாமும் , கிருஸ்தவமும் 12



# Government confirms: "This is Noah's Ark"

Report from Dogubayazet, Eastern Turkey
The discovery of NOAH'S ARK

**ON June 20, 1987, the Turkish Government established the new Noah's Ark National Park. This followed a Government commission which confirmed the 10 years of research work on the site by an American, Ronald Wyatt and his colleagues.**

The site was first brought to attention in the late 1950s after high altitude aerial photographs revealed a boat-shaped structure in the mountains of the Ararat region.

Although the site was initially dismissed by some, Ron Wyatt spearheaded extensive investigations at the site and the surrounding area for nearly a decade.

Employing such methods as subsurface interface radar scanning, metal detection surveys, core-drilling, etc., the results were spectacular. Buried at an altitude of 2000 metres was the physical remains of a man-made structure, an enormous ship.

Wyatt's results led to serious interest by Turkish scientists and archaeologists, and ultimately a high-level Government commission was convened to consider all the evidence gathered.

After examining the data collected on the site, Professor Dr. Ekrem Akurgal, considered by many to be 'The Dean of Turkish Archaeologists', stated "... it is a ship, an ancient ship... It must be preserved..."

Noah's Ark - Confirmed after on-site research by Ron Wyatt (pictured) and Government scientists

The official conclusion was the site did indeed contain the remains of the legendary ark of Noah. As a result, the "Noah's Ark National Park" was established.

Naturally the conclusion of the Turkish Government has been resisted by many in academic circles, for the implications of this discovery are very far-reaching. However, even before the site has been fully excavated, the evidence is abundant, and consistently points to this site as being the remains of the legendary Ark of Noah. As conditions permit and funding becomes available, the long-term goal of researchers is to house the site in order to conduct a full excavation.

Documentation is available, detailing the history of this discovery, and the results of the on-site research work that has been carried out in this remote part of Eastern Turkey.

See page 2 for further reports

நூஹ் நபி காலத்தில் நடைபெற்ற வெள்ளப் பிரளயம் குறித்து ஆதியாகமம் 6, 7, 8 ஆகிய அத்தியாயங்களில் விவரிக்கின்றன

இந்த அத்தியாயங்களில் இரண்டு விதமாக வாசகங்களை காணமுடிகிறது உலகில் மனிதனின் அநீதியும் அட்டூழியங்களும் பெருகிவிட்டதனால் அவனையும் இதர ஜீவராசிகளையும் அழித்துவிடுவது இறைவன் தீர்மானித்தான். நூஹ் நபியை அவன் இது குறித்து எச்சரித்து கப்பல் ஒன்றை காட்டுமாறு பணித்தான்.
அவரது மனைவியும் மூன்று மக்களையும் அவர்களது மனைவிமார்களையும் மற்றும் ஜீவராசிகளையும் ஏற்றுக்கொள்ளவேண்டும் இறைவன் கூறினான். ஒவ்வொரு ஜீவராசியும் ஒவ்வொரு ஜோடியை அக்கப்பலில் நூஹ் நபி அவர்கள் ஏற்றிக் கொண்டார்கள் என "சாசர்டோடல் " என்ற வாசகம் கூறுகிறது.
ஆனால் " யாஹ்விஸ்ட் "வாசகம் சுத்தமான பிராணிகளில் ஏழு ஆண்களையும் , ஏழு பெண்களையும், சுத்தமில்லாத பிராணிகள் ஒவ்வொரு ஜோடியையும் நபியவர்கள் ஏற்றுக் கொண்டதாகத் தெரிகிறது,
இதுபற்றி குர்ஆன்.,

ஈராக் நாட்டில் ஜபர்தஸ் மன்னன் ஆண்டு வந்தான் .அவனும் அவனது குடிமக்களும் " வத்து, சுவாஉ , யஃகூஸ் , யஊக் , நஸ்ர் போன்ற சிலைகளை வணங்கி வந்தனர்
இறைத்தூதர் நூஹ் (அலை) அவர்களை நோவா (Nova ) என்றும் அழைக்கிறார்கள் . ஆதம் (அலை) அவர்கள் இப்பூமியில் இறங்கி 1642 வருடம் கழித்து நபி நூஹ் (அலை) பிறக்கிறார்கள்

நபி நூஹ் (அலை) அவர்கள்
கி.மு ( 2948 -1958 ) வயது 950 ஆச்சரியமாக இருக்கிறதா ? அதுதான் உண்மை - குர்ஆன் (29 : 14 )
இவர்களது இயற்பெயர் அப்துல் கஃபார் அல்லது அப்துல் கபூர் என்றழைக்கப்படுகிறது .இவர்கள் நபி இத்ரீஸ் (அலை) அவர்களின் பேரரும் லாமக் என்பவரின் மகனும் ஆவார் இவர்களை "இரண்டாம் ஆதம் " என்று வரலாறு குறிப்பிடுகிறது .

ஆதம் (அலை) அவர்கள் காலம் முதல் நூஹ் (அலை) காலம் வரை 10 தலைமுறையினர் வாழ்ந்தனர் அவர்கள் அனைவருமே முஸ்லீம்களாகவே இருந்தனர் .அதன் பின்னரை நூஹ் (அலை) காலத்து சற்று முந்திய கால மக்கள்தான் முதன் முதலில் மேற்கண்ட சிலை வணக்கத்தை துவங்கினர் .

" என் மக்களே... நீங்கள் அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள் ( மாறு செய்தால் ) உங்களுக்கு (வரக்கூடிய) மகத்தானதொரு நாளின் வேதனையை நினைத்து நான் பயப்படுகிறேன்." குர்ஆன் ( 7 : 59 )

"நூஹே.... நிச்சயமாக நிச்சயமாக எங்களுடன் அதிகமாகவே தர்க்கம் செய்கிறீர்கள் ( இனி தர்க்கத்தை விட்டொழித்து வேதனை வரும் என்று கூறுவதில்) நீங்கள் மெய்யாகவே உண்மை சொல்பவராக இருந்தால், நீங்கள் அச்சமுறுத்தும் அந்த வேதனை நம்மிடம் கொண்டு வாருங்கள்"
குர்ஆன் ( 11 : 32 )

"முன்னர் நம்பிக்கைக் கொண்டவர்களைத் தவிர இனி உங்களுடைய மக்களில் ஒருவரும் நம்பிக்கை கொள்ள மாட்டார்கள் . ஆதலால் அவர்களுடைய செயலைப் பற்றி நீங்கள் விசாரப்படாதீர்கள் (கவலைப்படாதீர்கள்) "
குர்ஆன் ( 11 : 36 )

"என் இறைவனே .. பூமியில் இந் நிராகரிப்பாளர்களை ஒருவரையும் நீ வசித்திருக்க விட்டு வைக்காதே "
குர்ஆன் ( 71 : 26 )

"என் வேதனை இறங்கும் முன் கப்பலை கட்டிக் கொள்ளுங்கள்" என்ற கூற.
நபியவர்களுக்கு " கப்பல் "என்ற வாகனம் பற்றி தெரியவில்லை . "அது ஒரு பறவையே போன்று அமைக்கப்பட வேண்டும் என்றும், அதனுடைய தலை மயிலின் தலை போன்றும் . கண்கள் கழுகின் கண்கள் போன்றும் . நெஞ்சு புறாவின் நெஞ்சு போன்றும் , வால் சேவலின் வால் போன்றும் இருக்கும் என்றும் கூறப்பட்டது
கப்பல் கட்டப்பட்டது .
"பலகைகள் மற்றும் ஆணிகள் உடைய (கப்பல்) ஒன்றில் அவரை ஏற்றினோம் . அது நமது கண்காணிப்பில் ஓடியது "
குர்ஆன் ( 29 : 15 )

அதைப் பார்த்த மக்கள் " இது என்ன ? " என்று கேட்டார்கள் ஏனென்றால் அதற்கு முன்பு யாரும் கப்பலை பார்த்ததே இல்லை இதுதான் பூமியில் கட்டப்பட்ட முதல் கப்பல் .
அதற்கு நூஹ் , " இது மிதக்கும் வீடு " என்றார்.
மக்கள், "மிதக்கும் வீடா ? இங்கேதான் நீரே இல்லையே " என்றனர்.
நூஹ் " வரும். நீர் இங்கேயே வரும்.
கப்பல் கட்டி முடிக்கப்பட்டது. மழையும் தூபான் வெள்ளமும் சூழ்ந்தது.
நூஹ் (அலை) அவர்கள் உயிரினங்களில் ஒவ்வொரு ஜோடிகளையும் தம்மைச் சார்ந்தவர்களையும் ஏற்றிக் கொண்டு பரிவாரத்தோடு ரஜப் மாதம் 10 ஆம் நாள் வெள்ளிக்கிழமை கூபாவில் இருந்து (சிலர்இந்தியாவிலிருந்து ) கப்பல் புறப்பட்டது .
கப்பலில் நபியின் முஸ்லீம் மனைவியும் அவருடைய மக்களான ஹாம், ஸாம் , யஃபித் மற்றும் மனிதர்களும் ஏறிக் கொண்டனர்.

முஸ்லீமாக இருந்து பின் நிராகரிப்பாளர்களோடு சேர்ந்து கொண்ட முன்னாள் மனைவியான வாஇலா வும் அவளுக்கு பிறந்த கன்ஆன்னும் கப்பலில் ஏறவில்லை.

துல்கஃதா மாதம் 10 ஆம் நாள் தரை தட்டி நின்றது .
1969 ஆகஸ்ட் 2 ந் தேதி ரஷ்ய எல்லையை ஒட்டி அமைந்துள்ள அராரத் மலை தொடரில் ஒரு கப்பலின் சில மரப் பகுதிகளை அமெரிக்கத் தொல்பொருள் விஞ்ஞான ஆய்வுக் குழு கண்டு பிடித்தது இம்மலையின் மேற்பகுதியில் பதினான்காயிரம் அடி உயரத்தில் பனியால் மூடப்பட்ட பாறைகளுக்கிடையில் 20 மீட்டர் ஆழத்தில் புதையுண்டு கிடந்தன.

"அக் கப்பலை அகிலத்தாருக்கோர் அத்தாட்சியாக ஆக்கினோம் " குர்ஆன் ( 29 : 15 )

" ஸலாமுன் அலா நூஹூ " அகிலங்கள் எங்கும் நூஹூ மீது ஸலாம் உண்டாவதாக " குர்ஆன் ( 37 : 79 )

உலகத்தின் பழைய நாகரிகங்கள் அனைத்திலும் பிரளயத் தொன்மம் காணப்படுகிறது .
" கில்கமெஷ் " என்ற புராதானப் பாபிலோனிய காவியத்தில் 'உட்னா பிஷ்டிம் ' என்பவர் தெய்வீக வழிகாட்டுதல்படி கப்பல் கட்டி பிரளயம் வந்தபோது அதில் ஏறித் தப்பித்தாகக் கூறப்பட்டுருக்கிறது
மற்றொரு பாபிலோனிய கதையில் பிரளயத்தில் கப்பல் ஏறி தப்பித்தவர் ஸிஸோத் ராஸ் (Xisouthros ) என்று இருக்கிறது
சுமேரிய கதைகளில் தப்பித்தவர் பெயர் **ஸியூ சுத்ரா (Ziu-sud-ra)** என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது இது மேற்கண்ட பெயரோடு பெரும்பாலும் ஒன்றுபடுகிறது

நோவாவின் பெயர் "ஸாகுப் "என்றோ " ஸகுன் " என்றோ இருந்ததாக அறிஞர்கள் சிலர் கருதுகின்றனர்
ஹுர்ரியக் கதையில் தப்பித்தவர் பெயர் "நாஹ் மொலெல் " என்று இருக்கிறது இப்பெயர் " நூஹ் " என்ற பெயருடன் ஒன்றுபட்டு இருப்பது தெரிகிறது .
கப்பலில் ஏறி தப்பித்தவர் பெயரில் வேறுபாடு இருப்பினும், பிரளயத்தில் கப்பலில் தப்பித்த தொன்மம் ஒன்றாக இருக்கிறது என்பதாக வரலாற்று ஆய்வு அறிஞர்கள் பலர் கருத்து தெரிவித்துள்ளனர்

## இஸ்லாமும் , கிருஸ்தவமும் 13

கிறிஸ்தவ கோட்பாடுகளிலேயே ஆணிவேர் போன்றது ஈஸா நபியின் உயிர்த்தெழுதல் (Ascension) ஈஸா நபி உயிர்த் எழுப்பப்பட்டு பரலோகத்திற்கு தேவனிடம் எடுத்துச் செல்லப்பட்டார் என்பது குறித்து மத்தேயு சுவிசேஷத்திலும் , யோவானுடைய சுவிசேஷத்திலும் ஒன்று கூட காணப்படவில்லை.

லூக்கா தான் தமது சுவிசேஷத்தில் இது பற்றி குறிப்பிட்டிருக்கிறார். அதிலும் அவர் எழுதிய சுவிசேஷத்தில் ஒன்றைக் கூறுகிறார் : "அப்போஸ்தலருடைய நடபடிகள் " என்று அவரே எழுதியுள்ள மற்றொரு பகுதியில், வேறு மாதிரி கூறுகிறார். ஈஸா நபி மரித்த உடனே பரலோகத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள் என ஒன்றிலும், மரித்து 40 நாட்களுக்குப் பிறகு பரலோகத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள் என மற்றொன்றிலும் லூக்கா எழுதி வைத்திருக்கிறார்.

எனவே ஈஸா நபி உயிர்த்தெழுப்பப்பட்டார்கள் என்பதற்கே அவர்களிடம் உள்ள வேத நூல்களில் அதிகமதிகம் முரண்பாடுகள் காணப்படுகின்றன.

ஈசா நபியின் மரித்தற்கும், இந்த சுவிசேஷங்கள் எழுதப்பட்டதற்கும் இடையில் உள்ள இடைவெளியை கவனிக்கத்தக்க ஒன்றாகும் .ஈஸா நபியை நேரில் பார்த்தவர்கள் சொன்னவற்றை வைத்துக் கொண்டு அவர்கள் இவற்றை எழுதி விடவில்லை. கர்ண பரம்பரையாக நடமாடி வந்த வார்த்தைகளை வைத்தே இந்த வேத நூல்கள் எழுதப்பட்டிருக்கின்றன. அப்படி எழுதப்பட்டவைகளும் பலமுறை திருத்தப்பட்டிருக்கின்றன . கூட்டிக் கழித்தல்கள் போன்ற செப்படி வித்தைகள் அக்கால குருமார்களுக்கு

கைவந்த கலை ; எனவே இன்று உள்ள கிறிஸ்தவ வேத நூல்களில் ' மனிதக் கரம் ' வெகு தாராளமாக ஊடாடி இருக்கின்றன என்பதை யாரும் மறுக்க முடியாது .

நடந்தது என்ன என்பதைப் பற்றி " இயேசுவின் இரண்டாம் வருகை " என்ற என் மீள்பதிவுகளைக் காணவும்.

https://m.facebook.com/story.php?story_fbid=2245456149047061&id=100007480923921

ரஹ்மத் ராஜகுமாரன்

## இஸ்லாமும் , கிருஸ்தவமும் 14

கிறிஸ்தவ கோட்பாடுகளிலேயே ஆணிவேர் போன்றது ஈஸா நபியின் உயிர்த்தெழுதல் **(Ascension)** ஈஸா நபி உயிர்த் எழுப்பப்பட்டு பரலோகத்திற்கு தேவனிடம் எடுத்துச் செல்லப்பட்டார் என்பது குறித்து மத்தேயு சுவிசேஷத்திலும் , யோவானுடைய சுவிசேஷத்திலும் ஒன்று கூட காணப்படவில்லை.

லூக்கா தான் தமது சுவிசேஷத்தில் இது பற்றி குறிப்பிட்டிருக்கிறார். அதிலும் அவர் எழுதிய சுவிசேஷத்தில் ஒன்றைக் கூறுகிறார் : "அப்போஸ்தலருடைய நடபடிகள் " என்று அவரே எழுதியுள்ள மற்றொரு பகுதியில், வேறு மாதிரி கூறுகிறார். ஈஸா நபி மரித்த உடனே பரலோகத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள் என ஒன்றிலும், மரித்து 40 நாட்களுக்குப் பிறகு பரலோகத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள் என மற்றொன்றிலும் லூக்கா எழுதி வைத்திருக்கிறார்.
எனவே ஈஸா நபி உயிர்த்தெழுப்பப்பட்டார்கள் என்பதற்கே அவர்களிடம் உள்ள வேத நூல்களில் அதிகமதிகம் முரண்பாடுகள் காணப்படுகின்றன.

ஈசா நபியின் மரித்தற்கும், இந்த சுவிசேஷங்கள் எழுதப்பட்டதற்கும் இடையில் உள்ள இடைவெளியை கவனிக்கத்தக்க ஒன்றாகும் .ஈஸா நபியை நேரில் பார்த்தவர்கள் சொன்னவற்றை வைத்துக் கொண்டு அவர்கள் இவற்றை எழுதி விடவில்லை. கர்ண பரம்பரையாக நடமாடி வந்த வார்த்தைகளை வைத்தே இந்த வேத நூல்கள் எழுதப்பட்டிருக்கின்றன. அப்படி எழுதப்பட்டவைகளும் பலமுறை திருத்தப்பட்டிருக்கின்றன . கூட்டிக் கழித்தல்கள் போன்ற செப்படி வித்தைகள் அக்கால குருமார்களுக்கு கைவந்த கலை ; எனவே இன்று உள்ள கிறிஸ்தவ வேத நூல்களில் ' மனிதக் கரம் ' வெகு தாராளமாக ஊடாடி இருக்கின்றன என்பதை யாரும் மறுக்க முடியாது .

## இஸ்லாமும் , கிருஸ்தவமும் 15

اِذْ قَالَ اللّٰهُ يٰعِيْسٰٓى اِنِّىْ مُتَوَفِّيْكَ وَرَافِعُكَ اِلَىَّ وَمُطَهِّرُكَ مِنَ الَّذِيْنَ كَفَرُوْا وَجَاعِلُ الَّذِيْنَ اتَّبَعُوْكَ فَوْقَ الَّذِيْنَ كَفَرُوْٓا اِلٰى يَوْمِ الْقِيٰمَةِ‌ ثُمَّ اِلَىَّ مَرْجِعُكُمْ فَاَحْكُمُ بَيْنَكُمْ فِيْمَا كُنْتُمْ فِيْهِ تَخْتَلِفُوْنَ
“ஈஸாவே! நிச்சயமாக நான் உம்மைக் கைப்பற்றுவேன்; இன்னும் என்னளவில் உம்மை உயர்த்திக் கொள்வேன்; நிராகரித்துக் கொண்டிருப்போருடைய (பொய்களில் நின்றும்) உம்மைத் தூய்மைப்படுத்துவேன்; மேலும் உம்மைப் பின்பற்றுவோரை கியாம நாள் வரை நிராகரிப்போருக்கு மேலாகவும் வைப்பேன்; பின்னர் உங்களுடைய திரும்புதல் என்னிடமே இருக்கிறது; (அப்போது) நீங்கள் தர்க்கம் செய்து கொண்டிருந்தது பற்றி நான் உங்களிடையே தீர்ப்பளிப்பேன்” என்று அல்லாஹ் கூறியதை (நபியே! நினைவு கூர்வீராக)!
(அல்குர்ஆன் : 3:55)

நபி ஈஸா (அலை) அவர்களை இறைவன் தன்னளவில் உயர்த்திக் கொண்டாதாக குர்ஆன் குறிப்பிட்டாலும் , புதிய ஏற்பாடாகிய பைபிளில் உயிர் நீத்து அடக்கம் செய்யப்பட்டதாகவே கூறுகிறது .

நபி ஈஸா அலை அவர்கள் உயிர் நீத்து அடக்கம் செய்யப்பட்ட பிறகு அவர்கள் உயிர்த்தெழுந்து வந்ததாக புதிய ஏற்பாட்டில் கூறப்படுகிறது. சுவிசேஷ காரர்கள் இதை பலவிதமாக வர்ணிக்கிறார்கள். ஒருவர் சொல்வதற்கும் மற்றொரு சொல்வதற்கும் வித்தியாசங்கள் நிறைய இருக்கின்றன.

நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அடக்கம் செய்யப்பட்ட கல்லறையை பார்க்க பெண்கள் கூட்டம் ஒன்று சென்றது என மத்தேயூ , மாற்கு , லூக்கா , சுவிசேஷக்காரர்களும் சொல்கிறார்கள். ஆனால் யோவானும் ஒரே ஒரு பெண் மட்டும் தான் போயிருந்தாள் என்கிறார்.
அந்தப் பெண்களிடம் ஈஸா நபியை கலீலியோவில் பார்க்கலாம் என வானவர் ஒருவர் கூறியதாக மத்தேயு எழுதுகிறார். ஆனால் அவரோ தமது நூலில் சில வரிகளைக் கீழே ஈஸா நபியை அவரது அடக்கஸ்தலத்திற்கு அருகிலேயே அப்பெண்கள் பார்த்தார்கள் என வர்ணிக்கிறார்.
மரணித்த பின்னர் நபி ஈஸா மூன்று முறை மற்றவர்களுக்கு தோற்றம் அளித்தார்கள் என லூக்கா கூறுகிறார். ஜெருசலத்தில் ஒரு வாரத்திற்குள் இரு முறையும் கலீலியோவில் ஒரு முறையும் ஆக மூன்று தடவைகள் ஈஸா நபி காட்சியளித்ததாக யோவான் எழுதியுள்ளார். கலீலியோவில் ஒரு முறை மட்டும் காட்சியளித்ததாக மத்தேயு தமது சுவிசேஷத்தில் குறிப்பிடுகிறார்.
உயிர்த்தெழுந்து வந்த தினத்தையே கிறிஸ்தவர்கள் ஈஸ்டர் தினமாக கொண்டாடுகிறார்கள் .

தப்ஸீருல் ஹமீத்தில் ஒரு குறிப்பு காணக்கிடைக்கிறது. நபி ஈஸா (அலை) வானத்தில் உயர்த்திய பின் ஏழு நாள் கழித்து இறைவன் ஈஸா (அலை) அவர்களுக்கு **" மஜ்தலானிய்யா"** என்ற இடத்தில் இருக்கிற மலையில் நீர் இறங்க வேண்டும். அந்த மலை உம்மை தேடி அழுது சலிப்பதைப் போல் வேறு ஒன்றும் அழுது சலிக்கவில்லை " என்றான் இறைவன் . அதன்படி நபி ஈஸா (அலை) அம்மலையில் இறங்கியபோது அந்த மலை முழுவதும் பிரகாசம் ஆகிவிட்டது.

நபி ஈஸா (அலை) அவர்கள் இஸ்ரேலில் தன் பயணத்தை மலையில் இருந்தே தொடங்கி, இறுதியில் உலகம் முழுமைக்குமாய் ஆனவர். யோர்தான் நதியில் இறங்கி திருமுழுக்கைப் பெற்றுக்கொண்ட பின், இன்றைய வடக்கு இஸ்ரேலின் **மத்தலைன் (மஜ்தலானிய்யா )** என்கிற மலைப்பாங்கான பகுதிக்குச் சென்று அங்கிருந்து மலைப் பிரசங்கத்தை மேற்கொண்டார். அவரது போதனைகளிலேயே மிகப் பெரியதாகவும், மிகச் சிறந்ததாகவும் போற்றப்படுவது மலைப் பிரசங்கம்.
மரணித்து உயிர்தெழுந்தார் என்று புதிய ஏற்பாடு குறிப்பிடுகிறது .ஆனால் மரணிக்காமலேயே நபி ஈஸா (அலை) இறைவனளவில் உயர்த்தப்பட்டு , மீண்டும் இப்பூமிக்கு வருகை தந்தாக குர்ஆன் ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர் .

ரஹ்மத் ராஜகுமாரன்

இஸ்லாமும் , கிருஸ்தவமும் 16



கிறிஸ்து உணவுத் தோழமையைப் பெரிதும் விரும்பினார், ஐந்து அப்பங்களைக் கொண்டு ஐயாயிரம் பேருக்கும்
(மத் 14:13-21),

ஏழு அப்பங்களைக் கொண்டு நாலாயிரம் பேருக்கும்
(மத் 15:32-39) உணவு அளித்தார். அனைவரும் வயிராற உண்டனர். வரி தண்டுவோரான மத்தேயு வீட்டில் பலருடன் சேர்ந்து விருந்துண்டு மகிழ்ந்தார், சீமோன் வீட்டில் உணவு அருந்தினார் (லூக் 7:36). வரிதண்டுவோரின் தலைவரான சக்கேயு வீட்டில் விருந்துண்டார் (லூக் 19:1-10).

தம் சீடர்களோடு இறுதிப் பாஸ்கா விருந்தை உண்பதற்கு மிகமிக ஆவலாய் இருந்தார் (லூக் 22:15). சீடர்களுடன் பந்தியில் அமர்ந்திருந்த போதுதான் அவர் புதிய உடன்படிக்கையின் அன்பு விருந்தாகிய நற்கருணையை ஏற்படுத்தி, அதைத் தம் நினைவாகச் செய்யும்படி சீடர்களிடம் கேட்டுக் கொண்டார் (லூக் 22:19-20).

உணவுத் தட்டு சம்பவம் குறித்து குர்ஆன் ...
"மர்யமுடைய மகன் ஈஸாவே.. உங்களுடைய இறைவன் வானத்திலிருந்து எங்களுக்காக ஓர் உணவு (ப் பொருள்கள் நிரம்பிய ) தட்டை இறக்கி வைக்க முடியுமா ?
குர்ஆன் ( 5 : 112 ) என்று " நெருங்கிய நண்பர்கள் " என்பதை குறிக்க மூலச் சொல்லில் " அல் ஹவாரிய்யூன் " எனும் சொல் பயன்படுததப்படுகிறது . இப்படி அவர்கள் கேட்க,...
"இவ்வாறெல்லாம் கேட்காதீர்கள் : அப்படிக் கேட்டால் அதுவே உங்களுக்கு ஒரு சோதனையாக மாறிவிடலாம் எனவே, நீங்கள் இறை நம்பிக்கையாளர்கள் என்றால் வாழ்வாதாரத்தைத் தேடும் முயற்சியில் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வையுங்கள்" என்று நபி ஈஸா (அலை) அவர்கள் கூறினார்கள் .
"அதற்கவர்கள் அதிலிருந்து நாங்கள் புசித்து எங்கள் உள்ளங்கள் திருப்தியடையவும் . அன்றி நீங்கள் (உங்களுடைய தூதுவத்தைப் பற்றி ) மெய்யாகவே உண்மை கூறினீர்கள் என்று நாங்கள் அறிந்து கொண்டு அதற்கு நாங்களும் சாட்சியாக இருக்கவுமே விரும்புகின்றோம்" என்று கூறினார்கள் .
குர்ஆன் ( 5 : 113 )
அவர்களே வாங்கிக் கட்டிக் கொண்ட சோதனை ஆரம்பமானது. விதி யாரை விட்டது ?
ஈஸா (அலை) அவர்கள் குளித்து, உலுச் செய்து . கம்பளி உடையணிந்து , இரண்டு ரக்அத்துதொழுது , தலை கவிழ்ந்திருந்து முஷாஹதாச் செய்து துஆக் கேட்டார்கள் .
உடனே அவரது சமூகத்தார் பார்த்திருக்க ,. இரண்டு மேகங்கிடையே சிவப்பு நிறமுள்ள ஒரு ஸுப்ரா (உணவுப் பதார்த்தங்கள் வைக்கப்பட்டுள்ள தட்டு) வானில் இருந்து இறங்கியது .

நபி ஈஸா (அலை) அவர்கள் அந்த தட்டை மூடியிருந்த துணியை **" பிஸ்மில்லாஹி கைரிர் ராஜ்க்கீன்"** என்று சொல்லி திறந்தார்கள் .

அதில் ஏழு ரொட்டிகளும் , ஏழு மீன்களும் இருந்தன. (நூல் : தஃப்ஸீர் தபரீ , இப்னு அபீ ஹாத்திம்)
அந்த தட்டில் ஒரு மீன் இருந்தது அதில் எவ்வித முள்ளுமில்லை . செதிலுமில்லை கொளுப்பு வடிந்து கொண்டிருந்தது .அம்மீனின் தலையில் உப்பும் , வாலில் சிர்க்காவும் (காடி) , அதனைச் சுற்றிப் பலவிதமான கீரைகளும் வைக்கப்பட்டிருந்தன .
அந்த தட்டில் ஒரு மீனும் , 5 ரொட்டிகளும் இருந்தன. ஒரு ரொட்டில் ஜைத்தூன் எண்ணெய்யும் , ஒன்றில் தேனும் , மற்றொன்றில் நெய்யும் , இன்னொன்றில் திரட்டுப்பாலும் , மற்றொன்றில் சுட்ட இறைச்சியும் இருந்தன.
....இப்படி பல கிதாபுகளில் காணக் கிடக்கிறது "அல்மாயிதா " உணவுத் தட்டு
ஹவாரிய்யூன்களுக்கு தலைவரான ஷம்ஊன் என்பவர் , நபியவர்களிடத்தில் "இது இம்மையிலுள்ள உணவுப் பதார்த்தங்களைச் சேர்ந்ததா ? அல்லது மறுமையிலுள்ள உணவுப் பதார்த்தங்களைச் சேர்ந்ததா ? என்று கேட்டார் .
அதற்கு நபியவர்கள் . "அங்குள்ளதும் அல்ல : இங்குள்ளதும் அல்ல . அல்லாஹ் நூதனமாக இதை உண்டாக்கினான் " என்று கூறி,உணவைச் சாப்பிடச் சொன்னார்கள் .
அதற்கு அவர்கள், இந்த உணவில் நீங்களும் ஓர் அத்தாட்சி காண்பிக்க வேண்டும்" என்றனர்
அதற்கு, நபியவர் அம்மீனை நோக்கி, "அல்லாஹ்வின் உத்தரவுப்படி நீ உயிர் பெற்று எழு" என்றார்கள் .
உடனே அம்மீன் உயிர் பெற்று துளும்பிற்று.மீண்டும்
அதனை நோக்கி,
" நீ உயிரில்லாமல் ஆகிவிடு" என்றார்கள். உடனே அந்த மீன் முன் போல் சுடப்பட்ட மீனாகி விட்டது !
அந்த உணவுத் தட்டு ஒரு நாள் முழுவதும் அப்படியே இருந்தது. அதிலிருந்து உணவு உண்ண பிரியமுள்ளவர்கள் எல்லாம் உண்டார்கள் .அவர்களுக்கு எவ்வளவு வேண்டுமானாலும் உண்ண மட்டுமே அனுமதி அளிக்கப்பட்டது. அதிலிருந்து எடுத்துப் பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ளக் கூடாது என்றும் கண்டிப்பான உத்தரவிடப்பட்டிருந்தது.

இதுதான் அவர்களுக்குரிய சோதனை என்பதை அறியாமல் பனீ இஸ்ரவேலர்கள் ........
ஒவ்வொருவரும் சாப்பிட சாப்பிட உணவு குறையாமல் அப்படியே அந்தத் தட்டில் உணவு இருந்து கொண்டே இருந்தது ! ஆச்சரியமும் அதன் வாசனையும் அவர்களின் மனதைத் தூண்டியது .
எவ்வளவு அதிகம் எடுத்தாலும் குறைவாகாத உணவு. அப்போ கொஞ்சம் எடுத்தால் தெரியவா போய்கிறது ? எடுத்து கட்டிக்கோ .

நேரம் ஆக ஆக கொஞ்சம் கொஞ்சமாக யாருக்கும் தெரியாமல் உணவை திருடி பத்திரப்படுத்த ஆரம்பித்தார்கள் பனீ இஸ்ரவேலர்கள் .
மறுநாள் திருடிய உணவை சாப்பிட்டு இரவில் படுத்து எழுந்திருக்கும் போது, குரங்குகளாகவும், பன்றிகளாகவும் உருவம் மாற்றபட்டனர். "அட என் கேடே "
இவ்வாறு உருவம் மாற்றப்பட்டவர்கள் மொத்தம் 5000 பேர்கள் என்றும் அவர்கள் எல்லோரும் பாதைகளிலும், குப்பை மேடுகளிலும் பன்றிகளைப் போல் மலத்தை தின்று கொண்டிருந்தனர் .

நபி ஈஸா (அலை) அவர்களைக் கண்டவுடன் சுற்றிச் சுற்றி அழுது கொண்டிருந்தனர் , இவ்வாறு மூன்று நாட்கள் வரை இருந்து அத்தனை பேரும் மரணித்தனர் .
இந்த சம்பவம் குறித்து புதிய ஏற்பாடான பைபிளில் எங்குமே காணப்படவில்லை. இப்படி ஒரு சம்பவம் குறித்து திருக்குர்ஆன் ஓர் அத்தியாயத்தை (அல்மாயிதா - உணவுத் தட்டு 5-வது அத்தியாயம் ) இறக்கி அருளப்பட்டிருக்கிறது .
இந்த சம்பவத்தை குர்ஆனிலிருந்தே கிறிஸ்துவர்கள் தெரிந்து கொண்டனர் . இதிலிருந்து இறுதி இறை வேதமான குர்ஆன் உண்மைகள் எதையும் மறைக்கவில்லை என்பது தெளிவாகிறது .
ரஹ்மத் ராஜகுமாரன்

இஸ்லாமும் , கிருஸ்தவமும் 17



இயேசு அருந்திய இறுதி இராவுணவு (Last Supper) பின்னணி இது:

தம் வாழ்வின் இறுதி வாரத்தின் தொடக்கத்தில் இயேசு எருசலேம் நகருக்குள் வெற்றி வீரராக நுழைகின்றார். பல நபர்களை சந்திக்கிறார். அவர்களுள் யூத சமயத் தலைவர்களும் அடங்குவர். இயேசு தம் சீடர்களோடு வார இறுதியில் உணவு உட்கொள்கின்றார். உணவு அருந்திய பின் இயேசு காட்டிக்கொடுக்கப்படுகிறார். கைது செய்யப்படுகிறார். விசாரணைக்கு உட்படுத்தப்படுகிறார். சிலுவையில் அறையப்பட்டு கொலை செய்யப்பட வேண்டும் என்று தீர்ப்பிடப்படுகிறார்.

இராவுணவு தொடர்பானவை இவை: உணவுக்கான தயாரிப்புகளைச் செய்ய இயேசு தம் சீடர்களை முன்னே அனுப்புகிறார். யூதாசு தம்மைக் காட்டிக் கொடுப்பார் என்று இயேசு முன்னறிவிக்கிறார். அதுபோலவே, பேதுரு தம்மை மும்முறை மறுதலிப்பார் என்பதையும் இயேசு முன்னறிவிக்கிறார்.
யூதாசு இயேசுவைக் காட்டிக்கொடுத்தல் பற்றிய
இந்நிகழ்ச்சி பற்றிய குறிப்புகள் மத்தேயு 26:24-25; மாற்கு 14:18-21; லூக்கா 22:21-23; யோவான் 13:21-30 ஆகிய பகுதிகளில் உள்ளன.

ஒவ்வொரு திருத்தூதரும் தாம் இயேசுவைக் காட்டிக் கொடுக்கப்போவதில்லை என்று ஆணித்தரமாகக் கூறுகின்றனர். ஆனால் அங்கு இருந்தவர்களுள் ஒருவர் தம்மைக் காட்டிக்கொடுப்பார் என்று இயேசு உறுதியாகச் சொல்கிறார். மேலும் அவ்வாறு காட்டிக்கொடுக்கும் ஆள் “பன்னிருவருள் ஒருவன்; என்னுடன் பாத்திரத்தில் தொட்டு உண்பவன்” என்று கூறியதோடு இயேசு, “மானிடமகன் தம்மைப் பற்றி மறைநூலில் எழுதியுள்ளவாறே போகிறார்.

ஆனால் ஐயோ! அவரைக் காட்டிக் கொடுக்கிறவனுக்குக் கேடு! அம்மனிதன் பிறவாதிருந்தால் அவனுக்கு நலமாய் இருந்திருக்கும்” என்றும் கூறுகிறார் (மாற்கு 14:20-21).
இவ்வாறு இயேசுவைக் காட்டிக்கொடுக்கப் போகிறவரின் பெயர் “யூதாசு இஸ்காரியோத்து” என்பதாம் என்ற குறிப்பு மத்தேயு 26:23-25 பகுதியிலும், யோவான் 13:26-27 பகுதியிலும் வருகிறது.

யோவான் நற்செய்தியில் யூதாசின் பெயர் வராவிட்டாலும் வேறு தகவல் தரப்படுகிறது. "இயேசு மறுமொழியாக, ‘நான் யாருக்கு அப்பத் துண்டைத் தோய்த்துக் கொடுக்கிறேனோ அவன்தான்’ எனச் சொல்லி, அப்பத் துண்டைத் தோய்த்துச் சீமோன் இஸ்காரியோத்தின் மகனாகிய யூதாசுக்குக் கொடுத்தார். அவன் அப்பத் துண்டைப் பெற்றதும் சாத்தான் அவனுக்குள் நுழைந்தான். இயேசு அவனிடம், ‘நீ செய்யவிருப்பதை விரைவில் செய்’ என்றார்"
(யோவான் 13:26-27).

பைபிள் இயேசுவைதான் சிலுவையில் அறையப்பட்டதாக சொல்கிறது .உண்மை அதுவல்ல என்று குர்ஆன் மறுத்து கூறுகிறது .
நபி ஈஸா ( அலை ) தன் சீடர்களுடன் இரவு சாப்பாட்டை சாப்பிட்டு முடித்தார்கள் பின் தம்முடைய சீடர்களை " நான் உங்களை விட்டு பிரிவது பற்றி வருத்தமுறுகிறீர்கள் இஸ்வேலர்கள் என்னைத் தேடி அலைந்து கொண்டிருக்கிறார்கள் எனினும் எனக்குச் செய்யும் இழிவை விட்டும் நீங்கள் என்னை காக்கமாட்டீர்கள் என்று கூறினார்

ஈஸா (அலை) அவர்கள் ஷம்ஊனை அழைத்து " நீர் என்னை இறைத்தூதர் என ஏற்றுக் கொள்ள மறுப்பீர் அதுவும் மும்முறை மறுப்பீர் " எனறு கூறினார்

மற்ற சீடர்களை நோக்கி "இன்று இரவு உங்களில் ஒருவர் என்னை சொற்ப விலைக்கு விற்று விடுவார். ஆனால் அந்தோ ! அவர் பொழுது புலர்வதற்குள் சோதனை ஆரம்பித்து பொழுது புலர்ந்து அடைவதற்கு முன் கொல்லப்படுவார்" எனறு கூறினார்
ஈஸா அலை அவர்களின் 13 சீடனாகிய ஜுடாஸ் எஸ்கேயட்
(யஹுதா ) என்பவன் 30 பொற்காசுகளைப பெற்றுக் கொண்டு அவர் இருக்கும் அறையைக் காட்டிக் கொடுத்தான்
இஸ்ரவேலர்கள் ஷம்ஊன் பக்கம் திரும்பியதும் " ஈஸா இறைத்தூதர் அல்ல என்று மூன்று முறை மறுதளித்தான் அது கேட்டு ஈஸா (அலை) அவர்கள் புன்முறுவல் பூத்தார்கள் .
அன்று அதிகாலைப் பொழுது கிபி 33 ஆம் ஆண்டு ஏப்ரல் 3 வெள்ளிக்கிழமை தஹ்ஜத் வேளையில் அல்லாஹ் அவர்களை விண்ணகத்திற்கு உயர்த்திக் கொண்டான்

" ஈஸாவே . . . ! நிச்சயமாக நான் உம்மைக் கைப்பற்றுவேன் இன்னும் என்னளவில் உம்மை உயர்த்திக் கொள்வேன்"
குர்ஆன் 3 : 55
இஸ்ரவேலர்கள் யஹுதாவை அனுப்பி அறையில் உள்ள ஈஸாவை கூட்டி வரச் சொன்னார்கள். அறையில் நுழைந்ததும் ஈஸாவைக் காணவில்லை. ஏமாற்றத்துடன் திரும்பும் போது இறைவன் அவனை ஈஸா அலைஹி அவர்களின் உருவில் ஆக்கிவிட்டான்.
அவர்கள் யஹுதாவை ஈஸா என எண்ணி அவனை நிர்வாணமாக்கப்பட்டு சிலுவையில் அறையப்பட்டான்.
ஈஸா அலைஹி அவர்கள் திமிஷ்கின் கிழக்கு பகுதியில் பெரிய பள்ளியில் உள்ள மனாரத்துல் பைளாவு என்ற வெள்ளை மினாராவில் அதே தஹ்ஜத் நேரத்தில் வந்திறங்குவார் என்பது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ரஹ்மத் ராஜகுமாரன்.
குறிப்பு :- இஸ்லாமும்,கிருஸ்தவமும் என்ற இத் தொடர் பதிவு இத்துடன் நிறைவு பெறுகிறது.

## சூஃபியின் வழித்தடம் 1



(ஃபனாவிற்கும்,' பகா 'விற்கும் இடையுள்ள பாலம்)
உயிர் வாழ்க்கை இணையற்றது, தனித்தன்மை கொண்டது. அது ஆழம் காண முடியாத கடல் போன்றது. அதன் மேற்பரப்பில் எண்ணற்ற அலைகள் மேலெழுகின்றன.
கடல் ஒன்றுதான் அலைகளுக்கு கணக்கில்லை. உயிர் வாழ்க்கையும் கடல்போல் மிகப்பெரியது புரிந்து கொள்ள முடியாதது .அந்தக் கடலின் மேற்பரப்பில் ஒரு சிற்றலையாய் நீங்கள் மேலெழுந்தீர்கள்.

என்ற வரிகளை பலரும் அடிக்கடி முணுமுணுப்பதுண்டு. உண்மைதான் சாவல்கள் நிறைந்த ஒன்றுதான் இந்த வாழ்க்கை. அதைவிடவும் வலிமை படைத்த ஒன்று நமது மனம் என்பதை நாம் உணர வேண்டும்.

சின்ன சின்ன தோல்விகளிலும் புறக்கணிப்பிலும் நாம் சோர்ந்து போய் அமர்ந்துவிட்டால் நம்மை விட முட்டாள்கள் யாரும் இருந்திட இயலாது. இங்கே நாம் வந்து பிறந்ததிற்கு ஏதோ ஒரு காரணம் இருக்க கூடும். நிச்சயமாக அதை நோக்கி நமது மனதை வலிமையாக செலுத்திட வேண்டும்.
வேண்டாத குப்பைகளை நிரப்பும் குப்பை தொட்டியாக நமது மனதை மாற்றிக் கொள்ளக் கூடாது. தேவையற்ற சிந்தைகளையும் எதிர்மறை சிந்தனைகளையும் நமது மனதிற்குள் கொண்டு செல்வதே நமக்கு நாம் செய்யும் மிகப்பெரிய துரோகம் ஆகும்.

'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்'என்று பாடிய வள்ளல் பெருமானின் மனம் எத்தகையது என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

சமதர்மமும் ஜீவகாருண்யமும் ஒருங்கே அமைந்த மனம் அது. பாரம் சுமந்து செல்லும் வண்டி மாடுகளைப் பார்த்தால் சிறிது நேரம் அந்த மாடுகளின் கால்களை தடவிக் கொடுப்பாராம் வள்ளல் பெருமான். சிறு உயிர்கள் கூட துன்பம் சந்திக்க கூடாது என்ற வள்ளல் மனம் நம்மில் எத்தனை பேருக்கு இருக்கும்.

சாதனையாளர்கள்'எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா?' என்பான் பாரதி. உலகம் நோக்கிய அவனது பார்வை அவ்வாறே இருந்தது. வீட்டில் வறுமை இருந்தாலும் அதை தனது வார்த்தைகளில் ஒருபோதும் அனுமதிக்கதவன் பாரதி.

எங்கோ இருக்கும் பிஜித் தீவில் துன்பப்படும் தோட்டத் தொழிலாளர்களுக்கும் தனது பாடல்கள் வழியாக உலகின் கவனத்திற்கு கொண்டு வந்த மாமனம் அவனுக்கு இருந்ததது.
இந்த உலகம் என்னால் மாறவேண்டும் என்ற ஞான நிலையில் இருந்தது அவனது மனம் என்றால் அது மிகையில்லை பெரிதினும் பெரிது கேள்என்பான் பாரதி. இந்த மனம் எதை ஆசைப்படுகிறதோ அதை அடையும் வரை ஓயாது. அதுவரை நிலைகொள்ளாமல் அலையும் இயல்பை உடையது என்பதை நாம் அறிவோம்.

நம்முடைய லட்சியங்களையும் எண்ணங்களையும் எப்போதும் உயர்ந்த நிலை நோக்கி வைத்துக் கொண்டு அதை நோக்கி இயங்க ஆரம்பித்தால் நம்முடைய மனமும் உடலும் மிக மகிழ்வாக இருக்கும் என்பதே சாதனையாளர்கள் உணர்த்தும் உண்மை.
நீங்கள் எதுவாக நினைகிறீர்களோ அதுவாகவே மாறமுடியும் என்பார் சுவாமி விவேகானந்தர். உங்கள் ஒவ்வொரு சிந்தனையும் செயலும் உயர்ந்த இலக்கினை நோக்கியே அமையட்டும். தொடர்ந்து உங்கள் மனதிலே படமாக வரைந்து பாருங்கள் . தடைகளை நினைத்து கவலைப்படும் மனம் ஒருபோதும் சாதனைகள் படிப்பதில்லை. புறக்கணிப்புகளும் தடைகளுமே நம்மை உந்தித் தள்ளும் ஊக்கிகளாக நினைத்து முன்னேற வேண்டும்.

நீங்கள் தடை என்று நினைத்தால் அது தடைதான். நீங்கள் அதை அனுபவமாக ஏற்றால் அது தடையாக தெரியாது. தேங்கி நிற்கும் குட்டைகளில் நாம் நல்ல நறுமணத்தை எதிர்பார்க்க முடியாது. ஓடும் நதிகளாக நாம் இருக்கும் போதுதான் நமது மனதில் கசடுகள் தேங்காது.

“உங்களால் மறக்க முடியாத நிகழ்வுகள் ஏதேனும் சொல்ல இயலுமா?”
ஒவ்வொரு தன்னம்பிக்கை பயிற்சியாளர்களும் கேட்கும் கேள்வி. இதை உங்கள் மனதிடம் கேட்டுப்பாருங்கள். என்ன பதில் கிடைக்கும். பெரும்பாலான பதில்கள் அவர்கள் சிறிய வயதில் சந்தித்த கசப்பான அனுபவங்களையே சொல்வார்கள். அல்லது சொல்லத் தயங்குவார்கள். காரணம் எதிர்மறை

சிந்தனைகளும் செயல்களும் நமது மனதிலே எளிதில் இடம்பிடித்து விடுகின்றன. இதுதான் கசப்பான உண்மையும் கூட .
இதில் இருந்து வெளியேறி வாருங்கள். இந்த உலகம் முழுக்க உங்களுக்காக காத்திருக்கும் வாய்ப்புகளை நம்பிக்கையோடு எதிர்கொள்ளுங்கள். எதிர்மறையாக நடக்கும் நிகழ்வுகளை தோல்விகளாக நினைத்து விடாதீர்கள். அதை நாம் கடந்து வரும்போது அது அனுபவமாக நமது பயணத்தில் அமைய வேண்டும். அப்போது அது உங்கள் மனதில் நிச்சயமாக எதிர்மறையாக பதிவாகாது.

நமது உடல் அற்புதமானது. நமக்கு பிடிக்காத அல்லது ஒவ்வாத பொருள் ஏதேனும் உடலுக்குள் சென்றுவிட்டால் உடனே அதை உடல் வெளியேற்றி விடும். உடலே அவ்வாறு வெளியேற்றி விடும்போது மனம் மட்டும் ஏன் எதிர்மறைகளை ஏற்க வேண்டும். மனம் அழகிய கோவில் போன்றது. அதை தூய்மையாக வைத்திருப்பது நமது கடமை.

அதைவிட முக்கியம் அந்த மனதில் நேர்மையான விஷயங்களை நிரப்பி விட வேண்டும். ஒவ்வொரு முறையும் நாம் நல்ல சிந்தனைகளோடு நம்மை நிரப்பும்போது நாம் மட்டுமின்றி நம்மை சார்ந்து இயங்குபவர்களுக்கும் அது உற்சாகத்தையும் நம்பிக்கையும் கொடுக்கிறது.மனிதில் உறுதி பிறக்கட்டும் - முனைவர். நா.சங்கரராமன் பதிவிலிருந்து

இன்று 21.7.2021 தினமலர் பக்ரீத் ஸ்பெஷல் 2021 சிறப்பு மலரில் வெளியான என் கட்டுரை இது

சூஃபி : " என்னை நானே தேடிக் கொண்டிருக்கிறேன் "   ரஹ்மத் ராஜகுமாரன்.

சூஃபிகளைப் பற்றி.." என் உம்மத்திலே உள்ள அறிஞர்கள் பனீ இஸ்ராயீல்களிடையே தோன்றிய நபிமார்களுக்கு இணையானவர்கள் " என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் .
இஸ்லாமிய அறிஞர்கள் ஆன்மீக அறிஞர்கள் , என்றும் மார்க்க அறிஞர்கள் இருவகைப் பட்டனர். ஆன்மீக அறிஞர்களின் பரம்பரை அலீ (ரலி) அவர்கள் முதல் துவங்குகிறது .

" நான் ஞானத்தின் பட்டணம். அலீ அதன் தலைவாயில் " என்று நவின்று அலீ (ரலி) அவர்களை " தஸ்கியத்" என்ற கலையின் ஆசானாக அறிமுகம் செய்து வைத்தார்கள். அலீ (ரலி) அவர்களின் வழித் தோன்றல்கள் குறிப்பாக அசன் (ரலி) , ஹுஸைன் (ரலி) மற்றும் அவர்களின் சந்ததிகளின் வாயிலாக தஸ்கியத் என்னும் சூஃபிஸம் போதிக்கப்பட்டு வந்துள்ளது.

சூஃபிகளான இறை நேசர்களில் பெருவாரியானவர்கள் அசன் (ரலி) ஹுஸைன் (ரலி) இவர்களின் வழித்தோன்றல்களாகவே இருக்கிறர்கள்
"நீங்களெல்லாம் இறக்கக் கூடிய மனிதர்களிடமிருந்து அறிவை பெறுகின்றீர்கள் .நாங்களோ பிறப்பு, இறப்பு இல்லா இறைவனிடமிருந்து அறிவை பெறுகின்றோம் " என்று
அபூ யாஸித் பிஸ்தாமீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் .
இதன் காரணமாகவே பள்ளி சென்று ஒழுங்காகப் பயிலாத பலர் இறைவனால் 'இல்ஹாம் ' என்னும் உள்மனத் தூண்டல் என்னும் இறை உதிப்பு மூலம் அறிவு போதிக்கப்பட்டு, ஆன்மீகப் பேரரசர்களாக விளங்கினார்கள்.

இல்ஹாம் - உள்மனத்தூண்டல். இல்ஹாம் உள்ள ஒருவன் அறிவை வைத்துக் கொண்டு செயல்பட்டால் (அது தொடர்பான) புரியாத அறிவுகளையும் அல்லாஹ் சொல்லிக்கொடுப்பான். _இது நபிகளாரின் வாக்கு.

ஒருவன் எதைப்பற்றி சிந்திக்கிறானோ, அந்த சிந்தனை அடிமனத்தில் இறங்கி, அவனுக்குத் தேவையான செய்தியை தேடிக்கொண்டிருக்கும். எப்போது accurate thought ஏற்படுகிறதோ அப்போது divine force அங்கு கலக்கும்,
அப்படி கலந்த பிறகு எதற்கான விடையைத் தேடிக் கொண்டிருக்கிறானோ அந்த விடை அவன் உள்ளத்திலிருந்து வெளிவரும். இதற்கு “இல்ஹாம்” – இறை உதிப்பு என்றும் கூறப்படுகிறது.
மேலும் அவன் எந்த மொழியில் சிந்திக்கிறானோ அந்த மொழியிலேயே வரும், மாறுபட்ட மொழியில் வராது. எதைப் பற்றி சிந்திக்கிறானோ அதைப் பற்றிய செய்தி வரும். அதற்கு மாறுபட்ட வேறொன்று வராது.

வஸ்வாஸ்- ஊசாட்டத்தைப் போடுபவன் ஷைத்தான் என்று குர்ஆன் வசனம் சொல்கிறது, நஃப்ஸ்- மனம் என்று குர்ஆன் வசனம் சொல்கிறது.
மேலும், மனம் மனிதனிடம் ஊசலாடுகிறது என்று குர்ஆன் (50:16) வசனம் காட்டுவதால் ,மனம் வேறு ; நான் வேறு என்பதும் தெளிவாகிறது.

சூஃபிக்களின் தவத்தில் தன்னை மறந்து இறைவனோடு ஒன்றிவிடுகிறார்கள் .கௌதுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள் , ஈராக் காட்டினில் கடும் தவம் புரிந்து கொண்டிருக்கும் வேளையில் ஞானக் கொந்தளிப்பின் காரணமாக காட்டினில் தலைதெறிக்க ஓடுவார்கள் . வெருண்டோடிய அவர்கள் ஓரிடத்தில் மயக்கமுற்றுக் கீழே விழுவர்.
அப்படி ஒரு தடவை ஓடி மயக்கமுற்று எழுந்த போது அவ்விடம் , பாக்தாதிலிருந்து பன்னிரண்டு நாட்கள் பயணத் தொலைவிலுள்ள " துஸ்தர் " நகரில் அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள் .

" நாம் சற்றுத் தொலைதானே ஓடினோம், அதற்குள் இவ்வளவு தூரம் வந்து விட்டோமே ! "
' ஷரியத் நிலையில் செய்யப்படும் சிறு செயல்கள் மஃரிபத் நிலையில் மிகப் பெரிய பலனை கொடுக்க வல்லது ' என ஞானாசிரியர்கள் இச்செயலைக் குறித்து கருத்து தெரிவிக்கிறார்கள் .
அப்துல் கரீம் ஜீலீ ' என்ற சூஃபி. ஆட்சியாளர்களின் கருத்துக்கு மதிப்பு கொடுக்காததால் , அதிக வருடங்கள் சிறையில் கழித்ததால் ' ஜீலீ ' (கைதி ) இவர் பெயருடன் சேர்ந்து கொண்டது .
ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் குளித்து விட்டு நல்ல உடையைப் உடுத்திக் கொண்டு ஜும்மா கூட்டுத் தொழுகைக்காக ஜெயில் கதவு வரை போவார் . அனுமதியும் கேட்பார் . மறுக்கப்படும் திரும்பி போய்விடுவார்.
இப்படி ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் செய்வார் . அனுமதியும் கேட்பார் . மறுக்கப்படும். திரும்பி போய்விடுவார்..
" ஏன் இப்படி செய்கிறீர்கள் ? உங்களைத்தான் வெளியே விட மாட்டார்களே " என்று கேட்கப்பட்டது .
" தெரியும் . என் சக்திக்கு அப்பாற்பட்டதை நிறைவேற்றாததைப் பற்றி என்னை குறை சொல்ல முடியாது . ஜெயில் கதவுகளை திறப்பது என் கையில் இல்லை ; என்றாலும் , வெள்ளிக்கிழமை ஜும்மாவுக்காக கதவு வரை போவது என் கையில்தானே உள்ளது ? என்னால் முடிந்ததை மட்டுமாவது நான் நிறைவேற்ற வேண்டும் அல்லவா ? "
ஏழு வானம் தாண்டிய பெருவெளி எல்லையின் ஆரம்பம் இவரின் சிறைக் கதவின் வாசலிருந்துதான் ஆரம்பிக்கிறது என்பதை இங்கு யார் அறிவர் ?

சூஃபி அபூ பயாஸித் யஸீத் பிஸ்தாமி, ( கிபி 777 - 874 ) அவர்கள் கூறும்போது ,30 ஆண்டுகள் மௌனமாகவும் , நாற்பது ஆண்டுகள் ஒரு பள்ளிவாசலில் தங்கியும் ஆன்மீகப் பயிற்சி மேற்கொண்டேன் ,
" நான் 30 வருஷமாக இறைவனைத் தேடிக் கொண்டிருந்தேன் . கடைசியில்தான் தெரிந்தது , தேடியது நானல்ல ; அவன்தான் என்று. தேடப்பட்டவன்தான் நான் "
இரவில் ஒருவர் பிஸ்தாமியின் வீட்டுக் கதவை தட்டினார் .
" யார் வேண்டும் ?" - வீட்டுக்குள்ளிருந்து குரல் கொடுத்தார் பிஸ்தாமி .
" நான் பயாஸித் பிஸ்தாமியைத் தேடி வந்திருக்கிறேன் "
" கடந்த 30 வருஷமாக நானும் அவரைத்தான் தேடிக் கொண்டிருக்கிறேன் " என்றார் பிஸ்தாமி .

"நான் உள்ளே போனேன்
என்னை வெளியே விட்டு விட்டு " -என்கிறார் ஒரு பாரசீக சூஃபி

இறை வணக்கங்களிலேயே தலைசிறந்த இறை வணக்கம் காதல்தான்' என்றார் சூஃபி மேதை முகைதீன் இப்னு அரபி. காதலிக்காக தனது குணங்களை மாற்றிக் கொள்ள காதலன் தயாராகிறான். அவளது விருப்பமே அவனது விருப்பமாகிறது. அவள் வெறுப்பு அவன் வெறுப்பு.

பூ, செடி, கொடி, மரம், மட்டை எதைப் பார்த்தாலும் காதலனுக்குக் காதலி நினைவைப் போல, ஒரு சூஃபிக்கு இறை நினைவு.
ஆன்மா அழுக்காக இருக்கும் வரை அது தனக்கும் தன் இறைவனுக்கும் உள்ள உறவை அறியாது.
உலக ஆசாபாசங்களே ஆன்மாவின் அழுக்காகும் .
இந்த அழுக்கு நீங்கிய ஆன்மா இறைவனை அறிகிறது.
இறைவனை அறிதல் என்பது அவனை நேசித்தலாகும் .
நேசம் பல வகையான உறவாக வெளிப்படுகிறது .
இறைவனை நாயகனாகவும் தன்னை நாயகியாகவும் கருதுவது இது நாயக-நாயகி பாவம் எனப்படுகிறது இதை 'காதல் மார்க்கம்' என்று சொல்லலாம்
சூஃபித்துவம் காதல் மார்க்கமே சிறந்த மார்க்கம் என்கிறது .
ஏனெனில் காதல் உறவு மற்ற உறவுகளை விட வலிமையானது.மேலும் காதல் உறவு மற்ற உறவுகளை துறக்கச் செய்கிறது .
சூஃபித்துவ காதல் இறைமையைக் காதலியாகவும் , ஆன்மாவைக் காதலனாகவும் உருவகப்படுத்துகிறது என்கிறார் கவிக்கோ
இறைவனோ ஒருவன் . அவனைக் காதலிக்கும் ஆன்மாக்களோ பல. இறைவனோ தன்னைக் காதலிக்கும் காதலர்களையெல்லாம் காதலிக்கும் காதலியாக இருக்கிறான் .
உலகியல் பார்வையில் இது ஒரு பிரச்சனை. தன் காதலி இன்னொருவருடன் இருப்பதைப் பார்த்தால் எந்த காதலன்தான் சகிப்பான் ?
அவள் என்னுடன் இணை பிரியாமல் நெருங்கி உறவாடி கொண்டிருந்தும், நான் இழப்பால் நினைவிழந்து வருந்துகிறேன் .அவளை இவனுடனும் அவனுடனும் பார்க்க நான் எங்ஙனம் சகிப்பேன் ?
என்கிறார் சூஃபி ஜாமி

**தமிழ்நாட்டு சூஃபி கவிஞர் குணங்குடி மஸ்தான் சாகிப்** அவருடைய இறைக் காதல் புலம்பல் இன்னும் சுவையாக இருக்கிறது

" என்னை விட்டால் மாப்பிள்ளைமார் எத்தனையோ உன்றனுக்கே, உன்னைவிட்டால் பெண் எனக்கும் உண்டோ மனோன்மணியே !. என்கிறார்
மௌலானா ரூமி :
நீ
இன்னொரு நான்
நான்
மற்றொரு நீ
"தாகித்தவன் தண்ணீரைத் தேடுகிறான்
தண்ணீரோ தாகித்தவனைத் தேடிக் கொண்டிருக்கிறது" என்கிறார் ரூமி
சூஃபி துறவியான முகைதீன் இப்னு அரபி பேசிய புகழ்பெற்ற கொள்கையான 'இருப்பின் ஒருமை ' (unity of being அல்லது அத்வைதம் அல்லது வஹ்ததுல் வுஜுத் )
வஹ்ததுல் வுஜூத் என்பதற்கு மெய்ப்பொருள் ஒன்று, உள்ளமை ஒன்று என்று பொருள் கொள்ளலாம். ஆயினும் மெஞ்ஞானிகள் என்ற சூஃபியாக்கள் "வஹ்ததுல் வுஜூத் "என்பதற்கு ஒரு உள்ளமையின் வெளிப்பாடு என்று கூறுவார்கள்.

இந்தக் கொள்கையின் முக்கியமான அங்கம், உண்மையான பொருள் என்பது ஒன்றுதான், அதாவது கடவுள் மட்டுமே உண்மையான பொருள். நாம் எல்லோரும் அதன் வெளிப்பாடுகள் (manifestations). இக்கொள்கை பல வழிகளில் புரட்சிகரமானது.

உலகின் எல்லா மனிதர்களும், எந்த மதத்தைப் பின்பற்றினாலும், கடவுளின் படைப்புகளே என்பதையும், அவைகள் எல்லாமும் மதிக்கப்பட வேண்டும் என்பதையும் கோடிட்டுக் காட்டுகிறது. இந்தக் கொள்கை மனிதர்களைப் பிரிக்கும் எல்லா சுவர்களையும், சமூக வெறுப்புக்களையும் இடித்துத் தள்ளுகிறது.
முகைதீன் இப்னு அரபி ( ரஹ்) அவர்களின் 'வஹ்ததுல் வுஜூத்' என்ற அத்வைத அனுபவத்தை விவேகானந்தர் :

"குருதேவரின் அந்த மந்திர சக்தி வாய்ந்த ஸ்பரிசம் என் மனதில் மகத்தான மாற்றத்தை தோற்றுவித்தது .அண்ட சராசரங்களிலும் கடவுளைத் தவிர எனக்கு எதுவுமே தெரியவில்லை. இதைக் கண்டு நான் வாயடைத்துப் போனேன்... வீட்டிற்கு வந்தேன்.அங்கும் நான் காண்பதெல்லாம் பிரம்மாகவே தோன்றியது.சாப்பிடுவதற்கு அமர்ந்தேன் அங்கும் கூட எல்லாம் - உணவும் அது வைத்திருக்கும் தட்டும் உணவை பரிமாறுபவரும் ஏன், நானும்கூட பிரம்மாகவே தெரிந்தன. தெருக்களில் நடந்து செல்வேன். வண்டிகள் என்முன் ஓடிக்கொண்டிருக்கும் நானும் அந்த வண்டிகளும் ஒரே பொருளால் செய்யப்பட்டிருப்பதை கண்டேன்."

இதையே எங்கும் இறைவனின் திருமுகமே காட்சியளிக்கிறது என்பதாக குர்ஆனில் , "மிக கண்ணியமும் பெருமையும் தங்கிய உங்களது இறைவனின் திருமுகம் மட்டும் (அழியாது) நிலைத்திருக்கும்." (அல்குர்ஆன் : 55:27)

" நீங்கள் சாய்ந்து கொண்டிருப்பது நாற்காலி என்று நினைக்கிறீர்கள். ஆனால் அது இறைவனின் முதுகு என்பது உங்களுக்குத் தெரியவில்லை " என்கிறர் சூஃபி ஸனாய் :

"அவனது வாசலில் முஸ்லிம் யார்? கிறிஸ்துவன் யார்?
நல்லவன் யார்? கெட்டவன் யார்?
எல்லோரும் தேடுபவர்; அவனோ தேடப்படுபவன்" என்கிறார்
விழித்துக்கொள்ளும்' எந்த மனிதரும் சூஃபியே. சூஃபித்துவம் சிந்தனையில் இருந்தோ, தத்துவத்தில் இருந்தோ பிறந்தது அல்ல; அது இதயத்தில் இருந்து பிறந்தது.
பாமரருக்கும் சூஃபிக்கும் உள்ள வேறுபாட்டை சூஃபி சா'அதி
" பாதுகாப்பு வேண்டும் என்றால் கரையில் நில் ;
பொக்கிஷம் வேண்டும் என்றால் கடலுள் செல் " என்கிறார்
'தத்துவத்தை அழைக்காதே பாதையென்று;
முட்டாளை அழைக்காதே மேதையென்று' - என்கிறார் சூஃபி கவிஞர் சா'அதி.
பெண்மணி சூஃபி ராபியத்துல் பஸ்ரியா : ''இறைவா.. நரகத்துக்குப் பயந்து உன்னை நான் வணங்கினால் என்னை நரகில் எரித்துவிடு. சொர்க்கத்தின் நம்பிக்கையில் உன்னை நான் வணங்கினால் எனக்கு சொர்க்கம் தராமல் விட்டுவிடு. உனக்காகவே உன்னை நான் வணங்கினால் உனது அழகை எனக்கு மறைக்காதே...'

சூஃபி ராபியாவிடம், "உண்மைக்கும் பொய்க்கும் என்ன வித்தியாசம் என்றார் ஒருவர்.
''நான்கு அங்குலங்கள்'' என்று பதில் சொன்னார் ராபியா. கேள்வி கேட்டவர்க்கு ஒன்றும் புரியவில்லை. கண்ணுக்கும் காதுக்கும் இடையில் உள்ள தூரம்தான் உண்மைக்கும் பொய்க்கும் இடையில் உள்ள தூரம். கேட்கப்படுவதெல்லாம் பொய். பார்க்கப்படுவதெல்லாம் உண்மை என்றார் ராபியா.( பார்க்கப்படுவது =அனுபவங்களை)
" (நபியே!) தங்கள் இறைவனின் திருப்பொருத்தத்தை விரும்பி காலையிலும் மாலையிலும் பிரார்த்தித்துக் கொண்டிருப்பவர்களை நீங்கள் விரட்டி விடாதீர்கள்! அவர்களுடைய கணக்கிலிருந்து எதுவும்

உங்களுடைய பொறுப்பாகாது. உங்களுடைய கணக்கிலிருந்து எதுவும் அவர்களுடைய பொறுப்பாகாது. ஆகவே, நீங்கள் அவர்களை விரட்டினால் அநியாயக்காரர்களில் நீங்களும் ஒருவராகி விடுவீர்கள்!" (அல்குர்ஆன் : 6:52)

"வெளியூர் காரரைப் போலவும் , வழிப்போக்கனைப் போலவும் இவ்வுலகில் இருங்கள்." _ நபிமொழி
"ஏதோ ஆயிரம் ஆண்டுகள் வாழ போவதைப் போல இந்த உலகத்திற்காக செயலாற்றுங்கள். ஏதோ நாளைக்கே சாகப் போவதைப் போல இந்த உலகத்திற்காக செயலாற்றுங்கள்"
- நபிமொழி
சூஃபிஸம் என்பது ஒரு புதுமைக்குப் பெயரல்ல, ஒதுங்கி நிற்பதற்கு !
சூஃபிஸம் என்பது ஒரு பாவகாரியத்துக்குப் பெயரல்ல. அதை விட்டும் விலகி ஓடுவதற்கு !
சூஃபிஸம் என்பது எட்டாக்கனி அல்ல: சீச்சீ இந்தப் பழம் புளிக்கும் என்று கூறுவதற்கு !
சூஃபிஸம் என்பது அனைவரும் அவசியம் செயல்படுத்த வேண்டிய ஓர் அருந்தவம்.

**Rahmath Rajakumaran**

இறைவனுக்கு 99 திருநாமங்கள் என்பது அவன் 99 நிலையில் (ஹால்) இருப்பதாக மெஞ்ஞானிகள் கூறுகிறார்கள். உலகிற்கு வந்த இறை நேசர்களாகிய அவுலியாக்கள் மொத்தம் 69 ஹாலில் (நிலையில்) இருப்பதாகவும் குறிப்பிடப்படுகிறது .
பொதுவாக இறைநேசர்கள் வறியவர்களாகவும், ஏழை எளியவர்களாகவும்தான் நமக்கு காட்சியளித்தனர். இதில் வியப்பென்னவென்றால், சிலர் பல கப்பல்களைக் கொண்டு உலக நாடுகளில் வியாபாரம் செய்யும் பெரும் கோடிஸ்வரர்களாகவும் இருந்திருக்கின்றனர் . (உ-ம்) கௌது நாயகம் முகையதீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள். இதே அவர்கள் மிகவும் எளியராகவும் காட்சியளித்தனர்.
சிலர் சிறுபிள்ளைத்தனமாகவும் , கேலியும் கிண்டலுமாயும் நகைப்பிற்குரியதாகவும் ஆகி " பைத்தியக்காரர்" என்ற முத்திரையுடனும் வலம் வந்துள்ளனர் .
(உ-ம்) ஹஜரத் புஹ்லூல் தானா (ரஹ்) அவர்கள் ஒரு நிறைவான (மஜ்தூப்) தீவிர இறைநேசராக இருந்தார்கள். கலீஃபா ஹாரூன் ரஷீத் காலத்தில் பாக்தாத்தில் இருந்து வந்தார்கள்.
சிலர் கவாலி இசைப்பிரியவர்களாகவும் அந்த இசையிலேயே ஃபனாவாகி இறை நெருக்கத்தை அடைந்திருக்கிறார்கள். (உ-ம்) அஜ்மீர் காஜா நாயகம் (ரஹ்) ,
சிலர் இறைவனின் ஐதுப்பில் சுழன்று சுழன்று நடனமாடுபவர்களாகவும், அதில் இறைதிருப்தி அடைந்தவர்களாகவும் காட்சியளிக்கின்றனர். ( உ-ம்) சம்ஸு தபேரஸ் (ரஹ்) , மௌலானா ரூமி (ரஹ்)
இப்படி பல்வேறு பலதரப்பட்ட நிலையில் மொத்தம் 69 (ஹாலில்) இறைநேசர்களாக திகழ்ந்திருக்கிறார்கள் .
இந்த 69 நிலைபாடுகளை வரிசைக்கிரமமாக நண்பர்கள் யாரேனும் தகவல் வைத்திருந்தால் தெரியப்படுத்தவும்.

( மனித வாழ்வின் மாண்புகள் 7 )

புலன் பொறிகள் .




லாவோத் சூ சொல்கிறார்.

" மௌனம் சாத்தியம் ஆக வேண்டுமானால் புலன் பொறிகளை மூடி வைத்து விடு. மிக அவசியம் என்றால் மட்டுமே கண்களை திற. அவசியம் பார்க்க வேண்டும் என்றால் மட்டுமே பார். இல்லாவிட்டால் எந்த தேவையும் இல்லை. பொருட்களை கண்டு கொள்ளாமல் சென்று விடு.கண்களை காலியாக வைத்திரு. வெறுமையான கண்களோடு இந்த உலகத்தை பார். அல்லது இந்த உலகத்தை பார்க்காமலே கூட இருந்து விடலாம்.

திபெத்திய மடாலயங்களில் நுழைய வேண்டுமானால், புதிய சீடன் வாயிற்படியில் காத்திருக்க வேண்டும். இருபத்து நான்கு மணி நேரம் கண்களை மூடி வாசலில் உட்கார்ந்திருக்க வேண்டும். சில சமயம் நாற்பத்தி எட்டு மணி நேரம் கூட ஆகி விடலாம். அதற்கு மேலும் கூட ஆகலாம். பசியோடு கண்களை மூடியவாறு இரவு-பகலாக உட்கார்ந்திருக்க வேண்டும். குரு வாசல் வழியாக பல தடவை போய் வந்து கொண்டு இருப்பார். சீடர்களும் வருவார்கள் போவார்கள் மற்றவர்களும் வருவார்கள். ஆனால் அவன் கண்களை மூடியபடி உட்கார்ந்திருக்க வேண்டும்

இதுதான் முதல் பரீட்சை. ஆர்வம் இல்லாமல் இருக்கும் திறன் இருக்கிறதா? இல்லையேல் யார் வருவது போவது என்று பார்க்க ஆரம்பித்து விடுவான்.கண்களை கொஞ்சம் திறந்தால் போதும் யார் வருவது போவது என்று தெரிந்து விடும். அவனுக்கு அதன் மூலம் ஆர்வம் வந்துவிடும். இருபத்து நான்கு மணி நேரம் கூட கண்களை மூடி வைத்திருப்பது முடியாது எனும் அளவுக்கு ஆர்வம் உள்ளவனை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். சிறு குழந்தையாக இருந்தாலும், சரி இதுதான் நியதி. இந்த பரீட்சையில் தேற வேண்டும்.

இருபத்து நான்கு மணி நேரம் கூட கண்களை மூடி வைத்திருப்பதற்கு பயம். மனம் அமைதி இழந்து புலன்பொறிகளின் தகவல்களுக்காக பரபரக்கிறதே. அதை தராவிட்டால், மனம் வலு இழந்து சாக ஆரம்பித்து விடும்

அதனால்தான் பொறிகளை அடக்கி வைப்பது மனதின் மரணமாகி போகிறது. உலகம் முழுக்க சோதனை செய்து பார்த்திருக்கிறார்கள். பொறிகளுக்கு அவற்றின் வழக்கமான உணவை மறுத்து விடும்போது,நேரம் முடிவில்லாமல் போய்விடுகிறது. ஒரு மணி நேரம்தான் கழிந்திருக்கும் ஆனால் உனக்கு ஒரு யுகம் போல தெரிகிறது !

மனதின் ஓயாத சம்மட்டி அடிகளை தாங்கி கொண்டு புலன் பொறிகளை மூடி வைத்து, மனதிற்கு தீனி போடாமல் இருந்து விட்டால், மனம் தளர்வாக இருக்க வந்துவிடுகிறது. மனம் தளர்வாக இருக்க

ஆரம்பித்து விட்டவிட்டால், சுயம் இருத்தல் உனக்குள் மலர ஆரம்பித்து விடுகிறது.புலன் பொறிகள் பாற்பட்ட வாழ்வை எந்த அளவுக்கு குறைவாக வாழமுடியுமோ அந்த அளவுக்கு குறைவாக வாழ பழகிக் கொள்.

மனதோடு சமாதானம் செய்து கொள்ளாதே. அப்படி செய்தால் மனம் தான் வெற்றி பெறும். எல்லா சமாதானங்களும் அக உலகில் தோல்விகளாகத்தான் முடிகின்றன.எனவே புலன் பொறிகளின் துளைகளை மூடிவிடு என்கிறார் ஓஷோ.

பேச்சைக் கற்றுக் கொள்ளும் குழந்தையானது எங்கே எதைப் பேச வேண்டும், எப்போது மௌனிக்க வேண்டும் என்பதையும் சேர்த்தே கற்றுக் கொள்கிறது, அந்நியரைக் கண்டால், அச்சத்தில் மௌனித்துவிடும் குழந்தையைப் போல் நீயும் உனது நப்ஸ் பேசத்தூண்டும் போது, மௌனித்துவிடு, அதுவே அந்நியரை விட கெடுதியான நப்ஸின் தீங்கை விட்டும் உன்னைப் பாதுகாக்கும்.

நப்ஸானது பற்பல வார்த்தை ஜாலங்களை உனது உள்ளத்தில் உதிக்கச் செய்யும் அது வெளிரங்கத்தில் இனிமையானதாக அர்த்தமுள்ளதாக தோன்றினும் அதன் திரைமறைவில் நஞ்சை கலந்தே வைத்திருக்கும், அதன் மூலம் கேட்பவரின் உள்ளத்தை காயப்படுத்தும் பாவம் உன்னை அறியாமலே நிகழ்ந்துவிடும், அதனால் தான் அண்ணல் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிவித்தார்கள: "நாவைப் பேணியவர் பாதுகாக்கப்பட்டவர் ஆவார்."

நாவானது அதன் அமைப்பில் மென்மையானதாக இருப்பினும் அதன் மூலம் ஏற்படும் தீங்குகள் கடுமையானதாக இருக்கின்றது அதனை பெட்டியில் வைத்து பூட்டிவிடு, உண்மையில் அது சர்ப்பத்தினும் கொடிய நஞ்சு நிறைந்ததாக உள்ளது, சர்ப்பம் அதன் புற்றில் சென்று அபயம் அடைவதைப் போன்று அந்த நாவையும் அதன் புற்றில் வைத்து அடக்கமாக்கிவிடு அதாவது வாயைப் மூடிக் கொள்.

**அபூபக்கர் (ரலி) அவர்கள் அடிக்கடி வாயில் கூழாங்கற்களை போட்டு வாய் மௌனித்து இருப்பார்கள்**.
அமீருல் முஃமினின் மௌலா அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் அறவித்தார்கள்: "பேசக் கற்றுக் கொள்வதைப் போன்று மௌனிக்க கற்றுக் கொள்ளுங்கள் பேசுவது உங்களை வழிநடத்தும் ஆனால் மௌனம் உங்களை பாதுகாக்கும்."

"மௌனிப்பதன் மூலம் நீங்கள் இரண்டு தன்மைகளை அடையப் பெறலாம். உங்களை விட அறிவில் சிறந்தவர்களிடம் இருந்து நீங்கள் அறிவைப் பெறலாம், உங்களையும் விட அறியாமையில் மூழ்கி இருப்பவர்களின் அறியாமையை நீங்கள் புறக்கணிக்கலாம்,"

நூரி என்கிற சூஃபி ஞானி தியானத்தில் அசைவற்றிருந்தார். ஒரு முடி கூட அசையவில்லை. "நீர் இத்தகைய ஆழ்ந்த தியானத்தை எப்படிக் கற்றீர் ? யாரிடம் இருந்து கற்றீர் ? என்று கேட்கப்பட்டது .
"ஒரு எலி பொந்தின்முன் காத்திருக்கும் பூனையொன்றிடம் இருந்து நான் அதைக் கற்றேன். அந்தப் பூனை என்னை விடவும் அசைவற்றிருந்தது. பூனைக்கு எலி கிடைத்தது. எனக்கு ஞானம் கிடைத்தது "
என்றார் அவர்.

ரஹ்மத் ராஜகுமாரன் .

( மனித வாழ்வின் மாண்புகள் 8 )

பிரதிபலித்தலும், பின்பற்றுதலும்



ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு தனித்தன்மை உண்டு. வெவ்வேறு விரல்களைப் போல் அவர்கள் வேறுபடுகிறார்கள்.

இரட்டைக் குழந்தைகள்கூட ஒரே மாதிரி சிந்திப்பதில்லை. யாரையாவது ஆசானாகக் கொண்டு வாழ்வை அமைத்துக் கொள்வதற்கு நமக்கு கற்றுத் தரப்படுகிறது.
கைப்பிடித்து எழுத கற்றுக்கொள்வது போல், கை விரல் பிடித்து நடக்கப் பழகிக்கொள்வது போல் யாரையேனும் சார்ந்து வாழ்க்கையே நுகர்வது இலகுவாக இருக்கிறது.
அதற்கு ஒரு ஆசான் தேவையாக இருக்கிறது.

**பிரதிபலிப்பது என்பது வேறு. பின்பற்றுவது என்பது வேறு.**
**பிரதிபலித்தல் என்பது கடினம். பின்பற்றுதல் என்பது எளிது .**
நான் செய்யவேண்டியதெல்லாம் அடுத்தவர் செய்ததை அப்படியே செய்து, அடுத்தவர் சொன்னதை அப்படியே சொல்லி, புறவயமாகத் தன்னை தானே மாற்றிக்கொண்டு தன் தனித்தன்மையை ஆழ்ந்து உள்ளுணர்வுக்குள் தள்ளி அமுக்கி விடுவது!

பிரதிபலித்தல் கடினமானதுதான்.ஆனால் அது இயல்பாக நிகழ்வது. பிரயத்தனங்கள் இல்லாமல் கூடுவது. வெகுகாலம் அதற்கு தேவைப்படுகிறது.
பின்பற்றுவது மூலத்தை போல செய்வது. பிரதிபலிப்பது அற்புதமானது. சுயத்தை உணர்பவானால் மட்டுமே பிரதிபலிக்க முடியும்.எத்தனை பேர் பிரதிபலித்தாலும் மூலம் அப்படியே இருக்கும் !
அழகிய முழுநிலவை குளம் பிரதிபலிக்கிறது. எத்தனை குளம் வேண்டுமானாலும் நிலவை பிரதிபலிக்கலாம். வானத்தின் நிலா நிலாவாகவே இருக்கிறது ! குளத்தின் நீர் தெளிந்திருந்தால் மட்டுமே நிலவைப் பிரதிபலிக்க முடியும்.
பிரதிபலிப்பதற்காக நிலவோ குளமோ முயற்சி செய்வதில்லை குளம் குளமாகவே இருக்கிறது . அதன் நீர் நீராகவே இருக்கிறது. பிரதிபலிக்கும்போது அதன் நீர் இன்னும் அழகாக இருக்கிறது.

நிலவு நிலவாக இருக்கிறது - அதன் வெளிச்சம் பற்றி நீங்கள்தான் பேசிக் கொண்டிருக்கிறீர்கள் - ஜென்
நபி (ஸல்) அவர்கள் செய்ததுபோல் ஒவ்வொரு செயலையும் செவ்வனே பின்பற்றுவது சுன்னத். சுன்னத்தைப் பற்றி பிடித்து அதையையே வாழ்க்கை முழுவதும் பிரதிபலிக்க உரைக்கிறது குர்ஆனின் ஒரு வசனம்.

" நபியே, நீங்கள் சொல்லுங்கள். நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள், அல்லாஹ் உங்களை நேசிப்பான். இன்னும் அல்லாஹ் உங்களை மன்னிப்பான்''.
குர்ஆன் (3:31)
சுன்னத்தை எண்ண சுத்தியோடு செய்தால் அல்லாஹ்வின் நேசத்தைப் பெறுவதோடு, அறிந்தோ, அறியாமலோ, தெரிந்தோ, தெரியாமலோ, மறந்தோ செய்யும் தவறுகளுக்கும் அல்லாஹ்வின் மன்னிப்பு கிடைக்கும். அதனால் நபி தோழர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் நடைமுறைகளைக் கவனித்து அதனையே பின்பற்றி அப்படியே வாழ்க்கையில் பிரதிபலித்தார்கள்.

ஒருமுறை பெருமானார் (ஸல்) அவர்கள் குழம்பில் இருந்த சுரைக்காய்த் துண்டுகளைத் தேடி எடுத்து சாப்பிட்டதைப் பார்த்ததும், அன்றிலிருந்து நபித்தோழர்கள் சுரைக்காயை விரும்பி சாப்பிட்டதாக அனஸ் (ரலி) அவர்கள் அறிவிப்பது புகாரி, முஸ்லிம், முஅத்தா, அபூதாவூத், திர்மிதீ ஆகிய நூற்களில் காணப்படுகிறது.

சுரைக்காய் நீர்த் தாவரம். பாலைவனப் பகுதியில் நீர்த்தாவரங்கள் உடலுக்கு உகந்தது. நபி தோழர்கள் நபி வழி நடந்து சுன்னத்தைக் கடைப்பிடித்ததால் எண்ணற்ற பயன்களையும் பெற்றனர்.

வேக வைக்காத பூண்டு உண்பதை உத்தம நபி (ஸல்) அவர்கள் விரும்பவில்லை என்பதையறிந்ததும் நாங்களும் பச்சைப் பூண்டு தின்பதைத் திண்ணமாய் விட்டு விட்டோம் என்று எம்பெருமானார் அவர்களின் அருமைத் தோழர் அலி (ரலி) அவர்கள் அறிவிப்பது அபூதாவூத், திர்மிதீ நூல்களில் காணப்படுகிறது.

பச்சைப் பூண்டின் வாடை பலமணி நேரம் வாயில் வீசும். பேசும் பொழுது அவ்வாடை பிறரை முகம் கோண செய்யும். பிறரை வெறுப்புக்காளாக்காது காப்பாற்றவே பச்சைப் பூண்டு உண்பதை உதறினார்கள் உத்தம நபி (ஸல்) அவர்கள்.

கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அன்னவர்கள் கூறினார்கள்: "எனது தோழர்கள் நட்சத்திரங்களை போன்றவர்களாவார்கள். எனவே அவர்களில் நீங்கள் யாரை பின்பற்றினாலும் நேர்வழி அடைவீர்கள். மிஷ்காத்: 6018

கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அன்னவர்கள் கூறினார்கள்: "மக்களில் சிறந்தவர்கள் என் தலை முறையினர் (ஸஹாபாக்கள்) அவர்களுக்குப் பிறகு (சிறந்தவர்கள்) அவர்களையடுத்து வருபவர்கள். (தாபிஈன்கள்) அவர்களுக்கும் பிறகு (சிறந்தவர்கள்) அவர்களையடுத்து வருபவர்கள். (தப அத்தாபிஈன்கள்)

பின்னர் ஒரு சமுதாயத்தார் வருவார்கள். அவர்களுடைய சாட்சியம் அவர்களுடைய சத்தியத்தை முந்திக் கொள்ளும். அவர்களுடைய சத்தியம் அவர்களுடைய சாட்சியத்தை முந்திக் கொள்ளும்.
ஹழ்ரத் அப்துல்லாஹ் பின மஸ்ஊத் (ரலி) ஸஹிஹுல் புகாரி – 3651

நபி (ஸல்) அவர்களிடமிருந்து பிரதிபலித்ததை ஒரு இலட்சத்து இருபத்தி நான்காயிரம் நபித்தோழர்கள், மற்றும் தாபிஈன்கள், தப அத்தாபிஈன்கள் என அத்தனை பேர்களும் பின்பற்றி தாங்களும் பிரதிபலித்தார்கள்.
وَّجَعَلَ الْقَمَرَ فِيْهِنَّ نُوْرًا ۙ وَّجَعَلَ الشَّمْسَ سِرَاجًا
அவனே, அவைகளில் சந்திரனைப் பிரதிபலிக்கும் வெளிச்சமாகவும், சூரியனை ஒளி விளக்காகவும் அமைத்தான். (அல்குர்ஆன் : 71:16)
"நிலவைப் பார்க்கும் ஒருவன் தானே நிலவாகிவிடுகிறான், அல்லது அவனால் பார்க்கப்படும் நிலவு அவனாகிவிடுகிறது !"என்கிறது ஜப்பானிய கவிதை ஒன்று

" நிலவின் வெளிச்சத்தை காணும்போது மனதும் ஒளிரத்துவங்குகிறது, அந்த வெளிச்சத்தை நிலவு தன்னுடையது என்று தான் நினைத்துக் கொள்ளும் " என்று மையோ என்ற கவிஞன் சொல்கிறான்,

" நிலவு நிலவாகத்தான் இன்னமும் இருக்கிறது - அதன் வெளிச்சம் பற்றி நீங்கள்தான் பேசிக்கொண்டிருக்கிறீர்கள்"

- ஜென்

"நிலவு நனைவதுமில்லை , கரைவதுமில்லை.
உலகின் எல்லாக் குளங்களிலும் ஒரே நிலவுதான் இருக்கிறது"
ஜென் கவிதைகள்தான் ஆனாலும் ஆன்மீகத்தில் இது எவ்வளவு மகத்தான உண்மையை நமக்கு உரைக்கிறது !

ரஹ்மத் ராஜகுமாரன் .

( மனித வாழ்வின் மாண்புகள் 9 )

மரண பயம்.



மனிதனின் அற்ப சந்தோஷங்கள், துன்பங்கள், துயரங்கள் எல்லாம் இந்த உடலுக்கு ஏற்படுகிறதே தவிர உடல் தாண்டி வேறெதையும் நீங்கள் உணரமுடியாது .

உடலுக்குப் பிழைப்பும் , இனப்பெருக்கமும் மட்டும்தான் தெரியும்.
அது மட்டுமல்ல, உங்கள் வாழ்வின் ஒவ்வொரு கணமும் உங்கள் உடல் நேரே மண்ணறை நோக்கித்தான் நடை போட்டுக்கொண்டிருக்கிறது. அது வேறெங்கும் செல்ல முடியாது.
உங்கள் உடல் என்பது பூமித்தாயவள் உங்களுக்கு கொடுத்த கடன். கடனை திருப்பி கேட்டு அது பெற்றுக் கொள்வதை நீங்கள் மரணம் என்று குறிப்பிடுகிறீர்கள்.
இவ்வுலகில் வாழும் எல்லா உயிரினமும் இப்பூமியின் மறுபயன்பாடுதான் **(recycle)** என்கிறது அறிவியல்.

"இப்போது நான் அலுவலகம் செல்கிறேன் .வீட்டுக்கு போகிறேன் .கிரிக்கெட் மேட்ச் பார்க்கப் போறேன்" என்று நீங்கள் என்ன வேண்டுமானாலும், நினைத்துக் கொள்ளுங்கள் ஆனால் உங்கள் உடலைப் பொறுத்தவரை ஒவ்வொரு நொடியும் அது படைக்கப்பட்ட மண்ணறையை நோக்கித்தான் பயணித்துக் கொண்டிருக்கிறது. புது மணப்பெண் தன் தாய் வீட்டை நோக்குவது போல .

"நீங்கள் எங்கிருந்தபோதிலும் மரணம் உங்களை அடைந்தே தீரும்; மிகப் பலமான உயர்ந்த (கோட்டை) கொத்தளத்தின் மீது நீங்கள் இருந்தபோதிலும் சரியே! " ( குர்ஆன் 4 :78 )

உங்கள் உடல் உறுதியாக இருக்கும்போது இந்த மரணத்தை நீங்கள் மறந்து போகலாம். ஆனால் மெதுவாக காலம் செல்லச் செல்ல உங்கள் உடலின் தன்மை இதுதான் என்பது அப்பட்டமாக புரியும். உங்கள் வாழ்வில் நீங்கள் அறிந்ததெல்லாம் இந்த உடல் மட்டும்தான் என்றால், எப்படியும் அதை இழக்கத்தான் போகிறீர்கள். உங்களுக்கு வேறு வழி இல்லை. உங்களுக்கு கவலையும் பயமும் மட்டுமே மிஞ்சும் .

பயம் என்பது வாழ்வின் ஒரு அங்கம் என்று பலரும் எண்ணத் தொடங்கி விட்டார்கள். அது தவறு. பயம் என்பது உங்கள் முழுமையற்ற நிலையின் வெளிப்பாடு. இந்த வாழ்வை அதன் விஸ்தாரத்திலும் அதற்கே உரிய பற்பல பரிணாமங்களிலும் இந்த உடலோடு மட்டும் அடையாளம் கொண்டு நீங்கள் வாழ்கிறீர்கள். அப்படி வாழும் போது பயம் என்பது இயல்பாக இருக்கத்தான் செய்யும். உடலைத் தாண்டி நீங்கள் சிந்தித்தால் , மரணம் என்பது ஒரு நிகழ்வாக தெரியும்.

اَلَّذِيْنَ قَالُوْا لِاِخْوَانِهِمْ وَقَعَدُوْا لَوْ اَطَاعُوْنَا مَا قُتِلُوْا  قُلْ فَادْرَءُوْا عَنْ اَنْفُسِكُمُ الْمَوْتَ اِنْ كُنْتُمْ صٰدِقِيْنَ
(போருக்கு செல்லாமல் அம் முனாஃபிக்குகள் தம் வீடுகளில்) அமர்ந்து கொண்டே (போரில் மடிந்த) தம் சகோதரர்களைப் பற்றி: “அவர்கள் எங்களைப் பின்பற்றியிருந்தால் கொல்லப்பட்டிருக்க மாட்டார்கள்” என்று கூறுகிறார்கள்; (நபியே!) நீர் கூறும்: “நீங்கள் (சொல்வதில்) உண்மையாளர்களானால் உங்களை மரணம் அணுகாவண்ணம் தடுத்து விடுங்கள் (பார்ப்போம் என்று).
(அல்குர்ஆன் : 3:168)

பிரார்த்தனைகள், கோயில்கள், மதங்கள் இவைகள் மரணம் மட்டும் இல்லையெனில் மறைந்துபோகும்.
மரணத்தை கண்டு எல்லோருக்கும் பயம்.
எல்லா பயங்களும் மரணத்தில்தான் முடிகின்றன.
ஒவ்வொரு மரணமும் நமக்கு எச்சரிக்கை.
ஒவ்வொரு மரணத்திலும் அப்போதைய அழுகை நமக்காகவே
மரணத்தை புரிந்தவன் வென்றவனாகிறான்.
வென்றவன் எவனும் பயம் கொள்வதில்லை.
பயம் கொள்ளாதவனுக்கு மரணமே இல்லை !

وَلَا تَحْسَبَنَّ الَّذِيْنَ قُتِلُوْا فِىْ سَبِيْلِ اللّٰهِ اَمْوَاتًا  بَلْ اَحْيَآءٌ عِنْدَ رَبِّهِمْ يُرْزَقُوْنَۙ
அல்லாஹ்வின் பாதையில் போரிட்டுக் கொல்லப்பட்டவர்களை மரித்தவர்கள் என்று நிச்சயமாக எண்ணாதீர்கள் - தம் ரப்பினிடத்தில் அவர்கள் உயிருடனேயே இருக்கிறார்கள் - (அவனால்) அவர்கள் உணவளிக்கப்படுகிறார்கள்.
(அல்குர்ஆன் : 3:169)

فَرِحِيْنَ بِمَآ اٰتٰهُمُ اللّٰهُ مِنْ فَضْلِهٖ ۙ وَيَسْتَبْشِرُوْنَ بِالَّذِيْنَ لَمْ يَلْحَقُوْا بِهِمْ مِّنْ خَلْفِهِمْ ۙ اَ لَّا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُوْنَ ۘ
தன் அருள் கொடையிலிருந்து அல்லாஹ் அவர்களுக்கு அளித்ததைக் கொண்டு அவர்கள் ஆனந்தத்துடன் இருக்கிறார்கள்; மேலும் (போரில் ஈடுபட்டிருந்த தன் முஃமினான சகோதரர்களில் மரணத்தில்) தம்முடன்

சேராமல் (இவ்வுலகில் உயிருடன்) இருப்போரைப் பற்றி “அவர்களுக்கு எவ்வித பயமுமில்லை அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்” என்று கூறி மகிழ்வடைகிறார்கள். (அல்குர்ஆன் : 3:170)

ரஹ்மத் ராஜகுமாரன்

( மனித வாழ்வின் மாண்புகள் 10 )

கழுகும் அதன் 7 கொள்கைகளும்



கழுகு (Eagle) ஓர் அற்புதமான பறவை. அதற்குச் சிறப்பான பார்வையும், உயரப் பறக்கும் ஆற்றலும் உள்ளன. உலக நாடுகளின் சின்னங்கள் முதல் வியாபாரப் பொருட்கள் பலவற்றை அலங்கரிப்பதற்குக் காரணம் அதன் சிறப்பான பண்புகள் ஆகும். கழுகிடம் காணப்படும் ஏழு குணாம்சங்கள் உயர்வான மனித வாழ்வை விரும்பும் ஒவ்வொருவருக்கும் அவசியம்.

**கொள்கை 1:**
கழுகுகள் தனியாக, உயரத்தில் பறக்கும். அவை ஏனைய பறவைகளுடன் சேர்ந்து பறக்காது . ஏனைய பறவைகளும் கழுகுகள் பறக்கும் உயரத்தில் பறக்க முடியாது.
கழுகுகள் கழுகுகளுடன் மட்டும் பறக்கும்!

**கொள்கை 2:**
கழுகுகள் கூர்மையான பார்வை உடையன. ஐந்து கிலோ மீட்டருக்கு அப்பாலுள்ள ஒன்றை அவற்றால் தெளிவாகப் பார்க்க முடியும். கழுகு ஓர் இரையைப் பார்த்ததும், அது தன் பார்வை ஒடுக்கி அதைப் பிடிக்க முயலும். தடைகள் வந்தாலும், அது தன் தன் கவனத்தை திசை திருப்பாது, தன் பார்வையை இரையின்மேல் வைத்திருக்கும்.
தரிசனமும் தடைகளின்போது சிதறாத கவனமும் வெற்றியடையும்!

**கொள்கை 3:**
பிணந்தின்னிக் கழுகு போல் கழுகு அழுகியவை மற்றும் இறந்தவற்றை உண்ணாது. அது புதிதான இரையினையே உண்ணும்.

எதை உண்பது? எதைத் தெரிவது? எதை விலக்குவது? என்பதில் கழுகுகள் சரியான தெரிவை எடுக்கும்!

**கொள்கை 4:**

கழுகுகள் புயலை விரும்புகின்றன. புயல் காற்றின் மூலம் அவை மேகங்களின் மேலாக உயர்த்தப்படுகின்றன. இதனால், அவை சிறகினை விரித்து காற்றில் மிதக்கவும், அதன் மூலம் இளைப்பாறவும் சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொள்கின்றன. அதே நேரம், மற்றப் பறவைகள் மரக்கிளைகளில் ஒளிந்து கொள்ளும்.

வாழ் நாட்களில் ஏற்படும் புயல்கள் போன்ற சவால்கள், உயரப் பறக்க கிடைக்கும் சந்தர்ப்பங்களாகவும், நன்மையாகவும் மாற்றிக் கொள்ளப்படுகின்றன!

**கொள்கை 5:**

கழுகு பரீட்சையின் பின்பே நம்பிக்கை வைக்கும். பெண் கழுகு ஓர் ஆண் கழுகை சந்தித்து உறவு கொள்ளு முன், அது ஆண் கழுகுடன் நிலத்திற்குச் சென்று சிறு தடி போன்ற குச்சியை எடுக்கும். பின்பு மேலே ஆணுடன் உயரத்திற்குப் பறந்து சென்று அந்தக் குச்சியினைக் கீழே போட்டுவிட்டு அவதானித்துக் கொண்டிருக்கும். நிலத்தை நோக்கி வீழ்ந்து கொண்டிருக்கும் குச்சியை ஆண் கழுகு விரட்டிச் சென்று, அது நிலத்தில் விழு முன் பிடித்து, அதை உயரப் பறக்கும் பெண் கழுகிடம் சேர்ப்பிக்கும். பெண் கழுகு மீண்டும் குச்சியைக் கீழே போட்டுவிடும். ஆண் கழுகு பிடிப்பதற்காக கீழே செல்லும். இவ்வாறு குச்சியை வீழ்த்துவதும், எடுத்து வருவதுமாக பல மணித்தியாலங்களுக்கு பரீட்சை நடைபெறும். பெண் கழுகு ஆண் கழுகிடமுள்ள பொறுப்புணர்வை நிச்சயப்படுத்திக் கொண்டதும் அது உறவு கொள்ள இடமளிக்கும்.

உறவை ஏற்படுத்திக் கொள்ள முன் பொறுப்புணர்வு சோதனைக்கு உள்ளாக்கபடுகின்றது!

**கொள்கை 6:**

முட்டையிடத் தயாரானதும், ஆணும் பெண்ணும் மலையின் உச்சியிலுள்ள, ஏனைய உயிரிணங்கள் இலகுவில் வந்தடைய முடியாத இடத்தினைத் தேர்வு செய்யும். ஆண் முட்களைக் கொண்டு வந்து பாறைப் பிளவில் கூட்டினை அமைக்க ஆரம்பிக்கும். அதன் பின் குச்சிகளையும், அதன் மேல் முட்களையும் வைத்துக் கட்டும். அதன்மேல் மிருதுவான புற்களை அடுக்கி முதலாவது அடுக்கினை முடிக்கும். அதன் பின் முட்களைப் பரப்பி, அதன் மேல் புற்களைப் பரப்பும். அதற்கு மேலாக தன் இறகுகளைப் பரப்பி, கூட்டினைக் கட்டி முடித்துவிடும். கூட்டின் வெளியேயுள்ள முட்கள் வெளியேயிருந்து எதுவும் கூட்டிற்குள் வருவதைத் தடுக்கும். பெண் கழுகு முட்டையிட்டு பாதுகாக்க, ஆண் கழுகு இரையை வேட்டையாடும்.

குச்சுகளைப் பயிற்றுவிக்க பெண் கழுகு அவற்றை கூட்டிற்கு வெளியே எடுத்துவிடும். பயந்த குஞ்சுகள் கூட்டிற்குள் தாவி வந்துவிடும். ஆகவே, குஞ்சுகளை கூட்டிற்கு வெளியே எடுத்துவிட்டதும், கூட்டிலுள்ள இறகுகளை வெளியேற்றி முட்களுடன் கூட்டை விட்டுவிடும். பயந்த குஞ்சுகள் மீண்டும் கூட்டிலுள் தாவியதும், அங்குள்ள முட்கள் அவற்றைக் குத்திவிடும். இதனால் குஞ்சுகள் கூட்டைவிட்டு வெளியேறும்.

அடுத்து, மலை உச்சியிலிருந்து குஞ்சுகளை தாய்க் கழுகு கீழே தள்ளிவிடும். பயத்தால் அவை கீச்சிட்டு, கீழே விழுமுன் ஆண் கழுகு அவற்றைப் பிடித்து தன் மேல் வைத்துக் கொண்டு மலை உச்சிற்கு கொண்டு வரும். குச்சுகள் இறக்கை அடிக்கத் தொடங்கும் வரை, இவ்வாறு நடைபெறும்.

குடும்பம் இருவரின் பங்குபற்றலாலும் வெற்றி பெறும். முட்கள் குத்துப்போது, வாழ்வு அனுபவப்படாமல், முன்னேறாமல், கற்றுக் கொள்ளமல் அதிக வசதியாக இடத்தில் இருப்பதை உணர்த்துகின்றது. வாழ்விலுள்ள முட்கள் வளர வேண்டும், கூட்டை விட்டு வெளியேறி வாழ வேண்டும் என்பதை கற்பிக்கின்றன.

உன்னை நேசிப்பவர்கள் உன்னை சோம்பலினால் நலிவுற விடமாட்டார்கள். அவர்களின் செயல் கூடாத செயலாகத் தெரிந்தாலும் நம் வளர்ச்சி, செழிப்பு எனும் நன்மைக்காளுக்காக அவர்கள் நம்மை கடினமான பாதையில் தள்ளுவார்கள்!

**கொள்கை 7 :**
ஒரு கழுகு வயதாகியதும், அதன் இறக்கை பலவீனமாகி, அது பறக்க வேண்டிய வேகத்தில் பறக்க ஒத்துழைக்காது. அது சாகும் அளவிற்கு பலவீனப்பட்டுள்ளதாக உணர்ந்ததும், மலையிலிருந்து நீண்ட தூரத்திற்கு ஓய்விற்காகச் சென்றுவிடும். அங்கிருந்து, தன் உடலிலுள்ள அத்தனை இறகுகளையும் மொட்டையாக வரும்வரை நீக்கிவிடும். அந்த மறைவான இடத்தில் புது இறகுகள் முளைக்கும் வரை தங்கியிருந்து, பின் வெளியே வரும்.
சுமையான, வாழ்க்கைக்குத் தேவையற்ற பழைய விடயங்கள், பழக்க வழக்கங்கள் இடையிடையே நீக்கப்பட வேண்டும்!
ஆங்கில மூலம்: கிவ்வி லயின்

- ரஹ்மத் ராஜகுமாரன்

**Abdullah Baqavi** கழுகின் கொள்கைக்கும் மனித மனத்திற்கும் தொடர்பு உள்ளதே .
உலகில் படைக்கப்பட்ட அத்தனை ஜீவராசிகளுக்கும் ஒரு கொள்கை கோட்பாடு (ஷரியத்) கண்டிப்பாக இருக்கிறது .
ஆனால் மனித மனம் தனக்கு வகுக்கப்பட்ட ஷரீயத்தை மீறவே எண்ணுகிறது
" பறவை என்பது வானம்.
அது பூமிக்கு ஒரு நாளும் கட்டுப்பட்டதல்ல "
- கொரியா பழமொழி

( மனித வாழ்வின் மாண்புகள் 11 )

வெவ்வேறு அல்ல ஒன்றுதான்.



**"The Travelers and the Grapes" என்கிற** சூஃபி கதை ஒன்றை ஜலாலுத்தீன் ரூமி அவர்கள் சொல்வார்கள்.

ஒரு அராபியன் ,கிரேக்கன் ,பெர்ஷியன், துருக்கியன் ஆகியோர் ஒன்றாக பயணம் செய்து கொண்டிருந்தனர். பசி எடுத்தது . தங்களிடமிருந்த காசுகள் அனைத்தையும் ஒன்றாக போட்டனர்.
அதில் பசிக்கு என்ன வாங்குவது என்று கேள்வி வந்தது.
அராபியன் எனக்கு **Inab** வேண்டும் என்றான் .கிரேக்கன் எனக்கு **stafil** வேண்டும் என்றான். துருக்கியன் எனக்கு **uzum** வேண்டும் என்றான். பெர்ஷியன் எனக்கு அங்கூர் வேண்டும் என்றான்.

அவர்கள் சண்டை முற்றிய போது, அந்த வழியாக வந்த சூஃபி ஒருவர் பணத்தை எடுத்துக்கொண்டு , அவர்கள் கேட்டது அனைத்தையும் வாங்கி வருவதாக சொல்லி சென்றார். அவர் திரும்பி வரும்போது, அவர் கையில் திராட்சைகள் இருந்தன.

கிரேக்கன் அதுதான் நான் கேட்ட stafil என்று எடுத்துக் கொண்டான் .
துருக்கியன் அதுதான் நான் கேட்ட uzum என்று எடுத்துக்கொண்டான் .
பெர்ஷியன் அதுதான் நான் கேட்ட அங்கு அங்கூர் என்றான்.
அராபியன் அதுதான் நான் கேட்ட inab என்றான்.
நாமும் கிட்டத்தட்ட ஒரே திராட்சைக்குத்தான் வெவ்வேறு பெயர்கள் சொல்லி அழைத்துக் கொள்கிறோம்.
ஒரே உள்ளங்கையை நோக்கிச் செல்லும் விரல்களாக மார்க்கங்கள் இருந்தால், நகங்கள் எதற்குக் கிள்ளிக்கொள்ள வேண்டும் ?

இது பற்றி முகைதீன் இப்னு அரபி ( ரஹ்) அவர்களின் கவிதை

வெவ்வேறு படிமங்களுக்கு
என் இதயம் திறந்தே கிடக்கிறது .
இது கிறிஸ்துவ சந்நியாசிகளின்
துறவு மடம் :
சிலைகள் கொலுவிருக்கும்
கோயில் :
அரபு நாட்டு மான்களின்
மேய்ச்சல் வெளி ;
ஹஜ் பயணிகளுக்கு இது
கஃபா பள்ளி :
தவ்ராத்தின் வரை பலகையும்
இதுவே ;
குர்ஆன் வேதமும்
இதுவே ;
நான் அன்பு எனும் மதத்தையே
அனுஷ்டிக்கிறேன்.
அதன் பயணம் எத்திசையை
நோக்கி அடியெடுத்தாலும் சரியே :
அன்பு எனும் மதமே
என்னுடையது
அதுவே என் நம்பிக்கை .
தண்ணீர்
பாய்ந்தால் ஆறு
ஓடினால் ஓடை
வீழ்ந்தால் அருவி
நின்றால் குளம்
நிறைந்தால் ஏரி
கலந்தால் கடல்
...ஆனால் தண்ணீர் ஒன்றுதான். பெயர் மட்டுமே வேறு வேறு.

( மனித வாழ்வின் மாண்புகள் 12 )

அவன் அங்கு இல்லை

ஒரு கருப்பின இளைஞன் வழிபடுவதற்காக கோயிலுக்குள் செல்கிறான். அப்போது கோயில் பொறுப்பாளர்கள் அவனை கோயிலுக்குள் அனுமதிக்க விதியில்லை என்று கூறுகின்றனர்.
ஒரு பொறுப்பாளர் " நீ இன்னும் தெய்வீகத்தை உணர வில்லை .அதனால் நான் உனக்கு ஒரு நல்ல மந்திரம் சொல்லித் தருகிறேன். நீ அதனை கொண்டு வழிபடுபாய். உனக்கு தெய்வீகத்தன்மை வந்த பிறகு இந்த கோயிலுக்கு வா" என்று சொன்னார்.

அவனும் அங்கிருந்து சென்று மிகுந்த நம்பிக்கையுடன் மந்திர மனனத்தில் ஈடுபட்டான்.
ஒரு வருடத்திற்கு பின் அவன் கோயிலுக்கு திரும்ப வந்தான். அந்த பொறுப்பாளருக்கு அவனைப் பார்த்ததும் நடுக்கம் ஏற்பட்டது. இப்போது அவன் முற்றிலுமாக ஒரு ஞானியாக மாறி வந்து இருக்கிறான். அவனை உள்ளே விட முடியாது என்று கூற முடியாது. என்ன செய்வது என்று திகைத்தார்.
அவன் அவரிடம் வந்தான் .

" நீங்கள் ஏதும் நடுங்க வேண்டியதில்லை . நேற்று இரவு எனக்கு இறைவன் தென்பட்டார். நீ அந்த கோயிலுக்கு மறுபடியும் செல்லாதே. அவர்கள் நிச்சயம் உன்னை உள்ளே அனுமதிக்கப் போவதில்லை. என்னையே அவர்கள் கோயிலுக்குள் அனுமதிக்காத போது உன்னை எப்படி அனுமதிப்பார்கள் ! என்றார் " - எனச் சொல்லிவிட்டு அவன் திரும்பி விட்டான்.

" (நபியே!) தங்கள் இறைவனின் திருப்பொருத்தத்தை விரும்பி காலையிலும் மாலையிலும் பிரார்த்தித்துக் கொண்டிருப்பவர்களை நீங்கள் விரட்டி விடாதீர்கள்! அவர்களுடைய கணக்கிலிருந்து எதுவும் உங்களுடைய பொறுப்பாகாது. உங்களுடைய கணக்கிலிருந்து எதுவும் அவர்களுடைய பொறுப்பாகாது. ஆகவே, நீங்கள் அவர்களை விரட்டினால் அநியாயக்காரர்களில் நீங்களும் ஒருவராகி விடுவீர்கள்!" (அல்குர்ஆன் : 6:52)

சூஃபி ஸனாய் :
"அவனது வாசலில் முஸ்லிம் யார்? கிறிஸ்துவன் யார்?
நல்லவன் யார்? கெட்டவன் யார்?
எல்லோரும் தேடுபவர்; அவனோ தேடப்படுபவன்" என்கிறார்

ரஹ்மத் ராஜகுமாரன்
குறிப்பு : இத்துடன் இத்தொடர் நிறைவு பெறுகிறது . ர.ரா

**Rahmath Rajakumaran**
**2019( see book 2019-3 part)** டிசம்பரில் ஆரம்பிக்கப்பட்ட இந்த தொடர் நான்கு பதிவுகளோடு நின்ற போன இத்தொடரை மேற்கொண்டு தொடர வல்ல ரஹ்மான் கிருபை செய்யட்டும். ர.ரா

குர்ஆனின் வசன ஆய்வு 05

اِيَّاكَ نَعْبُدُ وَاِيَّاكَ نَسْتَعِيْنُ




"உன்னையே வணங்குகிறோம்; உன்னிடமே உதவி தேடுகிறோம்" (அல்குர்ஆன் : 1:5)

"அடுத்த வருடம் நடைபெற உள்ள உங்க மகள் திருமணத்திற்கு நான் உதவி செய்கிறேன் . அது சமயம் நீங்கள் எனக்கு தெரிவிக்கவும் " - என்று நண்பர் ஒருவர் தம்முடைய நண்பருக்கு இப்படி கடிதம் எழுதினால் , இரண்டாம் நண்பரின் மகள் திருமணத்திற்கு உதவ முதல் நண்பர் தயாராக இருப்பதாக நாம் அறிய முடிகிறது .

முதல் நண்பர் இரண்டாம் நண்பருக்கு இப்படி கடிதம் எழுதினால் .. " மகள் திருமணத்திற்கு பொருளாதார ரீதியில் உன்னையே நம்பி இருக்கிறேன். நீங்கள் உதவ வேண்டும் " என்று எழுதினால் ....
இரண்டாம் நண்பர் குழம்பிப் போய் யோசிப்பார் . " அட , நம்ம முதல் நண்பருக்குத்தான் குழந்தை குட்டியே பிறக்கவில்லையே ...? எந்த மகள் திருமணத்திற்கு நம்மிடம் உதவி கேட்கிறார் ? , அதுவும் வசதி மிக குறைவான நம்மிடம் போய் ஏன் உதவியை எதிர்ப்பார்க்கிறார் ? என்ற கேள்வி இரண்டாம் நண்பருக்கு குழப்பத்தை ஏற்படுத்தும் அல்லவா ?

இதுமாதிரிதான் "உன்னையே வணங்குகிறோம்; உன்னிடமே உதவி தேடுகிறோம் " என்கிற சொற்றொடர் .
இறைவன் அடியார்களிடமா "உன்னையே வணங்குகிறோம்; உன்னிடமே உதவி தேடுகிறோம் " என்று உதவி கேட்பானா ? இல்லவே இல்லை . நம்மைத்தான் இப்படி கேடகும்படி இறைவன் சொல்றேன் என்பதை யாரும் சொல்லித் தராமலேயே விளங்கிக் கொள்கிறோம் .

அதெப்படி இந்த விளக்கத்தை நம் அறிவைக் கொண்டா விளங்கிக் கொள்கிறோம் ? இல்லை .

நம் ஆன்மாவைக் கொண்டு விளங்கிக் கொள்கிறோம் .

" உன்னையே (இறைவனையே ) வணங்குகிறோம் ; உன்னிடமே (இறைவனிடமே ) உதவி தேடுகிறோம் " என்பதை எந்த குழப்பம் இல்லாமல் நம் ஆத்மாவால் விளங்கி அவனிடம் வேண்டுகிறோம்.

இந்த மாதிரி உயர் இலக்கிய நடையில் உலகத்தில் எந்த ஒரு மஹா இலக்கியத்திலும் காணப்படவில்லை . இது மாதிரி உயர் இலக்கிய நடையில் இனி எவரும் எழுதப் போவதும் இல்லை . எழுதவும் முடியவே முடியாது.

அதனால் இலக்கியத்திற்கெல்லாம் தாய் இலக்கியமாக விளங்கக் கூடிய மிக உயர்ந்த இலக்கியத்தில் இக் குர்ஆனை நபி ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அருளப்பட்டிருக்கிறது !

ஆகவே குர்ஆன் சிந்தித்து அறியக்கூடிய நம் அறிவிற்குரிய வசனங்களாகவும் , நம் ஆத்மா விளங்கிக் கொள்ளக் கூடிய வசனங்களாகவும் அருளப்பட்டிருக்க வேண்டும் என்பது சரிதானோ ?

ரஹ்மத் ராஜகுமாரன்

குர்ஆன் வசன ஆய்வு 06



அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது :

ஒருமுறை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் எங்களிடையே இருந்தார்கள் அப்போது அவர்கள் திடீரென உறங்கி விட்டார்கள் சிறிது நேரத்திற்கு பிறகு புன்னகைத்தவர்களாக தமது தலையை உயர்த்தினார்கள். நாங்கள் "அல்லாஹ்வின் தூதரே ! தாங்கள் சிரிக்கக் காரணம் என்ன என்று கேட்டோம். அதற்கு அவர்கள் சற்று முன் எனக்கு ஓர் அத்தியாயம் அருளப்பெற்றது என்று கூறினார்கள் .

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால்(துவங்குகிறேன்)

اِنَّاۤ اَعْطَيْنٰكَ الْكَوْثَرَ

(நபியே!) நிச்சயமாக நாம் உமக்கு கவ்ஸர் (என்ற தடாகத்தை) கொடுத்திருக்கின்றோம்.

فَصَلِّ لِرَبِّكَ وَانْحَرْ

எனவே, உம் இறைவனுக்கு நீர் தொழுது, குர்பானியும் கொடுப்பீராக.

اِنَّ شَانِئَكَ هُوَ الْاَبْتَرُ

நிச்சயமாக உம்முடைய பகைவன் (எவனோ) அவன்தான் சந்ததியற்றவன். அல்குர்ஆன் (108 : 1-8)
"மிஃஹ்ராஜின் இரவில் சுவர்க்கம் அனைத்தும் எனக்குக் காண்பிக்கப்பட்டன . சுவர்க்கத்தில் தண்ணீராறு , பாலாறு , தேனாறு, மது ஆறு ( திராட்சை ரச ஆறு) குர்ஆன் (47 : 15 )
எனக்குக் காட்டப்பட்டன.
இந்த நான்கு ஆறுகளும் எவ்விடத்திலிருந்து உற்பத்தியாகி , எங்கு போய்ச் சேருகின்றன . ..? " என்று நபி (ஸல்) அவர்கள் ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் கேட்க ,
" நபியே ! இவை ஹவ்லுல் கவ்தருக்குப் போய்ச் சேருகிறது . குர்ஆன் (108 : 01) ஆனால் இவைகள் எங்கு உற்பத்தியாகிறது என்பது எனக்குத் தெரியாது . தாங்கள் இறைவனிடம் கேட்டு தெரிந்து கொள்ளுங்கள் "
" உடனே அதற்கென்று படைக்கப்பட்ட மலக்கு என்னிடம் ஸலாம் சொல்லி . என்னை கண்ணை மூடி திறக்கும்படிச் சொன்னார் .அவ்வாறே கண்ணை மூடி திறக்க ,
அந்த நொடியே அவ்விடத்தில் முத்தினால் அமைந்த குப்பா ஒன்று அதன் வாயிலுக்குத் தங்கத்தினால் கதவு போடப்பட்டிருப்பதைக் கண்டேன்.
அந்த வளை மண்டபத்தின் மீது , இவ்வுலகிலுள்ள மனிதர்கள், ஜின்கள், மற்றும் பெரும் படைப்புகளை ஒன்று சேர்த்து அந்த பெரும் மலையின் உச்சியில் இருக்கும் ஒரு பறவையின் அளவுதான் இருக்கும் .அப்படி பிரமாண்டமான ஒரு குப்பாவுக்குள்ளே இருந்துதான் மேற்கூறப்பட்ட நான்கு
நதிகளும் உற்பத்தியாகுவதைக் கண்டேன் .

அந்த மலக்கு" நபியே ! குப்பாவுக்குள்ளே நுழைய வேண்டுமா..? "என்று கேட்க ,

" இந்த குப்பாவிற்குத் தங்க கதவுகள் போடப்பட்டு பூட்டப்பட்டிருக்கிறதே இந்த பூட்டிற்குரிய சாவி வேண்டுமே ... "

"நபியே .! பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என்ற சொல்தான் சாவி " ( கம்ப்யூட்டரின் கடவுச்சொல் மாதிரி)

நானும் கதவருகே "பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்" என்று சொல்ல கதவு தானாகவே திறந்தது. அந்த குப்பாவுக்குள் நான்கு தூண்கள் இருக்க ஒவ்வொரு தூணிலும் "பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் " என்ற வாக்கியம் எழுதப்பட்டிருந்தது .

மேற்கூறிய நான்கு ஆறுகளில் தண்ணீராறு "பிஸ்மில்லாஹ் " என்ற பதத்திலுள்ள மீமில் இருந்தும் , பாலாறு " "அல்லாஹ்" என்பதிலுள்ள "ஹா" விலிருந்தும் , மது ஆறு "அர்ரஹ்மான் "
என்பதிலுள்ள மீமில் இருந்தும் , தேனாறு "அர்ரஹீம்" என்பதிலுள்ள மீமில் இருந்தும் உற்பத்தியாகிக் கொண்டிருந்தது . ("மீம்" என்னவென்று நீங்கள் அறிவீர்களா ? ) அந்த நான்கு ஆறுகளின் முகத்துவாரங்களும் "பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம் " என்ற வாக்கியம்தான் என்பதை நான் புரிந்து கொண்டேன் " .

ரஹ்மத் ராஜகுமாரன்

வீடியோ : கொலம்பியாவில் உள்ள வானவில் நதி

குர்ஆன் வசன ஆய்வு 07

(சூரா அல் கவ்ஸர் விளக்கம்- இமாம் அல்-ஸஅதி)




{بِسْمِ اللَّهِ الرَّحْمَنِ الرَّحِيمِ إِنَّا أَعْطَيْنَاكَ الْكَوْثَرَ * فَصَلِّ لِرَبِّكَ وَانْحَرْ * إِنَّ شَانِئَكَ هُوَ الأَبْتَرُ} .

(நபியே!) நிச்சயமாக நாம் உமக்கு கவ்ஸர் (என்ற தடாகத்தை) கொடுத்திருக்கின்றோம்.
எனவே, உம் இறைவனுக்கு நீர் தொழுது, குர்பானியும் கொடுப்பீராக.
நிச்சயமாக உம்முடைய பகைவன் (எவனோ) அவன்தான் சந்ததியற்றவன்.

إِنَّا أَعْطَيْنَاكَ الْكَوْثَرَ

“நிச்சயமாக நாம் உமக்கு கவ்ஸர் கொடுத்திருக்கின்றோம்.”

என்று இறைவன் தன் நபி முஹம்மதிடம் صلى الله عليه وسلم ஆறுதலாக கூறுகிறான்:கவ்ஸர் என்றால் “நிறைந்த நன்மையையும் , அதிகமான சிறப்புகளும் கொண்டது. அதில் ஒன்று தான் இறைவன் தன் நபிக்கு صلى الله عليه وسلم கியாமத் நாளில் கொடுக்கும் கவ்ஸர் எனும் நதி. அதன் நீளமும் அகலமும் ஒரு ஆண்டின் பயண தூரமாகும், அதன் நீர் பாலைவிட வெண்மையானது, தேனைவிட சுவையானது, அதை குடிக்க பயன்படும் பாத்திரங்கள், எண்ணிக்கையிலும் ஒளியிலும் வானத்தின் நட்சத்திரங்களை போன்றது. அதிலிருந்து ஒரு முறை குடித்தால், அவருக்கு அதன் பின்னர் எப்பொழுதுமே தாகம் வரவே வராது.

இறைவன் அவருக்கு அளித்த அருட்கொடைகளை கூறிவிட்டு, அதற்காக நன்றிசெலுத்துமாறு கட்டளை இடுகிறான்,

{فَصَلِّ لِرَبِّكَ وَانْحَرْ}

“எனவே, உம் இறைவனுக்கு நீர் தொழுது, குர்பானியும் கொடுப்பீராக.”

இறைவன் இவ்விரு வணக்கங்களை மட்டும் குறிப்பிடுவதற்கான காரணம், இவை இரண்டும் வழிபாடுகளிலேயே மிக சிறந்ததும், இறைவனை நெருங்குவததற்கு மிக முக்கியமான வழிபாடுகளாகும்.
தொழுகையில் மனது, உறுப்புகள் இரண்டும் இறைவனுக்கு கீழ்ப்படிகிறது. குர்பானி கொடுப்பதன் மூலம் ஒரு அடியான் தன்னனிடம் இருக்கும் சிறந்த செல்வத்தைத் தியாகம் செய்து இறைவனிடம் நெருங்குகிறான்,
மேலும் மனிதர்களுக்கு விருப்பமானதாகவும், மனிதன் செலவு செய்ய விரும்பாததுமான பொருட்செல்வத்தை இறைவனின் பாதையில் செலவு செய்கிறான். இவ்வாறு இவ்விரு இபாதத்துகள் மூலமாக இறைவனிடம் நெருங்குகிறான்.

( தன் சொந்த மகனேயே இறைவனுக்காக குர்பானி கொடுக்க துணிந்து பின் ஓர் ஆட்டை குர்பானி கொடுக்கும் வழக்கமும், ஏக இறைவனை வணங்கும் வழக்கமும் திரு மக்காவில் நபி இப்ராஹீம் (அலை) இஸ்மாயீல் (அலை) அவர்களது காலத்தில் இருந்தே வந்தன. மேலும் உலக மக்கள் இறைவனை வணங்க முன்னோக்கும் கிப்லா என்னும் கஃபாவை கட்டமைத்த அந்நிகழ்வுகளை ஞாபகப்படுத்துபவைகளாகவும் இந்த சூரா அமைந்துள்ளது

மேலும் குர்பானி கொடுப்பதில் மற்றொன்றும் இருக்கிறது. அதாவது தன்னையே பலியிட்டு, அவனது தாத்தில் தன்னையே முற்றிலும் அழித்துவிட வேண்டும் என்பதாகும். இது ஆத்மார்த்த குர்பானி. இது நபிமார்களுக்கும் வலிமார்களும் கிடைக்கும் பாக்கியம் .
அதுபோல அவர்களது தொழுகையும் அல்லாஹுத்தஆலாவிற்காகத்தான் இருக்கும் . நன்மைக்காகவோ , சுவர்க்கத்துக்கு ஆசைப்பட்டோ , நரகத்துக்கு பயந்தோ இல்லை என்பதாகும்)

إِنَّ شَانِئَكَ
“நிச்சயமாக உம்முடைய பகைவன்”
அதாவது உம்மை வெறுப்பவன், உம்மை ஏளனப்படுத்துபன், உம்மை ஏசுபவன்
هُوَ الأَبْتَرُ
“(எவனோ) , அவன்தான் சந்ததியற்றவன்.”
{إِنَّ شَانِئَكَ} أي: مبغضك وذامك ومنتقصك {هُوَ الأَبْتَرُ} أي: المقطوع من كل خير، مقطوع العمل، مقطوع الذكر.
அதாவது, அனைத்து நன்மைகளையும் இழந்தவன், அவனின் செயல்கள் எதுவும் பயனற்றது, அவன் புகழும் இழந்தவனாவான்
முஹம்மதை صلى الله عليه وسلم பொறுத்தவரை அவர் குறையற்ற மனிதர், படைப்புகளிலேயே மிகச் சிறந்தவர் அவர்கள்தான், மேலும் அதிகமான உதவியாளர்களையும், பின்பற்றுவோரையும் கொண்டவர் அவர்கள்தான் صلى الله عليه وسلم.
صلى الله عليه وسلم.
( நபி ஸல் அவர்களுடைய எதிரிகளுக்கு இம்மையிலும் மறுமையிலும் சந்ததி அற்றவராக இருக்கின்றனர் என்பதையும் இது குறிக்கிறது . மேலே கூறிய 3 பாக்கியங்கள் (கவ்ஸர் , தொழுகை , குர்பானி ) ஆகிய கிடைக்கப் பெறாதவனாயும் , சந்ததியும் அற்றவனாயும் ஆகிவிடுகிறான்
இம்முன்னறிக்கை இன்றைக்கு சற்றேறக்குறைய ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தது .அக்காலத்திலும் சரி இக்காலத்திலும் சரி சன்மார்க்கத்தை எதிர்ப்பவர்கள் இருந்துதான் வந்தனர், வருகிறார்கள். இவர்களில் சிலர் அறிவீனமாக நபி (ஸல் ) அவர்களது வாழ்வை குறித்து குறைபேசி, தகாத முறையில் தூற்றவும் செய்தனர். அத்தகையோரின் முடிவு எவ்வாறு இருந்தது என்பது உலக பிரசித்தம்)

ரஹ்மத் ராஜகுமாரன் .

குர்ஆன் வசன ஆய்வு 08

(சூரா அல் கவ்ஸர் - இது மனிதனின் மொழியன்று)

திருக்குர்ஆன் அருளப்பட்ட காலத்தில் வாழ்ந்த அரபு மக்களின் மொழிப் புலமையும் ,மனன ஆற்றலும் ஈடு இணையற்றனவாக இருந்தன.
அவர்களின் இலக்கிய எழுச்சியையும், கவிதை ஆர்வத்தையும் சற்று நாம் கவனித்தால் ,அது நம்மை வியப்பில் ஆழ்த்தும் பெருமை பெற்றது.

வல்லோன் அருளிய சொல்லாலுயர்ந்த திருமறை கவ்ஸர் என்கிற அத்தியாயத்தில் 37 எழுத்துக்களால் அமைந்த மூன்றே மூன்று வசனங்களை பெற்று, மிகுந்த பொருள் தருகின்ற சூரா.

சூரா கவ்ஸர் அருளைப்பட்டதை அறிந்த பகைமையுணர்ச்சி கொண்ட பெருங்கவிஞன் மஃனா என்பவன், அதன் சொல்லழகிலேயே சொக்கிப்போய்,"மா ஹாதா கவ்லுல் பஷர் " _ இது மனிதனின் மொழியன்று என்பதாக வியந்து மொழிந்து, அன்று முதல் தான் கவிதை எழுதுவதையே கைவிட்டதாக வரலாறு கூறுகின்றது.

நபி (ஸல்) அவர்கள் காலத்திலேயே யமாமா பிரதேசத்தைச் சேர்ந்த பொய்யன் 'முஸைலமா ' என்பவன் தன்னை நபி என்றும் வாதிட்டான். அவன் திருக்குர்ஆனிலுள்ள அல் கவ்ஸர் என்கிற இந்த அத்தியாயத்தைப் போன்று ஒரு சில சொற்றொடரை இட்டுக்கட்டினான். அது பொய்யென்று அவன் கூடுவே இருந்தவர்களால் நிரூபிக்கப்பட்டது.

قُلْ لَّٮِٕنِ اجْتَمَعَتِ الْاِنْسُ وَالْجِنُّ عَلٰٓى اَنْ يَّاْتُوْا بِمِثْلِ هٰذَا الْقُرْاٰنِ لَا يَاْتُوْنَ بِمِثْلِهٖ وَلَوْ كَانَ بَعْضُهُمْ لِبَعْضٍ ظَهِيْرًا
“இந்த குர்ஆனை போன்ற ஒன்றைக் கொண்டுவருவதற்காக மனிதர்களும் ஜின்களும் ஒன்று சேர்ந்து (முயன்று), அவர்களில் ஒரு சிலர் சிலருக்கு உதவிபுரிபவர்களாக இருந்தாலும், இது போன்ற ஒன்றை அவர்கள் கொண்டு வரமுடியாது” என்று (நபியே) நீர் கூறும். (அல்குர்ஆன் : 17:88)
இந்த இறைத்தீர்ப்பு எக்காலமும் நிலைத்திருப்பதாகும் .

குர்ஆன் வசன ஆய்வு 09

وَلَـقَدْ نَـعْلَمُ اَنَّهُمْ يَقُوْلُوْنَ اِنَّمَا يُعَلِّمُهٗ بَشَرٌ لِسَانُ الَّذِىْ يُلْحِدُوْنَ اِلَيْهِ اَعْجَمِىٌّ وَّهٰذَا لِسَانٌ عَرَبِىٌّ مُّبِيْنٌ




“நிச்சயமாக அவருக்கு கற்றுக் கொடுப்பவன் ஒரு மனிதனே, (இறைவனல்லன்)” என்று அவர்கள் கூறுவதை திடமாக நாம் அறிவோம்; எவனைச் சார்ந்து அவர்கள் கூறுகிறார்களோ, அவனுடைய மொழி (அரபியல்லாது) அன்னிய மொழியாகும்; ஆனால், இதுவோ தெளிவான அரபி மொழியாகும்.
(குர்ஆன் : 16:103)

அனைத்தும் வல்ல அல்லாஹ்விடமிருந்து அண்ணல் பெருமானார் (ஸல் ) அவர்களுக்கு குர்ஆன் இறங்கத் தொடங்கியதும், மக்கா நகர் குரைஷி மக்கள் எதிர்ப்புகள் பலவகைகள் வெளியாகின.
எழுதப் படிக்கத் தெரியாத உம்மி ஒருவரின் வாயிலாக எழில் மிகுந்த வசனங்கள் வெளி வருவதையும், அவை ஊரார் உள்ளங்களையும், உதடுகளையும் பற்றிப் பிடிப்பதையும் அவர்களால் ஜீரணிக்க முடியவில்லை.

நபி (ஸல் ) அவர்களை சூனியகாரர் என்றும் பைத்தியக்காரர் என்றும் கூறியதோடு பல கதைகளையும் கட்டிவிட தொடங்கினர். சுரியானீ, அபரானீ மொழிகளில் புலமை மிக்க ஒரு கிறிஸ்துவ அடிமையிடமிருந்து பயிற்சி பெற்று, திருநபி அவர்கள் திருமறை வசனங்களை கூறுவதாக பறைசாற்ற தொடங்கினர்.
அதனை அடுத்து இறைவன் மேற்கண்ட வசனத்தை அருளினான். இவ்வாசனத்தில் குறிப்பிடப்படும் மனிதர், ஒரு கிறிஸ்தவர் என்பது பற்றி அறிஞர்களிடையே ஒருமித்த கருத்து நிலவிய போதிலும், அவர் யார் என்பது பற்றி கருத்து வேறுபாடுகள் உள்ளன .

ஹல்ரமி கிளையைச் சேர்ந்த ஜப்ரு என்னும் கிறிஸ்துவ அடிமை ;
ஐனுத்தமர் என்னும் ஊரிலிருந்து வந்த வாள் கூர்மையேற்றும் தொழிலாளி ;
ரூம் நாட்டிலிருந்து வந்த கிறிஸ்துவ அடிமை;
கிரேக்க அடிமை ஷுஐப் _ ஆகியோரின் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன.
இவர்கள் மற்றுமின்றி அரபி அல்லாத யாஸிர், யாயிஷ், கைஸ் , அத்தாஸ் போன்ற கிறிஸ்தவ அடிமைகளும் இருந்தனர்.

ஆரம்ப காலத்தில் இஸ்லாம் நெறியை தழுவியதற்காக பகைவர்களின் கொடுமைகளுக்கு இலக்கான கிறிஸ்துவ அடிமைகள் பலராவார். அவர்களிடம் இருந்து இரவல் வாங்கிய கருத்துக்களை வைத்து அண்ணலார் அவர்கள் ஒரு புதிய நெறியை கொடுத்திருக்கிறார்கள். அதற்காக அடிமைகள் சொல்லொணானத் துன்பத்தைத் தாங்கி இருக்க மாட்டார்கள்.

அண்ணலார் அவர்கள் சிறு பிராயத்திலேயே பெரிய தந்தையாருடன் சிரியா செல்லும் வழியில் சந்தித்த கிறிஸ்துவை ஞானி புகைராவை இவ்வசனம் குறிக்கிறது என கிறிஸ்தவ ஆசிரியர்கள் சிலர் கூறுகின்றனர்..
"நபிகள் நாயகம் அவர்களுக்கு கிடைத்துள்ள வேத வெளிபாடுகளின் பெரும்பகுதி ஒரு கிறிஸ்துவ ஞானியின் வாயிலாக கிடைத்துள்ளது என கிறிஸ்துவ ஆசிரியர்கள் கூறும் குற்றச்சாட்டிற்கு எள்ளளவும் ஆதாரம் கிடையாது. பால்மர் என்பார் அவரது திருக்குர்ஆன் ஆங்கில மொழிபெயர்ப்பின் முன்னுரையில் இதைக் குறிப்பிடுவதே இதற்குப் போதுமான மறுப்பாகும்.

பகைவர்கள் குற்றச்சாட்டிற்குப் பொருத்தமான காரணங்களை காட்டி மறுக்கும் இறைவன், திருக்குர்ஆனில் மிகத் தெளிவான அரபு மொழியில் அமைந்திருப்பதைக் கோடிட்டுக் காட்டுகிறான்.

" ரூஹுல் அமீன் இதனை உமது இருதயத்தில் இறக்கி வைத்தார் . நீர் அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்காகத் தெளிவான அரபி மொழியில்..." குர்ஆன் ( 26 : 193 -195)
"நீங்கள் நன்கு அறிந்து கொள்ளும் பொருட்டுக் குர்ஆன் என்னும் இவ்வேதத்தை நிச்சயமாக நாமே அரபுமொழியில் இறக்கி வைத்தோம் " குர்ஆன் ( 12 : 2 )
" அன்றி அவர்கள் பயந்து கொள்ளும் பொருட்டு எத்தகைய கோணலுமற்ற இக்குர்ஆனை அரபி மொழியில் இறக்கி வைத்துள்ளோம் " குர்ஆன் (39 : 28).

ரஹ்மத் ராஜகுமாரன் .

குர்ஆன் வசன ஆய்வு 10
அரபி மொழியின் அற்புதம்




وَمِنْ اٰيٰتِهٖ خَلْقُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَاخْتِلَافُ اَلْسِنَتِكُمْ وَاَلْوَانِكُمْ اِنَّ فِىْ ذٰلِكَ لَاٰيٰتٍ لِّلْعٰلِمِيْنَ

வானங்களையும் பூமியையும் படைத்திருப்பதும், உங்களுடைய மொழிகளும் நிறங்களும் வெவ்வேறாக இருப்பதும் அவனுடைய அத்தாட்சிகளில் உள்ளவையாகும். இதிலும் கல்விமான்களுக்கு நிச்சயமாகப் பல அத்தாட்சிகள் இருக்கின்றன. (அல்குர்ஆன் : 30:22)

மனித நிறங்கள் என்பது பூமி மத்திய ரேகை உள்ள ஆப்பிரிக்க நாட்டில் சூரியன் செங்குத்தாக கதிர்கள் விழுவதால், அங்குள்ள மக்கள் கறுப்பர்களாகவும் , சூரிய கதிர்கள் தொடர்ந்து சாய்வாக விழும் நாட்டில் மக்கள் கோதுமை நிறம் , மஞ்சள் , வெள்ளை நிறங்களை கொண்டுள்ளனர் அவர்களின் மொழியும் மாறுபட்டு இருக்கும். இதைத்தான் இறைவன் மனித நிறங்களையும் அவர்கள் பேசும் மொழியையும் ஒப்பிட்டுள்ளான் போலும் .

ஒரு குழுவினர் உள்ள கருத்துக்களை அடுத்தவருக்கு எடுத்துரைத்து கூட்டுறவு கொள்வதற்கு காரணமாக அமையும் ஒலிக் குறியீடுகளின் தொகுப்பே மொழி என மொழி வல்லுனர் கூறுவார்கள்.
ஒரு நாட்டின் தட்பவெப்ப நிலைக்கும் அங்கு வாழ்கின்ற மக்களின் உடற்கூறுகளுக்கும் ஏற்ற முறையில் அவ்வொலி குறியீடுகள் அமைகின்றன. அவ்வொலிக் குறியீடுகள் வெற்றோசையாக இல்லாமல் அவற்றை பேசுவோரின் கலை, நாகரிகம் , பண்பாடு, ஆகியவற்றின் சின்னமாகவும் இலக்காகவும் காணலாம். இதனைத்தான் மேற்கண்ட வசனத்தில் இறைவன் ' மொழிகளும் நிறங்களும் வெல்வேறு' என்பது கலை, நாகரிகம் , பண்பாடு ஆகியவற்றின் வெவ்வேறு குறியீடுகள் என்று குறிப்பிடுகிறான் என்கிறார்கள் மொழியியல் வல்லுநர்கள்

அறிஞர் **பிச்டே ( Fitchte )** கூறுகிறார் : " ஒரு மனிதனின் வாழ்க்கை முழுவதிலும் மொழியானது பின்னிப் பிணைந்துள்ளது .ஒருவன் பேசும் மொழியின் வேர்கள் அவன் அடி முதல் முடி வரை பரவிச் சென்று , அவனது ஆசாபாசங்கள், சிந்தனைகள், பழக்க வழக்கங்கள் அனைத்திலுமே ஊடுருவி நிற்கின்றன.
இதனால்தான் "ஒரு இனத்தை அழிக்க வேண்டுமெனில் அதற்கு பெரும் படை பலம் தேவையில்லை முதலில் அந்நாட்டின் தாய்மொழியை சிதைக்கத் தொடங்கினாலே போதும்."

என்கிறார்- ஐரீஷ் நாட்டறிஞர் டிவோலரா

ஒரு மொழிபேசும் குழுவினரை அம்மொழியானது சில வரையறைகளுக்கு கட்டுப்பட்டு ஒன்று திரட்டி விடுகிறது. பருப்பொருள் உலகையும், மானசீக உலகையும் இணைத்து வைக்கும் ஒரே பிணைப்பாக மொழி விளங்குகின்றது "

இவ்விளக்கத்திற்கு மிகப் பொருத்தமாக அரபிமொழி அமைந்திருக்கக் காண்கிறோம்.

குர்ஆன் எழுதப்பட்டுள்ள அரபி மொழியே ஓர் அற்புதம்தான்... ஒரு மொழி 500 ஆண்டுகளுக்கு மேலாக அதே வடிவத்தில் தொடர்ந்திருக்க முடியாது என்னும் வரலாற்று விதிக்கு அரபி மொழி வியப்பூட்டும் விதிவிலக்கு .

ஒவ்வொரு 500 ஆண்டுகள் காலப்போக்கில் ஒரு மொழி கடும் மாற்றம் அடைகிறது. வருங்காலத் தலைமுறையினர் தங்கள் தொல் பழங்கால முன்னோர்களின் நூல்களைப் புரிந்து கொள்வதில்சிரமப்படுகிறார்கள்...
ஆனால் அரபி மொழியின் வரலாறு மிகவும் மாறுபட்டு விளங்குகிறது. அது 1500 ஆண்டுகள் காலத்தின் சோதனைக்கு ஈடு கொடுத்து இன்றும் நிலைத்து நிற்கிறது.

நம்முடைய தமிழ் மொழியின் 1400 வருடங்களுக்கு முன்னால் உள்ள தமிழ் நூற்களை இன்றைய தலைமுறையினரால் வாசிக்க முடியுமா ? சற்று யோசித்துப் பாருங்கள் .

இதே நிலைதான் உலகில் உள்ள அனைத்து மொழிகளுக்கும் அரபியைத் தவிர. இதுதான் அரபி மொழியின் அற்புதம்.

அரபி மொழி சொல்லைப் பயன்படுத்தும் முறையிலும் நடையிலும் சில வளர்ச்சிகள் ஏற்பட்டுள்ளன என்பது உண்மையே .ஆனால் சொற்கள் தங்கள் பொருளை இழந்து விடும் அளவிற்கு அல்ல..!

அரபி மொழி மீது அல்குர்ஆன் ஒரு தெய்வீக முத்திரையை இட்டு உலக முடிவு நாள் வரை அது புரியக்கூடிய மொழியாகவே இருக்க வேண்டும் என்று தன் போக்கின் பக்கம் கவனத்தை ஈர்ந்துள்ளது .

தமிழுக்கு இனிமை என்று பொருள், அவ்வாறே அரபி என்பதற்கும் இனிமை என்றே பொருள். இது வேதமொழி என்று சொல்லி இதை ஆலிம்கள் மட்டுமே படிக்க வேண்டும் என்று என்றுமே விஷேசப் புனிதப்படுத்தியதில்லை இஸ்லாம். மாறாக, இவ்வேதத்தை அனைவருமே ஓத வேண்டும், ஓதி பொருள் புரிய வேண்டும். பிறகு அதன்படி வாழ வேண்டும், பிறரை வாழ்விக்கவும் வேண்டும், அதுவும் அரபி மொழியில் அமைந்த குர்ஆன் வழியிலே... என்று அன்றே அண்ணல் நபி (ஸல்) அறை கூவல் விடுத்தார்கள்.
அதே தருணத்தில் நபி (ஸல்) அவர்கள் கூறியதாவது "அரபு மொழி பேசுபவன் வேறு மொழி பேசும் மக்களை விட சிறந்தவன் அல்லன்" (நூல்: அஹ்மத் 22391) என்று நபிகள் நாயகம் (ஸல்) பிரகடனம் செய்ததே இதற்குப் போதிய சான்றாகும். இதனால்தானோ என்னவோ....அரபி மொழி மற்ற மொழிகளைப் போல் அதுவும் ஒருமனித மொழி என்கிறான் தேவன்.

ஆதியில் வார்த்தை இருந்தது அந்த வார்த்தை தேவனாய் இருந்தது என்று பைபிள் கூறும். அந்த வார்த்தை வேறு எதுவுமல்ல குர்ஆன் கூறும் “குன் - ஆகு” என்ற கட்டளைச் சொல்தான் அது. அவன் “ஆகுக!” என்றான் அனைத்துமே ஆகிவிட்டது.

மொழியின், மொழிதழின் முக்கியத்துவம் இப்போது உங்களுக்கு புரிகிறதா ...?

ரஹ்மத் ராஜகுமாரன்

குர்ஆன் வசன ஆய்வு 11

இஸ்லாத்தில் இசை



இசையை வெறுக்கும் இஸ்லாமியரில் சிலர் " இசையை ரசிப்பவர்கள் குடிபோதையில் இருப்பவர்களுடைய மனோ நிலையை பெற்றுவிட்டார்களோ என்று கூட சில நேரம் எண்ணத் தோன்றிவிடுகிறது. அந்த அளவுக்கு அது மனிதனை குறிப்பாக இளைஞர்களை சீரழிக்கிறது. மனித இனத்தை சீரழிப்பவன் யார் ஷைத்தான்தானே ?

"விசுவாசம்கொண்டோரே! ஷைத்தானுடைய அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள், எவன் ஷைத்தானுடைய அடிச்சுவடுகளைப் பின்பற்றுகிறானோ அவனை மானக் கேடானதைக் கொண்டும் வெறுக்கப்பட்டதைக் கொண்டும் நிச்சயமாக (ஷைத்தானாகிய) அவன் ஏவுவான்.... (அல்குர்ஆன் 24:21)
சகோதரர்களே! இந்த திருமறை வசனத்தை சற்று கூர்ந்து கவனித்துப்பாருங்கள். ஷைத்தான் மானக் கேடானதையும் வெறுக்கப்பட்டதையும் ஏவுவான் என்று கூறப்பட்டுள்ளது. அப்படியிருக்க இசை இன்றைக்கு நன்மையையா ஏவுகிறது? இல்லையே! " என்று கூறுகிறார்கள் .

உலகில் மனிதனின் பாவனைக்கு கத்தி எவ்வாறு தடை செய்யப்பட்ட ஒரு பொருளாக இல்லையோ அதேபோன்றுதான் இசையும் அமையும்.கத்தி எதற்கு பயன்படுத்தப்படுகின்றதோ, அவ்வேலையை அது செய்யும். அதைப்போன்றே இசையும் அதன் பயன்பாட்டைப்பொருத்தே ஆகுமானதா? கூடாததா?என தீர்மானிக்கப்படல் வேண்டும்.எடுத்த எடுப்பிற்கே தடுக்கப்பட்டது என்ற முடிவு ஏற்றுக்கொள்ளக்கூடியதல்ல.

ஒரு காலத்தில் இஸ்லாமிய அறிஞர்கள் புகைப்படம் எடுப்பதையே கூடாது என்றனர்.இன்று அதே அறிஞர்கள் காணொளி மூலம் மக்களுக்கு நல்லுபதேசம் புரிகின்றனர்.
இசை மனதை தளர்த்துவதோடு, ஆற்றலைப் பெறவும், தன்னைப் புதுப்பிக்கவும் மனிதனுக்கு உதவுகிறது என்பது அறிவியலால் நிரூபிக்கப்பட்ட உண்மையாகும்.

பொதுவாக இஸ்லாத்தில் எல்லா இசையும் கூடாது என்று ஒரு கருத்து பரவலாக எல்லோரிடமும் காணப்படுகிறது. ஆனால், அது ஒரு தவறான கருத்தாகும் . இஸ்லாம் எப்போதும் நடுநிலையை பின்பற்றும் மார்க்கம் ஆகும். அது எல்லா இசையும் நிராகரிக்கும் இல்லை ;எல்லா இசையையும் ஏற்றுக்கொள்ளவும் இல்லை.

சத்தங்கள் எல்லாமே இசைதான் எல்லா இசையும் ஹராம் என்றால் எல்லா சத்தங்களும் ஹராம் என்றாகிவிடும். அப்படி யாராவது கூறமுடியுமா ? எனவே தான்

"எல்லா இசையும் கூடாது என்று யாரெல்லாம் கூறுகிறார்களோ அவர்களிடம் பறவைகளின் பாடல்களும் கூடாது என்று கூறச் சொல்லுங்கள் " என்று இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.
எனவே எந்த இசை தடுக்கப்பட்டது எந்த இசை அனுமதிக்கப்பட்டது என்பதை நீங்கள் தெளிவாக அறிய வேண்டியுள்ளது.

இசை பல சந்தர்ப்பங்களில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில் அன்னவர்களின் முன்னாள் பாடப்பட்டுள்ளது. அப்போது அன்னவர்கள் அதனை தடுக்கவில்லை. அனுமதித்து உள்ளார்கள். அதேநேரம் பல நேரங்களில் இசை கூடாது என்று கருத்துப்படவும் நபிகள் நாயகம் (ஸல் ) அவர்கள் கூறியுள்ளார்கள்.
எனவே எது கூடுமோ எது கூடாது என்ற கேள்வி எழும்போது, எந்த இசை ஒருவனுக்கு இறைவனைப் பற்றிய சிந்தனையை தூண்டுகிறதோ ,ஒருவன் இறைவனை அடைய வழி வகுக்கிறதோ இறைத்தூதர்களையும், இறைநேசர்களையும் புகழவும், அவர்கள் செய்திகளை மக்களுக்கு தெரியப்படுத்தி மக்களை நேர்வழிப்படுத்தவும் பயன்படுகிறதோ மேலும் ஆகுமான காரியங்களில் ஆகுமான முறையில் பாடப்படுகிறதோ அவை இஸ்லாத்தின் கூடுமான இசை முறையாகும்.

அதேபோல, எந்த இசை கீழ்த்தரமான வார்த்தைகளை கொண்டும், மோசமான உலக இச்சைகளை உள்ளத்தில் ஏற்படுத்தவும், பெண்களைப் பற்றிய மோகத்தை அதிகரிக்கவும், காமம், போதை போன்ற தடுக்கப்பட்ட நோக்கங்களுக்காகவும் பாடப்படுகிறதோ அவை இஸ்லாத்தில் தடுக்கப்பட்ட இசைகள் ஆகும் .

ஹஜரத் ருபய்யிஃ பின்த் முஅவ்வித் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் : " எனக்கு திருமணம் நடந்த பின்னர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். எனக்கு அருகில் இப்போது நீங்கள் அமர்ந்திருப்பது போல் அத்தகைய தூரத்தில் என் விரிப்பின் மீது அமர்ந்தார்கள். அப்போது சில சிறுமிகள் பத்ரு போரில் ஷஹீதான முன்னோர்களை புகழ்ந்து பாடி கஞ்சிராக்களை (தஃப்) அடித்துக்கொண்டு இருந்தனர்.
அவர்களில் ஒரு சிறுமி " எங்களிடையே இறைத்தூதர் இருக்கிறார். அவர் நாளை நடக்க இருப்பதையும் அறிவார் " என்று கூறி பாடினாள் .
உடனே நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், " அதை விட்டுவிட்டு நீ முன்பு சொல்லிக் கொண்டிருந்ததை சொல் " என்றார்கள் புகாரி : 5147 அபூதாவுத் திர்மிதி

இங்கு கவனிக்க வேண்டியது எல்லா இசையும் கூடாது என்று இருந்தால், நபிகள் நாயகம் (ஸல் ) அவர்கள் அச்சிறுமிகளை இசையோடு பாட வேண்டாம் என்று தடுத்து இருப்பார்கள். ஆனால், அவர்கள் தமது பணிவின் காரணமாக அந்த வார்த்தைகளை கூற வேண்டாம் என்றும் ,மாறாக முதலில் இசையோடு பாடிக் கொண்டிருந்தது போல் பத்ரு யுத்தத்தில் மரணித்த தியாகிகளை புகழ்ந்து பாடும்படி கூறி அனுமதித்து உள்ளார்கள்.

ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: புஆஸ் என்னும் போரின் போது அன்சாரிகள் ஒருவரை ஒருவர் நோக்கி பாடிய பாடல்களை இரு அன்சாரி சிறுமிகள் என்னருகில் பாடிக் கொண்டிருந்தனர்.
அப்போது என் தந்தை அபூபக்கர் (ரலி) அவர்கள் என்னிடம் வந்தார்கள். உண்மையில் அந்த சிறுமியரும் பாடகியர்கள் அல்லர். இதனை கண்ட உடனே அபூபக்கர் (ரலி) அவர்கள் "இறைத்தூதரின் இல்லத்திலேயே ஷைத்தானின் இசைக்கருவிகளா ? " என்று கடிந்து பேசினார்கள்.

இது நடந்தது ஒரு பெருநாள் அன்றாகும். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், " இருவரையும் விட்டுவிடுங்கள். அபுபக்கரே ! ஒவ்வொரு சமுதாயத்தாருக்கும் பண்டிகை நாள் ஒன்று உண்டு. இது நமது பண்டிகை நாள் " என்று கூறினார்கள் முஸ்லிம் 1619

அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் தனக்கு நெருங்கிய ஒரு பெண்ணை அன்சாரித் தோழர்களில் ஒருவருக்கு திருமணம் செய்து வைத்தார்கள் . அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஆயிஷாவிடம் ,

"திருமணம் நடத்துகிறாய். கேளிக்கை ஏதும் இல்லையா ? அன்சாரிகளுக்கு கேளிக்கை பார்ப்பது மிகவும் விருப்பமானதாச்சே !" என் வினவினார்கள்.
உர்வா (ரலி) ஸஹீஹ் புகாரி

ஒருமுறை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து , "திருமணத்தில் இசைப்பதையும் ,கேளிக்கை நடத்துவதையும் அனுமதித்துள்ளீர்களா ? "என்று வினவினார்.
அதற்கு, " ஆம் ! அது திருமணம்தானே ! விபச்சாரமல்லவே !" என நபிகள் (ஸல் ) அவர்கள் பதில் கூறினார்கள் .
ஸாயிப் பின் யஸீத் (ரலி) தப்ரானி , பத்ஹுல் பாரி பாகம் 11 பக்கம் 133 .

உலகிலுள்ள அத்தனை ராக தாளங்கள் எழுப்பும் இசைக்கருவிகளும் சுவனத்தில் இருக்கும்.இன்னும் இத்தனைக்கும் மேலான மனிதர்கள் இதுவரை பயன்படுத்தாத அதிகப்படியான இசைக்கருவிகளும் அங்கு உண்டு.

உலகிலுள்ள அத்தனை இசைக் கருவிகளும் ஏழு ஸ்வரங்களை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டது என்றால், சுவனத்து இசைக்கருவிகள் எழுபது ஸ்வரங்களை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கலாம் .

இதுபோக அங்குள்ள மரங்களில் அநேக ராக தாளங்களுக்கென்றே அமைக்கப்பட்டு , கிளைகளிலும் , விழுதுகளிலும் துவாரங்கள் உள்ளதாக இருக்கும் . சுவனத்தென்றல் ஆடி அசைந்து வீசும் போது , மரம் அசைய அசைய காற்று மரத்துவாரங்களின் வழியே ஊடுருவி செல்லும் போது மனதை மயக்கும் அழகிய கீத நாதங்கள் இசைக்கப்படும் .

மேற்கண்ட காற்றின் இசையுடன் பறவைகள் சங்கீதம் பாடும். அத்தோடு ஹூருல் ஈன்களோடு மலக்குமார்களும் சேர்ந்து பாடுவார்கள் .

இந்த சங்கீதங்கள் அனைத்தும் தஸ்பீஹு முதலியவைகளும் , குர்ஆனின் ஆயத்துக்களும், ஸபூர் வேத வாக்கியங்களுமாக இருக்கும். நபி தாவூது (அலை) அவர்களும் அங்கே சங்கீதக்காரர்களில் ஒருவராக இருப்பார்கள் .

இம்மையில் இசையை வெறுப்பவர்கள், மறுமையில் சுவனத்தில் தங்கள் செவிகளை எதைக் கொண்டு அடைத்திருப்பார்களோ ..?

ரஹ்மத் ராஜகுமாரன்

குர்ஆன் வசன ஆய்வு 12

"யா அய்யுஹல் முஸ்ஸம்மிலு" -
يَٰٓأَيُّهَا ٱلْمُزَّمِّلُ

போர்வை போர்த்திக் கொண்டிருப்பவரே! (குர்ஆன் : 73:1)




முஸ்ஸம்மில் , முத்தத்திர் ஆகிய இரு பெயர்களும் நபி (ஸல்) அவர்களுடைய திருப்பெயர்களில் சேர்ந்தவை என்று சிலர் கருதுகின்றனர்.இது சரியான கருத்தன்று இவைகள் நபி (ஸல்) அவர்கள் திருப்பெயர்களைச் சேர்ந்தவை அல்ல .

நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹுத்தஆலா வஹி அறிவிக்கும்போது , அவர்கள் இருந்த நிலையைக் கூறி அவர்களை அழைத்ததேன்றி வேறு இல்லை. அச்சமயத்தில் அவர்கள் எந்நிலையில் இருந்தார்கள் என்பதுதான் இதன் மூலம் அறிய முடியுமே தவிர, இவைகள் பெயர்களாக முடியாது என தப்ஸீருல் ஹமீத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது .

அரபியர் ஒருவருடன் கூச்சமின்றி சகஜமாக இருந்து, அவரை கண்டனம் செய்யாமல் இருப்பதைக் காட்டிக் கொள்ள விரும்புவார்களாயின் அவர் அப்போது இருக்கும் நிலையை குறித்து பெயரைக் கூறி அழைப்பது போல் இம்மாதிரி அழைப்பது வழக்கம்.

ஒருமுறை பாத்திமா (ரலி) அவர்கள் தமது கணவர் அலீ (ரலி) அவர்கள் மீது வருத்தம் அடைந்தார். இத்தம்பதிகளிருவரும் ஒருவரை ஒருவர் கோபித்துக் கொண்டனர் . இச்செய்தியை கேள்விப்பட்ட நபி (ஸல்) அவர்கள், அவர்களது வீட்டுக்கு சென்றார்கள்.
அப்போது அலீ (ரலி ) அவர்கள் தரையில் படுத்து தூங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய விலாவில் மண் ஒட்டி இருந்தது. அப்போது நபி (ஸல்) அவர்கள் அவரை

**"அபுத்துராபே ! (அதாவது மண்ணின் தந்தையே ! ) " என்று கூறி எழுப்பினார்கள்.**

இது அவர்பால் நபி (ஸல்) அவர்கள் கோபம் அடையவில்லை என்பதை முன்னதாக அவரிடம் காட்டிக் கொள்வதற்காக இவ்வார்த்தைகளால் அவரை எழுப்பி இருக்கிறார்கள்.

இதே விதமாக ஹுதைஃபா (ரலி) அவர்கள் தூங்கிக் கொண்டிருந்தபோது, அவரை "யா நவ்மான் ! " (தூங்குகிறவரே) என்று நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அந்நேரம் அவர் தூங்கிக் கொண்டிருந்ததைக் குறித்து கண்டித்தார்களோ என்ற கருத்துக் கொள்ளக்கூடாது என்பதற்காக இவ்வாறு கூறினார்கள் என்று சொல்லப்படுகிறது.

மிகப் பிரலமான ஸஹாபி அபூ ஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் எப்பொழுதும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூடவே இருப்பார்கள்.

அதே சமயத்தில் அபூ ஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் இருக்கும் ஒரு பையில் எப்பொழுதும் ஒரு குட்டி ஆண் பூனை வைத்திருப்பார்கள். அந்த பூனை அவர்களை விட்டும் எங்கும் செல்லாது சென்றாலும், மீண்டும் அவர்களிடமே வந்து விடும். அந்த பூனையிடம் மிகுந்த பாசம் வைத்திருந்தார்கள். அதற்கு தேவையான உணவும் தண்ணீரும் அவ்வப்பொழுது வழ்ங்குவார்கள்

அவர்களிடம் குட்டி பூனை எப்பொழுதும் இருப்பதால், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "பூனைகளின் தந்தை " என பொருள்படும்படி " அபூ ஹுரைரா ! " என்று அழைத்தார்கள். இதனால் பூனையை வளர்க்கும் தம் தோழரை கண்டனம் செய்ததாக கருத்துக் கொள்ளக் கூடாது. அவர்களின் அந்த பெயரே கியாம நாள் வரை நிலைத்து விட்டது .அரபியில் "ஹிர்ரா " என்றால் ஆண் பூனை."ஹுரைரா " என்றால் குட்டி ஆண் பூனை என்று அர்த்தம்.

இது மாதிரித்தான் இறைவனும் இரவில் நபிகளார் போர்வையால் போர்த்திக் கொண்டிருந்ததை ,
**"யா முஸ்ஸம்மிலு"** என்றழைத்தான்

நபி (ஸல்) அவர்களை இறைவன் "யா முஸ்ஸம்மிலு" - என்று இவ்வாறு அழைத்தது அச்சம்பவத்தை குறித்த அச்சம் நீங்கி, மன நிம்மதி உண்டாக வேண்டும் என்பது ஒரு பிரோஜனம்.

இரவில் போர்த்திக்கொண்டு தூங்குகிற ஒவ்வொருவரும் இறைவனை வணங்குவதற்காக இரவில் எழுந்திருக்க வேண்டும்; இறைவனை தஸ்பீஹ் செய்ய வேண்டும் என்பதை எச்சரிக்கை செய்வது இரண்டாவது பிரயோஜனம்.

ரஹ்மத் ராஜகுமாரன்

குர்ஆன் வசன ஆய்வு 13

"யா அய்யுஹல் முஸ்ஸம்மிலு" -

يَاَيُّهَا الْمُزَّمِّلُ

போர்வை போர்த்திக் கொண்டிருப்பவரே! (குர்ஆன் : 73:1)



"போர்த்திக்கொண்டு இருப்பவரே " என பெருமானார் (ஸல்) அவர்களை அழைப்பதற்கு பல காரணங்கள் சொல்லப்படுகிறது.

"நபித்துவம் " என்னும் போர்வையால் போர்த்தப்பட்டு, "ரிஸாலத்" என்னும் புனிதப்பொறுப்பு ஒப்படைக்கப்பட்டுள்ள பொதுப்பொருள் இதில் புலப்பட காணலாம்.

சூஃபியாக்கள் என்ற மெஞ்ஞானிகள் இந்த "முஸ்ஸம்மில்" (போர்த்தப்பட்ட போர்வை) என்ற வார்த்தையிலிருந்துதான் சூஃபியாக்களின் இயல்பு மற்றும் இருப்பு நிலையை வெளியிட காரணமாக இருந்தது என்று கூறுகிறார்கள்.

" சூஃப் "என்றால் முரட்டு கம்பளி ( போர்வையால்) தங்கள் ஆடையை அணிந்து எளிமையை வெளிப்படுத்தும் துறவி என்பது பொருள். அதாவது உலகின் பகட்டு வாழ்க்கையை விட்டு அமைதியாக வாழ்பவர்.

"சூஃபா" - என்றால் தூய்மையான என்பது பொருளாகும். சூஃபா உண்மையை அறிய குழுமிய கூட்டத்தினருடன் நபி (ஸல்) அவர்கள் நின்ற இடமாகும் என்ற கருத்தையும் மெஞ் ஞானிகள் தெரிவிக்கின்றனர் .

இரவு நேரத்தில் போர்வையை போர்த்தித் தூங்காமல் எழுந்து வணக்கத்தில் மூழ்க வேண்டும் என்னும் குறிப்பு இதனுள் அடங்கியுள்ளது.

மேலும் பெருமானார் ( ஸல் ) அவர்களை பகைவர்கள் பைத்தியக்காரர்கள் என்றும், சூனியக்காரர் என்றும், கவிஞர் என்றும் பழித்ததால் ஏற்பட்ட கவலையினால், பெருமானார் (ஸல்) அவர்கள் இல்லத்தில் போர்வையால் போர்த்திக் கொண்டு இருந்தபோது தான் இவ்வசனங்கள் இறக்கியருளப்பட்டதாகவும் கூறப்படுகிறது.

அதற்கு முன்னர் ஜபல் நூர் என்னும் மலையில் உள்ள ஹிரா குகையின் வாயிலில் வானவர் ஜிப்ரயீல் (அலை ) அவர்கள் வஹீ அறிவிப்பதற்காக வானுயரத்தில் வந்துதித்த ஆரம்பநிலையில் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு ஒருவகை #பயம் தோன்றியது.

இதன் காரணமாக தம் இல்லம் அடைந்து "ஸம்மிலூனீ ஸம்மிலூனீ" "என்னை போர்வையால் போர்த்துங்கள். என்னை போர்வையால் போர்த்துங்கள்" என்பதாக கூறியதாகவும் அதன் காரணமாகவே "போர்வையால் போர்த்தப்பட்டவர் " என்று அன்று நடந்த நிகழ்வை குறித்தும் சூரா முஸ்ஸம்மில் இறைவன் " போர்வை போர்த்திக் கொண்டிருப்பவரே!" அழைத்தான் என்றும் கூறப்படுகிறது.

உளவியல் ரீதியாக ...பயத்தின் முக்கியக் காரணி - அடுத்து என்ன நடக்கப் போகிறது என்று தெரியாத, புரியாத நிலையே! சுருக்கமாகச் சொன்னால், பயம் என்பது எதிர்காலத்தை நினைத்துத்தான்.

எதிர்காலம் என்பது இங்கே அடுத்த நொடி, அடுத்த நிமிடம், அடுத்த நாள், அடுத்தடுத்த வருடங்கள் என அனைத்துக்குமே பொருத்தும். நீங்கள் நிகழ்காலத்தில் இருக்க, உங்கள் எண்ணங்களோ எதிர்காலத்தில் இருக்கின்றது, அவ்வளவே!

ஓர் ஆபத்து ஏற்படப்போகிறது என்ற எண்ணம் உதித்துவிட்டாலே, பயம் என்பது இயல்பாகவே முன்னமே வந்து விடுகிறது. யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே என்பது போல் பயம் முன்னமே வந்து விடுகிறது.

இந்த உணர்வை 'பயம்' என்று பொதுமைப்படுத்தப்பட்டாலும் கவலை, அச்சம், பதற்றம், மன அழுத்தம், படபடப்பு என்று வெவ்வேறு வகைகளாக இது வெளிப்படுகிறது.

சிறு பிராயத்தில் உள்ள குழந்தைகள் பயத்தால் படபடக்கும் தங்கள் இதயத்தை தங்களின் இரு கரங்களையும் மடக்கி மார்போடு அணைத்துக் கொள்கிறார்கள். இன்னும் சிலர் பயத்தால் கை, கால் படபடத்துஉதறும் போது உடல் வெப்பநிலை குறைய, அதை சரி செய்யவே போர்வையால் தங்களை மூடிக் கொள்கிறார்கள் .

மொத்தத்தில், பயம் என்பது முழுக்க முழுக்க நம் மன ஓட்டம் மட்டுமே. அது வெறும் விபரீதக் கற்பனையால் மனம் அதிகமாகவே பயத்தை விளைவிக்கிறது. ஆபத்து என்பது கட்டாயமாக இருப்பது என்று எடுத்துக்கொண்டாலும், அங்கே பயம் என்பது, எப்போதும் தவிர்க்கக்கூடிய ஓர் உணர்வு மட்டுமே.

எவ்வாறாயினும் தங்களை போர்வையால் போர்த்திருந்த பெருமானார் (ஸல்) அவர்களை இயற்பெயர் கூறி அழைக்காமல், காரணப் பெயரால் கனிவுடன் அழைத்து, ஆரணச் சிறப்பை அறிவுறுத்துகின்ற இயல்பை இவ்வசனத்தில் காணலாம்.

சூரா முஸ்ஸம்மிலை நாள்தோறும் ஓதிவரும் வழக்கமுடையவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கனவில் காண்பார்கள் என்றும் , நாள்தோறும் ஏழு முறை ஓதி வருவோர் செல்வச் செழிப்பு அடைவார் என்றும் மனத்துயரம், கவலை , மற்றும் பயத்திலிருந்தும் விடுதலை பெறுவார் என்றும் கூறப்படுகிறது .

ரஹ்மத் ராஜகுமாரன் .

## குர்ஆன் வசன ஆய்வு 14

(பளுவான ஒரு சொல் )
"நிச்சயமாக நாம் இன்னும் மிக வலுவான ஒரு சொல்லை உம்மீது இறக்கி வைப்போம்." குர்ஆன் ( 73 : 05)
வானவர் கோன் ஜிப்ரீல் (அலை) அவர்கள் வாயிலாக கொண்டு வரப்படும் வஹீயைத் தாங்கிக் கொள்வது வள்ளல் பெருமானார் (ஸல் ) அவர்களுக்கு எவ்வளவு கடினமானதாக இருந்தது என்பதை பல நிகழ்ச்சிகள் எடுத்துக் காட்டுகின்றன.

குளிர் மிகுந்த காலங்களில் கூட 'வஹீ ' வரும்போது பெருமானார் (ஸல்) அவர்களின் நெற்றியில் வியர்வை வெளிப்படும் என்றும்,
ஒட்டகத்தின் மீது நபிகளார் அமர்ந்திருக்கும் தருணத்தில் வஹீ வருவதாயின் அதன் பளுவினால் ஒட்டகம் நிலத்தில் அமர்ந்து விடுவது வழக்கம் என்றும் அறிகின்றோம்.

சூரா ஹஷ்ரில் இடம்பெற்றுள்ள வசனம் ஒன்றில் திருமறையின் ஆற்றலை அழகுற காட்டுவதாக அமையும்.
لَوْ اَنْزَلْنَا هٰذَا الْقُرْاٰنَ عَلٰى جَبَلٍ لَّرَاَيْتَهٗ خَاشِعًا مُّتَصَدِّعًا مِّنْ خَشْيَةِ اللّٰهِ وَتِلْكَ الْاَمْثَالُ نَضْرِبُهَا لِلنَّاسِ لَعَلَّهُمْ يَتَفَكَّرُوْنَ
(நபியே!) நாம் ஒரு மலையின் மீது இந்த குர்ஆனை இறக்கியிருந்தோமானால், அல்லாஹ்வின் பயத்தால், அது நடுங்கிப் பிளந்து போவதாகக் கண்டிருப்பீர்; மேலும், மனிதர்கள் சிந்திக்கும் பொருட்டு இத்தகைய உதாரணங்களை நாம் அவர்களுக்கு விளக்குகிறோம். (அல்குர்ஆன் : 59:21)

புறத்தோற்றத்தில் பெரியதாக காட்சிதரும் நூல்களும் வடிவத்தில் எடை மிகுந்த வேத நூல்களும் உலகில் பல இருக்கலாம்.
அமெரிக்க நாட்டின் பெருநகரில் லாஸ் ஏஞ்ஜல்ஸ் மாநகரின் மாதா கோயில் ஒன்றில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ள வேத நூலாகிய விவிலியத்தின் பிரதி ஒன்று 4 அடி 3 அங்குலம் நீளமும், இரண்டே முக்கால் அடி அகலமும் உடையதாக, 8063 பக்கங்களைப் பெற்று, அரை டன் எடையுள்ளதாக அமைந்துள்ளதாம் .வெளித்தோற்றத்தில் வலுவான மிகப்பெரிய வேத நூல் இதுவாக இருக்கலாம்.

ஆனால் மறைவசனத்தில் இறைவன் பளுவான சொல்லெனப் பகர்வது புறத் தோற்றத்தையோ ,எடையையோ பருமனையோ பற்றியதல்ல ; உள்ளடக்கத்தையும், சொல்லாற்றலையும் , கருத்தாழ்த்தையும் தெள்ளத்தெளிவாக குறிப்பதாகும் .

திருக்குர்ஆனின் சொல்லும், பொருளும், இலக்கணச் செறிவும் , இலக்கிய மேம்பாடும் , அணி நயமும் , மணி மொழிகளும், ஈடுஇணையற்றனவாகக் குன்றிலிட்ட விளக்கென இன்றுவரை நின்றிலங்கக் காணலாம் !

قُلْ لَّٮِٕنِ اجْتَمَعَتِ الْاِنْسُ وَالْجِنُّ عَلٰٓى اَنْ يَّاْتُوْا بِمِثْلِ هٰذَا الْقُرْاٰنِ لَا يَاْتُوْنَ بِمِثْلِهٖ وَلَوْ كَانَ بَعْضُهُمْ لِبَعْضٍ ظَهِيْرًا

“இந்த குர்ஆனை போன்ற ஒன்றைக் கொண்டுவருவதற்காக மனிதர்களும் ஜின்களும் ஒன்று சேர்ந்து (முயன்று), அவர்களில் ஒரு சிலர் சிலருக்கு உதவிபுரிபவர்களாக இருந்தாலும், இது போன்ற ஒன்றை அவர்கள் கொண்டு வரமுடியாது” என்று (நபியே) நீர் கூறும். (அல்குர்ஆன் : 17:88)

اَمْ يَقُوْلُوْنَ افْتَـرٰٮهُ‌ قُلْ فَاْتُوْا بِعَشْرِ سُوَرٍ مِّثْلِهٖ مُفْتَرَيٰتٍ وَّ ادْعُوْا مَنِ اسْتَطَعْتُمْ مِّنْ دُوْنِ اللّٰهِ اِنْ كُنْتُمْ صٰدِقِيْنَ

அல்லது “இ(வ் வேதத்)தை அவர் பொய்யாகக் கற்பனை செய்து கொண்டார்” என்று அவர்கள் கூறுகிறார்கள்? “(அப்படியானால்) நீங்களும் இதைப் போன்ற கற்பனை செய்யப்பட்ட பத்து அத்தியாயங்களை கொண்டு வாருங்கள் - நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால்! அல்லாஹ்வைத் தவிர்த்து உங்களுக்கு சாத்தியமான எல்லோரையுமே (இதற்குத் துணை செய்ய) அழைத்துக் கொள்ளுங்கள்” என்று (நபியே!) நீர் கூறுவீராக. (அல்குர்ஆன் : 11:13)

பளுவான வேதம் குர்ஆன் என்பதற்குரிய அத்தாட்சிகளை யாரும் எளிதாக கடந்து சென்று விட முடியாது !

ரஹ்மத் ராஜகுமாரன்

குர்ஆன் வசன ஆய்வு 15




" அறிந்தோரும் அறியாதோரும் சமமாவார்களா என்று (நபியே) கூறுவீராக... கூரிய அறிவுடையவர்கள் மட்டுமே தான் நல்லுபதேசம் பெறுவார்கள்" குர்ஆன் ( 39 : 9)

அரபு மொழியில் அறிவையும், கல்வியையும் குறிப்பது "இல்ம்" என்னும் சொல் அது. திருக்குர்ஆனிலும், நபி மொழியிலும் காணப்படும் ' இல்ம் 'எனும் சொல் மார்க்க ஞானத்தை மட்டும் குறிப்பதா அல்லது எல்லாவகையான அறிவுகளையும் குறிப்பதா என்பது பற்றிய பல கருத்துக்கள் உண்டு.

அது 'இல்முல் கலாமை'க் குறிப்பதாகும் என முதகல்லிமுன்களும், ' குர்ஆனும் ஹதீது'மே என முஹத்திதீன்களும், 'பிக்ஹின் அறிவு' என புகஹாக்களும் , 'கல்பின் அஹ்வால்கள்' என சூஃபியாக்களும்,

கருதுகிறார்கள். மனிதனின் வாழ்வுக்குப் பயன்படுகின்ற எல்லாவகையான அறிவையும் அது குறிப்பது என்பதில் தவறில்லை என்பதாக ஆய்வாளர்கள் கூறுகிறார்கள்.

- முன்னிரவில் இஷா தொழுது விட்டு ஃபஜர் பாங்கு ஓசை கேட்பது வரை கலந்துரையாடலில் கொண்டிருந்த அறிஞர்கள் பலர் ஆவார்கள். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் இமாமுல் அஃலம் அபூஹனீபா அவர்களும் , இமாம் மாலிக் அவர்களும் ஆவார்கள்.

- இமாம் ஜுஹரி அவர்கள் இஷாத் தொழுகையை நிறைவேற்றிவிட்டு, அதே உலுவுடன் பஜர் தொழுகை வரையில் நபிமொழி ஆராய்ச்சியில் ஈடுபடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள்.

- ஹஜரத் ஸயீத் இப்னுல் முஸய்யப் இரவு பகலாக ஓயாது நடந்து நபிமொழி கேட்பதில் நாட்டம் செலுத்தினார்கள்.

- ஹஜரத் இப்னு கப்ரானி அவர்கள் 30 ஆண்டுகள் பாயில் படுத்துகிடந்த வண்ணமாக பல நூல் எழுதினார்கள்.

- ஹஜரத் அப்துல்லாஹ் இப்னு முபாரக் அவர்கள் 4000 ஆசிரியர்களை நாடிச் சென்று கல்வி கற்றார்கள்.

- ஹஜரத் இப்னு புராத் பக்தாதி அவர்கள் 18 பெட்டிகளை நிறைக்கும் அளவுக்கு நூல் எழுதினார்கள்.

- ஹஜரத் இப்னு ஜவ்ஸி அவர்கள் ஜும்மாவுக்கு அன்றி வேறு எதற்கும் வீட்டை விட்டு வெளியே செல்லாமல், நபிமொழி திரட்டுகள் 2 ஆயிரம் பிரதிகளை தன் கையால் எழுதியதுடன் 250 நூல்களும் எழுதி உள்ளார்கள்.

- புகழ்பெற்ற வரலாற்று ஆசிரியர் இப்னு ஜரீர்தப்ரீ அவர்கள் ஸஹாபாக்கள், தாபியீன்கள் வரலாற்றை நாளொன்றுக்கு 40 பக்கங்கள் வீதம் 40 ஆண்டுகள் எழுதினார்கள். அத்துடன் 3 ஆயிரம் பக்கங்கள் கொண்ட உலக வரலாற்றை ஒன்றும், திருமறை விரிவுரை ஒன்றும் அவர்களே எழுதி உள்ளார்கள்.

- ஹஜரத் சேக் தகீயுத்தீன் பஃல்பக்கி அவர்கள் 166 வசனங்களைக் கொண்ட அன்ஆம் அத்தியாயம் முழுவதையும் ஒரே நாளில் மனப்பாடம் செய்தார்கள்.

- பாக்தாதில் அபூ முஸ்லிம் பஸரீ அவர்கள் பாடம் சொல்லிக் கொடுத்ததைக் கேட்டு குறிப்பெடுத்தோர் பலர் நாற்பதினாயிரம் மை கூடுகளைப் பயன்படுத்தினார்களாம். குறிப்பெடுக்காமல் செவிமடுத்தோர் பலராவர்கள் .

- ஹஜரத் பர்யாபி அவர்கள் பாடம் சொல்லியதை மாணவர்களுக்கு உரைக்க எடுத்து சொல்வதற்கு 316 பேர்கள் இருக்க வேண்டியதாயிற்று .

- ஹஜரத் யூசுப் மஜீ அவர்கள் பேசா மௌனியாக இருந்து 200 தொகுதிகள் கொண்ட **'தஹ்தீபுல் கமால்'** என்ற நூலையும் 80 தொகுதிகள் கொண்ட 'கிதாபுல் அத்ராப்' என்ற நூலையும் எழுதினார்கள்.

- நபிமொழி திரட்டிய இமாம் புகாரி அவர்கள் ஆறு லட்சம் ஹதீஸ்களை சேகரித்து அதில் 7275 தேர்ந்தெடுத்தார்கள். ஒவ்வொரு ஹதீஸையும் 2 ரக்அத் நபீல் தொழுத பின்னரே ஏட்டில் எழுதினார்கள் .

- ஹஜரத் முஸ்லீம் அவர்கள் மூன்று லட்சம் ஹதீஸ்களை சேகரித்து அதில் 12 ஆயிரத்தை தேர்ந்தெடுத்தார்கள்.

- அபூதாவுத் அவர்கள் ஐந்து லட்சம் ஹதீஸ்களை சேகரித்து அதில் 4800 தேர்ந்தெடுத்தார்கள் .

- ஹஜரத் அபூஸஅத் இஸ்பஹானி அவர்கள் புகாரி- முஸ்லிம் பெரும் நூல்கள் இரண்டையுமே மனப்பாடம் செய்து இருந்தார்கள்.

- மதீனா மாநகருக்கு வருகை தந்த கலீபா ஹாரூன் இமாம் மாலிக் அவர்களின் "கிதாபுல் மூஅத்தா' என்ற பெருநூலைக் காண்பதில் காட்டிய ஆர்வமும் அதற்குக் கொடுத்த மதிப்பும் வரலாற்றில் இடம் பெற்றுள்ளது.

- செல்வம் கொழித்த புகாராவை சீர்பட ஆண்ட மன்னர் மன்சூரின் பிணியைத் தீர்த்த அருள் மேதை அபூ அலி ஸீனா அவர்கள் எதைக் கேட்டாலும் கொடுப்பதற்கு அரசர் ஆயத்தமாக இருந்தபோது, அரண்மனையிலிருந்து சில அரிய நூல்களை பார்வையிடவும் , அதனை குறிப்பெடுக்கும் வாய்ப்பினை மட்டும் கேட்டார்கள்.

- பாக்தாத்தின் புகழ்பெற்ற நிஜாமியா நூல்நிலையம் ஒருபோது நெருப்புக்கு இரையாகி விட , அந்நூல் நிலைய நூல்களை எல்லாம் முன்னரே படித்து முடித்திருந்த சிற்றூர் வாசி ஹம்மாத் அவர்கள் தம் நெஞ்சத் திரையில் மங்காமல் நிலைத்திருந்த அந்த நூல்கள் அத்தனைக்கும் 30 ஆண்டுகளில் படி எடுத்து கொடுத்த நினைவாற்றல் மறக்க முடியாதது .

- ஹஜ்ரி 539-ல் அமித் நகர வெற்றி கொண்ட சுல்தான் ஸலாஹுத்தீன், அந்நகர நூலகத்தில் இருந்த 40,000 நூல்களை எடுத்துக் கொண்டு , அந்நகரைத் தம் உதவியாளர் நூருத்தீன் என்பவருக்கு வழங்கி விட்ட வள்ளன்மை வியப்புக்குரியது.

- மாவீரன் திப்புவின் திருமண பரிசாக எதையாவது ஒன்றை ஏற்றே ஆகவேண்டும் என அன்பு தந்தை ஹைதர் அலி வற்புறுத்திய போது, சிறந்ததோர் நூல் நிலையமே என்
- சிந்தைக்கினிய பரிசாக தந்தால் அதுவே போதும் என்றார் திப்பு சுல்தான் .

இவ்வாறாக போற்றப்படுகின்ற அறிவினை அடைந்திருக்கும் அறிவினையும் முயன்று பெறாமல் இருந்தவர்களுக்கும் இடையே மிகப்பெரும் வேறுபாடு உள்ளது அதை தான் திருக்குர்ஆன் எடுத்துக்காட்டுகின்றது

اَمَّنْ هُوَ قَانِتٌ اٰنَآءَ الَّيْلِ سَاجِدًا وَّقَآٮِٕمًا يَّحْذَرُ الْاٰخِرَةَ وَيَرْجُوْا رَحْمَةَ رَبِّهٖ‌ قُلْ هَلْ يَسْتَوِى الَّذِيْنَ يَعْلَمُوْنَ وَالَّذِيْنَ لَا يَعْلَمُوْنَ‌ اِنَّمَا يَتَذَكَّرُ اُولُوا الْاَلْبَابِ

எவர் மறுமையை அஞ்சி தன் இறைவனுடைய ரஹ்மத்தை ஆதரவு வைத்து இராக்காலங்களில் ஸுஜூது செய்தவராகவும், நிலையில் நின்றவராகவும் வணங்குகிறாரோ அவர் (நிராகரிப்பவரைப் போல்) ஆவாரா? (நபியே!) நீர் கூறும்: " அறிந்தோரும் அறியாதோரும் சமமாவார்களா என்று (நபியே) கூறுவீராக.கூரிய அறிவுடையவர்கள் மட்டுமேதான் நல்லுபதேசம் பெறுவார்கள்" குர்ஆன் ( 39 : 9)

ரஹ்மத் ராஜகுமாரன்

குர்ஆன் வசன ஆய்வு 16

மஸ்ஜித்



பள்ளி என்ற வார்த்தையை பல இடங்களில் முற்காலத்தில் பயன்பாட்டில் இருந்துள்ளது.சங்க காலத்தில் அரசர்கள் உடல் புதைத்த இடங்களைப் பள்ளி என்று குறிப்பிடும் வழக்கம் இருந்துள்ளது.

பள்ளி என்ற சொல்லானது துறவிகள் தங்குவதற்கும், உறங்குவதற்கும் அமைக்கப்பட்ட இடங்களுக்கும் பள்ளி என்றே தமிழ் பிராமி கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

முனிவர்கள் ஆசிரமம், பௌத்த கோயில்கள், அரண்மனை, படுக்கை, பள்ளிக்கூடம் போன்றவையும் பள்ளி என்றே அழைக்கப்படுகிறது.ஆதியில் சமண, பௌத்த கோயில்களே பள்ளி எனப்பட்டன.அவைகள் சைவ, வைணவக் கோயில்களாக மாறிய பின்பும் அதே பெயர்களில் வழங்கப்பட்டு வருகின்றன.

திருச்சிராப்பள்ளி, அகத்தியான்பள்ளி, திருக்காட்டுப்பள்ளி போன்ற ஊர்கள் இன்றளவும் அவ்வாறே அழைக்கப்பட்டு வருகிறது.தொழுகைக்கான இடத்தை பள்ளிவாசல் என்று அழைக்கின்றனர்.பெரும்பாலான ஊர்களில் பள்ளிவாசல் என்ற தெருவே உள்ளது. கேரள மாநிலம் இடுக்கி மாவட்டத்தில் ‘பள்ளிவாசல்’ என்ற கிராமம் உள்ளது.தமிழகத்தில் ஆத்தங்கரை பள்ளிவாசல் என்ற கிராமம் உள்ளது. புதுக்கோட்டை மாவட்டம் இலுப்பூரில் பல தெருக்களை பள்ளிவாசல் காடு, பள்ளிவாசல் தெரு என்றும் உள்ளது

அண்ணலார் (ஸல்) அவர்கள் பிறந்த இடத்தை துறந்து மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்த வழியில் தங்கியிருந்த குபா என்ற இடத்தில் எளிய முறையில் எழுப்பப்பட்ட இந்த மஸ்ஜித் குறித்து திருமறை பாராட்டுகின்றது.

لَا تَقُمْ فِيْهِ اَبَدًا  لَمَسْجِدٌ اُسِّسَ عَلَى التَّقْوٰى مِنْ اَوَّلِ يَوْمٍ اَحَقُّ اَنْ تَقُوْمَ فِيْهِ فِيْهِ رِجَالٌ يُّحِبُّوْنَ اَنْ يَّتَطَهَّرُوْا  وَاللّٰهُ يُحِبُّ الْمُطَّهِّرِيْنَ

ஆகவே, (நபியே!) அங்கு நீர் தொழுகைக்காக ஒருக்காலும் நிற்க வேண்டாம் - நிச்சயமாக ஆரம்ப தினத்திலேயே பயபக்தியின் மீது அடிகோலப்பட்ட மஸ்ஜிது உள்ளது; அதில் நீர் நின்று (தொழவும், தொழ வைக்கவும்) மிகவும் தகுதியானது; அங்கிருக்கும் மனிதர்கள் தூய்மையுடையோராக இருப்பதையே விரும்புகிறார்கள். அல்லாஹ் தூய்மையுடையோரையே விரும்புகிறான். (குர்ஆன் : 9:108)

நபி (ஸல்)அவர்கள் தங்கள் திருக்கரத்தினால் கட்டிய சிறப்புடைய முதல் மஸ்ஜித் மதீனாவில் இருந்து 3 மைல் தொலைவில் உள்ள குபா என்னும் இடத்தில் உள்ளது.

ஹிஜ்ரத்தின் போது ஸாலிம் இப்னு அவ்ஃப் கிளையினர் வசிக்கும் இடம் வந்தபோது ஜுமுஆ" தொழுகைக்கான நேரமும் ஆகிவிட்டதால் 'பத்னுல் வாதி' என்ற இடத்தில் அனைவரையும் ஒன்று சேர்த்து நபி (ஸல்) ஜுமுஆ தொழுகை நடத்தினார்கள்.
அப்பள்ளியே மஸ்ஜித் குபா.
ஆனால் திருக்குர்ஆன் ஆய்வாளர்கள் மேற்கண்ட வசனம் குறிப்பிடுவது மஸ்ஜித் நபவி பற்றியது என கருத்து தெரிவித்துள்ளனர்.
எவ்வாறாயினும் உலகில் எல்லா மஸ்ஜிதுக்கு அடிப்படை 'தக்வா ' எனப்படும் பயபக்தியாகிய இறையச்சமேயன்றி வேறு எதுவும் இல்லை. மதீனாவில் மஸ்ஜிது நபவியே கட்டி முடித்த பின்னரும், அண்ணலார் அவர்கள் சனிக்கிழமைதோறும் குபாவுக்கு சென்று இரு ரக்காத்துகள் தொழுவதே வழக்கமாகக் கொண்டிருந்தார்கள்.

ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்களும் வாரமிருமுறை குபாவுக்கு செல்வதையும்,அப்பள்ளியை பெருக்கித் துப்புரவு செய்வதையும் வழக்கமாகக் கொண்டிருந்தார்கள்.
ஹிஜ்ரத்தின் போது குபாயிலிருந்து மதீனாவுக்குச் சென்ற பெருமானார் (ஸல் ) அவர்கள் தங்கள் ஒட்டகம் மண்டியிட்டு அமர்ந்த இடத்தில் 'மஸ்ஜிதுந் நபவி' எனப்படும் பள்ளியைக் கட்டத் தொடங்கினார்கள். முதலில் அந்த இடம் சஅத் பின் ஸுராரா (ரலி) அவர்களின் பொறுப்பிலிருந்த பனூ நஜ்ஜார் கிளையைச் சேர்ந்த இரு அனாதைகளான சஹ்ல், சுஹைல் என்ற இரு அனாதைச் சிறுவர்களுக்குச் சொந்தமான பேரீச்சம் பழம் (உலர வைக்கப்படும்) களமாக இருந்தது.
பிறகு அந்த இரு சிறுவர்களையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அழைத்து, அந்தக் களத்தை பள்ளிவாயில் அமைப்பதற்காக விலைக்குக் கேட்டார்கள். அவர்கள் இருவரும், "இல்லை. அதை உங்களுக்கு அன்பளிப்பாகத் தருகிறோம் அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சிறுவர்களிடமிருந்து அதை அன்பளிப்பாகப் பெற மறுத்து , இறுதியில் அதை அபூபக்கர் (ரலி) அவர்கள் அந்த நிலத்தை விலை கொடுத்து வாங்கி நபி (ஸல்) அவர்களிடம் ஒப்படைத்தார்கள். அந்த மஸ்ஜித் நபவி பள்ளியைக் கட்டும் போது அவர்களுடன் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களும் செங்கல் சுமக்கலானார்கள்.

மஸ்ஜித் செல்லும் அரபுச் சொல்லுக்கு ஸுஜூது செய்யும் இடம் சாஷ்டாங்கம் செய்யும் இடம் என்பது பொருளாகும்
இஸ்லாத்தின் முதன்மையான கடமைகளுள் ஒன்று தொழுகை. அதனுள் நிற்றல், குனிதல், சாஷ்டாங்கம் செய்தல், அமர்தல் ஆகிய பல நிலைகள் அமைந்திருந்தபோதிலும், தொழுமிடத்தை குறிப்பிடுகின்ற போது நிற்கின்ற இடம் என்றோ, குனியும் இடமென்றோ கொள்ளாமல் சாஷ்டாங்கம் செய்யும் இடம் (மஸ்ஜித்) என்றே குறிக்கப்படுகிறது.
ஏனெனில் அடியார்களின் வணக்கம் முறைகளில் இறைவனுக்கு மிகவும் உவப்பான முறை சாஷ்டாங்கமேயாகும் ஏனெனில், இறைவனின் படைப்பினங்களில் மிக உயர்ந்த மானிடன் தன் உறுப்புகளில் மிக உயர்ந்த தலையினை, வேறு எதற்கும் எவருக்கும் சாய்க்கப்படாத சென்னியினை , நிறைஞானம் மொழியும் நெற்றியினை - நிலத்தின் மீது பதித்து, தன்னைப் படைத்த ஆற்றல் மிகுந்த அல்லாஹ்வை ஏற்றித் துதித்தல் பணிவின் சிகரமாகவும், அடக்கத்தின் சின்னமாகவும் அமைந்துள்ளது.
இறைவனை போற்றுகின்ற ஆலயங்களின் வரிசையிலே மஸ்ஜித்கள் பெற்றுள்ள தனிச்சிறப்பை இறைமறையே எடுத்துக்காட்டுகின்றது.

"...மனிதர்களில் சிலரைச் சிலரைக் கொண்டு அல்லாஹ் தடுக்காதிருப்பின் ஆசிரமங்களும் கிறிஸ்தவக் கோயில்களும், யூதர்களின் ஆலயங்களும், அல்லாஹ்வின் திருநாமம் அதிகமாக நினைவு கூறப்படும் மஸ்ஜிதுகளும் அழிக்கப்பட்டு போயிருக்கும்..." (அல்குர்ஆன் : 22:40)

இவ்வசனத்தில் 'அல்லாஹ் உடைய திருநாமம் அதிகமாக நினைவு கூறப்படும் மஸ்ஜிதுகள் ' என்பதாக மஸ்ஜிதுகளின் மாண்புகளை கோடிட்டுக் காட்டப்படுகிறது.பள்ளி வாயில்களில் இருந்து துள்ளி வரும் பாங்கோசையும், அங்கு அள்ளி தரப்படுகின்ற அறிவுரைகளும் முஸ்லிம்கள் மட்டுமன்றி எத்தனையோ அறிஞர் பெருமக்களே கவர்ந்துள்ளன.

ரஹ்மத் ராஜகுமாரன்

குர்ஆன் வசன ஆய்வு 17

பெற்றோர் _ பிள்ளைகளின் கடமைகள்











"ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது" என்பது பழமொழியாகும் . பெற்றோர்கள் தாங்கள் பெற்றெடுத்த பிள்ளைகளுக்கு ஆறு வயதில் ஒழுக்கத்தையும், ஒன்பது வயதில் படுக்கையை அப்புறப்படுத்துவதற்கும், பதின்மூன்று வயதில் தொழுகைக்காக அடித்து வற்புறுத்துவதற்கும் நபிமொழி நமக்கு வழிகாட்டுகிறது.

**"நன்னடத்தை, நல்லொழுக்கம், நற்குணம் ஆகியவற்றை விட மேலானதொரு பரிசை எந்த தந்தையும் தன் பிள்ளைகளுக்கு கொடுத்துவிட முடியாது " என்பது நபி மொழியாகும்.**

"பிறக்கும் குழந்தைகள் அனைத்தும் இஸ்லாம் நெறியிலேயே பிறக்கின்றன எனவும், பெற்றோர்களே அக்குழந்தைகளை யூதர்களாகவோ , கிறிஸ்தவர்களாகவோ நெருப்பை வணங்கும் மஜூசிகளாகவோ மாற்றிவிடுகின்றனர் எனவும்
அண்ணலம் பெருமானார் (ஸல் ) அவர்கள் அருளியுள்ளார்கள்.

وَالَّذِيْنَ يَقُوْلُوْنَ رَبَّنَا هَبْ لَـنَا مِنْ اَزْوَاجِنَا وَذُرِّيّٰتِنَا قُرَّةَ اَعْيُنٍ وَّاجْعَلْنَا لِلْمُتَّقِيْنَ اِمَامًا
மேலும் அவர்கள்: “எங்கள் இறைவா! எங்கள் மனைவியரிடமும், எங்கள் சந்ததியரிடமும் இருந்து எங்களுக்குக் கண்களின் குளிர்ச்சியை அளிப்பாயாக! இன்னும் பயபக்தியுடையவர்களுக்கு எங்களை இமாமாக (வழிகாட்டியாக) ஆக்கியருள்வாயாக! என்று பிரார்த்தனை செய்வார்கள். (அல்குர்ஆன் : 25:74)

பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளுக்கு செய்கின்ற கடமைகளை விட பிள்ளைகள் பெற்றோர்களுக்காக ஆற்ற வேண்டிய பணிகளே இறைவன் பார்வையில் உயர்ந்ததாக அமைகின்றன என்பதை குர்ஆனில் அல்லாஹ்
وَقَضٰى رَبُّكَ اَلَّا تَعْبُدُوْۤا اِلَّاۤ اِيَّاهُ وَبِالْوَالِدَيْنِ اِحْسَانًا اِمَّا يَبْلُغَنَّ عِنْدَكَ الْكِبَرَ اَحَدُهُمَاۤ اَوْ كِلٰهُمَا فَلَا تَقُلْ لَّهُمَاۤ اُفٍّ وَّلَا تَنْهَرْهُمَا وَقُلْ لَّهُمَا قَوْلًا كَرِيْمًا

அவனையன்றி (வேறு எவரையும்) நீர் வணங்கலாகாது என்றும், பெற்றோருக்கு நன்மை செய்யவேண்டும் என்றும் உம்முடைய இறைவன் விதித்திருக்கின்றான்; அவ்விருவரில் ஒருவரோ அல்லது அவர்கள் இருவருமோ உம்மிடத்தில் நிச்சயமாக முதுமை அடைந்து விட்டால், அவர்களை உஃப் (சீ) என்று (சடைந்தும்) சொல்ல வேண்டாம் - அவ்விருவரையும் (உம்மிடத்திலிருந்து) விரட்ட வேண்டாம் - இன்னும் அவ்விருவரிடமும் கனிவான கண்ணியமான பேச்சையே பேசுவீராக!

وَاخْفِضْ لَهُمَا جَنَاحَ الذُّلِّ مِنَ الرَّحْمَةِ وَقُلْ رَّبِّ ارْحَمْهُمَا كَمَا رَبَّيٰنِىْ صَغِيْرًا

இன்னும், இரக்கம் கொண்டு பணிவு என்னும் இறக்கையை அவ்விருவருக்காகவும் நீர் தாழ்த்துவீராக; மேலும், “என் இறைவனே! நான் சிறு பிள்ளையாக இருந்த போது, என்னை(ப்பரிவோடு) அவ்விருவரும் வளர்த்தது போல், நீயும் அவர்களிருவருக்கும் கிருபை செய்வாயாக!” என்று கூறிப் பிரார்த்திப்பீராக! (அல்குர்ஆன் : 17: 23 , 24)

முதுமை அடைந்த பெற்றோரை இழித்துரைப்பதும், பழித்துரைப்பதும் தகாதவை என தடுக்கப்பட்டுள்ளன. அவர்கள் எவ்வளவு தீயவர்களாக இருந்தபோதிலும், ஏன் பிற சமயத்தை சேர்ந்தவர்களாக இருந்த போதிலும், அவர்களுடன் பரிவுடனும் , பாசத்துடனும் இன்மொழி பகர்ந்து
**இனிமையாக**
நடந்து கொள்வதே இஸ்லாம் காட்டும் வழிமுறை ஆகும்.
மேற்கண்ட வசனத்தில் " அவர்கள் மீது இரக்கம் கொண்டு பணிவு என்னும் இறக்கையை அவ்விருவருக்காகவும் நீர் தாழ்த்துவீராக " _ இவ்வுருவகத் தொடரில் உறைந்துள்ள நயம் உய்த்துணரத்தக்கது.

அதாவது வானளாவிப் பறக்கும் பறவையானது தன் குஞ்சுகள் மீது மிஞ்சிய பாசத்தினால், இறக்கையைத் தாழ்த்திக் கொடுக்கும் இயல்பினை இயற்கையில் காணமுடியும்.

பெற்றோர்கள் ஆற்றல் மிகுந்தவர்களாகவும், குழந்தைகள் ஆற்றல் குறைந்தவர்களாகவும் இருந்த தருணத்தில் குழந்தைகள் மீது பெற்றோரின் பாசமும், பராமரிப்பும் மிகுந்திருந்தன. பின்னர் குழந்தை வளர்ச்சி அடைந்து வலிமை பெற்ற போது, தளர்ச்சி அடைந்துவிட்ட பெற்றோருக்காக அத்தகைய பரிவை - இறக்கைத் தாழ்த்தி உன்னிடம் காட்டிய பாசத்தையும், பரிவையும் திருப்பி அவர்கள் மீது நீங்கள் வெளிக்காட்ட வேண்டும் என்பது கருத்தாகும்.

அபூயஸித் பிஸ்தாமி (ரஹ்) அவர்களின் தாயார் படுத்த படுக்கையில் அரைத்தூக்கத்தில் " மகனே தண்ணீர் தாகம் தண்ணீர் கொடு!" என்று கேட்கின்றார். வீட்டிலேயே தண்ணீர் இல்லாமையால், நடு இரவு என்று பாராமல் பிஸ்தாமி அவர்கள் கூஜாவை எடுத்துக்கொண்டு ஊர் புறத்தே இருந்த ஊரணிக்கு சென்று தண்ணீர் கொண்டு வருகிறார். அதற்குள் அன்னையர் ஆழ்ந்து உறங்கி விடுகின்றார். படுக்கை அறையில் பிஸ்தாமியும் நீருங் கையுமாக விடியற்காலை வரை அயராது நிற்கின்றார். கண் மலர்ந்த அன்னையர் மனம் உகந்து மைந்தனின் மீது ஆசிகளைப் பொழிகின்றார்.

ஹஸனுல் பஸரீ அவர்கள் ஹஜ்ஜு செய்யும்போது , ஒருவர் ஒரு கூடையைச் சுமந்துகொண்டு ஹஜ் கடமை நிறைவேற்ற கண்டார் . அவரிடத்தே காரணம் கேட்டபோது கூடைக்குள் வயது முதிர்ந்த தன் தாயார் இருப்பதாகவும் அவருக்கு ஹஜ்ஜின் பேறு கிடைப்பதற்காக தாம் கூடையை தூக்கி கொண்டு வருவதாகவும் , அதுவும் ஏழாவது முறையாக அவ்வாறு செய்வதாகவும் கூறினார்.

பெருமானார் காலத்தில் வாழ்ந்த அல்கமா என்பவர் மரணத்தருவாயில் கலிமாதற்கு இயலாமல் வருந்துவதைக் கண்ட அண்ணலார் (ஸல்) அவர்கள், அவரின் அன்னையரை விசாரிக்க , தம் புதல்வன் மனைவியின் பேச்சைக் கேட்டு தன்னை வருந்தச் செய்ததை எடுத்துரைத்தார்.

மகனாரை மன்னிப்பதற்காக நபியவர்கள் அவ்வன்னையே வேண்ட அவர் சற்று தயங்கவே , விறகினால் நெருப்பு மூட்டி ,அந்த நெருப்பில் அல்கமா தூக்கி எறிவதற்கு கட்டளை இடப்பட்டது. அதுகேட்டு அன்னையர் மனமிரங்கி மகனை மன்னிக்கவே, அல்கமா கலிமாவுடன் உயிர் துறக்கின்றார்.

நபி மூஸா (அலை) அவர்களுக்கு இறைவன் கூறிய அறிவுரை:
"எவர் தமது பெற்றோருக்கு மதிப்பளிக்கின்றாரோ அவருடைய ஆயுளை நீளச் செய்வேன். அவருக்கு பணிவிடை செய்யும்
நல்மகன் ஒன்றையும் அவருக்குக் அளிப்பேன். எவர் தமது பெற்றோரை வெறுத்தால் அவருடைய ஆயுளைக் குறைத்திடுவேன். அவருக்கு தொல்லைதரும் மகன் ஒன்றையும் கொடுத்திடுவேன்"

ரஹ்மத் ராஜகுமாரன் .

குர்ஆன் வசன ஆய்வு 18

( முதல் ஆச்சரியம் )




وَلَبِثُوْا فِىْ كَهْفِهِمْ ثَلٰثَ مِائَةٍ سِنِيْنَ وَازْدَادُوْا تِسْعًا
அவர்கள் தங்கள் குகையில் முன்னூறு வருடங்களுடன் மேலும் ஒன்பது அதிகமாக்கி (முன்னூற்றி ஒன்பது வருடங்கள்) தங்கினார்கள். (அல்குர்ஆன் : 18:25)

**ஒவ்வொரு வெள்ளிக்கிழமை, நம்மில் அதிகமான நபர்கள் சூரா கஹ்ஃபு ஓதுகிறோம்.**
**அதிலுள்ள ஒரு ஆச்சரியமிக்க ஒரு விஷயத்தை இன்று உங்களுக்கு தெரியபடுத்தவுள்ளேன்.படித்து பாருங்கள் குர்ஆனை அல்லாஹ் எப்படி வடிவமைத்திருக்கிறான் என்பது விளங்கும்.**

உலகிலுள்ள மனிதர்கள் குர்ஆன் கூறும் விஷயங்கள் மட்டும்தான் ஆச்சரியம் என்று நினைக்கிறார்கள். ஆனால் நாம் அப்படி சொல்வதில்லை, குர்ஆனை நீங்கள் எப்படி ஆராய்ச்சி செய்தாலும், அதில் ஒரு இரகசியம் பொதிந்திருக்கும். அதற்கு உதாரணம் இன்று நான் சொல்லவுள்ள இரு விஷயங்கள்
சூரா கஹ்ஃபில் அல்லாஹ் குகை வாசிகள் எத்தனை ஆண்டு காலம் குகையில் இருந்தார்கள் என்பதை சொல்லும் போது 309 ஆண்டுகள் என்பதாக கூறுகின்றான்.

இப்ப நீங்கள் நினைக்கலாம் இதில் என்ன ஆச்சரியம் இருக்கபோகுதென்று.

வாருங்கள் பார்ப்போம் அந்த ஆச்சரியம் என்ன என்பதை.

இறைவன் தன் திருமறையில் இந்த குகைவாசிகளை பற்றி ஆரம்பிக்கும் இடத்தில்
ثُمَّ بَعَثْنٰهُمْ لِنَعْلَمَ اَىُّ الْحِزْبَيْنِ اَحْصٰى لِمَا لَبِثُوْۤا اَمَدًا
பின்பு, (அக்குகையில் தங்கியிருந்த) இருபிரிவினர்களில் எப்பிரிவினர், தாங்கள் (குகையில்) தங்கியிருந்த கால அளவை நன்கு அறிந்திருந்தார்கள் என்பதைச் சோதிப்பதற்காக அவர்களை நாம் எழுப்பினோம்.
(அல்குர்ஆன் : 18:12)

இந்த ஆயத்தில் لبثوا என்ற ஒரு வார்த்தை வந்துள்ளது இதை போன்று இன்னொரு இடத்திலும்
قُلِ اللّٰهُ اَعْلَمُ بِمَا لَبِثُوْا لَهٗ
“அவர்கள் (அதில்) தரிப்பட்டிருந்த (காலத்)தை அல்லாஹ்வே நன்கறிந்தவன்; (அல்குர்ஆன் : 18:26)
இந்த ஆயத்தில் لبثوا என்ற ஆயத்தோடு அவர்களின் வரலாற்றை அல்லாஹ் முடிக்கிறான்.

இப்ப நம்ம விஷயத்திற்கு வருவோம் இந்த இரண்டு لبثوا என்ற வார்த்தைகளுக்கு இடையிலுள்ள வார்த்தைகளை எண்ணி பார்க்கும் போது சரியாக அதன் மொத்த வார்த்தைகளின் எண்ணிக்கை 309 தாக வருகிறது ஆக அல்லாஹ் அவர்கள் தங்கியிருந்த ஆண்டின் எண்ணிக்கையான (309 ) அடிப்படையில் 309 வார்த்தைகளை பயன்படுத்தி இந்த வரலாற்றை கூறியுள்ளான்.

இதில் இன்னொரு ஆச்சரியம் என்னவென்று பார்த்தால்.

இவர்கள் தங்கியிருந்த கால அளவை பற்றி குறிப்பிடும் ஆயத்தில்
وَلَبِثُوْا فِىْ كَهْفِهِمْ ثَلٰثَ مِائَةٍ سِنِيْنَ وَازْدَادُوْا تِسْعًا
அவர்கள் தங்கள் குகையில் முன்னூறு வருடங்களுடன் மேலும் ஒன்பது அதிகமாக்கி (முன்னூற்றி ஒன்பது வருடங்கள்) தங்கினார்கள்.
(அல்குர்ஆன் : 18:25)

இந்த வார்த்தை (ثَلٰثَ مِائَةٍ سِنِيْنَ-முன்னூறு வருடங்கள் ) வருகிறது இதை நாம் முதலாவது لبثوا என்ற வார்த்தையிலுருந்து எண்ண ஆரம்பித்து இந்த இடத்திலுள்ள ( ثَلٰثَ مِائَةٍ سِنِيْنَ) என்ற வார்த்தைக்கு வரும்போது அதனின் மொத்த எண்ணிக்கை 300 வது வார்த்தையாக வருகிறது அதாவது முன்னூறு வருடங்கள் என்று சொல்லுமிடம்வரை சரியாக 300 வார்த்தைகள் பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஸுப்ஹானல்லாஹ் ! அல்லாஹ் தன் திருமறையை எப்படி வடிவமைத்துள்ளான் பாருங்கள் சிந்திப்பவர்ளுக்கு இதில் ஏராளமான அத்தாட்சிகள் உள்ளன.
ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் சூரா கஹ்ஃபு ஓதுங்கள் அது உங்களுக்கு ஒளியாக இருக்கும் உலகிலும் மறுமையிலும்.

( Sufi islam சூபி இஸ்லாம் பதிவிலிருந்து ..)
x............:......x.........................x.....................x..................... x............

( இரண்டாவது ஆச்சரியம் )
இந்த சூராவில் இன்னொரு ஆச்சரியமும் உண்டு அதுதான்
300 = 309
குகைத தோழர்கள் குகையில் முன்னூறு வருடங்கள் தங்கியிருந்தனர் என்றும் இன்னும் அதற்கு மேல் ஒன்பதை அதிகப்படுத்தித் தங்கினார்கள் என்றும் சிலர் கூறுகின்றனர் நபியே . நீர் கூறுவீராக அவர்கள் அதில் தங்கி இருந்த காலத்தை அல்லாஹ்தான மிக்க அறிந்தவன்
(குர்ஆன் 18 ; 25 26)

இன்றைய விஞ்ஞானம் இரண்டுமே சரிதான் என்கிறது

சூரிய காலண்டர் கணக்கின்படி
1 வருடத்திற்கு = 365 நாட்கள்
சந்திர காலண்டர் கணக்கின்படி
1 வருடத்திற்கு = 354 நாட்கள்
அதாவது 1 வருடத்திற்கு 11 நாட்கள் குறைவு இந்த 11 நாட்கள் 300 வருடத்திற்கு . 11 * 300 = 3300 நாட்கள்
அதாவது 3300/ 365 = 9 வருடங்கள்
எனவே குகைத் தோழர்கள் சூரிய கணக்கின்படி 300 வருடங்கள். சரிதானே ?
சந்திர கணக்கின்படி 309 வருடங்கள் தங்கினார்கள் இதுவும் சரிதானே ?
நீங்கள் காலத்தின் கணக்கை அறிவதற்காகச் சூரியனையும் சந்திரனையும் ஆக்கினான். குர்ஆன் ( 6 : 96 )
நீங்கள் 100 வருடங்கள் வாழும் போது சூரிய கணக்கின்படி உங்கள் வயது 100. ஆனால் சந்திரக்கணக்கின்படி 103 வயது

இப்போ . உங்க வயதை சந்திரக் கணக்கின்படி கணக்கிட்டுப் பார்த்தாகி விட்டதா ?

ரஹ்மத் ராஜகுமாரன்

## குர்ஆன் வசன ஆய்வு 19



மனிதர்களை இறாஞ்சிச் செல்லும் இராட்சதப் (யானைப்) பறவைகள்!

حُنَفَآءَ لِلّٰهِ غَيْرَ مُشْرِكِيْنَ بِهٖ وَمَنْ يُّشْرِكْ بِاللّٰهِ فَكَاَنَّمَا خَرَّ مِنَ السَّمَآءِ فَتَخْطَفُهُ الطَّيْرُ اَوْ تَهْوِىْ بِهِ الرِّيْحُ فِىْ مَكَانٍ سَحِيْقٍ

அல்லாஹ்வுக்கு ஒருமுகப்பட்ட அடிமைகளாக திகழுங்கள்.அவனோடு எதனையும் இணை வைக்காதீர்கள். யாரேனும் அல்லாஹ்வுக்கு இணை வைப்பாராயின் அவர் வானத்திலிருந்து விழுந்து விட்டவரைப் போன்று ஆகிவிடுகின்றார். இனி பறவைகள் அவரை இராஞ்சிக் கொண்டு செல்லும் அல்லது காற்று அவரைத் தூக்கிச் சென்று ஏதேனும் அதலபாதாளத்தில் எறிந்து விடும். அங்கு அவர் சின்னாபின்னமாகிவிடுவார். குர்ஆன் ( 22::31)

இணைவைக்கும் செயலை செய்யும் ஒரு மனிதனின் நிலையை, ஒரு உதாரணம் மூலம் அல்லாஹ் விளக்குகின்றான். பிற படைப்பினங்களை கடவுளாக வணங்குபவன் எந்த பிடிமானமும் இல்லாமல் வானத்திலிருந்து கீழே விழுந்து பறவைகளால் இழுத்துத் செல்லப்படும் பிணம் போன்றவன் என்று கூறுகிறான்.

அல்லாஹ் உதாரணமாக எதைச் சொன்னாலும் உண்மையல்லாததை ஒரு போதும் சொல்ல மாட்டான். இது அவனது சுன்னத் வழிமுறை. ஆனால் இன்று நாம் வாழும் உலகில், ஒரு மனிதனை இறாஞ்சிச் செல்லும் அளவிற்கு எந்தப் பறவையும் இல்லை.

மனித இனம் தோன்றுவதற்கு சுமார் 65 மில்லியன் வருடங்களுக்கு முன்பு இப்பூவுலகை ஆட்சி செய்தவைகள் இராட்சத டைனசராஸ் மிருகங்களும்,பறவைகளுமே. ஆனால் மனித இனம் தோன்றியதற்கு பிறகு பெரும் இராட்சதப் பறவைகள் இருந்ததாக புராணக் கதைகளில் குறிப்புகள் காணப்படுகின்றன.

இந்துக் கடவுளான விஷ்ணுவின் வாகனம் கருடன். மகாபாரதக் கதையில் வரும் கருடன் யானையையே தூக்கிச் செல்லும் வலிமை கொண்டது.

அரபு மொழியில் இதை "ரூக்' பறவை என்று அழைக்கின்றனர். பறவைகளின் அரசன் என்ற பொருளில் பார்ஸி மொழியில் "ஷாரூக்". "ஷா" என்றால் அரசன், ரூக் என்றால் பறவை, பட்சி, "பட்சிராஜா". சிந்துபாத்தின் கடற்பயண கதைகளின் போது இராட்சத ரூக் பறவைகள் இரு முறை கப்பல்களை தாக்கி சேதப்படுத்தியதாகவும், ஒரு முறை பறவையின் கால்களில் தன்னை கட்டிக் கொண்டு தனித் தீவிலிருந்து சிந்துபாத் தப்பித்ததாக குறிப்பிடுகிறார்.

தற்போது நம்மிடையே வாழும் பறவைகளில் மிகப் பெரியது..பறக்க இயலா நெருப்புக் கோழி சுமார் ஒன்பது அடி உயரமும், 150 கிலோ எடையும் கொண்டது.தன்னை விட எடை குறைந்த மனிதர்களை சுமக்கக் கூடியதே.ஆனால் மனிதர்களை இழுத்துச் செல்லும் ஆற்றல் இல்லை.

பறக்கும் பறவைககளில் கோரி பஸ்டார்ட் (kori bustard) என்னும் தென் ஆப்பிரிக்கா பறவையானது 19 கிலோ எடையும் 2.5 அடி விரிந்த இறக்கையும் உடையது.

அடுத்தது "ஆண்டியன் கழுகு" இது பதினைந்து கிலோ எடையும், பத்தரை அடிவிரிந்த இறக்கையும்கொண்டது. இவையெல்லாம் சிறு பிராணிகளை மட்டுமே தூக்கிச் செல்லும் வலிமை உள்ளவை..

ஆனால் அல்லாஹ் உதாரணம் காட்டும், மனிதர்களை இறாஞ்சிச் செல்லும் பறவைகள் இவ்வுலகில் இருந்ததாக தொல்லியல் ஆய்வு முடிவுகள் கூறுகின்றன. அதற்கான தொல்லியல் எச்சங்கள் இன்றும் அருங்காட்சி ஆய்வுக்கூடங்களில் (Museum) இருக்கின்றன.

நியூசிலாந்து பூர்வீக குடிகளான மாவோரிகளின் கதைகளில் வரும் ராட்சதப் பறவைகள் (Hasst Eagles) உண்மையில் வாழ்ந்த பறவைதான் என்று ஆய்வுகள் கூறுகின்றன.

Thunder bird என்று சொல்லக்கூடிய இடியோசை இராட்சத பறவைகளும் இவ்வுலகத்தில் வாழ்ந்துள்ளதாக தொல்லியல் எச்சங்கள் கூறுகின்றன. சமீபத்தில் அமெரிக்காவின் பென்சில்வேனியா மாகாணத்தில் இது போன்ற இராட்சத பறவைகளை பார்த்ததாக ஏராளமான மக்களின் சாட்சியம் உள்ளது குறிப்பிடத்தக்கது.

https://www.thoughtco.com/the-giant-thunderbird-returns...

https://www.juneauempire.com/.../impossibly-large-bird.../

கடந்த 24,- மார்ச்,2018 அன்று இலங்கை முல்லைத்தீவு கடற்பரப்பில் ஒரு இராட்சதப் பறவை ஆழ்கடலை நோக்கி பறந்து சென்றதாக மீனவர்கள் தெரிவித்தனர். கடற்கரையில் இருந்து 500 மீற்றர் தொலைவில் தென்பட்ட இந்த இராட்சத பறவை வட-கிழக்கு கடல் நேராக ஆழ்கடல் நோக்கி பறந்து சென்று மறைந்துள்ளதாக மீனவர்கள் தெரிவித்துள்ளனர்.

இதல்லாமல் கடந்த வாரம் (12- Sep.2018.) வெளியான ஒரு ஆய்வுக் கட்டுரையில் தென் ஆப்பிரிக்காவிற்கு கிழக்கே உள்ள மடகாஸ்கர் தீவில் நடந்த தொல்லியல் ஆய்வில், சுமார் 750 வருடங்களுக்கு முன்பு இருந்ததாக சொல்லப்படும் இராட்சதப் யானைப் பறவை (Elephant bird) களின் எலும்புக் கூட்டை கண்டெடுத்தனர். அந்த எலும்புகளில் காணப்பட்ட வெட்டுக் காய அடையாளம் மூலம் அங்கிருந்த பூர்வ குடிகள் இப்பறவைகளை வேட்டையாடி அழித்திருக்கலாம் என்று கருதுகிறார்கள்.

யானைப் பறவையானது (ஏப்யோர்னிஸ்) சுமார் பத்தடி உயரமும், சுமார் 650-860 கிலோ எடையும் கொண்டது. ஆனாலும் இது நெருப்புக் கோழியைப் போல் பறக்கவியலாத ஒன்று ஆயினும் மணிக்கு எழுபது கி.மீ வேகத்தில் குதிரையை விட வேகமாக ஓடக் கூடியது. கடினமான அலகும்,,, உறுதியான கழுத்தும் கொண்டவை. சுமார் எழுபது கிலோ எடை கொண்ட மனிதனை இழுத்துச் செல்லும் வலிமை உடையது.

இது இடும் முட்டை, அழிந்து போன டைனாசராஸ் முட்டைகளை விட மிகப் பெரியவை. பதினேழாம் நுற்றாண்டு வரை உயிர் வாழ்ந்த இந்தப் பறவைதான் உலகிலேயே மிகப்பெரியது.

அதே வசனத்தில் அல்லாஹ் வேறொரு உதாரணம் மூலம் இணை வைப்பவர்களின் நிலையை சுட்டிக் காட்டுகின்றான்…”… பறவைகள் அவரை இராஞ்சிக் கொண்டு செல்லும் அல்லது காற்று அவரைத் தூக்கிச் சென்று ஏதேனும் அதலபாதாளத்தில் எறிந்து விடும். அங்கு அவர் சின்னாபின்னமாகி விடுவார். குர்ஆன் ( 22::31)

புயல், சூறாவளி காற்று கடும்வேகத்தில் அடிக்கும் போது அதில் மாட்டிய மனிதனை அது தூக்கிச் சென்று வேறிடத்தில் எறிந்து விடுவதை நாம் பார்க்கிறோம்.

பொதுவாக புயலானது சுமார் மணிக்கு ஐம்பது மைல் வேகத்தில் வீசும்போது… நம்மால் நேரடியாக நடக்க முடியாது. அதே சமயம் அப்புயல் மணிக்கு நூறு மைல் வேகத்தை எட்டும் போது .நமது கால்கள் தரையை தொட முடியாமல் அலக்காக நம்மை தூக்கி சென்றுவிடும்.புயல் வேகம் குறைந்து நமது எடையை தூக்க இயலாநிலையில் கீழே எறிந்து விடும்.

இதே கதியையே, பிற படைப்புகளை கடவுளாக வணங்குகிறவர்களின் நிலையும் இருக்கும். என்பதை அல்லாஹ் உதாரணமாக விளக்குகிறான்.

ஆகவே கொடிய இணை வைக்கும் பாவத்திலிருந்து நாம் விலகிக் கொள்வோம். (Read islam பதிவிலிருந்து..)

பறவைகளின் உலகம் 10

( பறவை)




اَلَمْ تَرَ اَنَّ اللّٰهَ يُسَبِّحُ لَهٗ مَنْ فِى السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَالطَّيْرُ صٰٓفّٰتٍ كُلٌّ قَدْ عَلِمَ صَلَاتَهٗ وَتَسْبِيْحَهٗ وَاللّٰهُ عَلِيْمٌ بِمَا يَفْعَلُوْنَ

வானங்களிலும் பூமியிலும் உள்ளவைகளும் (இவற்றிற்கு மத்தியில் உள்ளவைகளும் குறிப்பாக) பறவைகளும் (தங்கள்) இறக்கைகளை விரித்(துப் பறந்)த வண்ணமாக அல்லாஹ்வை புகழ்ந்து கொண்டிருக்கின்றன என்பதை (நபியே!) நீங்கள் காண வில்லையா? இவை யாவும் தாங்கள் புகழ்ந்து வணங்க வேண்டிய முறையை நிச்சயமாக அறிந்தே இருக்கின்றன. அல்லாஹ்வும் அவைகள் செய்பவைகளை நன்கறிந்து கொள்கிறான். (அல்குர்ஆன் : 24:41)

பறவைகள் பறந்த நிலையிலேயே இறைவனை துதிக்கின்றன அவற்றுக்கு இறைவன் சொல்லிக் கொடுத்து, வழிகாட்டிய முறையில் அவை அவனைத் துதிக்கின்றன. அவனுக்கு வழிபாடு செய்கின்றன. அவற்றின் செயல்பாடுகளை அவன் நன்கு அறிகிறான். அவை ஒவ்வொன்றும் தன் தொழுகையும், துதியையும் நன்கு அறிந்திருக்கின்றன.மேலும் இவை அனைத்தும் தான் நன்கு அறிந்து இருப்பதாகவும் இவற்றில் எதுவும் தனக்கு மறைவானது அல்ல என்றும் இறைவன் தெரிவிக்கின்றான்.

பறவைகளுக்கு நம்மைப் போன்ற கற்பனையும் இல்லை, அதனால் கவலைகளும் இல்லை. இன்று உலகையே உலுக்கும் பொருளாதார நெருக்கடியால் எந்தப் பறவையும் மனச்சோர்வு (Depression) நோய்க்கு ஆளாகவில்லை.

பறவைகள் இறக்கைகளை விரித்த வண்ணமாக இறைவனை துதிக்கின்றன.(24:41) இறைவன் அவற்றை (கீழே விழாமல் தாங்கி ) தடுத்துக் கொண்டிருப்பதாக சொல்கின்றான். குர்ஆன் (67:19)

பறவைகள் தங்கள் வாழ்வைப் பற்றி சந்தேகப்படுவதில்லை. இறைவனின் மீது முழுநம்பிக்கை வைத்து இரை தேடச் சென்று, முழுவெற்றியுடன் திரும்புகின்றன. பறவைகளின் இதயம் போன்றவர்கள் என்பது அல்லாஹ்வின் மீது தவக்கல் என்னும் முழுப்பொறுப்பும் சாற்றுபவர்கள் என்பது பொருளாகும்.
அல்லாஹ்வின் மீது தவக்கல் என்னும் முழுப் பொறுப்புச் சாட்டும் முறையில் நீங்கள் முழுமையாக நீங்கள் பொறுப்பு சாட்டினால், பறவைகளுக்கு உணவளிப்பது போன்று அல்லாஹ் உங்களுக்கும் உணவளிப்பான். பறவை காலையில் வயிறு ஒட்டியதாகச் செல்கிறது. மாலையில் வயிறு நிரம்பித் திரும்புகிறது. (அறிவிப்பாளர்: உமர் (ரலி) நூல்: திர்மிதி)

இந்த நபிமொழியை நன்றாக கவனியுங்கள், பறவைகள் முயற்சியற்று இருக்கவில்லை. உணவு தேடி கூடுகளை விட்டு பறந்து செல்கின்றன. இறைவன் உணவளிக்கின்றான். எந்த பறவையும் பட்டினியால் இறந்ததில்லை” என சொல்வார்கள்.
பைபிளில் ஒரு வாசகம் " பறவைகளைப் பார்.அவை விதைக்கிறதுமில்லை , அறுக்கிறதுமில்லை - களஞ்சியத்தில் கொண்டுபோய் சேர்ப்பதும் இல்லை " - ஆம் பறவைகள் தெரிந்து வைத்திருக்கின்றன; இயற்கை தன்னை ஏமாற்றாது என்று இருத்தலின் மீது அவற்றிக்கு அபார நம்பிக்கை உண்டு.
இதனால் தானோ நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
சொர்க்கத்தில் மக்கள் சிலர் நுழைவார்கள். அவர்களுடைய உள்ளங்கள் பறவைகளின் உள்ளத்தைப் போன்றிருக்கும்.
இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
ஸஹீஹ் முஸ்லிம் : 5462.

பறவைகள் நமது எண்ணங்களுக்குச் சிறகுகள் முளைக்க வைக்கின்றன - பறவைகள் விடுதலையின் அடையாளங்கள். சுதந்திரத்தின் குறியீடுகள். அவைகள் சிறகுகளை விரிக்கும் போது எல்லைகள் நீட்சியடைகின்றன !
பறவைகள் மனிதனுக்கு உந்து சக்தியை உற்பத்தி செய்பவை - அவை அவன் கவிதைகளுக்கு பாடுபொருள்
பழம் விழுங்கிய பறவை பறக்கிறது.
ஒரு மரத்தை சுமந்து கொண்டு !
ஒரு பறவை
பறந்து கொண்டிருக்கும்போது
மிதந்து கொண்டிருக்கிறது
கூடவே வானமும்
பறவையைச் சுட்டார்கள்
விழுந்ததோ
ஒரு துண்டு வானம்
- பாலை நிலவன்
"ஒரு பறவை பாடுவது அதனிடம் பதில் இருக்கிறது எனபதற்காக அல்ல ; அதனிடம் பாடல் இருக்கிறது எனபதற்காகவே அது பாடுகிறது " - மாயா ஏஞ்சலோ
பறவை ஒன்றை வரைந்துவிட்டு
அதன் இறகுகளை
மிகவும் கவனமாய்

செப்பனிட்டுக் கொண்டிருக்கிறேன்
பறந்துவிடும் என்று
பயமாக இருக்கிறது
அதனால்தான்
அதற்கான வானத்தை
நான் இன்னும் வரையவில்லை.
-ஜெம்சித் ஸமான்
பறவைகள் விஞ்ஞானத்திற்கு இடுபொருள்

பறவைகள் எத்தனை எத்தனை அழகு ! அது காகமாக இருந்தாலும் சரி, மயிலாக இருந்தாலும் சரி, பறக்காத பறவைகளும் அழகுதான் .
கோழி தன் குஞ்சுகளைத் சிறகுக்குள் வைத்து பாதுகாக்கிற தாய்மையும் அழகு. கொக்கு மீனுக்காக ஒற்றைக்காலில் இருக்கின்ற தவமும் அழகு. தேன்சிட்டு அலகும் அழகு ,பேசக் கற்றுக் கொள்ளும் மைனாவின் இறகுகளும் அழகு
இயற்கை, தன் அழகை எல்லா உயிர்களுக்கும் பிரித்துக் கொடுக்கிறது .
மனிதனோடு வாழ்கின்ற காரணத்தினாலேயே கோழிகளும் வான்கோழிகளும் பறக்கிற வழக்கத்தைத் தொலைத்தன.
பறவைகளைப் பார்க்கும்போது இன்னும் உயரமாய் மேலே செல்ல வேண்டும் என்கிற எண்ணம் மனிதனுக்கு தோன்றுகிறது.

اَلَمْ يَرَوْا اِلَى الطَّيْرِ مُسَخَّرٰتٍ فِىْ جَوِّ السَّمَآءِ مَا يُمْسِكُهُنَّ اِلَّا اللّٰهُ اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يُّؤْمِنُوْنَ
மேல் ஆகாயத்தில் (பறந்து) செல்லும் பறவைகளை அவர்கள் பார்க்கவில்லையா? அவற்றை (ஆகாயத்தில்) தாங்கி நிற்பவன் அல்லாஹ்வைத் தவிர வேறு ஒருவருமில்லை. நம்பிக்கை கொண்ட மக்களுக்கு நிச்சயமாக இதிலும் பல அத்தாட்சிகள் இருக்கின்றன. (அல்குர்ஆன் : 16:79)

ஒவ்வொரு பறவையும் உணவுக்காக மட்டும் பறப்பதில்லை.
உணவைத் தாண்டிய உள்ளுணர்வால் அவை பறக்கின்றன.
பறப்பது சுகம்
பறப்பது ஞானம்
பறப்பது அனுபவம்
பறப்பது கொண்டாட்டம்
பறப்பது சுதந்திரம்
கூண்டுக் கிளிகளின்
காதலில் பிறந்த
குஞ்சுப் பறவைக்கு....
எப்படி வந்தன?...............
எதற்கு வந்தன?..............
"சிறகுகள்".
.............. x............x...............x ..... ...........
"பேசும் பார் என் கிளி" என்றான்
கூண்டைக் காட்டி.
அந்தக் கிளிக்கு வால் இல்லை.
வீசிப் பறக்கச் சிறகில்லை.
வானம் கைப் பட வழியே இல்லை.
"பேசும்! இப்போது பேசும் பார்!"
என மீண்டும் மீண்டும் அவன் சொல்ல...

"பறவை" என்றால்
"பறக்கும்" எனும்
பாடம் முதலில் படி! என்றேன்.
-கல்யாண்ஜி
எவ்வளவு இனிய பழங்களை தந்தாலும், சுதந்திரம் இல்லை எனில் கூண்டுக்குள் வாழாதவை அவை !
' பற 'அவை காரணப் பெயர் மட்டுமல்ல ;
சுதந்திரத்திற்கான இடுகுறிப் பெயரும் கூட !
(மீள் )

ரஹ்மத் ராஜகுமாரன்

குர்ஆன் வசன ஆய்வு 21




(கற்பனைக்கும் அப்பால் )
فَلَا تَعْلَمُ نَفْسٌ مَّآ أُخْفِىَ لَهُمْ مِّنْ قُرَّةِ اَعْيُنٍ جَزَآءً بِمَا كَانُوْا يَعْمَلُوْنَ
அவர்கள் செய்த (நற்) கருமங்களுக்குக் கூலியாக நாம் அவர்களுக்காக ( தயார்படுத்தி) மறைத்து வைத்திருக்கும் கண் குளிரக் கூடிய (மறுமையின் பேரின்பத்தை) எந்த ஓர் ஆன்மாவும் அறிந்து கொள்ள முடியாது. (அல்குர்ஆன் : 32:17)

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

''எந்தக் கண்ணும் பார்த்திராத, எந்தக் காதும் கேட்டிராத, எந்த மனிதரின் உள்ளத்திலும் (கற்பனையிலும்) உதித்திராத இன்பங்களை என் நல்லடியார்களுக்காக நான் (சொர்க்கத்தில்) தயார்படுத்தி வைத்துள்ளேன்' என்று அல்லாஹ் கூறினான்.

நீங்கள் விரும்பினால், 'மனிதர்கள் எவரும் தமக்காக மறைத்து வைக்கப்பட்டிருக்கும் கண் குளிர்ச்சி (தரும் சொர்க்கத்து இன்பங்)களை அறிய மாட்டார்கள்' என்னும் (திருக்குர்ஆன் 32:17) இறைவசனத்தை ஓதிக் கொள்ளுங்கள். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி : 3244.

உங்கள் இம்மை வாழ்க்கையில் நீங்கள் அடைந்த அனைத்தும், நீங்கள் உண்மையில் கற்பனையின் மூலம் சாதித்தீர்கள். முதலில் நீங்கள் எப்படி வேலைக்குச் சென்று பணம் சம்பாதிக்கத் தொடங்குவீர்கள் என்று மட்டுமே கற்பனை செய்தீர்கள் - அப்போதுதான் உங்களுக்கு உண்மையிலேயே ஒரு வேலை கிடைத்து அதை சம்பாதிக்கத் தொடங்கியது.

முதலில் நீங்கள் நண்பர்களையும், அன்பானவர்களையும் மட்டுமே கனவு கண்டீர்கள் - அப்போதுதான் நீங்கள் அவர்களைக் கண்டுபிடித்து சந்தித்தீர்கள்.

முதலில் நீங்கள் எதை உருவாக்க விரும்புகிறீர்கள் என்பதைப் பற்றி மட்டுமே கனவு கண்டீர்கள் - அப்போதுதான் நீங்கள் உண்மையிலேயே இதை உருவாக்கி உண்மையில் சாதித்தீர்கள்.
எனவே - உங்கள் கற்பனையை தவறாமல் பயிற்றுவிக்கவும். இல்லாததைப் பற்றி தவறாமல் கற்பனை செய்து பாருங்கள், ஆனால் என்ன இருக்க முடியும் மற்றும் உருவாக்கப்படலாம். எந்தவொரு படைப்பாற்றலும் கற்பனையின் விளைவாகும்.

கனவு காண்பவர்கள் முட்டாள் மனிதர்களாக கருதப்படுவது கூட ஆச்சரியமாக இருக்கிறது. அனைத்து கண்டுபிடிப்பாளர்களும் தொலைநோக்கு பார்வையாளர்கள். அனைத்து விஞ்ஞானிகளும் தொலைநோக்கு பார்வையாளர்கள்.எல்லா பொறியியலாளர்களும் கூட தொலைநோக்குடையவர்கள், ஏனென்றால் அவர்கள் இதுவரை இல்லாததை வடிவமைக்கிறார்கள். இதனால் விஞ்ஞானிகள், கண்டுபிடிப்பாளர்கள் மற்றும் பொறியாளர்கள் முட்டாள்களா?

**"பறவையை கண்டான் விமானம் படைத்தான்**
**பாயும் மீன்களில் படகினை கண்டான்**
**எதிரொலி கேட்டான் வானொலி படைத்தான் "**
**என்கிறார் சினிமா கவிஞர்**

ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் கூறினார்: “அறிவை விட கற்பனை முக்கியமானது. அறிவு மட்டுப்படுத்தப்பட்டுள்ளது, அதே நேரத்தில் கற்பனை உலகம் முழுவதும் பரவி, முன்னேற்றத்தைத் தூண்டுகிறது, பரிணாமத்தை உருவாக்குகிறது.

" முதலில் அவர் தனது கண்டுபிடிப்புகளை தனது கற்பனைக்குள் முழுவதுமாக உருவாக்கி, பின்னர் அவற்றை யதார்த்தத்தில் உள்ளடக்குகிறார் என்று நிகோலா டெஸ்லா கூறினார். கான்ஸ்டான்டின் சியோல்கோவ்ஸ்கி விண்வெளி கோட்பாட்டை உருவாக்கினார், இருப்பினும் முதல் விண்கலம் அவர் இறந்து இருபது ஆண்டுகளுக்கு பிறகு வானத்தில் இறங்கியது. இந்த "கனவு காண்பவர்கள்" இல்லாமல் நாம் அனைவரும் எங்கே எப்படி இருப்போம்?

மேலை நாட்டு எழுத்தாளர்களான **ஹெச்.ஜி. வெல்ஸ், ஜூலி வெர்னி** ஆகியோரின் விஞ்ஞானக் கற்பனை கதைகள் எத்தனையோ மனிதர்களுக்கு இன்னும் ஆதர்ஷமாக இருக்கிறது. இந்த புனைக்கதை எழுத்துகளின் உந்துதலால்தான் **"ராபர்ட் கொட்டார்டினால்"** உலகின் முதலாவது திரவ எரிபொருள்

ராக்கெட் கண்டுபிடிக்கப்பட்டது. இந்த மாதிரி அறிவியல் புனை கதைகளால் இப்படி உபயம் விஞ்ஞானத்திற்குக் கிடைத்திருக்கிறது என்பதை யாராலும் மறுக்க முடியாது.

கற்பனை இல்லாமல் மனிதன் தீவிரமாக எதையும் செய்ய முடியாது. எல்லாவற்றிற்கும் மேலாக, அவர் என்ன செய்ய வேண்டும் என்று அவர் கற்பனை செய்யாவிட்டால், அவர் அதை எப்படி செய்வார்? அவரது செயல்களின் விளைவுகளை அவர் கற்பனை செய்யாவிட்டால், அவர் எவ்வாறு சிறந்ததைத் தேர்ந்தெடுப்பார்? அவர் ஒரு தொலைதூர இலக்கை கற்பனை செய்யாவிட்டால், அவர் அதற்கு எப்படி செல்வார்?

மனிதன் வெறுமனே கற்பனை இல்லாமல் செயல்பட முடியாது. நீங்களே தேநீர் ஊற்றுவதற்கு கூட, நீங்கள் அதை எப்படி ஊற்றி குடிக்கிறீர்கள் என்பதை முதலில் கற்பனை செய்ய வேண்டும்.

எந்தவொரு செயலும் ஒரு கற்பனை முடிவின் பொருட்டு, இன்னும் இல்லாதவற்றிற்காக செய்யப்படுகிறது. எந்தவொரு செயலுக்கும் ஒரு சிறிய குறிக்கோள் உள்ளது, ஆனால் ஒரு குறிக்கோள், மற்றும் எந்த குறிக்கோளும் கற்பனையின் விளைவாகும்.

எல்லா பெரிய விஷயங்களும் ஆரம்பத்தில் கனவுகளில் மட்டுமே உருவாக்கப்பட்டன. முதலில், காடுகள் மற்றும் வயல்கள் மட்டுமே இருக்கும் ஒரு நகரத்தை யாரோ கற்பனை செய்கிறார்கள், பின்னர் அதன் கட்டுமானத்தை ஏற்பாடு செய்கிறார்கள், பின்னர் அவரது கற்பனையில் மட்டுமே இருந்த ஒரு நகரம் உண்மையில் தோன்றும். ஆனால் ஆரம்பத்தில் கற்பனை இல்லை என்றால் - உண்மையில் ஒரு நகரம் எவ்வாறு தோன்றும்?
சுருக்கமாக, எவர்கள் எதைத் தேடிகிறார்களோ அதை அவர்கள் கண்டடைகிறார்கள். இதற்கு கற்பனை அவசியமாகிறது .
ஆனால் இம்மை மாதிரி மனிதன் மறுமையைப் பற்றியும் கற்பனை செய்வான் என்பதை அறிந்தே இறைவனும் ...

ஷஅபீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்)மீது நின்றவாறு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக(பின்வருமாறு) மக்களுக்கு அறிவித்தார்கள்:
" மூசா (அலை) அவர்கள் இறைவனிடம், "சொர்க்கவாசிகளில் மிகக் குறைந்த தரம் உடையவர் யார்?" என்று கேட்டார்கள்.
அதற்கு இறைவன் கூறினான்: சொர்க்கவாசிகள் சொர்க்கத்திற்குள் நுழைந்த பிறகு ஒரு மனிதர் வருவார். அவரிடம் "நீ (சென்று) சொர்க்கத்திற்குள் நுழைந்துகொள்!" என்று கூறப்படும். அதற்கு அவர், "இறைவா! எப்படி (நான் நுழைவேன்)? மக்கள் அனைவரும் அவரவர் இருப்பிடங்களைப் பிடித்துக்கொண்டு தமக்குக் கிடைத்ததை எடுத்துக்கொண்டுவிட்டார்களே?" என்று கூறுவார்.
அவரிடம், "உலக அரசர்களில் ஒருவரது ஆட்சிக்குட்பட்ட பகுதியைப் போன்று உனக்குக் கிடைத்தால் திருப்திதானே?" என்று கேட்கப்படும்.
அதற்கு அவர் "திருப்தியடைவேன், இறைவா!" என்பார்.
அப்போது இறைவன், "இதுவும் உனக்குக் கிடைக்கும்; இதைப் போன்று இன்னொரு மடங்கும், இதைப் போன்று இன்னொரு மடங்கும், இதைப் போன்று இன்னொரு மடங்கும், இதைப் போன்று இன்னொரு மடங்கும் உனக்குக் கிடைக்கும்" என்று (நான்கு மடங்கைக்) குறிப்பிடுவான். ஐந்தாம் மடங்கு பற்றிக் கூறும்போது, அவர், "திருப்தியடைந்துவிட்டேன், இறைவா!" என்பார்.

உடனே இறைவன், "இதுவும் உனக்குக் கிடைக்கும்; இதைப் போன்று பத்து மடங்கும் உனக்குக் கிடைக்கும். உன் மனம் விரும்புகின்ற, உன் பார்வை ரசிக்கின்ற அனைத்தும் உனக்குக் கிடைக்கும்" என்பான். அப்போது அவர், "திருப்தியடைந்தேன், இறைவா!" என்று கூறுவார்.

பின்னர் மூசா (அலை) அவர்கள், "இறைவா! சொர்க்கத்தில் மிக உயர்ந்த தரமுடையவர் யார்?" என்று கேட்டார்கள்.
அதற்கு இறைவன், "அவர்களை நானே தேர்ந்தெடுத்தேன். அவர்களுக்குரிய தரங்களையும் நானே நேரடியாகத் தீர்மானித்தேன். அவற்றின் மீது நான் முத்திரையும் வைத்துவிட்டேன். எனவே, (அவர்களின் தரத்தை) எந்தக் கண்ணும் பார்த்திராது; எந்தக் காதும் கேட்டிராது. எந்த மனிதனின் உள்ளத்திலும் தோன்றியிராது" என்றான்.
இதை மெய்ப்பிக்கும் வகையில் அல்லாஹ்வின் வேதத்தில், "அவர்கள் செய்த (நற்)செயல்களுக்குரிய பிரதிபலனாக அவர்களுக்கென மறைத்துவைக்கப்பட்டுள்ள கண் குளிர்ச்சியை (மறுமையின் பேரின்பத்தை) எந்த ஓர் ஆன்மாவும் அறிந்து கொள்ள முடியாது" (32:17) என்று இடம் பெற்றுள்ளது.
ஸஹீஹ் முஸ்லிம் : 312.

நீங்கள் விரும்பினால், 'மனிதர்கள் எவரும் தமக்காக மறைத்து வைக்கப்பட்டிருக்கும் கண் குளிர்ச்சி (தரும் சொர்க்கத்து இன்பங்)களை அறிய மாட்டார்கள்' என்னும் (திருக்குர்ஆன் 32:17) இறைவசனத்தை ஓதிக் கொள்ளுங்கள். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி : 3244.

ரஹ்மத் ராஜகுமாரன்

(உரத்த சிந்தனை 1)

சூஃபியாக்களின் ஆதார தத்துவம் என்ன ?



" ஓர் அந்நியனைப் போல் அல்லது ஒரு வழிப்போக்கனைப் போல் இவ்வுலகில் நீ ஆகு" (குன் ஃபித்துன்யா கஅன்னக கரீபுன் அவ் ஆபிருஸ் ஸபீல்; நூல்:புகாரி.) -நபி (ஸல்) அவர்கள்

ஓர் இடத்திற்கு வரும் அந்நியனுக்கு அவ்விடத்தில் உள்ள எதுவும் பரிச்சயமானதாக இருக்காது. அதுபோல் மாறிவரும் உலகக் கோலங்களில் எல்லாம் பரிச்சயப்பட்டுக் கொண்டிருக்காதே. உன் காலம் வீணாகக் கழிந்துவிடும்.
வழிப்போக்கன் ஓரிடத்தில் நிரந்தரமாகத் தங்குவதில்லை. எப்பொருளையும் உன் மனம் தங்குமிடமாக எடுத்துக் கொள்ளாதே " - இதைத்தான் எல்லா சூஃபியாக்களும் கடைபிடிக்கிறார்கள் .
"என் போக்கில் என்னை விடுங்கள். எப்போதும் ஓடிக்கொண்டிருப்பேன் ஒரு நதியைப் போல " என்கிறார் சூஃபி

இதில் அந்நியன், வழிப்போக்ககனைப் பற்றி ...சிலர் அந்நியன், வழிப்போக்கன், நாடோடி என்றெல்லாம் சொல்லக்கேட்டிருப்பர். ஆனால் அவர்களின் வாழ்வின் நிலைகள் என்ன என்பதை அறியாமலிருக்கலாம்.

தன் சொந்த நாட்டைவிட்டு வேறு நாட்டுக்கு குடியேறியவனைத்தான் "அந்நியன்" என்று சொல்லப்படும். அறிமுகமில்லாத அந்நிய பூமியில் வசிப்பவன், அந்த பூமிக்குச் சொந்தக்காரனோடு அதிகம் பழகாமல் கூச்சத்தோடும், அச்சத்தோடும்தான் வாழ்வான். ஆபத்தான நேரங்களில் அந்நியனுக்கு அபயமளிப்பதுகூட சொந்த மண்ணில் வசிப்பவனுக்கு சிலசமயம் சிரமத்தை ஏற்படுத்திவிடும்.

அந்நியன் எந்த நேரத்திலும் அங்கிருந்து வெளியேறிவிடும் கட்டாயம் ஏற்படும் என்பதால், அங்கு வீடுவாசலோ, சொத்துசுகமோ வாங்கி சேர்ப்பதில் அவன் கவனம் செலுத்தமாட்டான். இன்னும் அவன் அந்நிய பூமியில் வசிப்பதால் அவனுக்கு பொறாமை, வஞ்சகம், பகைமை ஏற்பட அங்கு வாய்ப்புகள் மிகவும் குறைவே.
இதை இன்னொரு கோணத்திலும் பார்க்கவேண்டும்! தாய்நாட்டை விட்டு வேறு நாட்டுக்கு குடியேறியவர்களுக்கு அந்த நாட்டில் குடியுரிமை வழங்கப்படுகின்றது,
அங்கு திருமணம் செய்யும் உரிமை, சொத்துசுகம் சேர்க்கும் உரிமையும் வழங்கப்பட்டு இன்னும்பிற சலுகைகளெல்லாம் வழங்கப்பட்டாலும் அவன் அந்நியன் என்றுதான் அடையாளமிடப்படுவான்.
அவன் அங்கேயே வாழ்ந்து, மரித்து மண்ணாகிப்போனாலும் வரலாறு அவனை 'அந்நியன் ' என்றுதான் பதிந்து வைத்திருக்கும்.

வழிப்போக்கன் அல்லது நாடோடிகள். கால்நடையாகப் பயணம் செய்பவர்களை "வழிப்போக்கன்" நாடோடி என்று சொல்லப்படும். அந்நியனின் நிலையைவிட இந்த வழிப்போக்கனின் நிலை மிகவும் பரிதாபமானது!

முதலாவதாக வழிப்போக்கர்கள் தன் இலக்கை அடைவதற்காக கால்நடையாகப் பயணத்தை மேற்கொண்டிருப்பதால், இவர்களிடம் சுமைகள் மிகவும் குறைவாகத்தான் இருக்கும். அந்நியனுக்காவது உண்ண உணவும், உடுத்த உடுப்பும், உறங்க இடமும் கிடைத்துவிடும். ஆனால் இந்த அடிப்படை தேவைகளும் வழிப்போக்கர்களுக்கு கிடைப்பது மிகவும் அரிது.

அரபு மக்களின் நற்பண்புகளில் முக்கியமான ஒன்று வழிப்போக்கர்களுக்கு உணவு வழங்குவதும், நீர் புகட்டுவதும். சில சமயம் தனக்கு இல்லாவிட்டாலும் வழிப்போக்கர்களின் தேவைகளை பூர்த்தி செய்வதை தன் குலப் பெருமையாக எண்ணி இதை விடாது அரபுகள் செய்துவந்தனர்.
இன்றும் பல ஊர்களில் வழிப்போக்கர்களுக்கென்று மடங்கள் கட்டிவைத்திருப்பதை பார்க்கலாம். இதுபோன்ற மடங்களில் சென்று வழிப்போக்கர்கள் இளைப்பாறிவிட்டு மீண்டும் கால்நடையாகத் தங்கள் பயணத்தை தொடர்வார்கள். எதுவரை என்றால் தங்களின் இலக்கை அடையும் வரை அவர்களின் பயணம் தொடர்ந்துகொண்டே இருக்கும்.

இந்த விளக்கத்தின் பின்னணியோடு இந்த ஹதீஸை பாருங்கள்:
அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

" இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என் தோளைப் பிடித்துக் கொண்டு 'உலகத்தில் நீ அந்நியனைப் போன்று, அல்லது வழிப்போக்கனைப் போன்று இரு' என்றார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான முஜாஹித் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:
'நீ மாலை நேரத்தை அடைந்தால் காலைவேளையை எதிர்பார்க்காதே! நீ காலை வேளையை அடைந்தால் மாலை நேரத்தை எதிர்பார்க்காதே! நீ நோய்வாய்ப்படும் நாளுக்காக உன்னுடைய ஆரோக்கியத்தில் சிறி(து நேரத்)தைச் செலவிடு. உன்னுடைய இறப்பு(க் குப் பிந்திய நாளு)க்காக உன்னுடைய வாழ்நாளில் சிறி(து நேரத்)தைச் செலவிடு' என்று இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறுவார்கள்.(ஸஹீஹுல் புகாரி: 6416).

அந்நியன் அல்லது வழிப்போக்கனைப் போன்று இரு என்பதால் ஒருவன் பொருளாதாரம் ஈட்டக்கூடாது என்பது பொருள் அல்ல! ஒரு இறைநம்பிக்கையாளன் இம்மை வாழ்வையே சதம் என்று நம்பி, மறுமையை மறந்து உலக இன்பங்களில் மூழ்கிவிடக்கூடாது, நிலையான மறுமை வாழ்விற்காக இன்பங்களை தியாகம் செய்து அயலூரில் வாழ்வதைப் போன்று ஒரு முஃமின் இந்த உலகத்தில் வாழவேண்டும் என்பதை உணர்த்துகின்றது இந்த ஹதீஸ். இதையே இப்னு உமர் (ரலி) அவர்களும் இந்த ஹதீஸுக்கு விளக்கமாக கூறியுள்ளனர்.

அந்நியனுக்கு எல்லாவிதமான சலுகையும் வசதியும் செய்துகொடுத்து அந்நியன் என்ற அடையாளத்தை அவனிடமிருந்து நீக்கிவிட்டலாம் என்பதால் வழிப்போக்கன் என்ற மற்றொரு நிலையை அல்லாஹ் தன் தூதரை சொல்லவைத்துள்ளான் என்பதையும் புரிந்துகொள்ள வேண்டும்.

இந்த செய்தியை ரசூல் (ஸல்) அவர்கள், இப்னு உமர் (ரலி) அவர்களின் தோளைப்பிடித்துக்கொண்டு சொன்ன விதம், இது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த செய்தி என்பதை உணர்த்துகின்றது.
உமர் (ரலி) அவர்களின் ஆட்சியின்போது பாரசீக மன்னர் கெய்சர் உளவு பார்ப்பதற்காகத் தமது தூதரை மதீனா நகருக்கு அனுப்பிவைத்தார். அந்த தூதர் உமர் (ரலி) அவர்களை எங்குதேடியும் கிடைக்கவில்லை. இறுதியாக ஒரு மரத்தடியில் மாபெரும் சக்கரவர்த்தி உமர் (ரலி) அவர்கள் ஒரு வழிப்போக்கரைப் போன்று படுத்திருந்தார்கள் என்ற சம்பவம் இங்கு நினைவுகூறத்தக்கது.
ர.ரா

( உரத்த சிந்தனை 2 )

வெறுமைதான் முழுமை



' ரையூசுயு ' என்கிற ஜென் குரு கூறுகிறார்:
'' வெறுமை " என்பது ஒன்றும் அற்ற தன்மைக்கான பெயர்.
வெறுமை என்பது ஒன்றும் அற்ற தன்மை என்றால், அதில் எதுவுமே இல்லை என்று பொருள் கொள்ளக்கூடாது.

அதில்தான் எல்லாம் இருக்கிறது மலைகள், ஆறுகள்,பூக்களின் சிவப்பில், பனியின் வெண்மையில், ஒட்டுமொத்த பூமிக்கான பெயர். அதுதான் உண்மையான வடிவமும் கூட .
மௌனத்தில் எல்லா மொழிகளும் அடங்கியிருப்பதைப் போல வெறுமையாக காலியாக இருப்பததால்தான் அது உபயோகமாக இருக்கிறது. ஒரு அறையின் உபயோகம் அதன் சுவர்களால் மட்டுமல்ல; அதன்னுள் இருக்கும் காலியான வெற்றிடத்தை கொண்டுதான்.

உதாரணமாக , அங்கே போகிற கட்டைவண்டியின் சக்கரத்தின் எல்லா ஆரங்களும் அழகாக வடிவமைக்கப்பட்டு,
எல்லா ஆரங்களும் சக்கரத்தின் நடுவில் இணைக்கப்பட்டுள்ளது . ஆனால் சக்கரத்தின் மையப்புள்ளியோ ஒரு வெற்றிடம் . அந்த வெற்றிடத்தை உபயோகக்காவிட்டால் சக்கரம் உருளாது !
குவளை அழகாகத்தான் இருக்கிறது ஆனால் நாம் தண்ணீரை குடிக்க அதன் நடுவே உள்ள வெற்றிடம்தான் நமக்கு உதவுகிறது !

களிமண்ணால் பானை செய்கிறோம்... ஆனால் நாம் பயன்படுத்துவதோ உள்ளே இருக்கிற வெற்றிடம் ! பானை உடைந்து விட்டால் உள்ளே இருக்கிற வெற்றிடமும் ' வெளி ' வெற்றிடத்தோடு கலந்துவிடுகிறது !
' வெறுமைதான் உண்மையான வடிவம் ' என்று ரையூசுயு சொல்கிறார். எல்லா உருவங்களையும் எடுத்துப் பார்த்தால், பிரித்துப் பார்த்தால் கடைசியில் மிஞ்சுவது வெறுமைதான். வெறுமையை கொண்டுதான் எல்லாம் வடிவமைக்கப்படுகின்றன. வெறுமை என்பது வடிவம் அற்ற தன்மை அல்ல; மாறாக உண்மைக்கு தரப்பட்ட வடிவம்.

ஞானி சிவவாக்கியர் சொல்வது ,
" வெட்ட வெளியதன்றி மற்று வேறு தெய்வம் இல்லையே ! " என்கிறார் .
الَّذِىْ خَلَقَكَ فَسَوّٰىكَ فَعَدَلَـكَۙ
அவன்தான் ஒன்றுமில்லாதிருந்த உன்னை படைத்து மேலான விதத்தில் மிக ஒழுங்காக உன்னை அமைத்தான்.
(குர்ஆன் : 82:7)
قَالَ كَذٰلِكَ قَالَ رَبُّكَ هُوَ عَلَىَّ هَيِّنٌ وَّقَدْ خَلَقْتُكَ مِنْ قَبْلُ وَلَمْ تَكُ شَيْـًٔــا
அதற்கவன் ' (நான் கூறிய) அவ்வாறே நடைபெறும். அவ்வாறு செய்வது எனக்கு மிக்க எளிதானதே. இதற்கு முன்னர் நீங்கள் ஒன்றுமில்லாமலிருந்த சமயத்தில் நானே உங்களை படைத்தேன் ' என்று உங்களது இறைவனே கூறுகிறான்" என்றும் கூறினான். (குர்ஆன் : 19:9)

தியானம் என்பது கூட வெறுமைதான். மனதின் எண்ணங்களை காலி செய்தால், அது தியானம். எந்த எண்ணமும் இல்லாதபோதுதான் மனம் மௌனமாகிறது. ஒரு பொருளை நினைப்பது தியானம் அல்ல; அது தியானத்திற்கு எதிரானது. எதை வலுக்கட்டாயமாகத் திணித்தாலும் அது வெறுமையை ஏற்படுத்தாது.

வெறுமை என்பது தானாக மலர்வது, தானாக நடப்பது.
காலியாக இருப்பதில் ஒரு வசதி. நம்மை யாரும் காலி செய்ய முடியாது. காலியாக இருப்பதால், எவ்வளவு நிரப்பினாலும் அது காலியாகவே இருக்கும் என்கிறார் ஓஷோ

கிமு 2600 ஆண்டுகளுக்கு முன்னாள் வாழ்ந்த சீன ஞானி "லாவோட்சு " தன் மெஞ்ஞான கவிதைத் தொகுப்பு நூலான "டௌடேஜிங் " ' டௌ ' என்றால் பிரபஞ்சம் . ' டே' என்றால் பாதை , ' ஜிங் 'என்றால் சக்தி. அதாவது "சக்தியை அடையும் பிரபஞ்சத்தின் பாதை ".
அந்த நூலில் ' எது தெரியாமல் மறைவாக இருக்கிறதோ , அதைப் பயன்படுத்திக் கொள். எது தெரிந்து இருக்கிறதோ அதன் நன்மைகளைப் பெற்றுக் கொள் '. என்கிறார்
எடுத்துக்காட்டாக , எண்ணங்களை நம்மால் பார்க்க முடிவதில்லை ! ஆனால் அவற்றைத்தான் நாம் அன்றாடம் உபயோகப்படுத்திக் கொண்டிருக்கிறோம். எண்ணத்தின் விளைவுதான் இவ்வுலகின் செயல்பாடுகளாக
பரிணமிக்கிறது.

நமது எண்ணம் ஒரு வெற்றிடமாகத்தான் காட்சி அளிக்கிறது . அந்த வெற்றிடத்தில் இருந்துதான் எல்லா ஆக்கபூர்வமான செயல்பாடுகளும் வெளிவருகிறது ' என்ற உண்மையை நீங்கள் அறிவீர்கள்.

ஒரு தந்தை தன் தொழிலை யாருக்கு கொடுத்தால் சிறப்பாக பராமரிப்பார்கள் என்று தன் மூன்று மகன்களையும் பரிசோதனை செய்ய விரும்பினார் .
மூவருக்கும் அறைகளைக் கொடுத்து அவற்றை நிரப்ப வேண்டும் என்றார்.

முதல் மகன் கழிவுகளை எல்லாம் கொட்டி நிரப்பினான். அந்த அறையை திறந்தால் ஒரே நாற்றம்.
இரண்டாவது மகன் மண்ணையும் கல்லையும் கொட்டி நிரப்பினான். அதில் நுழைந்தால், ஒரே தூசி.

மூன்றாவது மகன் அறையில் நுழைந்தால் அது காலியாக இருந்தது " ஏன் நீ ஏதும் நிரப்பவில்லையா ?" என்று கேட்டபோது அவன் சொன்னான் :

"கொஞ்சம் நாசியில் காற்று இழுத்து பாருங்கள்"- அந்த அறையில் நல்ல நறுமணம் கமழ்ந்தது.

" கொஞ்சம் மௌனமாய் இருந்து காதுகளை திறந்து வைத்துக் கொள்ளுங்கள்"-அங்கே அழகான மெல்லிய சங்கீதம் கேட்டது.

"கொஞ்சம் கண்களைத் திறந்து பாருங்கள் "_ அந்த அறை நல்ல வெளிச்சமாக ஒளியாக இருந்தது.
"இப்படி இந்த அறையைக் காலியாக வைத்துக் கொண்டே எத்தனையோ நல்ல விஷயங்களை அதனுள் என்னால் நிரப்ப முடியும் " என்றான்.

அப்துல்லாஹ் பின் ஷகீக் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
நான் அபூதர் (ரலி) அவர்களிடம் "நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பார்த்திருந்தால் அவர்களிடம் (ஒரு விஷயத்தைப் பற்றி) கேட்டிருப்பேன்" என்று கூறினேன்.
"எதைப் பற்றிக் கேட்டிருப்பாய்?" என்று என்னிடம் அவர்கள் கேட்டார்கள்.
நான், " (மிஃராஜில்) நீங்கள் உங்கள் இறைவனைப் பார்த்தீர்களா? என்று கேட்டிருப்பேன்" என்றேன்.
அபூதர் (ரலி) அவர்கள், "(இதுபற்றி) நான் அல்லாஹ்வின் தூதரிடமே கேட்டேன். அதற்கு அவர்கள், "நான் ஓர் ஒளியைக் கண்டேன் (அவ்வளவுதான்; வேறு எதையும் நான் காணவில்லை)" என்று பதிலளித்தார்கள்" என்றார்கள்.
ஸஹீஹ் முஸ்லிம் : 292.

ரஹ்மத் ராஜகுமாரன்

(உரத்த சிந்தனை 3)
சோளக்காட்டுப் பொம்மை



கலீல் ஜிப்ரானின் சிறுகதை ஒன்றில் ...

ஒரு நாள் வெயிலில் நின்றுகொண்டிருக்கும் சோளக் காட்டுப் பொம்மையைப் பார்த்து, “யாரும் வராத இந்த இடத்தில் தனியாக நின்றுகொண்டிருப்பது உனக்குச் சிரமமாக இல்லையா ? " என்றேன்.
"இன்னொருவரை அச்சுறுத்துவதென்பது ஆழமான மகிழ்ச்சியை அளிப்பது; அது நீடித்திருக்கவும் கூடியது. அதனால் எனக்கு சலிப்பே வரப்போவதில்லை" என்று கூறியது.
ஒரு நிமிட யோசனைக்குப் பிறகு, ஆமாம் உண்மைதான். அந்த மகிழ்ச்சியை நானும் அறிவேன் என்றேன்.
“வைக்கோலால் திணித்த உடலைக்கொண்டவர்களால்தான் அந்த உண்மையான மகிழ்ச்சியைப் புரிந்துகொள்ள முடியும்" என்று அந்த சோளக்காட்டுப் பொம்மை பதில் அளித்தது.
சோளக்காட்டுப் பொம்மை இந்தப் பதிலால் என்னைப் பெருமைப்படுத்தியதா, சிறுமைப்படுத்தியதா என்று புரியவில்லை. அதைவிட்டு நீங்கிச் சென்றேன்.
ஒரு ஆண்டு கழிந்தது. சோளக்காட்டுப் பொம்மை அதற்குள் தத்துவஞானியாகிவிட்டது. நான் அப்போது அதைக் கடந்து போனபோது சோளக்காட்டுப் பொம்மையின் தொப்பிக்குக் கீழே இரண்டு காகங்கள் கூடுகட்டத் தொடங்கியிருந்தன.

**x .................. ....x ... ... ............... x.........................x.....................x....... ............. x ....................... x**
சோளக்காட்டு பொம்மைகளுக்குப் பெரிதாக எதுவும் வேலை இல்லை. வயக்காட்டில் நின்றாலும் அவை உழ வேண்டியதில்லை, உரமிடத் தேவையில்லை , களைகளைப் பறிக்க வேண்டியதில்லை, கதிர் அறுக்க வேண்டியதில்லை.

அப்படி எதுவுமே வேலை செய்யாமல் அவற்றுக்கு என்னதான் வேலை ?
அவற்றுக்கு இருக்கும் ஒரே வேலை வெயிலானாலும், பனியானாலும், மழையானாலும், குளிரானாலும் அங்கே இருக்கும் பயிர்களை பாதுகாக்கின்ற வேலை .
பாதுகாப்பது என்றால் கைகளை உயர்த்தியோ , கால்களால் ஓடியோ அவை பாதுகாப்பதில்லை .மாறாக வெறும் இருத்தலால் மட்டுமே பயமுறுத்துவது அவற்றின் வேலை.
தின்ன வருகின்ற பறவைகளை மனிதன் போன்ற தோற்றத்தில் இருந்து, சோளக் காட்டுப் பொம்மைகளால்தான் எந்நேரமும் பயமுறுத்த முடியும்.

மனிதன் சோளக்காட்டு பொம்மைகளை தயாரித்தபோது அவற்றை தன்னை மனதில் வைத்துக் கொண்டுதான் தயாரித்திருக்க வேண்டும்.
அவனும் பல நேரங்களில் பல இடங்களில் சோளக்காட்டு பொம்மையாகத்தான் இருக்கிறான். அவனுக்கும் பயமுறுத்துவதில் மகிழ்ச்சி.தன் இருத்தலால் இன்னும் சிலர் நடுங்குவதால், அவனுடைய தன்முனைப்பு எகிறிக் குதிக்கிறது எதையோ சாதித்ததைப் போன்ற எண்ணம் அவனுக்கு ஏற்படுகின்றது.
சோளக்காட்டுப் பொம்மைகள் கூலி கேட்பதில்லை .கூடி நின்று கோஷம் போடுவதில்லை. அதனால் மிகுந்த உபயோகமாக இருக்கின்றன.

நாமும் நம்மைச் சுற்றியிருக்கும் மனிதர்கள் சோளக்காட்டுப் பொம்மைகளாக இருக்க வேண்டுமென்று எதிர்ப்பார்க்கிறோம்
கதிர்கள் முற்றி அறுவடையாகும் போது, சோளக்காட்டுப் பொம்மைகள் வைக்கோலோடு வைக்கோலாக சேர்ந்து தீவினமாகி விடும்.
பாவம், அந்த வயக்காட்டுப் பறவைகள் சோளக்காட்டு பொம்மையை மனிதன் என்று நினைத்து ஏமாந்து போயின.
ஏமாளிகள் இருக்கும் வரை மனிதன் சோளக்காட்டுப் பொம்மைகளைத்தான் அதிகம் சார்ந்திருப்பான் .

பூமியில் பெருமையுடன் கர்வம் கொண்டு நடக்க வேண்டாம்.
ஏனென்றால், நிச்சயமாகப் பூமியைப் பிளந்து விடவோ அல்லது மலையின் உச்சியை அடைந்து விடவோ உங்களால் முடியாது
குர்ஆன் (17 : 37 )

அதாவது உன் ஆணவ நடையால் பூமியை ஒருகாலும் பிளந்து விட முடியாது. அவ்வாறே தற்பெருமையோடும், அகந்தையோடும், தலையாட்டி நீ நடப்பதால் தரையிலிருந்து மலையின் உச்சியின் உயரத்தை ஒரு போதும் உன்னால் எட்டவே முடியாது .

நாமும் நம்மைச் சுற்றியிருக்கும் மனிதர்கள் சோளக்காட்டுப் பொம்மைகளாக இருக்க வேண்டுமென்று ஆணவத்துடன் எதிர்ப்பார்க்கிறோம்.
அவனுக்கும் பலரைப் பயமுறுத்துவதில் மகிழ்ச்சி.தன் இருத்தலால் இன்னும் சிலர் நடுங்குவதால், அவனுடைய தன்முனைப்பு எகிறிக் குதிக்கிறது எதையோ சாதித்ததைப் போன்ற எண்ணம் அவனுக்கு ஏற்படுகின்றது.

ரஹ்மத் ராஜகுமாரன்

(உரத்த சிந்தனை 4)

மரணத்தின் பரிணாம வளர்ச்சி .




காலத்தை யாராவது வெல்ல முடியுமா? காலம் அனைத்தையும் தாண்டியது .மாற்றம்தான் அதன் அடையாளம். மாறுதல் என்பது அழியாத மச்சம் - அது காலம் போடும் கையொப்பம் .
வளர்ச்சி காலத்தின் கொடை என்றால்,
மரணம் அதன் இன்னொரு பரிமாணம்.
பிறப்பே மரணத்தை நோக்கிய வளர்ச்சி பயணம்தானே !
மரணம் தேவையில்லை என்றால்,வளர்ச்சியும் நின்று போகும்
வளர்ச்சி நின்றால்....செடி மரமாக முடியாது. காய் கனியாக முடியாது .மொட்டு மலராக முடியாது. கன்று பசுவாக முடியாது.
முதுமை இளமையின் தொடர்ச்சி .
இளமை முதுமையின் தொடக்கம் -
ஆக ஒவ்வொரு மரணமும் ஜனனத்தின் பரிமாணம் .
ஒவ்வொரு ஜனனமும் மரணத்தின் பரிமாணம் .
" நீங்கள் எங்கிருந்தபோதிலும் மரணம் உங்களை அடைந்தே தீரும்; மிகப் பலமான உயர்ந்த (கோட்டை) கொத்தளத்தின் மீது நீங்கள் இருந்தபோதிலும் சரியே! " (அல்குர்ஆன் : 4:78)

" பிறக்கின்ற போதே இறக்கின்ற தேதி
இருக்கின்றதென்பது மெய்தானே? "

ஒரு குழந்தை பிறக்கிறது பிறக்கும் போது அது ஒவென்று அழுகிறது. நம்மை பொறுத்தவரை எது ஜனனமாக இருக்கிறதோ அது அந்த குழந்தையை பொறுத்தவரை அது மரணம் . காரணம்....
பாதுகாப்பான கதகதப்பான சூழலில் உண்ண வேண்டிய அவசியமின்றி, சுவாசிக்க வேண்டிய நிர்ப்பந்தம் இன்றி, எல்லாவற்றையும் தனக்காக வேறு ஒருவர் செய்யும் சூழலிலிருந்து, இனிமேல் தாம்தான் புதிய சூழலுக்கு தக்கவாறு புகுவது ஆபத்தானதுதான்.

கரு, சிசு, மகவு, குழவி, குழந்தை, மழலை என்று கொஞ்சம் கொஞ்சமாக வளர்ச்சியை நாம் வார்த்தைகளால் சித்தரிக்கின்றோம் .

ஆனால் ஒவ்வொரு புதிய சூழலில் நுழையும்போதும் நமக்குள் ஒரு மரணம் நிகழ்கிறது. இப்போது புரிகிறதா…பிறக்கிற ஒவ்வொரு குழந்தையின் அழுகை ஆயிரம் அர்த்தங்களை கொண்டது என்று .
ஒவ்வொரு குழந்தையின் அழுகையும் அதன் பயத்தை புலப்படுத்துகிறது .பிறப்பும் ஒருவித இறப்புதான் குழந்தையை பொறுத்தவரை. அதெப்படி ? சொல்றேன் .

இருமுறை எங்களை உயிர்ப்பிக்கச் செய்தாய்; இருமுறை மரணிக்கச் செய்தாய் என்று குற்றமிழைத்தோர் மறுமையில் கதறுவார்கள்'' என இவ்வசனம் (40:11) கூறுகிறது.

இருமுறை உயிர்ப்பித்தல் என்பது நமக்கு விளங்குகிறது. இந்த உலகத்தில் ஒருமுறை பிறக்கிறோம். மரணித்த பிறகு அழிக்கப்பட்ட பிறகு மறுபடியும் இறைவன் உயிர் கொடுத்து எழுப்புவான்.
ஆனால் ஒருமுறை தான் நாம் மரணிக்கிறோம் எனும்போது இரண்டு முறை மரணிக்கச் செய்தாய் என்று எப்படிக் கூற முடியும்?
இதற்கு திருக்குர்ஆன் (2:28 ) வசனம் விளக்கமாக அமைந்துள்ளது. மனிதன் படைக்கப்படுவதற்கு முன் இருந்த நிலைமையைப் பற்றி அல்லாஹ் குறிப்பிடும்போது…

“நீங்கள் மரணித்தவர்களாக இருந்தீர்கள், உங்களை உயிர்ப்பித்தான்; பின்னர் மரணிக்கச் செய்து மீண்டும் உயிர்ப்பிப்பான்” என்று இவ்வசனத்தில் கூறுகிறான்.

படைக்கப்படாமல் இருந்த அந்த நிலையைத்தான் முதல் மரணம் என்று அல்லாஹ் கூறுகிறான். இதே அடிப்படையில் தான் இருமுறை மரணிக்கச் செய்தாய் என்று குற்றமிழைத்தோர் மறுமையில் கூறுகிறார்கள்.

எனவேதான் ஆலம் அர்வாஹில் ரூஹாக இருந்து உடல் இல்லாத ஓர் உலகத்தில் மரணம் ஏற்பட்டு,
தந்தையின் முதுகுகந்தண்டிற்கு வந்தோம் .பின்னர் அங்கே மரணம் ஏற்பட்டு , தாயின் கருவறைக்கு வந்தோம் .
பின்னர் கருவறையில் மரணம் ஏற்பட்டு பூமிக்கு வந்தோம்.

பூமியில் இங்கே மரணம் ஏற்பட்டு, பர்ஜக் என்கிற மண்ணறைக்கு வருவோம் .

பின்னர் அங்கே மரணம் ஏற்பட்டு , மீண்டும் எழுப்பட்டு மஹஸர் என்கிற விசாரணை தளத்திற்கு வருவோம் .

பின்னர் செய்த நன்மை , தீமை பலனால் சொர்க்கத்திற்கோ, நரகத்திற்கோ அனுப்பி வைக்கப்படும் .
இந்த இரண்டு தளத்திலும் மரணமில்லாத வாழ்வு உண்டு. இதுதான் மரணத்தின் பரிமாணம்
மனிதர்களே! (மறுமையில் உங்களுக்கு உயிர் கொடுத்து) எழுப்புவதைப் பற்றி நீங்கள் சந்தேகம் கொண்டால் (உங்களை முதலில் எவ்வாறு படைத்தோம் என்பதைக் கவனியுங்கள்.)
நிச்சயமாக நாம் உங்களை (உங்கள் மூலப் பிதாவாகிய ஆதமை) மண்ணில் இருந்தே (படைத்துப்)
பின்னர் இந்திரியத் துளியிலிருந்து,
பின்னர் அதனை ஓர் இரத்தக் கட்டியாகவும்,
பின்னர் (அதனை) குறைவடிவ அல்லது முழு வடிவ மாமிசப் பிண்டமாகவும் (நாம் உற்பத்தி செய்கிறோம். நம்முடைய வல்லமையை) உங்களுக்குத் தெளிவாக்கும் பொருட்டே (இவ்வாறு படிப்படியாகப் பல மாறுதல்களை அடைய) ஒரு குறிப்பிட்ட காலம் வரையில் தங்கி இருக்கும்படி செய்கிறோம்.
பின்னர், உங்களைச் சிசுக்களாக வெளிப்படுத்தி நீங்கள் உங்கள் வாலிபத்தை அடையும்படிச் செய்கிறோம். (இதற்கிடையில்) இறந்து விடுபவர்களும் உங்களில் பலர் இருக்கின்றனர்.
(அல்லது வாழ்ந்து) அனைத்தையும் அறிந்த பின்னர் ஒன்றுமே அறியாதவர்களைப்போல் ஆகிவிடக் கூடிய தள்ளாத வயது வரையில் விட்டு வைக்கப்படுபவர்களும் உங்களில் இருக்கின்றனர்.

(மனிதனே!) பூமி (புற்பூண்டு ஏதுமின்றி) வறண்டு இருப்பதை நீ காணவில்லையா? அதன் மீது நாம் மழையை பொழியச் செய்தால், அது பசுமையாகி வளர்ந்து அழகான பற்பல வகை (ஜோடி ஜோடி)யான உயர்ந்த புற்பூண்டுகளை முளைப்பிக்கிறது. (அல்குர்ஆன் : 22:5) இப்படித்தான் மனிதர்களின் வாழ்வும் அதன் நிகழ்வுகளும் நடைபெறுகிறது .

"எல்லாம் அதன் அசல் மூலத்திற்குத் திரும்புகிறது.
எல்லாமே அதன் அசல் மூலத்திற்குத் திரும்ப வேண்டும்.
நீங்கள் வாழ்க்கையைப் புரிந்து கொண்டால், மரணத்தையும் புரிந்துகொள்கிறீர்கள்.
வாழ்க்கை என்பது வாழ்வின் மூலத்தை மறந்துவிடுவது, மரணம் என்பது மீண்டும் மூலத்தை நினைவு படுத்திக் கொள்வது .
வாழ்க்கை அசல் மூலத்திலிருந்து விலகிச் செல்கிறது.
மரணம் வீட்டிற்கு திரும்பி வருவது போன்றது .
மரணம் அசிங்கமானது அல்ல,
மரணம் அழகான ஒன்று .
ஆனால்.....

தங்கள் வாழ்வை தடையின்றி, தடைசெய்யப்படாமல் , அடக்காமல் , அடக்கப்படமால் , தங்கள் வாழ்க்கையை வாழ்ந்தவர்களுக்கு மட்டுமே வாழ்க்கை அழகாக இருக்கிறது.
தங்கள் வாழ்க்கையை அழகாக வாழ்ந்தவர்கள், வாழ பயப்படாதவர்கள், வாழ போதுமான தைரியமுள்ளவர்கள் -நேசித்தவர்கள், நடனமாடியவர்கள், கொண்டாடியவர்களுக்கு மட்டுமே மரணம் அழகாக இருக்கிறது.
உங்கள் வாழ்க்கை ஒரு கொண்டாட்டமாக இருந்தால் மரணம் இறுதி கொண்டாட்டமாக மாறும் " – ஓஷோ

ரஹ்மத் ராஜகுமாரன்

(உரத்த சிந்தனை 5)

நீங்கள் எங்கே திரும்பினாலும் அங்கேயும் அவனே !




மகாகவி பாரதியார் ஒரு பாடலில் ...
"காக்கைச் சிறகினிலே நந்தலாலா - நின்றன்
கரிய நிறம் தோன்றுதையே நந்தலாலா
பார்க்கும் மரங்களெல்லாம் நந்தலாலா - நின்றன்
பச்சை நிறம் தோன்றுதையே நந்தலாலா
கேட்கு மொழியிலெல்லாம் நந்தலாலா - நின்றன்

கீதமிசைக்குதடா நந்தலாலா
தீக்குள் விரலைவைத்தால் நந்தலாலா - நின்னைத்
தீண்டுமின்பந் தோன்றுதடா நந்தலாலா "

மெய்ஞ்ஞானத்தின் விளிம்புகளை தொட்டு விட்டவர்களால்தான் இப்படியொரு கவிதையை எழுத முடியும்.

எல்லாவற்றிலும் இறைமையைப் பார்ப்பது எத்தனை பேரால் அப்படிப் பார்க்க முடியும் ?
காகத்தைக் கூட இறைமையின் பிரதிபலிப்பாகப் பார்ப்பது மெய்ஞ்ஞானக் கீற்றைத் தரிசித்தவர்களால்தான் முடியும்.
காகத்தின் சிறகுகளிடம் இறைமையின் முத்திரை இருக்கிறது.
அது குயிலின் குரலில் இருக்கிறது.
மயிலின் தோகையில் இருக்கிறது.
ஆந்தையின் அலறலிலும் கூட இருக்கிறது.
மரங்களைப் பார்க்கும் போது அதில் காணும் பச்சையம் இறைமையை குறிக்கிறது.
எங்கெல்லாம் உயிர் இருக்கிறதோ, துடிப்பு இருக்கிறதோ,
துளிர்ப்பு நிகழ்கிறதோ அங்கெல்லாம் நிச்சயம் இறைமை இருக்கிறது.

தீ என்பது தீபம், அதுதான் தீப்பந்தம் , அதுதான் ஜோதி, அதுதான் ஒளி, வெளிச்சம் எல்லாம் . சூரியன் கூட தீப்பந்து, அது சக்தி, ஆற்றல் ஆக தீக்குள் தெரிவதும் இறைமையின் இன்னொரு முகம். தீக்குள் விரலை வைக்கிறபோது கூட , இன்பமிருப்பதாக நினைத்தால் அது சுடுவதில்லை.

எல்லா ஒளிகளிலும் இசையைக் கேட்கவும் ஒரு மனம் வேண்டும். காற்றின் இசையிலும், சலசலக்கும் இலைகளின் சப்தத்திலும், ஆற்றின் பாய்ச்சலிலும் , பறவைகளின் கூவுதலிலும் , குழந்தையின் சிரிப்பிலும், தாயின் தாலாட்டிலும், ஏற்றம் இறைப்பவனின் பாடலிலும், நாற்று நடும் பெண்களின் தெம்மாங்கிலும் இறைமையின் கூறுகள் தெறித்து விழுகின்றன !

பாரதியின் கவிதை முயற்சியால் வருவதில்லை .வளர்ச்சியால் வருவது, உள்ளுணர்வால் ஏற்படுவது, தெரிதலால் வருவது, மெய்ஞ்ஞானத்தால் வருவது. அதனால் அவரால் காக்கைச் சிறகில் நந்தலாலாவைப் பார்க்க முடிகிறது. இது மாதிரியே மெய்ஞ்ஞானிகளும் அவனை எல்லா ரூபத்திலும் தரிசிக்கிறார்கள் .எல்லா சிருஷ்டிகளும் அல்லாஹ் தானாவை தான் என்கிறார்கள் .

“உலகிலுள்ள சகல சிருஷ்டிகளும் அவற்றின் மூலத்தைக் கவனிப்பது கொண்டு, அல்லாஹ் தானாகவே இருக்கின்றன. எனினும், வெளியமைப்பைக் கவனிப்பது கொண்டு மட்டும் நோக்கினால், அல்லாஹ் அல்லாதவையாக இருக்கின்றன. யதார்த்தத்தை கவனித்துப் பார்க்கும்பொழுது எல்லாம் அல்லாஹ் தானாகவே இருக்கின்றது.

உதாரணமாக, நீர் குமிழி, அலை, ஐஸ் கட்டி என்பன போன்று இவை அனைத்தும் (வெளியமைப்பில் எவ்வாறிருந்தாலும்) இவற்றுக்கு மூலமாயிருப்பது தண்ணீர்தான்.
இதேபோல் கானல் நீர் யதார்த்தத்தில் ஆகாயம் (காற்று) தான். அதுவே கானல் நீரின் தோற்றத்தில் வெளியாகியுள்ளது.
வஹ்ததுல் வுஜூத் ( உள்ளமை ஒன்று) என்பது சரியானது என்பதற்கு அல்குர்ஆனில் பல ஆதாரங்கள் உள்ளன.
وَلِلَّهِ الْمَشْرِقُ وَالْمَغْرِبُ ۚ فَأَيْنَمَا تُوَلُّوا فَثَمَّ وَجْهُ اللَّهِ01)
கிழக்கும் மேற்கும் (இருண்ட கண்டங்களும் ஒளிர்ந்த கண்டங்களும்) அல்லாஹ்வுக்கே சொந்தம். ஆதலால், நீங்கள் எங்கு நோக்கினாலும் அங்கு அல்லாஹ்வின் “வஜ்ஹு” ) முகம்- தாத்- உள்ளமை) இருக்கிறது! (திருக்குர்ஆன் -2:115)

(02 وَنَحْنُ أَقْرَبُ إِلَيْهِ مِنْ حَبْلِ الْوَرِيدِ

“நாங்கள் மனிதனுக்கு, அவனின் பிடரி நரம்பு அவனுக்கு நெருங்கியிருப்பதை விட அதி நெருக்கமாக உள்ளோம்”

(திருக்குர்ஆன்-50:16)

03) وهو معكم اينما كنتم

“நீங்கள் எங்கிருந்தாலும் (சகலத்திலும் அவனது வுஜூது ஊடுருவி இருக்கிற விதத்தில்) அவன் உங்களுடன் இருக்கிறான். (திருக்குர்ஆன் -57:04)

04) وَنَحْنُ أَقْرَبُ إِلَيْهِ مِنكُمْ وَلَٰكِن لَّا تُبْصِرُونَ

“நாங்கள் அவனுக்கு (மரணம் நெருங்கிய மனிதனுக்கு) உங்களைவிட (அவனை நெருங்கியிருப்பவர்களை விட) நெருங்கியிருக்கிறோம். எனினும், நீங்கள் காணாமல் இருக்கின்றீர்கள்” (திருக்குர்ஆன் 56:85)

05) إِنَّ الَّذِينَ يُبَايِعُونَكَ إِنَّمَا يُبَايِعُونَ اللَّهَ يَدُ اللَّهِ فَوْقَ أَيْدِيهِمْ

“(நபியே!) எவர்கள் உங்களுடைய கையைப் பிடித்து ஒப்பந்தம் செய்கின்றார்களோ, அவர்கள் அல்லாஹ்விடமே ஒப்பந்தம் செய்கின்றனர். அல்லாஹ்வின் கை அவர்களின் கைக்கு மேலுள்ளது” (திருக்குர்ஆன் 48:10)

06) هو الاوّل والآخر والظاهر والباطن وهو بكلّ شيي عليم

“அவனே (சகல சிருஷ்டிகளை விட) முந்தியவனும், (மள்ஹறு-வெளிப்படு ஸ்தானங்களில் வெளிப்படுவதில்) பிந்தியவனும், (சிருஷ்டிகளின் கோலங்களைக் கொண்டு) வெளியானவனும், (சிருஷ்டிகளின் வெளிப்பாடுகளை விட்டும்) உள்ளானவனும். அவன் சர்வ பொருள்களைக் கொண்டும் அறிந்தவன்-அறியப்பட்டவன். (திருக்குர்ஆன் 2:186)

07) وفي انفسكم أفلا تبصرون

“உங்களிலே (எனது வுஜூதை) நீங்கள் பார்க்க வேண்டாமா?”

(திருக்குர்ஆன் 51:21)

08) { سَنُرِيهِمْ آيَاتِنَا فِي الْآفَاقِ وَفِي أَنْفُسِهِمْ حَتَّى يَتَبَيَّنَ لَهُمْ أَنَّهُ الْحَقُّ

நம்முடைய அத்தாட்சிகளை அவர்களுக்குள்ளேயும் அவர்களுக்கு வெளியில் பல கோணங்களிலும் அவர்கள் காண்பதெல்லாம் மெய்ப்பொருள்தான் என தெளிவாகும் பொருட்டு அவர்களுக்குத் நாம் காண்பிப்போம்

(திருக்குர்ஆன் 41:53. )

09) وإذا سئلك عبادي عنّي فانّي قريبٌ

“(நபியே!) என்னைப் பற்றி என்னுடைய அடியார்கள் உங்களிடம் கேட்டால் நான் (ஹகீகத்தை-எதார்த்தத்தைக் கொண்டு) சமீபமாக இருக்கிறேன்” (என்று சொல்வீராக!) (திருக்குர்ஆன் 2:186)

10) وما رميت إذ رميت ولكنّ الله رمي

(நபியே! காபிர்கள் மீது மண்ணை) நீங்கள் வீசியபோது நீங்கள் வீசவில்லை. எனினும் அல்லாஹ்தான் வீசினான்!

(திருக்குர்ஆன் 8:17)

11) وكان الله بكلّ شيي محيطا

அல்லாஹ் சகல பொருள்களையும் சூழ்ந்தவனாகிவிட்டான்!

(திருக்குர்ஆன் 4:126)

ரஹ்மத் ராஜகுமாரன்

(உரத்த சிந்தனை 6)

இழப்பிலிருந்து ஞானம்



பகவத் புராணத்திலிருந்து ஓர் உருவகக் கதை.

ஒரு காகம் ஒரு மாமிசத்துண்டோடு வானில் பறந்தது. இருபது காகங்கள் அதைத் துரத்தித் துரத்தி கடுமையாக தாக்க ஆரம்பித்தன. அந்த காகம் மாமிசத்தை உதிர்ந்தது . உடன் அதைத் துரத்திய காகங்கள் அதை விட்டு விட்டு விலக, அந்த காகம் மட்டும் சுதந்திரமாய் பயமின்றிப் வானில் பறந்தது.
காகம் சொன்னது : "நான் மாமிசத்தை இழந்தேன்.
வானத்தை அடைந்தேன்,"
"அகன்ற வானத்தைத் தொலைத்துவிட்டு, இவ்வளவு நேரமும் துண்டு மாமிசத்தை கெட்டியாகப் பிடித்து இருந்தோமே" என்ற அறியாமை காகத்திற்கு தெரிந்தது.

நாமும் அவ்வளவு பெரிய வானத்தை ஒரு சின்ன மாமிசத் துண்டிற்காக தொலைத்து விடுகிறோம். நாம் இலக்குகள் எல்லாம் அற்பமானவை. அவற்றை அடைவதிலேயே நாம் அற்புதமானவற்றை இழந்துவிடுகிறோம்.

நாம் சின்ன சின்ன உலகியல் இலக்குகளை கைக்குள் கெட்டியாக பிடித்துக் கொண்டிருக்கிறோம். அதை யாராவது எப்போதாவது அதை தட்டி பிரித்து விடுவார்களோ என்கிற பயம் தொடர்ந்து கொண்டேயிருப்பதால், நாம் ஒவ்வொரு நொடியும் நமக்கு பாரம் ஆகிவிடுகிறது. இதனால் வாழ்வின் ஒவ்வொரு இனிய கணப்பொழுதும் வாழாமல் வீணாகக் கழிகிறது .

.......... X ...................................... X ................................ X............ ....

ஒரு ஜென் துறவியுடைய குடிசையின் கூரை அருகிலிருந்த அடுப்பின் நெருப்பு பொறிப்பட்டு முழுவதுமாக எரிந்து போனது. அக்கம்பக்கத்தில் இருந்தவர்களெல்லாம் ஜென் துறவி மீது இறக்கப்பட்டு, ஆறுதல் சொல்ல ஆரம்பித்தனர்.

" அப்பாடா இத்தனை நாட்கள் நிலவை மறைத்திருந்த என் குடிசையின் கூரை இப்போது எரிந்து விட்டது " என்று அவர் மகிழ்ச்சியுடன் சொல்லி, அவர்களை வழியனுப்பி வைத்தார் .
இழந்ததற்காக வருத்தப்படாமல், அடைந்ததற்காக அதுவும் இழந்ததன் மூலம் அடைந்தற்காக மகிழ்ச்சியடைபவன்தான் விழிப்புணர்ச்சி உடையவன்.
வருத்தப்படுவதால் , இழந்தது திரும்பக் கிடைப்பதில்லை. இறந்த காலத்திற்காக நிகழ்காலத்தை ஏன் தொலைக்க வேண்டும் ?

நிகழ்காலத்திலேயே தன்னை நிறைத்துக் கொண்டிருப்பவனால்தான் கூரை எரிந்தற்காக வருத்தப்படாமல், வானம் வசப்பட்டதற்காகக் குதூகலிக்க முடியும் .

கூரை எரிந்து போனது ஒன்றும் மகிழ்ச்சியான அனுபவமல்ல.

இந்த நொடி சத்தியமானது. இப்போது முழு நிலவு தெரிகிறது. இந்த நொடியில் இந்தக் கணத்தில் வாழ்பவன்தான் ஒவ்வொரு வினாடியிலும் இன்பமாக வாழ்கிறான் .

ஆனால் சூஃபியாக்கள் இம்மாதிரி நிகழ்வுகளைக் கடக்கும் போது, தன் மனதை ( நப்ஸைப் ) பார்க்கிறார்கள்.
சூஃபியாக்களின் தலைவர் **கௌதுல் ஆலம் முகையதீன் அப்துல் காதிர் ஜிலானி (ரஹ்)** அவர்கள், ஒரு நாள் தம் இல்லத்தில் அமர்ந்திருக்கும் பொழுது, ஒருவர் வந்து அவர்களின் வியாபாரக் கப்பல்கள் புயலில் சிக்கிக் கொண்டதாக கூறினார்.
அது கேட்ட அவர்கள் "அல்ஹம்துலில்லாஹ்" என்று கூறினார்கள் .
அடுத்தநாள் மற்றொருவர் வந்து, " புயலில் சிக்கிய தங்களின் கப்பல்கள் தப்பித்துக் கொண்டது " என்று கூறினார். அது கேட்டு அவர்கள் "அல்ஹம்துலில்லாஹ்" என்று கூறினார்கள் .
இவ்விரு நிகழ்ச்சிகளையும் கண்டு பெரிதும் வியப்புற்ற ஒருவர் அவர்களை நோக்கி, " தங்களின் கப்பல்கள் புயலில் தப்பிய செய்தி அறிந்து "அல்ஹம்துலில்லாஹ்" என்று தாங்கள் கூறியதை புரிந்து கொண்டேன். ஆனால் நேற்று ஒருவர் வந்து, " தங்களின் கப்பல்கள் புயலில் சிக்கிக் கொண்டன " கூறியபொழுது ,தாங்கள் அதற்கு "அல்ஹம்துலில்லாஹ்" என்று கூறியதுதான் எனக்கு புரியவில்லை என்று கூறிய பொழுது,

"கப்பல்களை இழந்ததற்காகவோ அவற்றை மீளப் பெற்றதற்காகவோ இறைவனை புகழவில்லை.இழப்புச் செய்தி அறிந்து என் மனம் சிறிதேனும் துன்புறாது இறை நாட்டத்தை இனிமையுடன் ஏற்றுக்கொண்டது கண்டு, இறைவனை புகழ்ந்து, அவனுக்கு நன்றி செலுத்தினேன். இரு எதிர்மறையான நிலைகளிலும் இறைவனின் சித்தமே தன் சித்தம் எனக் கொள்ளும் மனநிலையை எனக்குத் தந்த இறைவனை நான் என்றென்றும் புகழ்ந்து கொண்டு இருப்பேன்" என்று அவர்கள் கூறினார்கள்

وَلَـنَبۡلُوَنَّكُمۡ بِشَىۡءٍ مِّنَ الۡخَـوۡفِ وَالۡجُـوۡعِ وَنَقۡصٍ مِّنَ الۡاَمۡوَالِ وَالۡاَنۡفُسِ وَالثَّمَرٰتِ‌ؕ وَبَشِّرِ الصّٰبِرِيۡنَۙ
நிச்சயமாக நாம் உங்களை ஓரளவு அச்சத்தாலும், பசியாலும், பொருள்கள், உயிர்கள், விளைச்சல்கள் ஆகியவற்றின் இழப்பினாலும் சோதிப்போம்; ஆனால் பொறுமையுடையோருக்கு (நபியே!) நீர் நன்மாராயங் கூறுவீராக! (அல்குர்ஆன் : 2:155)

ரஹ்மத் ராஜகுமாரன்

(உரத்த சிந்தனை 7)

இன்று புதியதாய்ப் பிறந்தோம்



"இன்று புதியதாய்ப் பிறந்தோம்" - மகாகவி பாரதியின் அற்புத வரிகள் இவை.
புதிதாக பிறப்பது என்பது ஒவ்வொரு நாளும் நடக்க வேண்டும். இன்னும் சொல்லப்போனால் ஒவ்வொரு நொடியும் அது நிகழவேண்டும்.

பிறப்பது என்பது வெறும் நிகழ்வு அல்ல. அது ஒரு புதிய பரிமாணம் - மறுமலர்ச்சி (Transformation) பிறப்பு என்பது இறப்பை உள்ளடக்கியது.

இறக்க தெரிந்தவர்களால் மட்டுமே பிறக்கவும் முடியும். பிறக்கின்ற போது நம்மிடம் ஏற்கனவே இருந்தவை எல்லாம் அழிந்து போய் இருக்கவேண்டும். நம் உள்ளத்தில் இருக்கின்ற வன்மம், குரோதம்,பயம், வெறி மதிப்பீடு ஆகியவை அனைத்துமே இறந்தால்தான் நாம் புதியதாகப் பிறக்க முடியும்.
புதியதாக பிறப்பது என்பது உயிரியல் ரீதியாக நடக்கக்கூடியது அல்ல . உடலோடு தொடர்பு கொண்டதும் அல்ல. ஒவ்வொரு நொடியிலும் முந்தைய நொடியிலிருந்து முற்றிலும் வேறாக நமது உடல் மாறுகிறது .
சில செல்கள் தோன்றுகின்றன சில அணுக்கள் அழிகின்றன. சில அணுக்கள் வளர்கின்றன. சில செல்கள் சேர்கின்றன. சில செல்கள் பிரிகின்றன. அப்படி பார்க்கிற போது நாம் ஒவ்வொரு நொடியிலும் பிறக்கிறோம். ஒவ்வொரு நொடியிலும் இறக்கிறோம்.

காற்றை உள்ளிழுக்கின்றபோது நாம் உயிர்வாழ்வது தொடருகிறது என்று சொன்னால் , அந்த காற்றை வெளியிடும்போது நாம் வாழ்கின்ற ஒவ்வொரு நொடியும் குறைந்து போகிறது.
ஆக,பிறப்பும் இறப்பும் ஒரே விகிதத்தில் நடந்து கொண்டிருக்கிறது. இன்று புதியதாய் பிறப்போம் என்று சொன்னால் இதுவரை இருந்த பழையவற்றை எல்லாம் கழற்றி எறிந்துவிட்டு, புதிய சிந்தனையோடு புறப்பட்டு வருவது.

காலையில் நம்மீது படுகின்ற சூரியக்கதிர்கள் மகிழ்ச்சியை தருவதற்கு காரணம் அவை புதிய ஒளிகள், புதிய கதிர்கள். நேரம் செல்ல செல்ல அவை பழமை அடைகின்றன. அந்தப் பழமையின் உக்கிரம் நடுப்பகலில் நம்மை வருத்துகிறது.

மலர், மொட்டில் இருந்து விரிகின்றபோது அதன் பிறப்பு நிகழ்கின்றது . அப்போது விரிந்த மலர் மிக அழகாக இருக்கிறது. நேரம் ஆக ஆக அதன் இதழ்கள் வாட ஆரம்பித்துவிடுகின்றன .அதன் மலர்ச்சி மறைய ஆரம்பிக்கின்றது.

எவனொருவன் தினமும் பிறக்க தெரிந்து வைத்திருக்கிறானோ அவன் எப்போதும் திருப்தியுடன் இருக்கிறான் .
அவன் ரத்த ஓட்டத்தில் இளமை இருக்கிறது. அவனுடைய பார்வையில் குழந்தைத்தனம் இருக்கிறது . நீங்கள் குழந்தையின் கண்களை பாருங்கள் அவை கண்மணிகளைத் தாண்டி மிகுந்த வெண்மையாக இருக்கும். காரணம் இன்னும் அவைகளில் அழுக்குப் படியவில்லை.புதிதாக முளைக்கின்ற பற்களை முத்துப் போல் வெண்மையாக இருக்கின்றன காரணம் இன்னும் அவற்றில் கறை படியவில்லை.
முந்தையா நிகழ்வுகளைப் பழங்கதைகளைப் பேசி இறந்த கால நினைவுகளில் தன்னை இழக்கின்ற மனிதர்களால் நிச்சயமாக புதிதாக பிறக்க முடியாது.

புதிதாக பிறக்கின்றபோது 'தான் ' என்கின்ற தன்மையை இழக்க வேண்டும். தன்னுடைய என்கின்ற தன்மையை இழக்க வேண்டும். என்னுடைய என்று சொல்கின்றவன் இறந்து போய்க் கொண்டிருக்கிறான்.
இன்று புதிய உலகம்,புதிய வானம், புதிய காற்று, புதிய மனம், புதிய மனிதர்கள் என்று தன்னை விரிவுபடுத்திக் கொள்பவன் முதுமை அடைவதே இல்லை .அவன் காலச்சக்கரத்தின் கம்பிகளில் அகப்பட்டுக் கொள்ளாமல் வெளியே எகிறி புத்துணர்ச்சியோடு வாழ்க்கையை ஒவ்வொரு நாளும் வாழத் தொடங்குகிறான்.

நமக்குள் உயிரோடு இருக்கும் பகுதிகளை விட மரணமடைந்த பகுதிகள் தான் அதிகம். நம்மில் ஜீவித்திருக்கும் பகுதிகளை விட ,செல்லரித்துப் போன பகுதிகள்தான் அதிகம்.
புதியதாக பிறக்கிறவன் அந்த நொடி இனிமையானது உண்மையானது என்று நினைக்கிறான். அவன் சந்திக்கின்ற மனிதர்களை அப்போது மட்டுமே சந்திப்பது போல் பார்க்கிறான்.
நீங்கள் நினைத்துப் பாருங்கள் ஒவ்வொருவரும் அப்போது மட்டுமே பிறப்பதாக எண்ணிப்பாருங்கள். அவர்களிடம் உங்களுக்கு கோபம் இருக்காது, பயம் இருக்காது , மகிழ்ச்சி மட்டுமே மேலோங்கும்.
வாருங்கள் இன்றிலிருந்து பயிற்சி செய்து பார்ப்போம். முயற்சி செய்து பார்ப்போம். - வெ.இறையன்பு
மேற்கூறப்பட்ட அத்தனை விஷயங்களும் ஐந்து கடமைகளில் ஒன்றான ஹஜ்ஜில் கிடைக்கிறது . ஹஜ் அன்று பிறந்த பாலகன் போல் தூயவனாக மாற்றுகிறது.

மனிதன் புனிதனாகிறான்: ஹஜ் பயணத்தை நிறைவேற்றும் மனிதன், புனிதமடைகிறான்.
வஞ்சகம், பொறாமை, கோபம், புறம் பேசுதல், ஏமாற்றுதல், காம இச்சைகளில் நாட்டங் கொள்ளுதல் போன்ற தீய குணங்களை கடைபிடிக்காமல், சாந்தி, சமாதானம், சகோதரத்துவம் போன்ற நற்காரியங்களில் நாட்டம் உடையவனாகிறான். பாவங்கள் நீங்கப் பெற்று, அன்று பிறந்த பாலகன் போல் தூயவனாகத் திரும்புகிறான்.

தூய நீர், நம் ஆடையிலுள்ள அழுக்கை நீக்குவது போல், ஹஜ் பயணம் மனிதனுடைய மனதிலுள்ள தீமைகளை நீக்கி அவனைப் புனிதமடையச் செய்கிறது.

ஹஜ் பயணம் மேற்கொள்ள விரும்புபவர்கள், பயணம் புறப்படுவதற்கு முன், தம் உறவினர்களையும், தாம் அறிந்த பிறரையும் சந்தித்து, தாங்கள் ஏதேனும் அவர்களுக்குத் தீங்கு இழைத்திருந்தாலோ, அல்லது மனதை எவ்வகையிலேனும் புண்படுத்தியிருந்தாலோ, அதற்காக மன்னிக்கும் படி வேண்டுகின்றனர். இது அவர்களிடம், பணிவான பண்பை வளர்க்கிறது.
மக்கா மாநகரத்திற்குள் நுழையும் முன், "இஹ்ராம்' என்னும் வெண்ணிற ஆடையை அணிகின்றனர்.
இடுப்பில் சுற்றப்படும் ஒரு ஆடையும், உடம்பில் போர்த்திக் கொள்ள ஒரு ஆடையும் தவிர, வேறு உடைகள் எதுவும் கிடையாது. எவ்வளவு பெரிய பணக்காரர்களும் இந்த எளிய உடைகளையே அணிய வேண்டும். இது அவர்கள் மனதிலே பணிவான பண்புகளை வளர்க்கிறது.

இறைவனின் சன்னிதியில் அனைவரும் சமம் என்பதை உணர்த்தி சமத்துவத்தை வளர்க்கிறது. உண்மையிலேயே இந்தச் சீருடை உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்து வந்த மக்களிடையே, ஒருமைப்பாட்டு உணர்வை உருவாக்குகிறது.

இத்தனை நற்கிரிகளையும் செய்யும்போது பாவங்கள் நீங்கப் பெற்று, அன்று பிறந்த பாலகன் போல் தூயவனாகத் திரும்புகிறான். அதாவது இன்று புதியதாய்ப் பிறந்தோம் என்ற நிலைக்கு ஹாஜிகள் உளவியல் மாற்றம் அடைகின்றனர்.

ரஹ்மத் ராஜகுமாரன் .

(உரத்த சிந்தனை 9)

மனத் தைரியம்.



## "பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
## வெரூஉம் புலித்தாக் குறின் " _ திருவள்ளுவர்

நம்மிடம் இருக்கும் மன தைரியம் அதிகரிக்குமானால். நாம் எவ்வளவு பெரிய சவாலையும் எதிர் கொண்டு வெல்ல முடியும். நாம் எவ்வளவு பெரிய எதிரியையும் வீழ்த்த முடியும் என்பதுதான் பொருள்.

யானை உருவத்தில் பெரியதாக இருக்கலாம் . ஆனால் புலி மனத் தைரியத்தில் பெரியதாக இருக்கிறது. யானையை வீழ்த்த முடியும் என்கிற தன்னம்பிக்கை புலியிடம் இருக்கிறது. அது புலிக்கு அசுர பலத்தை கொடுக்கிறது. அளப்பரிய உந்து சக்தியால் புலி, யானையை எளிதில் வென்று விடுகிறது.
நாம் பிரச்சினையைக் கண்டு பயந்தால், மனத்தால் நம்மைப் பிரச்சினை வென்று விடுகிறது. நாம் துணிந்து நின்றால் பிரச்சினையைக் கிள்ளி எறிந்துவிடலாம்.

எண்ணிக்கை முக்கியமல்ல; மனத் தைரியம் தான் முக்கியம் என்பதற்கு அழகான ஒரு ஜென் கதை உண்டு.

நோபி நாகா என்கிற ஜப்பானிய போர் வீரன், தன் எதிரி ஒருவரை தாக்க முற்பட்டான் . ஆனால் தன் எதிரியிடம் இருப்பதுபோல் பத்தில் ஒரு பங்குதான் அவனிடம் போர்வீரர்கள் இருந்தார்கள். அவனுக்கு நிச்சயம் வெற்றி பெறுவோம் என்று தெரியும். ஆனால் அவனுடைய சிப்பாய்களுக்கு மிகுந்த சந்தேகம் இருந்தது.
போருக்கு போகிற வழியில் நோபி நாகா ஒரு Shindu கோயிலுக்கு முன் தன் படையை நிறுத்தி, தன் படை வீரர்களிடம் சொன்னான் : " நான் கோயிலில் இருந்து திரும்பியதும் ஒரு நாணயத்தை சுண்டி விடுவேன். நாணயத்தின் தலை விழுந்தால், நாம் வெற்றிபெறுவோம் .பூ விழுந்தால் நாம் தோற்போம். விதியின்படி நாம் நடப்போம்"

கோவிலுக்குள் சென்று மௌனமாய் பிரார்த்தனை செய்தான். திரும்ப வந்து நாணயத்தைச் சுண்டினான். தலை விழுந்தது. அவன் படை வீரர்களுக்கெல்லாம் மன தைரியமும், உற்சாகமும வந்தது. அவன் வீரர்கள் எல்லாம் தீவிரமாக வாள் வீசினார்கள். கோபிநாத் வெற்றி பெற்றான்.

" யாரும் விதியின் கையை மாற்றி எழுத முடியாது " என்று அவனின் பணியாள் ஒருவன் அவனிடம் சொன்னான். நோபிநாகா தான் சுண்டிய நாணயத்தை காட்டினான் அதில் இரண்டு நாணயங்களை ஒட்டியிருந்தான். இரண்டு பக்கமும் தலைகள் இருந்தன.

அதே குறைந்த வீரர்களின் எண்ணிக்கைதான்.
அதே எதிரிதான்.
அதே நோபி நாகாதான் !
ஆனால் நாணயத்தை சுண்டியவுடன் அவர்கள் வேறு மனிதர்களாக மாறி போயிருந்தார்கள். மாற்றம் அவர்களின் உற்சாகம், மன தைரியம் , தன்னம்பிக்கை, ஊக்கம், வெற்றி பெறுவோம் என்று எண்ணியவுடன் அவர்களிடமிருந்த அளப்பெரும் ஆற்றல் வெளிப்பட்டது.
பத்ரு போர்

ரமாளான் மாதம் பிறை17 ல் இஸ்லாத்தில் நடந்த முதல் போர் மற்றும் மிக முக்கியமான போர் ஆகும்.
முஸ்லிம்களும் முஸ்லிம்களின் எதிரிகளும் கி.பி623 ம் ஆண்டு ஹிஜ்ரி 2 ம் வருடம் யுத்த களத்திற்குச் சென்று யுத்த ஆயத்தங்கள் செய்து கொண்டனர். இவ்யுத்தத்தில் கலந்துக் கொண்ட முஸ்லிம்கள் எண்ணிக்கை 313 பேர் என்றும் எதிரிகளின் தொகை ஏறக்குறைய 1000 பேர்.

நபித் தோழர்களிடம் போதிய யுத்த சாதனங்கள் இருக்கவில்லை. 70 ஒட்டகங்களும், 60 கேடயங்களும் சுபைர் இப்னுல் அவ்வாம்(ரலி), மிக்தாத் இப்னு அஸ்வர் ஆகிய இருவரிடம் மட்டும் இரு குதிரைகள் இருந்தன!
(அப்பிதாயா வன்னிஹாயா).

எஞ்சிய அனைவரும் காலாட்படையினர் ஆவர். அவர்கள் அனைவரும் தேவையான (போர்த்)தளவாடங்கள்கூட அவர்களிடம் இருக்கவில்லை.
அன்று எதிரிகள் தொள்ளாயிரத்திலிருந்து ஓராயிரம் பேர் வரை இருந்தனர். எஃகு வாட்கள், தலைக் கவசங்கள், நிறைவான தளவாடங்கள், கண்கவர் குதிரைகள், மற்றும் அபரிதமான நகைநட்டுகள் ஆகியவற்றுடன் அவர்கள் வந்திருந்தனர்.

அப்போது அல்லாஹ் தன் தூதரை கண்ணியப்படுத்தினான்.

உண்மையில் பத்ர் களத்தில் நின்றவர்கள் நோன்பாளிகள், உடலில் பலம் குறைந்தவர்கள், ஆயுத, படைப்பலம் குன்றிய நிலையில் காணப்பட்டனர். எதிரிகளான மக்கா காபிர்கள் பலமான போர் வீரர்களுடனும், போர்க் குதிரை, தளவாடங்களுடனும் களம் புகுந்தனர்.
காபிர்களின் படையுடன் ஒப்பிடும் போது, முஃமின்கள் மூன்றில் ஒன்றாக குறைந்தே இருந்தனர். ஒரு சிறுவனிடம் எடைபோடச் சொன்னால் கூட, முஃமின்கள் படை நிச்சயம் தோற்றுவிடும் என்று எவ்விதத் தயக்கமுமின்றியே கூறிவிடுவான்.

'பத்ர்' போரின் போது மூவருக்கு ஒரு ஒட்டகம் என்ற அடிப்படையில் பங்கு செய்யப்பட்டது. இதன்படி அபூலுபாபா, அலி, நபி(ஸல்) ஆகிய மூவருக்கும் ஒரு ஒட்டகம் கொடுக்கப்பட்டது.
'ஒருவர் ஏறிவர, இருவர் நடந்து வர வேண்டும்' என்று சுழற்சி முறையில் நபி(ஸல்) அவர்கள் நடந்துவர நேரிட்டபோது, இவ்விருவரும் 'அல்லாஹ்வின் தூதரே நாம் நடந்தே வருகின்றோம். நீங்கள் ஒட்டகத்தில் ஏறி வாருங்கள்' என்று கூறினர். அதற்கு நபி(ஸல்) அவர்கள், நீங்கள் இருவரும் என்னை விடப்

பலமிக்கவர்களுமல்லர்; உங்களைவிட நன்மையைத் தேடிக்கொள்ளும் விடயத்தில் நான் தேவையற்றவனுமல்ல’ எனக் கூறினார்கள்’ (அஹ்மத்).

முஸ்லிம்களின் முழுமையான நம்பிக்கை அல்லாஹ்வின் மீதே இருக்க வேண்டும். இந்தப் போரின் போது மழை பொழிந்து அது முஸ்லிம்களுக்குச் சாதகமாகவும், காஃபிர்களுக்குப் பாதகமாகவும் அமைந்து, மலக்குகள் முஸ்லிம்களுக்குத் துணையாகப் போரிட்டனர் என்பதை குர்ஆன் குறிப்பிடுகின்றது. ( அல்குர்ஆன் 8: 9-12., 8:17 )

யுத்தம் நடப்பதற்கு முதல் இரவு நபியவர்கள் உறங்காது காலை வரையிலும் பிரார்த்தனையில் இருந்தார்கள். நெஞ்சுருக அல்லாஹ்விடம் பின்வருமாறு வேண்டினார்கள்.

இறைவா! நீ எனக்கு வாக்களித்ததை நிறைவேற்று. நீ எனக்கு வாக்களித்ததை வழங்கு! இறைவா ! இஸ்லாமிய இக்கூட்டம் அழிக்கப்பட்டால், இப்பூமியில் உன்னை வணங்குபவர்கள் (இதன் பின்னர்) எவரும் இருக்கமாட்டார்கள். (முஸ்லிம்) என நபியவர்கள் பிரார்த்தித்த பின்னர் அல்லாஹ் பின்வரும் வசனத்தை இறக்கி அருளினான். (சீரத் இப்னு ஹிஷாம்)

நீங்கள் உங்கள் இரட்சகனிடம் (உங்களை) இரட்சிக்கத் தேடிய போது (அணி அணியாக) உங்களோடு இணைந்து (அடுத்து) வரக்கூடியவர்களாக மலக்குகளில் ஆயிரம் (பேர்களைக்) கொண்டு நிச்சயமாக நான் உங்களுக்கு உதவி செய்வேன் என்று அவன் உங்களுக்கு பதிலளித்தான். (அல்குர்ஆன் 08:09)
அலி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "பத்ருப்போர் நடைபெற்ற போது யுத்த களத்தில் இருந்த நான் மூன்று முறை நபியின் கூடாரத்துக்கு சென்றேன். நபியவர்கள் ஸஜ்தாவில் இருந்து கொண்டு ‘’யா ஹய்யு யாகய்யூம்’’என்று துஆ செய்ததை நான் கண்டேன். அல்லாஹ் எங்களுக்கு வெற்றியளித்தான் (நூல்.பைஹகீ. நஸயி.)

நபியின் துஆவின் காரணமாக பத்ரின் வெற்றி கிடைத்தது மட்டுமல்ல. யுத்தம் தொடங்கும் முன்பாகவே வெற்றியின் நம்பிக்கையும் சொல்லப்பட்டது. எதிரிகளில் யார் கொல்லப்படுவார். எந்த இடத்தில் கொல்லப்படுவார் என்பதும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் போர் தொடங்கும்முன் எங்களிடம் சில குறிப்பிட்ட இடங்களில் கைவைத்து இது இவர் கொல்லப்படும் இடம் என்றார்கள். எதிரிகளில் கொல்லப்பட்ட எவரும் நபி (ஸல்) அவர்கள் கைவைத்து காட்டிய இடத்தை கொஞ்சம் கூட கடக்கவில்லை.
(நூல்: முஸ்லிம். மிஸ்காத். பக்கம்.531)

ஒரு சிறு படை மிகப் பெரும்படையை வெற்றி கொண்டது. இதுவே இஸ்லாம் பெருகுவதற்கு காரணமான யுத்தம் .

ரஹ்மத் ராஜகுமாரன்

(உரத்த சிந்தனை 10)

அறிவா ? ஆதாரமா ?



அறிவு என்பது மனித வாழ்க்கைக்கு மிகவும் முக்கியம். பொருள் சார்ந்த நடைமுறை வாழ்வுக்கு மட்டுமின்றி ஆன்மிக வாழ்வுக்கும் இது மிகவும் அவசியம். எல்லையற்ற இறை ஆற்றலுடன் தனிமனிதன் இணைவதே யோகம் எனப்படுகிறது.
ஆனால், அறிவு எல்லைக்குட்பட்டது. ஒரு கட்டத்துக்கு மேல் நம்மை அழைத்துச்செல்லாது. அறிவு இல்லையேல் நாம் நடைமுறை வாழ்வை நடத்த முடியாது. அறிவியல், மெய்யியல் ஞானங்களைப் பெற முடியாது. ஆனால் உண்மையான மெய்யியல் அனுபவத்தைப் பெற வேண்டுமென்றால் அதற்கு அறிவு மட்டும் போதாது என்றே மகான்கள் சொல்கிறார்கள்.

**ஹெர்மென் ஹெஸ்** என்னும் ஜெர்மானிய எழுத்தாளர் **இந்தியத் தத்துவ இயலில்** ஆழங்கால் பட்டவர். இந்தியத் தத்துவ மரபை அடியொற்றி சித்தார்த்தன் என்னும் நாவலை அவர் எழுதியுள்ளார். கதையின் மையப் பாத்திரமான சித்தார்த்தன் ஆன்மிகத் தேடல் கொண்டவன். கூர்மையான அறிவும்

வாதத் திறமையும் கொண்டவன். அவன் ஒரு ஞானியைச் சந்திக்கிறான். அவரிடம் சில கேள்விகள் கேட்கிறான். அவனுக்குப் பதில்களைச் சொல்லும் அந்த ஞானி கடைசியில் ஒரு வார்த்தை சொல்கிறார்:
**“உன்னுடைய மிதமிஞ்சிய அறிவுக் கூர்மையிலிருந்து உன்னைத் தற்காத்துக்கொள்.”**

மிதமிஞ்சிய அறிவு உன்னை ஒரு கட்டத்துக்கு மேல் முன்னேற விடாது என்பதே அந்த ஞானி சித்தார்த்தனுக்குச் சொல்ல விரும்பிய செய்தி. சித்தார்த்தன் பல்வேறு அனுபவங்களுக்கும் அலைதல்களுக்கும் பிறகே அறிவின் தடையைக் கடக்கிறான்.

கூர்மையான வாதங்கள், மண்டையைப் பிளக்கும் தர்க்கங்கள், தீவிரமான ஆய்வுகள் ஆகிய எல்லாமே அவசியம்தான். ஆனால், அறிவு ஒருவரைக் கடைசிவரை கூட்டிச்செல்லாது. அறிவு எல்லைக்குட்பட்டது. எல்லாவற்றுக்கும் அடிப்படையான பேருண்மையைத் தனக்குள் கண்டுணரும் முயற்சியில் அறிவு என்பது சுமையாகிவிடக்கூடும்.

“ஒரு முள்ளை எடுக்க இன்னொரு முள்ளைப் பயன்படுத்துகிறோம். முள்ளை எடுத்த பிறகு இரண்டு முட்களையும் தூக்கிப் போட்டுவிடுகிறோம். அறியாமை என்னும் முள்ளை எடுக்க அறிவு என்னும் முள்ளைப் பயன்படுத்துகிறோம். அந்த நோக்கம் நிறைவேறியதும் இந்த முள்ளையும் தூக்கிப் போட்டுவிட வேண்டும். அறிவை எப்போதும் சுமந்துகொண்டிருக்கக் கூடாது” என்கிறார் ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.

சீரான அறிவு சரியான ஆதாரத்திற்கு ஒத்துப் போக வேண்டும். குர்ஆனிலும், ஸுன்னாவிலும் கூறப்பட்டவைகளுக்கு அது முரண்படக்கூடாது. முரண்பாடு இருப்பதாக தோன்றும்போது அறிவை விட ஆதாரத்தை முற்படுத்த வேண்டும்.

குர்ஆன் மற்றும் ஸுன்னாவை புரிந்துகொள்ளும் விஷயத்தில் ஆதாரத்தை முற்படுத்தி அறிவை பிற்படுத்த வேண்டும்.
மனித அறிவு வரையறைக்குட்பட்டதாகும் அறிவு சரிகாணும் அனைத்தும் உண்மையாகவோ, நன்மையாகவோ இருப்பதில்லை. அறிவு சிலபோது மனோ இச்சையின்அடிப்படையிலும், சிலபோது கற்பித்ததின் அடிப்படையிலும், யூகங்களின் அடிப்படையிலும் பலவற்றையும் சரி காணும். மனித அறிவு குறைபாடுள்ளதாக இருக்கிறது.

وَمَاۤ اُوْتِيْتُمْ مِّنَ الْعِلْمِ اِلَّا قَلِيْلًا
இன்னும் ஞானத்திலிருந்து உங்களுக்கு அளிக்கப்பட்டது மிகச் சொற்பமேயன்றி வேறில்லை எனக் கூறுவீராக.
(அல்குர்ஆன் : 17:85)

மனிதனுக்கு வழிகாட்டுவதற்கு அவனது அறிவு மட்டுமே போதுமானதாக இல்லை. அப்படியிருந்திருந்தால் அல்லாஹு தஆலா தூதர்களையும், வேதங்களையும் அனுப்பி வைத்திருக்கமாட்டான். மாறாக மனிதனுக்கு வழங்கப்பட்ட அறிவின் மூலம் அவன் ஆதாரத்தை பின்பற்ற வேண்டும், அதன் மூலம் தான் அவன் நேர்வழி அடைய முடியும்.

அல்லாஹ் கூறுகிறான்:
فَاِمَّا يَاْتِيَنَّكُمْ مِّنِّىْ هُدًى ۙ فَمَنِ اتَّبَعَ هُدَاىَ فَلَا يَضِلُّ وَلَا يَشْقٰى
அப்பொழுது நிச்சயமாக என்னிடமிருந்து உங்களுக்கு நேர்வழி வரும்; எவர் என்னுடைய நேர்வழியைப் பின் பற்றி நடக்கிறாரோ அவர் வழி தவறவும் மாட்டார், நற்பேறிழக்கவும் மாட்டார். (அல்குர்ஆன் : 20:123)
அறிவும், ஆதாரமும் முரண்படும் போது அறிவை பிற்படுத்தி ஆதாரத்தை முற்படுத்த வேண்டும். ஏனெனில் அறிவு ஆதாரத்தை உண்மைப்படுத்தும்; ஆதாரம் ஒரு போதும் அறிவை உண்மைப்படுத்தாது இதன் விளக்கத்தை அலீ (ரலி) அவர்களின் கூற்றிலிருந்து புரிந்து கொள்ளலாம்.

அலீ(ரலி) அவர்கள் கூறினார்கள்:
அறிவை மட்டும் அடிப்படையாக கொண்டதாக மார்க்கம் இருந்திருந்தால் (மஸஹ் செய்யும் போது) காலுறையின் அடிப்பகுதி தடவுவது, மேல் பகுதியில் தடவுவதை விட ஏற்றமானதாக இருந்திருக்கும் நபி(ஸல்) அவர்கள் காலுறையின் மேற்பகுதியை தடவுவதை நான் பார்த்திருக்கிறேன். நூல்: சுனனு அபிதாவூது -162

கண்களால் காட்சிகளை பார்ப்பதற்கு வெளிச்சம் எவ்வாறு அவசியமோ, அதேபோன்று அறிவிற்கு ஆதாரம் அவசியமாகும். அறிவை மட்டும் அடிப்படையாகக் கொண்டு தீர்ப்பு வழங்குவது தான் அதிகமான மக்கள் வழிகேட்டிற்கு செல்ல காரணம். முஃமின்களைப் பொறுத்த வரை ஆதாரங்களை நம்பி ஏற்றுக் கொள்வார்கள். எனவே தான் நாம் அறிவிற்குப் புலப்படாத மறைவானவற்றை நம்பிக்கை கொண்டுள்ளோம். அத்தகைய நம்பிக்கையை அல்லாஹு தஆலா முத்தக்கீன்களின் பண்பாக கூறுகிறான்.
ذٰ لِكَ الْڪِتٰبُ لَا رَيْبَ ۛ فِيْهِ ۛ هُدًى لِّلْمُتَّقِيْنَۙ.
الَّذِيْنَ يُؤْمِنُوْنَ بِالْغَيْبِ وَ يُقِيْمُوْنَ الصَّلٰوةَ وَمِمَّا رَزَقْنٰهُمْ يُنْفِقُوْنَۙ.
وَالَّذِيْنَ يُؤْمِنُوْنَ بِمَۤا اُنْزِلَ اِلَيْكَ وَمَاۤ اُنْزِلَ مِنْ قَبْلِكَ ۚ وَبِالْاٰخِرَةِ هُمْ يُوْقِنُوْنَ.
اُولٰٓٮِٕكَ عَلٰى هُدًى مِّنْ رَّبِّهِمْ ۖ وَاُولٰٓٮِٕكَ هُمُ الْمُفْلِحُوْنَ.

இது, (அல்லாஹ்வின்) திருவேதமாகும்; இதில் எத்தகைய சந்தேகமும் இல்லை; பயபக்தியுடையோருக்கு (இது) நேர்வழிகாட்டியாகும்.
(பயபக்தியுடைய) அவர்கள், (புலன்களுக்கு எட்டா) மறைவானவற்றின் மீது நம்பிக்கை கொள்வார்கள்; தொழுகையையும் கடைப்பிடிப்பார்கள்; இன்னும் நாம் அவர்களுக்கு அளித்தவற்றிலிருந்து (நல்வழியில்) செலவும் செய்வார்கள்.
(நபியே!) இன்னும் அவர்கள் உமக்கு அருளப்பெற்ற (வேதத்)தின் மீதும் உமக்கு முன்னர் அருளப்பட்டவை மீதும் நம்பிக்கை கொள்வார்கள்; இன்னும் ஆகிரத்தை(மறுமையை) உறுதியாக நம்புவார்கள்.
இவர்கள் தாம் தங்கள் இறைவனின் நேர்வழியில் இருப்பவர்கள்; மேலும் இவர்களே வெற்றியாளர்கள்.
(அல்குர்ஆன் : 2: 2-5)

அல்லாஹ்வின் மார்க்கத்தில் அறிவிற்கு வேலையில்லை என்பதல்ல இதன் பொருள். மாறாக அறிவை விட ஆதாரங்களுக்கு முக்கியத்துவம் வழங்க வேண்டும் என்பதாகும்.
ஏனெனில் குர்ஆனிலும் ஸுன்னாவிலும் சொல்லப்பட்டுள்ள சில விஷயங்கள் நமது சிற்றறிவால் புரிந்து கொள்ள முடியாமல் போகும். அது போன்ற சந்தர்ப்பங்களில் ஈமானின் அடையாளமாக, அல்லாஹ்வும் அவனது தூதரும் கூறியவற்றை நம்பிக்கையுடன் செயல்படுத்துவோம். இதற்கு உதாரணமாக உளூ செய்வதை எடுத்துக் கொள்வோம்.

உளூ செய்த ஒருவருக்கு காற்று பிரிந்து விட்டால் அவரது உளூ முறிந்து விடும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். அப்போது அவர் மீண்டும் உளூ செய்ய வேண்டும். அப்படி செய்யும் போது காற்றுப் பிரிந்த இடத்தை அவர் சுத்தம் செய்வதுமில்லை, கழுவுவதுமில்லை. மாறாக ஏற்கனவே கழுவிய இடங்களைத்தான் கழுவுகிறார். இச்செயல் அறிவுக்கு பொருந்துமா என்று கேட்டால், இல்லை என்றுதான் கூறுவோம். ஆனாலும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறுதான் செய்யவேண்டுமென்று கட்டளையிட்டுள்ளதால் அதனையே நாமும் செய்கிறோம்.

இவ்வாறே குளிப்புக் கடமையான ஒருவர் குளிப்பதற்கு தண்ணீர் இல்லாதபோது தயமம் செய்துகொள்ள வேண்டும் என்று மார்க்கம் சொல்கிறது. தயமம் என்பது கைகளை மண்ணில் அடித்து கையில் படிந்துள்ள தூசியால் முகத்தையும் முன் கையையும் தடவிக் கொள்வதாகும்.

அசுத்தமான ஒருவர் தன்னை சுத்தப்படுத்திக் கொள்ள தண்ணீரைப் பயன்படுத்துவது அறிவிற்கு பொருந்துகிறது. மண்ணைக் கொண்டு தடவுவது அறிவிற்கு பொருந்தாத செயலாகும். இன்னும் சொல்லப் போனால் தயமம் செய்வதைப் பொருத்தவரை அசுத்தம் ஏற்பட்ட இடத்தில் தடவுவதுமில்லை. ஆனாலும் இதைத்தான் நபி(ஸல்) காட்டித்தந்த வழிமுறை என்று கடைப்பிடிக்கிறோம்.
இதற்குத்தான் ஆதாரத்தை முற்படுத்தி அறிவைப் பிற்படுத்துவது என்று கூறுகிறோம். இதில் அடங்கியுள்ள ரகசியத்தை நாம் அறியமாட்டோம்.

மறைவான விஷயங்களை பொறுத்தவரையில் இது போன்ற ஏராளமான உதாரணங்கள் உள்ளன. அவைகள் நமது அறிவுக்கு புலப்படாதவைகள்தாம். அவற்றை அல்லாஹ்வும் அவனது தூதரும் கூறியுள்ளார்கள் என்பதால் நாம் அதனை ஈமான் கொள்கிறோம்.
மனித அறிவு அதன் எல்லைக்கும் அப்பால் இருப்பதை அறிந்து கொள்ளும் திறன் அற்றது .

(உரத்த சிந்தனை தொடர் பதிவுகள் இத்துடன் நிறைவு பெறுகிறது)

ர.ரா

